# உரோமானிய ஆட்சிமுறை

[ROMAN POLITY]

வீ. கண்ணையா



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் —701

# உரோமானிய ஆட்சிமுறை

(மேற்பட்டப் படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது

ஆசிரியர்
பேராசிரியர் **வீ. கண்ணையா**, எம்.ஏ.,
முதல்வர்,
அரசினர் கலைக்கல்லூரி,
மேலூர், மதுரை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—May, 1976

T.N.T.B.S.(C.P.) No. 701



# ROMAN POLITY

V. KANNAIAH

Price Rs. 7-70

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

*Printed by*
GANESA PRINTING WORKS,
55, Muthumari Chetty Street,
Madras-1.

# பதிப்புரை

உரோமானிய ஆட்சிமுறை என்ற இந் நூல், தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் 701ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 736 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்' கீழ் வெளியிடப்படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# பொருளடக்கம்

# 1. உரோமானியர்களின் குடும்ப அமைப்பு

பழங்கால உரோமானிய அரசியல் நிறுவனம் குல அமைப்பை அடிப்படையாகக் கொண்டிருந்தது. இக் குல அமைப்பு இந்தோ-ஐரோப்பிய இனங்களிடையே ஏதோ ஓர் உருவில் இயல்பாகக் காணப்பட்டது. பிற்கால உரோமானிய அரசியல், சமூக அமைப்புகளில் இது தொடர்ந்து இருந்து வந்துள்ளது. ஒரு குல முதல்வரின் வழிவந்தவர்களனைவரும் இக் குலத்தில் உறுப்பினராயினர். குல உறுப்பினராவதற்கு ஒருவர் சுயேச்சையாகவும் முழுமையான உரிமைபெற்றவராகவும் இருக்கவேண்டுமென்பது மரபு வலியுறுத்தும் விதியாகும். இக் குல உறுப்பினர் ஒவ்வொருவரும் ஒரு குடும்பமாக அமைந்தனர். குடும்பத் தலைவர்கள் குலத்தின் பெயரைப் பெற்றிருந்தனர். தந்தை, தாய், புதல்வர்கள், புதல்விகள், அடிமைகள், சார்பாளர்கள் ஆகியோரைக் குடும்பம் உறுப்பினராகக் கொண்டமைந்தது. குடும்பத் தலைவரின் முழுமையான ஆட்சிக்குக் குடும்பம் உட்பட்டிருந்தது. இக் குடும்பத் தலைவருக்குக் குடும்பத்தினர் அனைவரும் அடங்கி வாழ்ந்தனர். உரோமானியச் சட்டமும் குடும்பத்தைச் சமூக அமைப்பின் ஒரு பிரிவாக ஏற்றுக் கொண்டது. இக் குடும்பம் சட்ட உரிமைகளைப் பெற்றிருந்ததேயன்றிக் குடும்ப உறுப்பினர் தனிப்பட்ட எந்த உரிமையையும் பெற்றிருக்கவில்லை. குடும்பத்தின் உரிமைகளைக் குடும்பத் தலைவர்களே செயற்படுத்தினர். உடைமைகளும் குடும்பத் தலைவருக்கே உரியதாயின. குடும்பத்தலைவரின் இசைவின்றி உறுப்பினர்கள் மணம் செய்துகொள்ள முடியாது. தலைவரின் இசைவோடு மணம் செய்துகொண்ட பின் மனைவியும் குடும்பத் தலைவரின் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடுவாள். குடும்ப உறுப்பினரின் உயிரும் உடைமையும் இவருடைய செயலாட்சிக்குட்பட்டிருந்தன. குடும்பத் தலைவரின் வழிவந்தவர்கள்மீது மட்டுமே தலைவர் அதிகாரம் செலுத்தலாம். குடும்பத் தலைவரின் மணமாகாத மகளும் மணமாகும்வரை தந்தையின் கட்டுப்பாட்டிலிருந்தாள். மணம முடிந்த பின் ஒரு பெண் கணவனின் குடும்பத்தலைவரின் அதிகாரத்தின்கீழ்

வந்தாள். இவளுடைய குழந்தைகள் கணவனின் குடும்ப உறுப்பினராகிவிடுவர். பெண்வழி மரபினர் உரோமானியக்குடும்பத்தில் இடம்பெறவில்லை என்பதைக் காணலாம். குடும்பத் தலைவரின் மரணம் குடும்பத்தைச் சிதைத்துவிடும். இதுவரை குடும்பத்தலைவரின் பிடியில் இருந்த புதல்வர்கள் தனித்தனியே குடும்பத்தலைவர்களாகித் தலைமை அதிகாரத்தைச் செலுத்தத் தொடங்கிவிடுவர். இவ்வியல்பான போக்கு இரு நிகழ்ச்சிகளால் மாற்றப்படலாம். ஒன்று குடும்ப உறுப்பினர் ஒருவர் குடும்பத்திலிருந்து வெளியேறிவிடலாம். இச் செயலைக் குடும்பத் தலைவரே ஏற்றுக்கொண்டால் வெளியேறியவர் விடுதலை பெற்றதாகக் கருதப்பெற்றார். இதனால் விடுதலை பெற்றவர் தாம் முன்னிருந்த குடும்ப உறுப்பினர் தகுதியை இழந்துவிடுவார். குடும்பத்தில் பிறவா ஒருவரைக் குடும்பத்தலைவர் மகவேற்புச் செய்துகொள்ளலாம். இஃது இரண்டாவது நிகழ்ச்சியாகும். ஒரு குடும்பத்தில் பிறந்தவரைப்போல் மகவேற்புக்குள்ளானவர் எல்லா உரிமைகளையும் பெற்றிருந்தார்.

குடும்ப உடைமைகளின் செயலாட்சி இவருடைய தனி விருப்பிற்குட்பட்டிருந்தது. ஆயினும், இவர் ஒரு வல்லாட்சியாளராகச் செயற்படாமல் குடும்பத்தினரின் பிரதிநிதியாகவே இயங்கினர். சொந்த விருப்பு அடிப்படையில் குடும்பத்தை ஆட்சி செய்யாமல் பொதுக்கருத்தின் பேரிலேயே ஆட்சி செய்தார். நெருங்கிய உறவினரின் குடும்பம் ஒன்று இவருக்கு அறிவுரை வழங்கியது. குலத்தின் பல்வேறு குடும்பத்தினரோடு சில சார்பாளர்கள் இருந்தனர். இவர்கள் வழிவழியாகக் குடும்பத்தைச் சார்ந்தே இருந்தனர். இச் சார்புநிலையையொட்டி இவர்களும் சில உரிமைகளைப் பெற்றுவாழ்ந்தனர். இந்த உரிமைகளுக்கு ஈடாகக் குடும்பத் தலைவர்களுக்கு இவர்கள் சில சேவைகளைச் செய்தனர். குடும்பத்தலைவரைக் கைதிநிலையிலிருந்து மீட்டலும், குடும்பத் தலைவரின் மகனின் மணவிழாச் செலவுகளுக்கு நிதியுதவியளித்தலும் இவர்களுடைய பொறுப்புகளாக இருந்தன. குல விவகாரங்களைக் குல உறுப்பினர் அல்லது குலப் பிரதிநிதிகள் கவனித்துக் கொண்டனர். குடும்பக்கடவுளர்களின் வழிபாடுகளைக் குடும்பத் தலைவரே சமயகுருவாக இருந்து நடத்திவைத்தார். பல குடும்பத் தலைவர்களைக் கொண்டமைந்த குலத்தைப்போலப் பல குலங்கள் அமைந்து செயல்பட்டன.

எனவே, இயற்கையானதோர் அடிப்படையில் குலம் அமைந்து செயல்பட்டதைப் பார்க்கிறோம். இரத்த உறவு முறைகளை இது மிகப்பரவலாக எடுத்துக்காட்டியது. குலங்களைச் செயற்கையாகப் படைக்கவும், இதன் உறுப்பினர்களைப் பிரித்

தமைக்கவும் இயலாதென்பதையும் காணலாம். குல உறுப்பினரின் எண்ணிக்கையையும் ஒழுங்குபடுத்த இயலாது. புதிய உறுப்பினர்களைக் குடும்பத்தில் சேர்த்துக்கொள்ளலாமெனினும் இஃது இயல்பாக நிகழும் ஒரு நடைமுறையாகப் பழங்காலத்தில் இருந்ததில்லை.

உரோம் நகரிலிருந்த மக்களின் அவையாகிய கோமிசியா கியூரியேட்டாவில் வாக்களிப்பிற்கெனக் குலம் ஒரு பிரிவாக இருந்துவந்துள்ளது. முதலில் குல அடிப்படையில் இச் சபையில் உறுப்பினர் தகுதி பெறல் இயல்பாக இருந்திருக்க வேண்டுமென அறிகிறோம். இறுதியில், குடும்ப உறுப்பினர் தகுதியைப் பிளெபியர்கள், பெற்ற காலத்தில் இவர்களும் குல அமைப்பிற்குட்பட்டுக் கோமிசியாவில் உறுப்பினர் தகுதிபெற்றார்கள் எனக் கருத இடமிருக்கிறது.

பெருந்திற, சிறுதிறக் குலங்கள் எனக் குலங்கள் வேறுபடுத்தப்பெற்ற செய்திகளும் இருக்கின்றன. இவ் வேறுபாட்டிற்கு அரசியல் நோக்கங்கள் கற்பிக்கப்பட்டன. செனெட்சபையின் உறுப்பினர் தகுதியையொட்டியே பெட்ரிசியக்குலம் தோன்றியிருக்கவேண்டுமெனக் கருதப்பெற்றது. ஆனால், இக் கருத்திற்கான ஆதாரங்களை ஏற்பதற்கில்லை. பெட்ரிசியர்கள் மிகப் பழமையான குலத்தவர் என்பதால் மிக உயர்ந்த நிலையில் வைத்து மதிக்கப்பெற்றனர். இவ் விருதிறக் குலங்களின் உறுப்பினரின் எண்ணிக்கை பாசியா 300-க்கும செனெட்சபையின் உறுப்பினரின் எண்ணிக்கை 300-க்கும் ஒரு தொடர்பு இருக்கவேண்டுமென ஒரு கோட்பாடு குறிப்பிட்டது. மூன்று இனங்களின்[1] இணைப்பே உரோமானியச் சமுதாயமாக உருவாகியதெனக் கூறப்படுகிறது. ரோமுலஸ் உருவாக்கிய செனெட்சபையின் உறுப்பினர் தொகை 100-ல் இருந்து 300-ஆக உயர்ந்ததற்கு இம் மூன்று இனங்களின் இணைப்புக் காரணமாக இருந்திருக்கலாம். ஏனெனில், ஒவ்வோர் இனமும் நூறு குலங்களாகப் பிரிந்து செனெட் சபைக்கு 300 உறுப்பினரைத் தேர்வு செய்திருக்கலாமெனக் கருதப் பெற்றது. இறுதியாக உரோமானியச் சமுதாயத்தில் இணைந்த மூன்றாவது இனமாகிய லூசரிஸ்களே சிறுதிறத்துக் குலமாக இருக்க வேண்டுமெனக் கருதப்பட்டது. இத்தாலிய நகரங்களில் 100 உறுப்பினரைக்கொண்ட செனெட்சபைகள் அமைந்து செயற்பட்ட அடிப்படையில் உரோமில் முதலில் 100 உறுப்பினரைக் கொண்ட செனெட்சபை அமைந்து செயற்பட்டிருக்க வேண்டுமெனவும், பின் புதிய இனங்களின் சேர்க்கையால் இந்த எண்

[1] (1) Tities, (2) Ramnes, (3) Luceres.

ணிக்கை 300-ஆக உயர்ந்திருக்கவேண்டுமெனவும் கருதப்பெற்றது. முடியாட்சிக் காலத்தில் அரசர்களும் குடியாட்சிக் காலத் காலத்தில் நிர்வாகிகளும், எல்லாப் பெட்ரிசிய இனங்களும் செனெட்சபையில் சமமாக இடம்பெற வேண்டுமென்பதைக் கருத்திற்கொண்டு உறுப்பினரைத் தேர்வு செய்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

குலம் விரிவடைய முடியாததைப்போல், பெட்ரிசியக் குலங்களின் எண்ணிக்கையும் விரிவடையவில்லை. புதிய குலங்களைச் சமூகத்தில் சேர்க்க முடியாததைப்போல் பழைய குலங்களின் உறுப்பினர்களும் குல அமைப்பிலிருந்து வெளியேற இயலாது. ஒரு காலத்தில் ஆல்பா அரசைச் சேர்ந்த ஆறு குலங்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டதாக மரபுகள் கூறுகின்றன. அரசரின் தலைமையில் கூடியிருந்த பெட்ரிசியர்களின் அவையாகிய கொமிசியா கியூரியேட்டாவே புதிய குலங்களுக்கு ஏற்பளித்து ஏற்றுக் கொள்ள முடியும். குல உறுப்பினர்களைக் குலத்தலைவர்கள் தெரிவு செய்து இருக்கலாம்[1]. அரசரே பெட்ரிசிய வகுப்பினரை உருவாக்கினர் என்பது நம்பற்குரியதன்று. வெளியார்களைக் குல உறுப்பினராக ஏற்றுக்கொள்வதையும், பிளெபியர்களில் ஒரு பகுதியினரை உறுப்பினராக ஏற்றுக்கொள்வதையும் இப் புதிய சேர்க்கை முறை குறிப்பிட்டது. இம் முறையைப் பயன்படுத்திப் பெட்ரிசிய வகுப்பினரை உருவாக்குதல் குடியாட்சிக் காலத்தில் கைவிடப்பட்டது. ஏனெனில் இறுதியில், கியூரிகளின் அவை பிளெபியர்களைச் சேர்த்துக்கொள்ளத் தொடங்கியது. குல உறுப்பினர் தகுதியைப் பெற்றவர்களுக்கான தனிப்பட்ட அரசியல் அவை எதுவும் இருக்கவில்லை. டர்குவினி (Tarquinii) என்ற குலம் ஒன்று மட்டுமே விலக்கப்பட்டதாக மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. இக் குலத்தினர் உரோம் நகர அரசின் உறுப்பினராக இருக்கும் தகுதியை நீக்கும் கட்டளையை மக்கள் பிறப்பித்தனர்.[2]

ஒரு புதிய குல உறுப்பினரை உரோமானியச் சமுதாயத்தில் ஏற்றுக்கொண்டபொழுது அக் குலத்தினர் கூடிவாழ்வதற்குரிய நிலமும் வழங்கப்பெற்றதாக மரபுகள் கூறுகின்றன. ஆனால், இக் குல உறுப்பினர் அனைவரும் முழுமையாக அந் நிலத்தை உடைமை கொண்டார்களா என்பது பற்றிய தெளிவான செய்திகள் இல்லை. கிளாடி குலத்தினர் பெற்ற நிலம் அக் குலத்தினருக்குள் பகிர்ந்து கொள்ளப்பெற்றதென டயோனிசஸ் குறிப்பிடுகிறார்.[3] ஆனால்,

[1] Liv. iv 4
[2] Liv. ii. 2.
[3] Dionys. v. 40.

கியூரியா அல்லது தனிப்பட்டவர்களுக்கு நிலம் ஒதுக்கப்பட்டதாகவும் குலத்திற்கு ஒதுக்கப்பெறவில்லையென்றும் மற்றச் செய்திகள் கூறுகின்றன. நிலவுடைமைபற்றிய பழங்காலச் சொற்களாகிய மரபுவழி நிலம், தனிநிலம், பொதுநிலம் ஆகியவைகளிலிருந்து மக்களுக்கும் நிலத்திற்குமுரிய தொடர்பினை அறியலாம். மரபு உரிமை நிலத்தை ரோமுலஸ் தனி உடைமையாக்கியதாக அறிகிறோம். ஆனால், இவ்வாறு ஒரு குடும்பம் தனியுடைமையாக்கப்பெற்ற இரண்டு ஜுகேரா நிலம் போதவில்லை. எனவே, பொதுநிலத்தையும் பயன்படுத்திக்கொண்ட பொழுது, குல அடிப்படையில் இந்நிலம் பகிர்ந்து கொள்ளப்பட்டது. குலத்தினர் கூட்டுடைமை உரிமை பெற்றிருந்ததோடு சில கூட்டுப்பொறுப்புகளையும் பெற்றிருந்தனர். பித்துப்பிடித்தவர்களின் பாதுகாப்புப் பொறுப்பைக் குலம் ஏற்றுக்கொண்டிருந்தது. மகளிர், குழந்தைகள் மீதான குலத்தின் காப்புரிமையை மறுஆய்வு செய்யும் அதிகாரத்தை இது பெற்றிருந்தது. இத்தகைய உரிமைகள் சட்டப்படி குலத்தை வந்தடைந்ததிலிருந்து இது கூட்டு நிறுவனமாகச் செயற்பட்டதை அறியலாம்.

குடும்ப உயர்வைப் பேணுவதற்காகக் கூட்டு நடவடிக்கை இருந்தபோதிலும் வேறு துறைகளில் குலம் கூட்டு நடவடிக்கைகளில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை.

பிறப்பாலும் மணவினையாலும் குல உறுப்பினர் தகுதியை அடையலாம். கலப்பு மணஉரிமை பிளெபியர்களுக்குக் கிட்டுவதற்குமுன், மிகப் பழங்காலத்திய மணச்சடங்கின் விளைவாக வாழ்க்கை பெற்றவர்களின் குழந்தைகளே குல உறுப்பினராக முடியும். கலப்பு மணஉரிமை பிளெபியர்களுக்கு அளிக்கப்பெற்ற பின், மணவினைச் சடங்குகள் வற்புறுத்தப்படவில்லை. தந்தைவழிக் கோட்பாட்டின்படி மகன் தந்தையின் குலத்தில் இடம் பெற்றான்.

ஒவ்வொரு குடும்பமும் அதன் கடவுளர்களைப் பெற்றிருந்தது. சமயச்சடங்குகளைக் குடும்பத் தலைவர் அல்லது குடும்பத்தின் பிரதிநிதி செய்யவேண்டும். எனவே, தந்தையின் இடத்தில் ஒருவர் ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்கவேண்டும்.

ஒரு பெண் குடும்பத் தலைவராக இருக்க இயலாதென்பதால் குடும்பத் தொடர்ச்சிக்குப் புதல்வர்கள் அல்லது குறைந்தது ஒரு புதல்வராவது இருக்கவேண்டும். குடும்பத் தலைவருக்கு இயல்பாகவே மகன் ஒருவன் பிறக்கவில்லையென்றால் இவர் ஒருவரை மகவேற்புச் செய்துகொள்ளலாம். மகவேற்புச் செய்துகொள்ளப்

பெற்ற மகன், பிறந்த மகனுக்குரிய எல்லா உரிமைகளையும் பெற்றிருந்தான். மகவேற்புச் செய்துகொண்ட தந்தையின் முழுமையான அதிகாரத்திற்கு இவன் உட்பட்டிருந்தான். குடும்பக் கடவுளர்களை இவன் வழிபடும் உரிமை பெற்றான். எனவே, இவனுடைய புதிய தந்தை இறந்தபின் அவர் இடத்தைப் பெறும் தகுதி பெற்றான். பெண் ஒருத்தி எப்பொழுதும் ஓர் ஆணின் கட்டுப்பாட்டிலேயே இருந்தாள்; அதாவது தந்தை அல்லது கணவனின் கட்டுப்பாட்டில் இருந்தாள். இவளுடைய திருமணத்திற்குப்பின் இவள் ஒரு குடும்பத் தலைவரின் பாதுகாப்பிலிருந்து விடுபட்டு மற்றொரு குடும்பத்தலைவரின் பாதுகாப்பிற்குள்ளாகிறாள். இக் குடும்பத் தலைவர் இவளுடைய கணவனாக இருந்து குடும்பத்தில் மகளுக்குரிய உரிமைகளை அளிக்கிறார்.

பழங்காலக் குடும்பத்தில் அடிமையும் ஓர் உறுப்பினன். இவனுடைய அடிமைத்தனம் நிலையானதாக இருந்தது. விடுதலை செய்யப்பெற்றால்தான் இவன் சுயேச்சை பெறலாம். இஃது ஓர் அரும் நிகழ்ச்சியாக இருந்தது. பிற்காலத்தில் கட்டாய உழைப்பிற்குட்படுத்தப் பெற்றவர்களின் நிலையைவிட இவர்களின் நிலை பொறுத்துக் கொள்ளக்கூடியதாக இருந்தது. குடும்பத்தின் எல்லா உடைமைகளும், குடும்பத்தினரின் தனிப்பட்ட உரிமைகளும் குடும்பத் தலைவருக்குரியதாக இருந்தன. குடும்ப உறுப்பினர் அல்லது அடிமைகள் சொத்துச் சேர்க்க அனுமதிக்கப் பெற்றார்கள் என்றால் அது குடும்பத்தலைவரின் நல்லெண்ணத்தைப் பொறுத்ததேயாகும். குடும்பத்தலைவரின் உரிமைகள் அவரைச் சில கடமைப் பொறுப்புகளுக்குட்படுத்தின. குடும்ப உறுப்பினரின் இறப்பு அல்லது இறப்புமீது இவர் முழுமையான அதிகாரம் செலுத்தினார். குடும்பத்தின் சமய குருவாக மட்டுமன்றித் தலையாய நீதிபதியாகவும் இருந்து வழக்காறுகளை விளக்கம் செய்து முடிவுகளைத் தெரிவித்தார். ஆயினும் குடும்பத்தோடு தொடர்புடையவைகள்பற்றிக் குடும்பத் தலைவர்களின் குழுவைக் கலந்தாராய்வது ஒரு வழக்கமாகவிருந்தது. இக்குழு,பிற்காலத்தில் நிருவாகிகளுக்கு அறிவுரை அளிக்கும் கவுன்சிலாக மலர்ந்ததெனலாம். ஆனால் நிருவாகிகளைப்போல் குடும்பத் தலைவர்கள் பதவி விலகுவதுமில்லை; பொதுமக்களுக்குப் பொறுப்புடையவராவதுமில்லை.

இத்தகைய உன்னதமான குடும்ப அமைப்பில் இருந்தே மற்றப் பெரிய அமைப்புகளாகிய குலம், இனம், அரசு போன்றவை தோன்றினவேயன்றித் தனிப்பட்டவர்களிலிருந்து அல்ல. பிற்கால உரோமானியர்களின் பெருமைக்கு இவர்கள் குடும்ப அமைப்புப் பெரிதும் உதவியதெனலாம்.

குடும்பத்தலைவர்களின் பாதுகாப்பை நாடி ஏற்றுக்கொண்டவர்கள் குடும்பச் சார்பாளர்களாக இருந்தனர். குடும்பத் தலைவர்களின் ஏவலர்களாக இவர்கள் பணியாற்றினர். இவர்கள் குடும்பத்தின் முழு உறுப்பினர் தகுதியைப் பெறவில்லை. இவர்கள் கீழ்நிலை உறுப்பினர்களாகவே இருந்தனர். குடும்பத்தலைவரின் அரவணைப்பில் இருந்த இவர்கள் குடும்பத் தலைவர்களுக்குத் தக்க சமயத்தில் கைம்மாறு செய்தனர். குடும்பத்தலைவருக்குப் பற்றுறுதியளிக்கும்வரை அவருடைய பாதுகாப்பைப் பெறக் கடமைப்பட்டிருந்தார்கள்.

அனைத்து மக்கள் தொகுதியும் சேர்ந்தே உரோமானியச் சமுதாயம் உருவாயிற்று. இச் சமுதாயத்தின் பிரிவுகளாகக் கியூரியாக்கள், உரோம் நகரம் தோன்றிய காலத்திலிருந்தே இருந்துவந்தன. இலத்தீன் இனங்களுக்கு இத்தகைய கியூரியாப் பிரிவுகள் பொதுவானவைகளாக இருந்துள்ளன. இக் கியூரியா பல குலங்களைக் கொண்டதே. கியூரியாக்களில் இருந்த குலங்களின் எண்ணிக்கை பலவாறாக இருந்தது. இக் கியூரியாக்கள் அரசியல் பிரிவுகளாக இருந்தன. இக் கியூரியாக்களில் இடம் பெற்றிருந்த குடும்ப அல்லது குலங்களின் எண்ணிக்கை தெளிவாகத் தெரியவில்லை.

ஆனால், இச் சமூகம் மூன்று இனங்களைக் கொண்டிருந்ததென்பதை முன்பே பார்த்தோம். இவ்வினங்கள் சமூகத்தின் அடிப்படையான பிரிவுகளாகத் தோன்றவில்லை. முதலில் இவ்வினங்கள் தல இயல்புடையனவாக இருந்தன. பின், தலத்தில் வசித்த மக்களைக் குறிப்பிடுவதாக அமைந்தன. ஒவ்வோர் இனமும் கியூரியாக்களைக் கொண்டமைந்தது. இனம் ஒன்றிற்குப் பத்து கியூரியாக்களாக முப்பது கியூரியாக்கள் இருந்தன. இப் பழங்கால இனங்களின் மறைவிற்குப் பின்னும் முப்பது கியூரியாக்கள் தொடர்ந்திருந்து வந்தன. ஆயினும், இக் கியூரியாக்களும் இனங்களும் எத்தகைய அமைப்பையும் பெற்றிருக்கவில்லை. அமைப்பின்மை காரணமாக இவைகள் சுயேச்சையாகச் செயற்பட இயலவில்லை.

சமுதாயம் வாக்களிக்கும் நிறுவனமாக மாறியபொழுது இஃது இறைமையுடைய மக்கள் நிறுவனமாக மாறியது. அரசு தொடர்புடையவைகளில் இஃது இறுதி முடிவைச் செய்தது. குடியரசின் இறுதிக் காலம் வரையிலும் சமுதாயம் பல பிரிவுகளாக எல்லா அவைகளிலும் வாக்களித்ததேயன்றித் தனிப்பட்ட உறுப்பினராக வாக்களிக்கவில்லை. ஆனால், கிரேக்க அவைகளில் மக்கள் தனித்தனியாக வாக்களித்தனரேயன்றி ஒரு பிரிவாக அமைந்து வாக்களிக்கவில்லை. இம் முறை மக்களாட்சியின் வளர்ச்சிக்குதவியதெனலாம். உரோமானியர்களின் வாழ்க்கைமுறையும் சிந்தனையும்

மாறுபட்ட வளர்ச்சிக்கு வழிகோலின. ஒரு பிரிவில் ஒருவராக இருக்கும் முறை உரோமானியருக்கு இயற்கையாகத் தோன்றியது. எனவே, அரசியற்செயற்பாடுகளிலும் இவர்கள் பிரிவுகளின் வழியாகவே செயற்பட விரும்பினர். உரோமானியர்களின் இம் மனப்பான்மையும் உள்ளார்ந்த் பழைமையும் இப் பிரிவு முறையை இறுதிவரை கொண்டு செலுத்த உதவின எனலாம்.

ஒரு சமுதாயமாக உருவாகிய குலங்கள் ஒருவரை அரசியல் தலைவராக ஏற்றுக்கொள்ளவும் அவரை அரசரென வழங்கவும் விரும்பின. அவருடைய அரச பதவியை உயிர் உள்ளவரை நிலைப்படுத்திக் கொள்ளவும் இணங்கின. பல்வேறு குலங்களின் முதறிஞர்கள் அல்லது பெட்ரிசியர்கள் அரசரின் அறிவுரைக் குழுவாக அமைந்தனர். அரசின் நிருவாகப் பொறுப்பு அரசர் இறந்ததும் இக் குழுவை அல்லது சபையைச் சென்றடைந்தது.

மரபுகளின்படி, முதல் அரசர் செனெட்சபையை உருவாக்கி, மக்களைக் கியூரியாக்களாகப் பிரித்து உரோம் நகருக்கு ஓர் அரசியல் அமைப்பை வகுத்தளித்தார். வெற்றியார்ந்த போர்களால் இவர் உரோம் நகரின் அதிகாரத்தை விரிவாக்கினர். நூமா என்பவர் குருமார்குழுக்களை அமைத்துச் சமயச்சடங்குகளை நிறுவினர். மக்களின் சமய வாழ்க்கையை மேம்படுத்த இவர் முனைந்தார். டல்லஸ் ஹோஸ்டிலியஸ் என்னும் அரசர் உரோமானியரின் அரசியல் ஆதிக்கத்தை விரிவாக்கினர். ஆங்கஸ் மார்சிலஸின் காலத்தில் அமைதிப் பணிகள் வளர்ச்சியடைந்தன. டார்க்குவீனியஸ் உரோம் நகரின் பொதுப்பணிகளை மேற்கொண்டு சிறப்புற நிறைவேற்றினர்; போரிலும் இவருடைய திறமைகளை வெளிப்படுத்தினர்.

சர்வியஸ் டல்லியஸ் உரோமானியர்களின் தலைசிறந்த அரசியலமைப்பாளராவார். இவர் மக்களை வகுப்புகளாகவும், செஞ்சுரிகளாகவும் பிரித்துப் பெரும் புகழெய்தினர். தல அமைப்பின் பிரிவுகளாக இவர் இனங்களைப் புகுத்தினர். இவருடைய விரிவான சீர்திருத்த ஏற்பாடுகளை அடுத்த அதிகாரத்தில் காணலாம்.

# 2. உரோமில் முடியாட்சி

ஒருகாலத்தில் உரோம் நகரம் மன்னர்களால் ஆட்சி செய்யப் பட்டதென்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மை யாகும். பண்டைக் கால மரபுகளும் பிற்காலத்தில் ஏற்பட்ட குடி யாட்சி நிறுவனங்களும் இவ்வுண்மையை மெய்ப்பிக்கின்றன. மேலும், மிகப் பழங்காலத்தில் மக்களிடையே குடியாட்சிமுறை நிலவி வந்துள்ளதென்பதை வரலாறும் குறிப்பிடுகிறது. மன்னர் களின் ஆட்சிக் காலத்தில் உரோம் நல்ல முன்னேற்றம் கண்டிருந்த தென்பதையும் வரலாறு வழியாக நம்மால் அறிந்துகொள்ள முடி கிறது. எனவே, அம் முடியாட்சியைப்பற்றி நாம் சிறிது ஆராய் வோம்.

உரோம் அரசின் தலைவராக ஓர் அரசர் இருந்தார். அரசின் ஆட்சி இவரது தலையாய பணியாக இருந்தது. போர்க்காலத்தில் இவர் மக்களின் தலைவராக இருந்து படையை நடத்திச்சென்றார். சமயச்சார்புடையவைகளிலும் இவர் மக்களின் பிரதிநிதியாக இருந்துள்ளார். மக்களின் சட்ட விவகாரங்களிலும் ஒரு நீதிபதி யாக இவர் செயற்பட்டு வந்துள்ளார். கட்டளைகளைப் பிறப்பிக்க வும் பிறப்பித்த கட்டளைகளைச் செயற்படுத்தவும் உரோமானியர் கள் இவருக்கு முழுமையான அதிகாரம் அளித்திருந்தனர். இந்த அதிகாரம் தலையாய இறைமை அதிகாரமாகும். குடும்பத்தலைவரின் தலையாய அதிகாரத்தை இதன் முன்மாதிரியாகக் குறிப்பிடலாம். ஒருவர் இருப்பதையோ இறப்பதையோ முடிவு செய்யத்தக்க தாகும் இவ்வதிகாரம். ஆயினும் இத்தகைய அதிகாரம் உரோம் அரசில் ஒரு கொடுங்கோல் ஆட்சியை ஏற்படுத்திவிடவில்லை என்பதை வரலாறு தெளிவுபடுத்துகிறது. அப்படிக் கொடுங் கோலாட்சி தலைதூக்கும்பொழுது மக்கள் கிளர்ந்தெழுந்து அத் தகைய ஆட்சிமுறையை ஒழித்துவிடுவர் என்பதைக் கடைசி அரச ரின் ஆட்சி முடிவுக்குக் கொண்டுவரப்பட்டதிலிருந்து அறிந்து கொள்ளலாம். ஆயுட்காலம் முழுவதும் ஆளும் அதிகாரத்தை

அரசர்கள் பெற்றிருந்ததால் புரட்சி வழிகளாலன்றி வேறு வழிகளில் ஆட்சியை முடிவுக்குக் கொண்டுவர இயலா நிலையில் மக்கள் இருந்தார்கள்.

ஆயினும், உரோமானிய அரசர்கள் எத்தகைய கட்டுப்பாடுகளுக்கும் உட்படவில்லையென்று நாம் கருதலாம். அரசர்களும் ஆட்சியாளர்களும் அதிகாரங்களையும் உரிமைகளையும் வரையறையின்றி, வலியுறுத்தாதவாறு இவர்களுடைய நேர்மையுணர்வு காவல் செய்ததை உரோமானியர்களின் வரலாற்றிலிருந்து நாம் அறிந்துகொள்ள முடியும். இந்த நேர்மை உணர்வுக்குட்பட்டே உரோமானிய அரசர்கள் அதிகாரத்தைச் செயற்படுத்தினர். மரபுகளாலும், பழக்கவழக்கங்களாலும், தெய்வநீதியாலும் அரசர்களின் அதிகாரம் வரையறைக்குள்ளாகியது. ஆனால், ஒருவர் பலர் மீது முழுமையான அதிகாரம் செலுத்தும்போது அவ்வதிகாரம் ஏதாவதோர் அறமுறையான சக்திக்குக் கட்டுப்படவேண்டும். எனவே, முறையாகக் கோலோச்சும் ஓர் அரசர் அவருடைய அதிகாரத்தின் தன்மையை அறிந்தே செயற்படவேண்டும் என்பது தெளிவு.

கட்டளைகளைப் பிறப்பித்து அரசகாரியங்களை நிறைவேற்றலர் மென்பது அரசியலமைப்பிற்குட்பட்ட அதிகாரமெனக் கருதினும் அவர்களுடைய அறிவுரைக் குழுவாகிய செனெட்டைக் கலந்துகொண்டு அரசர் செயற்படவேண்டுமென வழக்காறுகள் வலியுறுத்தின. உரோம் நகரை ஆட்சி செய்த கடைசி அரசர்கள் செனெட்டின் அறிவுரையைப் பெற்றுச் செயற்படவில்லையென்பதுதான் இவர்கள்மீதான கடுமையான குற்றச்சாட்டாகும். பழக்க வழக்கங்களை அடிக்கடி மீறி இவர்கள் செயற்பட்டதை உரோமானியர்களால் பொறுத்துக்கொண்டிருக்க முடியவில்லை. மேலும், ஒரு குடிமகன் மரணதண்டனைக்குள்ளானால் மக்கள் பேரவையிடம் முறையிட அவனுக்கு அரசர் இசைவளிக்கலாம். ஆனால், அரசர் முறையீட்டிற்கு இசைவளிக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. இத்தகைய நிகழ்வுகளில் மக்கள் உணர்ச்சிவயப்பட இடமிருந்தது.

உரோமில் வழிவழி உரிமையையொட்டி அரசர் அரச பதவிக்கு வருவதில்லையென்பதை நாம் மறந்துவிடலாகாது. தேர்தல் முறையினாலன்றி ஓர் அரச குடும்பத்தினர் அல்லது குலத்தினர் என்ற முறையில் ஒருவர் அரசருக்குரிய அதிகாரங்களை ஏற்றதில்லை. இத் தேர்தல் முறை இரண்டு கட்டங்களில் நிறைவேறியதென்பதை நாம் மரபுகளால் அறிகிறோம். முதல் கட்டமாக, அரசரைத் தெரிவு செய்தல் வேண்டும். பின்னர் இரண்டாம் கட்டமாக அவ்

வாறு தெரிவு செய்யப்பெற்றவரிடம் அதிகாரத்தை ஒப்படைக்க வேண்டும். அரசரைத் தெரிவு செய்வதல் செனெட் பெருமளவு ஈடுபாடு கொண்டிருந்தபோதிலும் அரசருக்கதிகாரமளிப்பதில் செனெட்டும் இனங்களால் கூட்டப்பெற்ற சமுதாயமும் பெரும் பங்கு பெற்றிருந்தன எனலாம். கடவுளின் விருப்பத்தை அறிய பறவைகள் பறப்பதுபற்றிய சகுனங்களை மக்கள் பார்த்தார்கள். ஏனெனில் மக்களால் தெரிவு செய்யப்பெற்றவர் கடவுளின் ஏற்பையும் பெற வேண்டுமென்பது மிகச் சிறப்பாகக் கருதப்பட்டது தேர்ந்தெடுக்கப்படும் கோனாட்சி முறையில் ஓர் இடைக்கால ஏற்பாட்டிற்கு வழியிருக்கவேண்டும். அரசபதவிக்கான ஒருவரின் பெயரை வழிமொழியவும் பேரவையைச் சட்டப்படி கூட்டவும் கூட்டத்தில் பெயரை எடுத்துரைத்துச் சபையின் முடிவை அறிவிக்கவும் தாற்காலிக அதிகாரம் பெற்ற ஒருவர் இருக்கவேண்டும். அரசர் இறந்தவுடன் அப் பதவி அவருடைய வழித்தோன்றலைச் சென்றடையும் என்ற நியதி உரோமில் இல்லை. எனவே, உரோம் அரசில் அரசர் இறந்ததும் அப் பதவிக்கு மற்றொருவர் தேர்ந்தமர்த்தப்படும் வரையிலான கால இடைவெளியை நிரப்ப ஒன்று அல்லது பல இடைக்கால அரசர் அல்லது அரசர்கள் அமர்த்தப்படலாம். இவ்வாறு அமர்த்தப்படுபவர்கள் செனெட் சபையிலிருந்து அமர்த்தப்படுவார்கள் இடைக்கால அரசர் எனப் பட்டம் பெற்ற செனெட் சபையின் உறுப்பினர் ஒருவர் ஐந்து நாள்களுக்கு அரசர் பொறுப்பேற்கிறார். இவர் இரண்டாவது இடைக்கால அரசர் ஒருவரை அமர்த்துகிறார். அரசர் ஒருவர் தெரிவு செய்யப்படும்வரை இந்த முறை தொடர்ந்து இருந்து வந்தது. செனெட்சபையின் விருப்பத்திற்கிணங்க இடைக்கால அரசர் ஒருவரைத் தெரிவு செய்து கியூரியாவாரியாகக் கூடியுள்ள மக்களின் ஒப்புதலுக்காக விடுகிறார். கியூரியாவின் ஒப்புதலை ஏற்றுக்கொண்டு செனெட் சட்டப்படியான தன் ஏற்பினைத் தெரிவித்தபின் தெரிவு செய்யப்பட்டவரின் பெயரை இடைக்கால அரசர், அரசரென அறிவிக்கிறார். புதிதாகத் தெரிவு செய்யப்பெற்ற அரசர் புட்குறி பார்த்து அதிகாரங்களை ஏற்றுக்கொண்டதோடு இத் தேர்தல் சடங்கு முடிவுறுகிறது. அரசரைத் தெரிவு செய்தல் செனெட்டின் அதிகாரமாகும். மக்கள் அரசரைத் தெரிவு செய்தல் அல்லது உறுதி செய்தல் என்பதெல்லாம் வெறும் வெளித்தோற்றமேயாகும். அரசர் படைத்தலைவராக இருந்ததால் படையினரின் ஆதரவையும் பெருமளவு பெற்றிருந்தார்; செனெட் சபையின் உறுப்பினர் ஒருவரால் அரசர் தெரிவு செய்யப்படுகிறார் என்பதால் அச் சபையின் ஏற்பு என்பதும் ஒரு சடங்கேயாகும். இதன்பின் கியூரியா செனெட்டின் முடிவை ஏற்க மறுக்கலாமென்பது கருதிப் பார்க்க இயலாததொரு நிகழ்ச்சியாகும்.

வரம்பிற்குட்பட்ட மக்கள் இறைமையில் பழங்கால உரோமானிய முடியாட்சி நிலைபெற்றிருந்தது. மக்களின் இறைமைத் தலைமை நிருவாகியாகிய அரசரின் அதிகாரத்தால் வரையறைக்குள்ளாகியது. முக்கியமான அரச காரியங்களை அரசர் செனெட் சபையைக் கலந்துகொண்டு செய்யவேண்டுமென எதிர்பார்க்கப்பட்டாலும் அரசர் சபையைக் கலந்துகொண்டு செயற்படத் தேவையில்லையென்ற நிலை உருவாகியது. அரசரின் அதிகாரத்தை ஒரு சட்டம்[1] வரையறைசெய்தது. மக்கள் அரசருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமெனவும் முன்னோர்களின் நடைமுறைகளை அரசர் பின்பற்ற வேண்டுமெனவும் வலியுறுத்தும் ஓர் ஒப்பந்தமாக இச்சட்டம் அமைந்தது. இத்தகைய வரையறைகளைத் தவிரத் தலைமை நிருவாகியாகவும், தலைமைச் சமயகுருவாகவும், சட்டமியற்றுநராகவும், நீதிபதியாகவும் முழு அதிகாரம் பெற்று விளங்கினர். போர் அறிவிப்புச் செய்தபின் படைதிரட்டவும், பயிற்றுவிக்கவும், படைத்தலைவர்களைத் தெரிவு செய்யவும், போரை நடத்தவும் இவர் தனியதிகாரம் பெற்றிருந்தார். அரசின் உடைமை இவருடைய கட்டுப்பாட்டிற்குட்பட்டிருந்தது. வென்று கைப்பற்றிய இடங்களை இவருடைய விருப்பம்போல் பிரித்துக் கொடுக்கலாம். பொதுப்பணிப் பொறுப்புகளை இவர் மேற்கொள்ளலாம். மக்கள், கடவுளோடு தொடர்பு கொள்ளும்போது இவர் வழியாகத் தொடர்பு கொள்ளவேண்டும். மற்ற மக்களோடு தொடர்புகொள்ளும்பொழுது அரசர் மக்களின் பிரதிநிதியாகச் செயற்படுகின்றார். இருந்தபோதிலும், நிரந்தரமான அல்லது பெரும் விளைவுகளுக்குள்ளாகும் மாற்றங்களைச் செய்யும்போது இவர் குருமார்களைக் கலந்து கொள்ளவேண்டும். மக்கள் கருத்தை அறிந்துகொண்டு போர்தொடுத்தல், பெருமக்களை முதன்மையாகப் பாதிக்கின்ற காரியங்களைத் தவிர, மக்களுக்குத் தேவையான நடவடிக்கைகள் எனக்கருதுகின்றவைகளையொட்டிச் சட்டங்களை வகுத்துச் செயற்படுத்தும் அதிகாரத்தையும் இவர் பெற்றிருந்தார். உரிமை, குற்றத்தண்டனைக்குரிய வழக்குகளை இவர் தீர்த்துவைத்தார். மரணதண்டனைக்குட்படுத்தும் குற்றத்தண்டனை வழக்குகளை அரசரின் இசைவோடு மக்களின் விசாரணைக்கனுப்பும் அதிகாரத்தையும் அரசர் பெற்றிருந்தார்.

குற்றத்தண்டனை வழக்குகளை மக்களின் தீர்ப்பிற்கு அனுப்பிவைக்கும் உரிமையும் குற்றம் செய்தவர்களை மக்கள் மன்னிக்கவும் அத்தகைய வழக்குகளில் மக்கள் இறுதி நீதிமன்றமாகவும் செயற்

[1] Lex de Imperio

படும் உரிமையும் வலியுறுத்தப்பட்டன. மக்களே சட்டத்தின் தோற்றுவாய் எனச் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன[1]. குறிப்பாக, மக்கள் சமுதாயத்தைக் கட்டுப்படுத்தும் பொதுவகையான அவசரச்சட்டங்களுக்கு மக்களே தோற்றுவாயாக இருந்துள்ளனர்[2]. மக்களுடைய இசைவாணை தேவைப்படாத குருமார்களின் சில தீர்ப்புகளைத் தவிர மற்றத் துறைகளில் பழங்குடியினர் சட்டமியற்றியிருக்கலாமெனத் தெரிகிறது. இருப்பினும் சட்டமியற்றலில் தொடங்கும் உரிமை அரசருக்குரியதாகவே இருந்தது. முடியாட்சிவீழ்ச்சியுற்றபின்குடியாட்சியின் தொடக்கத்தில்கொமிசியா (Comitia) சட்டங்களை இயற்றியதிலிருந்து இக்கருத்துத் தெளிவாகிறது. மக்களின் கருத்தையும் விருப்பத்தையும் அறிந்துகொண்டு அரசர் சட்டமியற்றினர். ஆனால் ஒன்றைமட்டும் உறுதியாகச் சொல்லலாம்; தகுதியுள்ளவர்களால் சட்டம் வகுக்கப்பட்டதென்பதும் அஃது அனைவரையும் கட்டுப்படுத்தியதென்பதுமாகும். மக்களின் கருத்தை அறிந்தே இத்தகைய சட்டங்கள் வகுக்கப்பெற்றனவென்பதிலிருந்து சட்டத்தின் அடிப்படை மக்கள் விருப்பு என்பது தெளிவாகிறது. ஆயினும் மக்கள் விருப்பை வெளியிடுவதைப் பிற்கால நிருவாகிகள் தடைசெய்ததால் மக்களின் விருப்பம் முழுமையாக வெளியிடப்படவில்லை. மேலும், மக்களின் இசைவோடும் செனெட்டின் விருப்பத்தோடும் அரசர்கள் சில விருதுகளையும் பட்டங்களையும் பெற்றதிலிருந்து அரசர்களைப் பெருமைப்படுத்துவதில் மக்கள் பங்குபற்றியதை அறிந்துகொள்ளலாம்[3]. அலுவலர்களை அரசர் அமர்த்துவதைக் கியூரியா சபை சட்டத்தால் ஏற்கவேண்டும். குவெஸ்டர்களை அரசர் அமர்த்தியதைக் கியூரியா ஏற்றுக்கொண்ட செய்தியிலிருந்து இக் கருத்துத் தெளிவாகிறது.

ஆகவே, மக்கள் சில உரிமைகளைப் பெற்றிருந்தார்கள் எனலாம். அதனால், மக்கள் பிரதிநிதிகளுக்கு அளிக்கப்பட்டிருந்த பரவலான அதிகாரங்களால் இச் சில உரிமைகளும் பாதிக்கப்பட்டன. இவர்களுடைய நிருவாக, சட்டமியற்றும் அதிகாரங்கள் மக்களின் உரிமைகளைப் பறித்துவிட்டன. இத்தகைய அதிகாரங்களை மக்கள் அரசருக்களித்ததாகத் தெரியவில்லை. ஏனெனில், சட்டமியற்றலில் இவர்களுக்கிருந்த அரைகுறையான அதிகாரத்தைப்போலவே அரசரைத் தேர்ந்தெடுப்பதிலும் இவர்கள் குறைந்த அதிகாரத்தையே பெற்றிருந்தார்கள்.

[1] Dionysus ii. *14*
[2] Livy i. *26*
[3] Dionys iii. *62*. Cic de Rep. ii *17*, *31*

அரசருடைய ஆட்சியின் பல்வேறு தோற்றங்களைக் குறிப்பிடும் வகையில் அரசர் பலவகையான பட்டங்களைப் பெற்றிருந்தார். இவைகளில் சில குடியாட்சிக் காலத்திலும் நிலவின. நீதி வழங்கியதால் இவர் நீதிபதி எனவும், படைத்தலைமையை ஏற்றிருந்ததால் படைத்தலைவரெனவும் (பிரீட்டர்) சர்வாதிகாரிஎனவும் மக்களின் நிருவாகி (magister populi) எனவும் பெயர்பெற்று விளங்கினர். அரசின் தலைவர் என்ற முறையில் சமயம், உரிமை பற்றியவைகளில் இவர் 'ஒழுங்குபடுத்துநராக' (rex, regulator) இருந்து வந்ததை இவருடைய பொதுவான பட்டம் விளக்குகிறது. மனிதத் தொடர்புடையவைகளையும், இறைத் தொடர்புடையவைகளையும் இவரே ஒழுங்குபடுத்தினரெனலாம். வேள்விகளிலும், சமயச்சடங்குகளிலும் அரசரின் வழிவந்தவர்களே பங்கு பெற்றிருந்தார்கள். அரசருக்களிக்கப்பட்ட இறைமை அதிகாரத்திலிருந்து இவருடைய நிலையை அறியலாம். இறைமை (imperium), அரசின் தலைவரின் நிலையைக் குறிக்கிறதேயன்றி அரசரின் அதிகாரத்தைக் குறிப்பிடவில்லை.[1]

சில விருதுகள் அரசரை அரசிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன. இவ்விருதுகள் இவரை மற்றப் பெருங்குடி மக்களிலிருந்தும் பிரித்துக் காட்டுகின்றன. உரோம் நகருக்குள் இவர் நடமாடும்பொழுது இவருக்குமுன் பன்னிரண்டு லிக்டர்கள் (lictors) ஒரு கட்டுக் கோல்களுடன் ஒரு கோடரியையும் சுமந்து சென்றார்கள். நகருக்குள் இவருடைய படைவலியை இவ்விருதுகள் எடுத்துக் காட்டுவதாக இருந்தன. இறைமையின் சின்னமாகிய கருஞ்சிவப்பு அல்லது செந்நிறத்தில் அரசரின் அங்கி இருந்தது. ஆனல், அரசரின் ஆடை,அணிகள் அவர் செய்த சடங்குகளுக்கேற்ப அமைந்திருக்கலாம். சமயச்சடங்குகளைச் செய்யும்பொழுது கருஞ்சிவப்பு ஆடையையும், புட்குறி பார்க்கும்பொழுது கருஞ்சிவப்பும் குங்கும நிறமும் கலந்த ஆடையையும்,அரச காரியங்களைச் செய்யும்போது வெண்ணிற ஆடையில் கருஞ்சிவப்புக் கோடுகள் போட்ட ஆடையையும் அரசர் அணிந்திருந்ததாகத் தெரிகிறது. கழுகுத்தலை பொறித்த செங்கோலையும், பொன்முடியையும், அரியணையையும், நகருக்குள் பயணம் செய்யத் தேரையும் அரசர் பெற்றிருந்ததாக மரபுகளிலிருந்து அறிகிறோம். அரசர் அமர்வதற்கென ஒரு குயுருல் இருக்கையும் இருந்தது. பிற்காலத்தில் உரோமானிய வீரர்கள் வெற்றி ஊர்வலத்தில் பயன்படுத்திய தேர், மகுடம், வீரர்கள் அணிந்திருந்த கருஞ்சிவப்பு அங்கி ஆகியவை உரோமானிய அரசர்களின் வெற்றி ஊர்வலச் சின்னங்களை நினைவுறுத்தின.

[1] Cic. de Rep. i, 26, 42.

பழங்கால முடியாட்சிக்குரிய சில தனிச் சிறப்புரிமைகளை அரசர் பெற்றிருந்தார். குடும்பத்தில் தந்தை பெற்றிருந்த அதிகாரத்தைப்போல் அரசர் சில அதிகாரங்களைப் பெற்றிருந்தா ரெனினும் முழுமையான அதிகாரங்களைப் பெற்றிருக்கவில்லை. சமூகத்தலைவர் என்ற முறையிலும், நாட்டுடைமைகளின் உரிமையாளர் என்ற முறையிலும் அரசர் சில அதிகாரங்களைப் பெற்றிருந்தார். மன்னரின் தனியுரிமை நிலத்தை மன்னரின் பண்ணையாள்கள் பண்படுத்தினர். அரைகுறையான சுயேச்சைக் குடிகளில் பாதிக்கு மேற்பட்டோர் அரசருக்குரிய நிலத்தில் பாடுபடும் வாடிக்கையாளர்களாக இருந்தனர். இவர்கள் ஒரு காலத்தில் அரசரால் போரில் சிறைபிடிக்கப்பட்டவர்களாக இருந்தாலும் இவர்களை அரசர் கைதிகளாகவோ அடிமைகளாகவோ நடத்தவில்லை.

அரசர் பதவி ஏற்கும் முறையிலிருந்து அப் பதவிபற்றிய கோட்பாட்டைத் தெளிவாக அறியலாம். மரபுரிமைபற்றிய செய்திகள் உரோமானிய வரலாற்றில் காணப்படவில்லை. இறையுரிமை பற்றிய செய்திகள் காணப்பெறுகின்றன. கடவுளின் மகனாகிய ரோமுலஸ் பதவியேற்குமுன் கடவுளின் இசைவை எதிர்பார்த்தார். இவருக்குப் பின் பதவியேற்ற நூமாவும் இதே நடைமுறையைப் பின்பற்றியதாகச் செய்திகள் உள. ஆனால், இவைகளெல்லாம் இயல்பான நடைமுறைகளேயன்றி இறைத் தொடர்புடையனவாகக் கொள்ளலாகாது.

எனவே, உரோமானிய அறிஞர்கள் இப் பதவிபற்றிய தேர்வுக்கோட்பாட்டைச் சிந்திக்கத் தொடங்கினார்கள். இப் பதவி தேர்வுக்குரியதென்பதை மரபுகள் ஒருமுகமாகக் குறிப்பிடுகின்றன. செனெட்டின் கருத்திற்கிணங்க மக்களால் அரசர் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது மரபுவழிச் செய்தியாகும்[1]. அரசர் இறந்தவுடன் உடனடியாக அரசபதவியேற்க உரிமை பெற்ற வாரிசு என எவருமில்லை. எனவே, சில நாள்களுக்கு ஓர் இடைக்கால அரசர் அமர்த்தப்பெற்றார். இவருடைய குறிப்புரையையொட்டிப் பெருமக்கள் அவையாகிய கொமிசியா கியூரியேட்டா செனெட் சபையின் இணக்கத்தோடு ஒருவரைத் தேர்ந்தெடுக்கும். இத் தேர்வு முறையைக் கருத்திற்கொண்டு பார்க்கும் பொழுது பிற்காலத்திய குடியாட்சியில் நிருவாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டது புதுமையாகத் தோன்றவில்லை. குடியாட்சிக் காலத்தில் அமர்த்தப்பட்ட சர்வாதிகாரி ஏறத்தாழ கோனாட்சிக்காலத்திய அரசரது அதிகாரங்களைப் பெற்றிருந்தார்.

[1] Liv, i, 17; Cic, de Rep. ii, 17, 31

முடியாட்சி நிறுவனங்களில் தொடர்ந்திருந்துவந்த இரண்டில் மட்டும் தேர்தல் கருத்து பிற்காலத்தில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஒன்று, சர்வாதிகாரி கான்சலால் நியமனம் செய்யப் பெற்றார். இவரை (சர்வாதிகாரியை) இவருக்குமுன் பதவியிலிருந்தவர் நியமனம் செய்யவில்லை. இரண்டு, ரெக்ஸ் சாக்ரோரம் (rex sacrorum) என்ற சமயத்தலைவரைச் சமயக்குழுவின் தலைவராகிய போன்டிஃபெக்ஸ்மாக்சிமஸ்(Pontifex Maxi mus) என்பவரே நியமனம் செய்தார்[1]. இவரை அரசர் நியமனம் செய்யவில்லை. மதகுருபற்றிய அரசரின் கடமைகளை இவர் தொடர்ந்து செய்து வந்தார். சமயத்தலைமைப் பதவியைப் போன்டிஃபெக்ஸ் ஏற்றுச் செயற்படுத்தி வந்தார். தேர்வுபற்றிய கருத்தோடு பழைய நியமனக் கருத்தும் குடியாட்சிக் காலத்தில் தொடர்ந்திருந்தது. வெறும் முறையாக இருந்துவந்த தேர்தல் பேரரசு காலத்தில் செயற்பாடிழந்து பின் மறைந்தது[2]. உண்மையில், நியமனக்கருத்து ஒன்றுதான் தொடர்ந் திருந்துவந்துள்ளது. தேர்தல் குடியாட்சிக் காலத்தில் இடையே புகுந்த கருத்தாகும்.

எனவே, அரச பதவியைத் தேர்வுக்குரியதென மட்டும் கருதாமல் நியமனத்திற்குட்பட்டதெனக் கருதவும் இடமிருக்கிறது. வாரிசை நியமனம் செய்யவேண்டியதை அரசரின் உரிமையாக மட்டுமன்றிக் கடமையாகவும் கருதி இருக்கலாம். அரசருடைய வாழ்நாளில் தக்கவர் ஒருவரை நியமிக்கவில்லையென்றாலும், அப் பதவிக்குரிய ஒருவர் கிடைக்கவில்லையென்றாலும், அரசர் இறந்தவுடன் அடுத்த அரசரை நியமிக்கும் உரிமை செனெட் சபையைச் சென்றடையும். இச் சபையினர் ஒருவரை இச் சபை இடைக்கால அரசராக அமர்த்தியது. ஆனால், முதலில், அரசர் இறந்ததும் அடுத்த அரசரை அமர்த்துவதற்கும் இடையில் உள்ள காலத்தில் செனெட்சபை ஆட்சி செய்தது. செனெட்சபை பத்து உறுப்பினரைக் (decuriae) கொண்ட பிரிவுகளாகப் பிரிந்து ஆட்சிபொறுப்பை நிறைவேற்றியது. பதின்மரைக்கொண்ட ஒவ்வொரு பிரிவும் 50 நாள்கள் ஆட்சி செய்தது. அதாவது பிரிவின் ஒவ்வோர் உறுப்பினரும் 5 நாள்கள் ஆட்சி செய்தனர். அடுத்தடுத்து ஆட்சிப்பொறுப்பையேற்று நடத்தவேண்டியவரிசை முறையைத் திருவுளச்சீட்டால் சபையினர் உறுதிப்படுத்திக் கொண்டனர்[3]. இந்த ஆட்சிமுறை குழு ஆட்சி முறையாகவும் முழுமையான அதிகாரத்தை இப் பதின்மர் குழு பெற்றிருந்ததாகவும் கருதப்பட்டது. உறுப்பினர் ஒவ்வொருவரின் ஆட்சிக்கால

[1] Dionys V. I Liv. XI 42.
[2] Tac. Ann. i. 14 & 81; Dio Cass Liii. 21.
[3] Dionys ii-57

மாகிய ஐந்து நாள்களிலும் அவர் அரசரின் அதிகாரச் சின்னங் களைப் பெற்றிருந்தார்[1]. பிற்காலத்தில் இக் குழு ஆட்சிமுறை கைவிடப்பட்டது. அடுத்த அரச பதவிக்குரியவரை செனெட் முடிவு செய்து இடைக்கால அரசர் ஒருவரை நியமித்தவுடன் இக் குழு ஆட்சி முடிவிற்கு வந்தது. அரசரை நியமிக்கும் நடைமுறை யில் இடைக்கால அரசராட்சி தவிர்க்கமுடியாத ஓர் ஏற்பாடே யாகும். இயல்பான நடைமுறை தடைபட்டபொழுதும் எதிர் பாராத காரணங்களால் வாரிசு என ஒருவரைக் குறிப்பிட இயலாதபொழுதும் இது ஒரு மாற்று ஏற்பாடாக இருந்தது.

அரசப்பதவி முற்றிலும் தேர்விற்குரியதாக இல்லாதிருந்த போதிலும் செனெட்டும் மக்களும் அரசரை அமர்த்தியதில், சில அரைகுறையான தேர்வு நடைமுறைகள் பயன்படுத்தப்பட்டன வென்று மரபுகள் கூறுகின்றன. அரசரை நியமிப்பதில் செனெட் டிற்கிருந்த அதிகாரம் வலியுறுத்தப்பட்டது. இருப்பினும் இந்த அதிகாரம் திடீரெனத் தோன்றியதில்லை. அரச பதவியில் இருப் போர் ஓர் அவையைக் கலந்து கொண்டு மக்கள் நலனைப்பாதிக்கும் எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டுமெனும் கருத் திலிருந்து இந்த அதிகாரம் தோன்றியதெனலாம். அடுத்துப் பதவிக்கு வரக்கூடிய ஒருவரை அமர்த்துவது செனெட்டின் மிகச் சிறந்த அதிகாரமாகும்.

கொமிசியா குயுரியேட்டாவில் கூடியிருந்த மக்கள் அரசரின் அதிகாரங்களுக்கு முறைப்படி சட்டஒப்புதல் அளித்தனர். இம் முறை குடியாட்சிக்காலத்திலும் தொடர்ந்தது அதிகார ஒப்படைட்பை மக்கள் ஒரு சட்டத்தால் நிறைவேற்றினர். ஏற் கெனவே பெற்றுக்கொண்ட அதிகாரத்திற்கு முறைப்படியான ஓர் ஒப்பிசைவு தேவையாயிற்று.[2] அரசரே இவ்வொப்பிசைவை மக்களிடமிருந்து கேட்டுப் பெற்றதாக வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன. மக்களின் ஏற்பிணைப்பினலும் அரசர் ஆட்சி நடத் தலாமென்பதற்குச் சர்வியனின் ஆட்சியைக் குறிப்பிடலாம்.[3]

அரசர் அதிகாரமேற்றுக் கொண்டதைக் கடவுளர்கள் ஏற்றுக் கொள்ளாதவரையில் இவ்வதிகார ஏற்பு முற்றுப்பெருது என்பதி லிருந்து இதன் சமயச்சார்புடைமை தெளிவாகிறது. புட்குறி களைப் பார்த்து அதன்படி கடவுளின் ஏற்பு அறிவிக்கப்பட்டது. குடியாட்சியில் நிர்வாகிகள் பதவியைச் செயற்படுத்துமுன் இச் சடங்கைப் பின்பற்றியுள்ளனர். அரச அதிகாரங்களைச் செயற் படுத்த இஃது இறுதிச் சோதனையாகும்.

[1] Dionys ii-57
[2] Cic. de Leg. Agr. ii. 10, 26.
[3] Liv. i- 41.

அரசின் நிருவாக அதிகாரங்களை அரசர் பெற்றிருந்ததாகப் பிற்காலத்திய மரபுகள் கூறுகின்றன. உரோமானிய அரசர்கள் முழுமையான இறைமை அதிகாரத்தைத் (imperium) தம் விருப் பப்படி செயற்படுத்தினர்கள். முடியாட்சிக் காலத்தில் அரசரின் இம் முழுமையான இறைமை அதிகாரத்திற்கு எத்தகைய வரம்பு களும் இருந்ததாகத் தெரியவில்லை. படை அதிகாரத்தையும், பொது அதிகாரத்தையும் கொண்டதே அரசரின் முழு அதிகார மாகும்.

அரசரின் போர்க்காலத்திய படைத்தலைமை அதிகாரமும் இதன் வழித் தோன்றியதேயாகும். மக்களோடு தொடர்பு கொள் ளும் அதிகாரத்தையும் முழுமையான அதிகாரம் வெளிப்படுத்தி யது. அரசர் இறக்கும் வரை பதவியிலிருந்தார். இவர் அதிகா ரங்களைப் பகிர்ந்து கொள்ள கூட்டாளிகள் இலர். மற்ற அரச அலுவலர்கள் பேராளர்களாக இருந்து செயற்பட்டதாக அரசிய லமைப்புக் கோட்பாடு கருதியது.

அரசரின் அதிகாரம் சட்டவரையறைக்கு உட்படவில்லையெனி னும் அரசியலமைப்பு வழக்காறுகளும், மரபுகளும் சில வரையறை களைச் செய்தன. மக்களின் உரிமைகளைப் பெற்றுத்தந்த வழக்கங் கள் சர்வியஸ் டல்லியனின் சட்டத்தால் தனி, நிலையான சட்டமாக ஆக்கப்பட்டன. இதற்கு முற்பட்ட வழக்காறுகளும் ஒருவகையான சட்டத்தொகுப்பாக அமைந்தது. எடுத்துக்காட்டாக, சமய முதல் வர்களுக்கான வினைமுறைச் சட்டத்தொகுப்பைக் கூறலாம். சமயச் சட்டங்களுக்கு முரணை குற்றங்களைக் குறிப்பிடும் சட்டத்தொகுப் பென இதை மாம்சன் குறிப்பிடுகிறூர்.[1] வழக்காற்றின் அடிப் படையில் அரசர் பெற்றிருந்த அதிகாரத்தைப் பிற்காலத்தில் சட் டப்படியானதென வரலாற்றறிஞர்கள் விவரித்தனர். முக்கிய மானவைகளில் அரசர் செனெட்சபையுடன் கலந்து செயலாற்ற வேண்டுமென்பது அரசியலமைப்புக் கட்டுப்பாடாகக் கருதப்பட் டது.

பழங்காலத்திய மூதறிஞர் அவை அரசருக்கு அறிவுரை கூறும் நிரந்தர அவையாக இருந்தது. உறுப்பினர்களை அரசர் நியமித்தார்[2]. எனவே, இவர்கள் ஆயுட்காலம் முழுவதும் அவை யின் உறுப்பினராக இருந்திருக்கமுடியாது. உறுப்பினர் தகுதியை அடையவோ அத்தகுதியைத் தக்கவைத்துக் கொள்ளவோ குறிப் பிட்ட வழிமுறைகள் கிடையா. புதிதாகப் பதவியேற்ற அரசர்,

[1] Mommson, Staats, ii p. 41.
[2] "Regium Consilium", Cio. de Rep. ii. 8, 14.

முன் பதவியிலிருந்த அரசர் அமர்த்திய செனெட்டர்களை, மறுபடியும் அவைக்கு அழைக்க மறுக்கலாம். இவருடைய பதவிக் காலத்தில் அவை உறுப்பினர்களை மாற்றியமைக்கலாம். பிற்காலத்தில உறுப்பினர்களைத் தெரிவு செய்யும் உரிமை வெகுவாக வலியுறுத்தப்பட்டபொழுது உறுப்பினர் சிலர் அமர்வு பெருமல் போனது ஒரு குறையாகக் கருதப்பெறவில்லை[1].

முதலில் செனெட்சபையின் உறுப்பினர் எண்ணிக்கை 100 ஆக இருந்தது. முடியாட்சி முடிவிற்கு வந்தபொழுது இதன் உறுப்பினர் தொகை 300 ஆக இருந்தது[2]. ஒவ்வொரு குலத்திலிருந்தும் (Clan) ஒரு பிரதிநிதி இச் சபையில் அமர்த்தப்பெற்ருர். இக் குலங்களின் பெருக்கத்திற்கேற்ப சபையின் உறுப்பினர் எண்ணிக்கை பெருகிற்று. இறுதியில், இச் சபையின் உறுப்பினர் எண்ணிக்கை 300ஆக உறுதி செய்யப்பட்டது. மரபுவழிச் செய்திகளின்படி ஒவ்வொரு இனமும் (Tribe) இச் சபைக்கு 100 பிரதிநிதிகளை அனுப்பியது. பழங்கால உரோமில் மூன்று இனங்கள் இருந்தன. இந்த இனங்கள் 10 பிரிவுகளாக (Curiae) பிரிந்திருந்தன. இவை ஒவ்வொன்றும் 10 பிரதிநிதிகளை அனுப்பியது. பழைமையான மரபுகளுக்கேற்ப அரசர் உறுப்பினர்களைத் தெரிவு செய்தார். இவர்கள் பெருமக்களாக (Patres) இருக்கவேண்டும். இச் சபையில் உறுப்பினராவதற்குக் குறைந்த அளவு வயதுத் தகுதியும் நிருணயிக்கப்பட்டிருந்தது. உறுப்பினர்களை இயன்றவரை பெருமக்களிடையே சமமாகப் பகிர்ந்து அளிக்கவேண்டிய அரசியலமைப்பு வற்புறுத்தலுக்கு மரபுகள் அரசரை உள்ளாக்கின. எனவே, செனெட்டின் நடைமுறைகளில் பழைய, புதிய குலங்களுக்கிடையேயான வேறுபாடுகள் தொடர்ந்து வந்தன. முதன்மையான குடும்பத்தலைவர்களையே அரசர் சபைக்கழைத்தார். இவர்களுடைய அறிவுரைகளைக் கேட்டபொழுது அவைகளைக் குடும்பத்தலைவர்களின் அறிவுரைகளாகக் கொண்டார்.

குயுரியாவாகக்கூடும் மக்களோடு சேர்ந்து செனெட்சபை ஒரு தலையாய சட்ட ஆக்க நிறுவனமாகச் செயற்பெற்றது. அரசர் இறந்ததும் அரசின் செயலாட்சிப்பொறுப்பு செனெட்சபையைச் சென்றடைகிறதென்பதை நாம் முன்னர் பார்த்தோம். மக்களவை நிறைவேற்றிய நடவடிக்கைகள் செனெட்சபையின் ஏற்பை அல்லது மறுப்பைப்பெறவேண்டும். முக்கியமான காரியங்களில் அரசர் செனெட்சபையைக் கலந்து முடிவு செய்ய வேண்டுமென மரபுகள் வலியுறுத்தின. ஆனல் ஒரு பொருளைச் சபையின் பார்வைக்குக்

[1] Fcstons, 246.
[2] Liv. i. 8.

கொண்டுவருவதும், வராததும் அரசரின் அதிகாரத்திற்குட்பட்டிருந்தது. இதேபோல் சபையின் அறிவுரையை ஏற்கவும், மறுக்கவும் அரசருக்கு அதிகாரமிருந்தது. கூடுமாறு அழைக்கும் பொழுது மட்டும் செனெட் கூடியது. குறிசொல்லுபவர் குறிப்பிடும் இடத்தில் சபையின் கூட்டங்கள் நடைபெறும்.

குடும்பத் தலைவர்களுக்கு அதிகாரமளித்தலும், இடையாட்சி காலத்தைத் தொடங்கிவைத்தலும் பழங்கால செனெட்சபையின் நிலையான அதிகாரங்களாக இருந்தன. புதிய அரசரை அமர்த்துவதற்குக் குடும்பத் தலைவர்களின் அதிகாரம் தேவை என மரபுகள் கூறுகின்றன. சட்டங்களின் செல்திறனுக்கும் இவ்வதிகாரம் தேவையெனக் கருதப்பட்டது. இடையாட்சிக் காலத்தின் ஆட்சிப் பொறுப்பு பெருமக்கள் சமூகத்திடம் (பெட்ரிசியர்களிடம்) விடப்பட்டிருந்ததாக மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. காலப்போக்கில் இந்த அதிகாரம் பெருமக்கள் அடங்கிய செனெட்சபைக்கு மாற்றப்பட்டது, செனெட்சபையின் இச் சிறப்பதிகாரம் மரபு வழி பெறப்பட்டதாகும். அரசின் சர்வதேச விவகாரங்களைப் பாதிக்கின்ற துறைகளில் அரசர் செனெட்சபையைக் கலந்து செயற்பட வேண்டியது கடமையாயிற்று. ஆனால், கொமிசியா குயுரியேட்டாவில் கூடியுள்ள மக்களைக் கலந்துகொண்டு அரசர் போர் அறிவிப்பு செய்யவேண்டுமென மரபுகள் வலியுறுத்தின[1].

மாறாக, அரசுகளோடு உடன்படிக்கைகள் செய்துகொள்வதில் அரசருடைய அதிகாரம் கட்டுப்படுத்தப்படவில்லை. அமைதிக் காலத்தில் செய்துகொண்ட உடன்படிக்கைகள் செனெட்சபையையும், மக்களையும் கலந்துகொண்டு செய்தவைகளாகும் ஆனால், போர் முடிந்ததும் செய்து கொண்ட உடன்பாடுகள் போர்க்களத்திலேயே செய்துகொண்டவைகளாகும். ஏனெனில், அரசரே படைத்தலைவராகவும், தலைமைக் குருவாகவும் இருந்தார். எனவே, உதவியாளர்கள் இல்லாமலேயே இவர் பிரமாணம் எடுத்துக் கொள்ளலாம்.

படைத்தலைவரென்ற முறையில் அரசர் மேலும் சில அதிகாரங்களைப் பெற்றிருந்தார். இந்த அதிகாரங்களின்மீது மக்களுக்குக் கட்டுப்பாடில்லை. போரில் கைப்பற்றிய பொருள்களையும், நிலத்தையும் பிறருக்கு அளித்தல் இந்த அதிகாரங்களில் ஒன்றாகும்.

போர்க்காலத்தில் அரசருக்கு அறிவுரை கூற ஒரு குழு இருந்தது. செனெட்சபையிலிருந்து இக் குழுவின் உறுப்பினர்கள் அமர்த்தப்பட்டார்கள். இத்தகைய குழுவொன்று நீதிவழங்கும் துறையில் அரசருக்கு மதிப்பாளர்களாக இருந்து உதவியது. ஏதோ ஒரு

[1] Dionys. ii, 14.

வகையில் ஒரு குழுவைக் கலந்துகொண்டு அரசர் முக்கியமான வழக்குகளில் தீர்வு கண்டார். இத்தகைய மதிப்பினர் குழுவைப் பயன்படுத்தி டார்குவினைச் சூபர்பஸ் என்ற அரசர் நீதி வழங்கவில்லையெனக் குற்றம்சாட்டப்பெற்றார்[1]. சமயச் சார்பில்லா குற்றத் தண்டனை வழக்குகளை விசாரிப்பதில் செனட்சபையின் உறுப்பினர் சிலரைக் கொண்ட குழு ஒன்று அரசருக்கு உதவியது. சமயச் சார்புடைய வழக்குகளை விசாரிப்பதில் சமய முதன்மைக் குழுவினர் அரசருக்கு அறிவுரை வழங்கும் குழுவாக அமைந்தனர்.

செனெட்சபையின் உறுப்பினர்கள் படைத்திறமை அடிப்படையில் அரசரின் பேராளர்களாக அமர்த்தப்பட்டனர். பேராளர்களில் முதன்மையானவர் நகரமுதல்வராவார். அரசர் போருக்குச் செல்லும்பொழுது அரசரின் பதிலராக இவரே நகரத்தில் இருந்தார்[2]. செனெட்சபையைக் கலந்துகொள்ள வேண்டிய உரிமை, கடமையோடு இவருக்கு எல்லா நிருவாக அதிகாரங்களும் அளிக்கப்பட்டன. மக்களை வினவும் உரிமை இவரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்க முடியாது, ஆயினும், மக்கள் அவையைக் கூட்டும் அதிகாரத்தை இவர் பெற்றிருந்ததாக லிவியும் டயோனிசசும் குறிப்பிடுகின்றனர்[3]. முக்கிய குற்றத்தண்டனை வழக்குகளை அரசர் விசாரித்து முடிவுசெய்தார். சாதாரண வழக்குகளைச் செனெட் சபையிலிருந்து தெரிவு செய்யப்பட்ட நீதிபதிகள் விசாரித்தனர். பொதுமக்களின் நல்வாழ்வைப் பாதிக்கும் குற்றங்களை அரசரே விசாரித்தார். தனிப்பட்டோர் பிறருக்குச் செய்த தவறுகளை மற்றவர்கள் விசாரித்தார்கள்.

அரசின் உரிமைகளுக்கும், தனிமனிதனின் உரிமைகளுக்குமிடையேயான வேறுபாடு, ஒரு கோட்பாடாக உருவாவதற்கு முன், நடைமுறைகளில் நன்றாகத் தெளிவாக்கப்பட்டிருந்தது. செர்வியஸ் செய்த மாற்றத்தில் இதைக் காணலாம். ஆனால், இந்த இரண்டு செயலாட்சி எல்லைகளுக்கிடையில் திட்டவட்டமான வரையறை இருந்ததில்லை. குற்றத்தண்டனைச் சட்டமென்பது உரோமில் பெருமளவிற்குத் தனிப்பட்ட மனிதனின் நடவடிக்கைகளைச் சார்ந்தே இருந்தது. பழங்காலத்தில் இத்தகைய நடவடிக்கைகளைக் குடும்பத் தலைவர்களே எடுக்கலாம். ஆனால், பழங்கால ரோமானியர்களுக்கிடையே நிலவிய குற்றவியல் சட்டத்தைப் பொறுத்தவரையில் தனிமனிதனுக்குச் செய்த தீமையை இது சமூகத்திற்கெதிராகச் செய்யப்பட்ட குற்றமாகக் கருதியது.

[1] Liv. i, 49
[2] Tac. Ann, VI, ii.
[3] Liv. i, 59. Dionys, iv, 71.

மீறப்பட்ட உரிமைகளை எடுத்து விளக்குபவராக அரசர் இருந்தார். மரபுகளும், சட்டமும் உறுதி செய்துள்ள உரிமைகளுக்கும் இவரே பொருள் விளக்கம் செய்தார். தீர்ப்புகளில் இவர் அளித்த தண்டனையை லிக்டர்கள் நிறைவேற்றினர்கள். தெரிவு செய்து கொள்ளப்பட்ட அறிவுரையாளர்களுடன் அரசர் தனிமுறையில் விசாரணை செய்தார். இவரே தீர்ப்பையும் அளித்தார். சிற்சில சமயங்களில் இவருடைய தீர்ப்பு வரம்பிற்குட்பட்டதாக இருந்தது. விசாரிக்கப்படவேண்டிய குற்றத்தையும், தண்டனையையும் இவர் குறிப்பிட்டார். ஆனல், உண்மையை விசாரித்தறியும் பொறுப்பை இவர் பேராளர்களிடம் விட்டார்[1].

பேராளர்களின் தீர்ப்பின்மீது அரசருக்கு மேல்முறையீடு இருந்திருக்கலாம். அதனல் மன்னிக்கும் அதிகாரம் மன்னருக்கு இராந்ததில்லையென மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. மரண தண்டனைக்குள்ளான ஒருவன் மக்கள் அவையிடம் முறையிடும் உரிமை முடியாட்சிக் காலத்தில் இருந்துள்ளது. தண்டனையை நீக்கி அல்லது ஏற்று மக்கள் தீர்ப்பு அளிக்கலாமேயன்றி தண்டனையைக் குறைக்க இயலாது. டல்லஸ்ஹொஸ்டிலியஸ் (Tullus Hostilius) என்ற அரசர் மேல் முறையீடுகளை ஏற்றுக் கொண்டுள்ளார்.[2] முடியாட்சி முடிவுக்கு வருவதற்குமுன், மக்களின் குற்றவிசாரணை அதிகார எல்லையும், அரசரின் குற்றவிசாரணை வரம்பும் தனித்தனியே நிலைபெறத் தொடங்கிவிட்டன. சில வழக்குகளில் மக்களே இறுதி நீதிபதிகளாக இருக்கும் உரிமையைப் பெற்றுர்கள். அதாவது ஒரு நீதிமன்றத்தின் பார்வையில் உள்ள ஒரு வழக்கை மற்ருெரு நீதிமன்றத்திற்கு மாற்றிக் கொள்ளும் உரிமையை இக் கருத்து குறிப்பிடுகிறதேயன்றித் தண்டனையைக் குறைப்பது அல்லது குற்றத்தை மன்னிப்பதுபற்றிக் குறிப்பிடவில்லை. பிற நிலைகளில் அரசர் தனித்திருந்து நீதி வழங்கியுள்ளார். தீர்ப்பை எதிர்த்து வழக்காட விரும்புவோரை அனுமதிப்பது அரசரின் விருப்பத்திற்குட்பட்டதாகும். இருப்பினும் படை, சமயம் ஆகியத் துறைக்குரிய அரசரின் அதிகார வரம்பினைப் பார்க்கும்போது மக்களின் அதிகாரம் மிகக் குறைவே ஆகும். தீர்ப்பை எதிர்த்து வழக்காடும் வழக்கம் முடியாட்சிக் காலத்தின் பிற்பகுதியில் வளர்ச்சியடைந்திருக்கலாம். இத்தகைய வழக்கமும் அரசரின் இசைவையொட்டியதேயாகும்.

அரசரின் தீர்ப்பு அடிப்படையில் உரிமை வழக்கு விசாரணை அதிகாரம் இருந்ததாகச் சொல்லப்பட்டது. எந்த அளவிற்கு அர

[1] Tac. Ann. xi, 22 p. 81.
[2] Liv, i. 26.

ரின் அதிகார வரம்பு தனிமுறையில் இருந்ததென்பது சொல்வதற்கில்லை. ஆனால், எல்லாச் சூழ்நிலைகளிலும் அரசரே சட்டத்தின் ஆதாரமாக இருந்தார். பல வழக்குகளில் அரசர் சட்டப்படியான முடிவைத் தெரிவித்தபின் தனிப்பட்ட ஒரு நீதிபதி அல்லது நடுவரிடம் வழக்கை அனுப்பி விசாரிக்கச் செய்தார். நீதிமன்ற நடைமுறையின் அடிப்படை பிரிவுகளாகிய சட்டம், நீதிவழங்குதல் ஆகியவைகளை இஃது எடுத்துக்காட்டியது.

அதிகார வரம்புப் பிரிவினை பழமையானது. பிற்காலத்தில் முடியாட்சியின்போது புகுத்தப்பட்ட மாற்றமென இதை நினைக்கலாகாது. அரசர் அல்லது அவருடைய முதன்மை மதகுரு ஒருவரிடம் சட்டம் ஒப்படைக்கப்பெற்ற பொருளாக இருந்தது. எனவே, இதன் விளைவாக நீதிபதியை அமர்த்துவதில் பொதுஅலுவலர் அரசருக்கு உதவினர்.

பழங்கால அரசில் அரசியல் நோக்கங்களுக்காக மக்கள் குயுரியா (Curia) வாகப் பிரிக்கப்பட்டனர். இஃது அடிப்படை பிரிவாகும். பொதுவான சடங்குகளையும் விழாக்களையும் மக்கள் பெற்றிருந்ததையொட்டி இப் பிரிவைக் குடும்ப அமைப்போடு ஒப்பிடலாம். இத்தகைய பிரிவுகள் முப்பது இருந்தன. இப் பிரிவுகளில் பெருமக்கள்மட்டுமின்றி இவர்களைச் சார்ந்தவர்களும் பொதுமக்களும் இடம் பெற்றிருந்தனர். அதனால் பொதுமக்களுக்கும், சார்பாளர்களுக்கும் வாக்குரிமை கிடையாது. இக் குயுரியாக்கள் உரோமானியப் பொதுமக்களை உருவாக்கியது. இவர்களை அடிப்படையாகக் கொண்டமைந்த நிறுவனம் சொமிசியா குயுரியேட்டாவாகும். முடியாட்சிக் காலத்தில் இஃது ஒன்றுதான் மக்கள் சார்புடைய அரசியல் அல்லது அரைகுறையான அரசியல் தோற்றமுடைய மக்கள் அவையாக இருந்தது.

அரசர் அல்லது இடைக்கால அரசர் மட்டுமே மக்களை ஓர் அவையாகக் கூட்டும் உரிமை பெற்றிருந்தார். மக்கள் அவையாகிய குயுரியேட்டோ முன் அரசர் சில கருத்துகளை அதன் ஆய்விற்கென வைக்கலாம். வழக்கமாக நிருணயிக்கப்பட்ட ஓர் இடத்தில் இச் சபை கூடும். ஏற்பை அல்லது மறுப்பை சைகைகளால் காட்டிச் சபையின் விருப்பு வெளியிடப்பட்டது. ஆயினும், தொடக்கத்திலிருந்தே சபை தன்கருத்தை முறைப்படி வெளிப்படுத்தியது. குறிப்பிட்ட சில நிகழ்ச்சிகளில் தனிப்பட்ட குயுரியாக்களுக்குள் பேரொலியால் இசைவு தெரிவித்துத் திட்டவட்டமாக வாக்களித்துச் சபையின் முடிவைத் தெரிவித்தது. பெரும்பாலான குயுரியாக்கள் சபையின் வாக்களிப்பை நிருணயித்தன. சில செய்திகளைக் கேட்க சொமிசியா குயுரியேட்டா குறிப்பிட்ட காலங்களில்கூட்டப்

படும். தேவைக்கேற்ப் மற்றக் கூட்டங்கள் கூட்டப்பெறலாம். இச் சபைமுன் வரக்கூடியவைகளை நான்கு வகையாகப் பிரித்துக் கொள்ளலாம். அரசர் ஒருவரைத் 'தேர்ந்தெடுக்க, ஒரு மேல் முறையீட்டைக் கேட்க அல்லது அறிவிப்புகளைக் கேட்க அல்லது முன்மொழிவுரைமீது வாக்களிக்க என்பன அவை. முதலிரண் டைப்பற்றி முன்னரே பார்த்தோம். குறிப்பிட்ட கூட்டங்களில் அறிவிப்புகள் செய்யப்பட்டதையும் முன் பார்த்தோம். பெரும் முக்கியத்துவம் பெற்ற செய்திகளை அல்லது நடவடிக்கைகளைச் சபையில் கூடியுள்ள மக்கள் முன்வைத்து அரசர் அவர்களின் ஒப்புதலைப் பெற்றுர். முழுமையான அதிகாரத்தைப் பெற்ற போதும், போர் அறிவித்தபோதும், மக்களின் ஒப்புதலைப் பெறுவது தேவையாயிற்று. பெருமக்களைப் பொறுத்தவை இச் சபைமுன் அடிக்கடி கொண்டு வரப்பட்டன. புதிய குலங்களை குயுரியாவில் சேர்த்தல், குடியுரிமையை நிலைவுறுத்தல், மற்ருெரு குடும்பத்தில் குடும்பத் தலைவரின் நிலையைச் சார்பாளர் நிலைக்குக் குறைத்தல், ஒரு குலத்திலிருந்து விடுதலை பெறல் போன்றவைகள் சபையின் ஆய்விற்கு வந்தன.

### செர்வியஸ் டல்லியஸின் சீர்திருத்தங்கள்

முடியாட்சியின் இறுதிக் காலத்தில் அரசியலமைப்பின் சில பொருத்தமற்ற கூறுகள் வெளிப்படையாகத் தெரிந்தன. தனியார் சட்டத்தைப்பொறுத்தவரையில் சுயேச்சையான பொதுமக்களுக்கும் (free Plebcian) பெருமக்களுக்கும் (Patrician) இடையில் முக்கியமானதொரு வேறுபாடும் இருக்கவில்லை. பெருமக்களைச் சார்ந்திருந்த பொதுமக்களில் பெரும்பாலோர் சுயேச்சை நிலையில் இருந்தார்கள். இவர்களுடைய நிலவுரிமையும் நீதிமன்றங்களில் இவர்களுக்காகச் செயற்படும் உரிமையும் உறுதியற்றதாக இருந்தபோதிலும் வாக்கிய அமைப்பு முழுவுரிமையை இவர்கள் பெற்றிருந்தது நடைமுறையில் தவிர்க்க முடியாததாக இருந்தது. பல தலைமுறைகளாகச் சில நிலக்கிழார்கள் உரிமையை வலியுறுத்தாத போதும் தனிப்பட்ட முறையில் உரிமை கொண்டாடியதைத் தடைசெய்யாத போதும் பழைய புரவலர்கள் மறைந்தொழிந்த போதும் பொதுமக்கள் முழுமையாக உரிமையை வலியுறுத்தினர்கள். சுயேச்சையான பொதுமக்களையும், பாதுகாப்பிற்குட்பட்ட பொதுமக்களையும் பிரித்துப் பார்க்க இயலாததாயிற்று. இவர்களுக்குச் சமத்துவநிலையை அளித்து இரு பிரிவினரையும் ஒரு வகுப்பினராக்கிச் சில சீரமைப்புகளைச் செய்வது நலமாகும் எனக் கருதி செர்வியஸ் டல்லியஸ் சில மாற்றங்களைச் செய்தார். நிலவுடைமைகளில் சமஉரிமையை ஏற்பதே இச் சீர்திருத்தங்களின் கருத்தாகும். உரோமாபுரியின் நிலவுரிமை பிளெபிய வகுப்பினர் அனைவருக்

கும் உறுதி செய்யப்பட்டது. விடுதலை பெற்ற அடிமைகள், சார்பாளார்கள், உறுதியற்ற நிலவுரிமையாளர்கள் ஆகியோருக்குக் கூட இந் நிலவுரிமை உறுதி செய்யப்பட்டது./ தொழில் உரிமைகளைப் பொறுத்தவரை இவ்வகுப்பினர் பெருமக்களின் (பெட்ரிசியர்களின்) நிலைக்குச் சமமாக வைக்கப்பட்டனர்.

வரலாற்றிற்கு முற்பட்ட காலத்தில் பழங்குடியினர் மூன்று இனங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். இப் பிரிவினை அடிப்படையில் அரசர்கள் படையினரைத் திரட்டினார்கள். பொதுமக்களாகிய பிளெபியர்கள் இந்த மூன்று இனங்களில் சேர்த்துக் கொள்ளப்படாத காரணத்தால் உடல் வலிமைமிக்க வீரர்கள் படையில் இடம்பெற முடியாமல் போயிற்று. உறவு முறையில் அமைந்த பழைய இனப் பாகுபாட்டை வைத்துக்கொண்டு பிளெபியர்களைச் சேர்த்துக் கொள்வது கடினமாகத் தோன்றியது. பழைய அமைப்பு முறையைக் கைவிட்டுவிட்டு உடைமை அடிப்படையில் மக்களைப் பாகுபாடு செய்யவேண்டிய, நிலை உருவாயிற்று. எனவே, அச் சீர்திருத்தங்களின்படி, ஒரு குறிப்பிட்ட அளவு நிலவுடைமையைப் பெற்றிருந்த சுயேச்சைக் குடிகள் அனைவரும் படையில் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். இவர்கள் குலங்களில் உறுப்பினராக இருக்கவேண்டிய அவசியமில்லை. நிலவுடைமை அடிப்படையில் இவர்கள் படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இரண்டு ஏக்கர் அல்லது இதற்கு மேற்பட்டு நிலம் வைத்திருந்தோர் அனைவரும் படையில் இடம் பெற்றனர்./ இருபது ஏக்கருக்கு முதல் வகுப்பிலும், பதினைந்து, பத்து, ஐந்து ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருந்தவர்கள் முறையே இரண்டு, மூன்று, நான்காம் வகுப்புகளிலும், இரண்டு ஏக்கருக்கு மேல் நில உடைமையைப் பெற்றிருந்தவர்கள் ஐந்தாம் வகுப்பிலும் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். இப்பிரிவுகள் மேலும், 100பேர் கொண்ட உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. இவ்வுட்பிரிவுகள் முதலில் நூற்றுவர்களைக் கொண்டிருந்தாலும் காலப்போக்கில் இச் சொல்லிற்கு ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை கூற முடியவில்லை. 17 வயதிலிருந்து 46 வயதிற்குட்பட்ட இளநிலைப் படைப் பிரிவினர் போர்க்களச் சேவைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். 46 வயதிலிருந்து 60 வயதிற்குட்பட்ட முதுநிலைப்பிரிவினர் கோட்டைக் காவற்பொறுப்பை ஏற்றுக்கொண்டனர். ஒவ்வொரு வகுப்பிலும் இளநிலை, முதுநிலை நூற்றுவர் பிரிவுகள் சமமான எண்ணிக்கையில் இருந்தன. ஐந்து வகுப்புகளில் சேர்ந்திருந்தவர்கள் காலாட் படையினராகச் செயல் புரிந்தார்கள். சமூகத்தில் செல்வவளம் படைத்திருந்தவர்கள் பதினெட்டு நூற்றுவர் பிரிவுகளாக (செஞ்சுரிகளாக) இருந்து குதிரைப்படையில் சேவை செய்தார்கள்,

இரண்டு ஏக்கருக்கும் குறைவற்ற நில உடைமையாளர்களுக்கும் படைத்துறையில் சேவை செய்ய வாய்ப்பளிக்கப்பட்டது. இப்படிப்பட்டவர்கள் ஆறு செஞ்சுரிகளாக அமைக்கப்பட்டன ரென்று லிவியும் ஐந்து பிரிவுகளாக அமைந்தனரென்று டயோனிசசும் கூறுகின்றனர். இப் பிரிவினர்களின் சேவை படைக்கு இன்றியமையாததாக இருந்தது. தொழிற் சங்க உறுப்பினர்கள், தச்சர்கள், எக்காள ஒலி எழுப்புவோர் போன்றவர்களும் இப்பிரிவுகளின் வழியாகப் படையோடு தொடர்புகொண்டு உழைத்தார்கள்.

பிளெபியர்களில் குறிப்பிட்ட சில வகுப்பினருக்குச் சிறப்புரிமைகளை அளிப்பது இச் சீர்திருத்தத்தின் நோக்கமாக இருந்தது. சில கடமைப்பொறுப்புகளை பிளெபியர் சமுகத்தின் மீது சுமத்துவது சீர்திருத்தத்தின் விருப்பமாக இருந்தது. ஆகவே, இம் மாற்றங்களை பெட்ரிசியர்கள் விரும்பியேற்றுக்கொண்டதாகத் தெரிகிறது. வரிவிதிக்கவும் படையில் முழுமையாக ஈடுபடுத்தவும் சொத்துடைமை உரிமைகளுக்கு ஏற்பு அளிப்பதுதேவையாயிற்று. வரிப்பளுவைப் பகிர்ந்தளிப்பதைப் பெருமக்கள் வரவேற்றனர். ஆனால் இத்தகைய கடமைப் பொறுப்புகளிலிருந்து புதிய உரிமைகள் தோன்றிப் பெருமக்களின் அரசியல் அதிகாரத் தனியுரிமையை அழித்துவிடும் என்பதை இவர்கள் அறிந்திருக்கவில்லை.

பிளெபியர்கள் அரசின் உறுப்பினர்கள் என முதன் முதலாக ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள். பழைய குல அமைப்பில் இவர்கள் இடம் பெறாத காரணத்தால் புதிய இன அமைப்புகளை உருவாக்க வேண்டியதாயிற்று. இப்புதிய இனங்கள் சமூகத்தினர் அனைவரையும் உறுப்பினராகக் கொண்டிருந்தன. நிலவுடைமை அடிப்படையில் இப்பொழுது எல்லா வகுப்பினர் மீதும் வரிப்பளு சுமத்தப்பட்டது. இவ்வினங்கள் நிலச்சார்புடைய பிரிவுகளாகப்பிரிக்கப் பட்டிருந்தன. உரோமானியருக்குச் சொந்தமான நிலமனைத்தையும் உட்படுத்தும் முறையில் இனப்பிரிவுகள் உருவாக்கப் பெற்றன. உரோம் நகர குடிமக்களுக்குரிய நிலமனைத்தும் இனங்களில் சேர்த்துக்கொள்ளப்பட்டது.[1] செர்வியஸ் உருவாக்கிய இனங்கள் நகர எல்லைக்குள் இருந்ததாகக் கருதப்பட்டது. உரோம்நகரின் எல்லையை செர்வியஸ் மதிற்சுவர்களால் வரையறைசெய்தார். இதனால் நகருக்கு வெளியே நிலம், தனி உடைமையாகக் கொள்ளப்படவில்லையெனும் கருத்து எழுந்தது. எனவே நிலம் கூட்டுடைமை

[1] Liv. vi. 20, Dionys. X. 31 & 32.

யாக அதாவது குலஉடைமையாகக் கொள்ளப்பட்டது. ஆனால் இப்படி இருந்திருக்க முடியாது. ஏனெனில், தனிச் சொத்துரிமை யின் வளர்ச்சியே வளமான பிளெபியர்களை உருவாக்கியது. இவர்களுக்குக் குலஅமைப்பு இல்லாததால் சொத்தைப் பொது வாக வைத்திருந்திருக்கமுடியாது. இத்தகைய உடைமையாளர் கள் உடைமைகளை நகரிலோ நகருக்கு அருகிலோ வைத்திருந் திருக்க மாட்டார். ஏனெனில், நகரின் எல்லைகளை செர்வியஸ் வரையறை செய்திருந்தார்.

இதன் விளைவாக, இனங்களில் எல்லா நிலச்சொந்தக்காரர் களும் இடம் பெறவில்லையென்றால் இவர்கள் நகரின் எல்லைகளுக் குக்கப்பால் சென்று பரவி இருக்கவேண்டும். நகரச் சார்புடைய இனங்களையும் நாட்டுச் சார்புடைய இனங்களையும் இவைகளின் பெயர்களை வைத்துக்கொண்டு வரலாற்றறிஞர்கள் தனிப்படுத்திக் கூறினர்கள். பழமையான நான்கு இனங்களின் நகரப் பண்புகளை நாம் நம்பினால் இவைகளைத் தவிர, நாட்டுப்புற மாவட்டங்களில் செர்வியஸ் நிறுவிய இருபத்தாறு இனங்களையும் நாம் ஏற்றுக் கொள்ளவேண்டும்[1].

நான்கு இனங்களும் நாட்டுப்புற மாவட்டங்களை உட்கொண் டிருந்தனவென்ற கருத்தும் ஏற்கத்தக்கதாகும். இஃது உண்மைக்கு மாறானதுமன்று. ஏனெனில், நகரின் பாகங்களின் பெயர்களை இவைகள் பெற்றிருந்தன. பழைய நகரப் பாகங்களாகிய ராமி னில், டிட்டிஸ், சாசரிஸ் ஆகியவைகளோடு இவைகளும் இணைந்து கொண்டனவென்றும் கருதப்பட்டது. நகரின் எல்லைக்கப்பால் ஒவ்வொரு இனமும்தொடர்ந்து விரிவடைந்தது. அரசர்கள் விரட்டி யோட்டப் பெற்றதைத்தொடர்ந்து கொடிய போர்களால் நாட்டுப் புற இனங்கள் மறைந்தன. உரோமானிய நிலம் மீட்கப்பட்ட பொழுது ஒரு புதிய அமைப்பு உருவாக்கப்பட்டது. நகருக்கு வெளியேயுள்ள நிலம், நாட்டுப்புற இனங்களாகப் பிரிக்கப்பட்டது. உரோமானியர்களின் வெற்றிகளின் விளைவாக இவைகளின் எண் ணிக்கையும் பெருகிற்று. செர்வியஸின் நான்கு இனங்களின் பெயர்கள் நகருக்குள்ளிருந்த நான்கு மண்டலங்களின் பெயர் களாக வைத்துக்கொள்ளப்பட்டன.

இனங்கள் நிலப்பிரிவுகளாக இருந்தபோதிலும் எந்த இனத் தில் தனிப்பட்டோரின் நிலம் ஒதுக்கப்பட்டிருந்ததோ அந்த இனத்தில் தனிப்பட்டவர்கள் பதிவு செய்யப்பட்டிருந்த போதி லும் நிலமற்ற குடிமக்கள் இனங்களில் சேர்த்துக்கொள்ளப்பட

[1] Dionys iv, 15.

வில்லையென்ற கருத்தை ஏற்றுக்கொள்ள தக்க காரணமெதுவும் இல்லை[1]. செர்வியஸின் இனப்பிரிவு முறை வரிவிதிப்பையும் படைதிரட்டலையும் பதிவு செய்ய உதவியதென்பது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்தாகும். இக் கருத்துச் சரியென்றால் இப் பளுக்கள் நிலவுடைமைகளின்மீது மட்டுமே சுமத்தப்பட்டதென்பதை நாம் ஏற்கவேண்டும். ஏனெனில் நிலச்சொந்தக்காரர்கள்மட்டுமே இனங்களாக அமைந்திருந்தார்கள். நிலமுடையோர் மட்டுமே சில கடமைப் பொறுப்புகளைப் பெற்றிருந்தார்கள் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை. இவ்வினங்கள் உரோமானிய மக்களின் **(Populus Romanus)** பிரிவுகளாகத் தோன்றின. உரிமையிழந்த பெட்ரிசியர்களும் பாழ்நிலையடைந்த பெட்ரிசியர்களும் தொடர்ந்து உரோமானிய மக்களாகவே இருந்துவந்தனர். நில மற்றவர் ஓர் இனத்தைச் சேர்ந்தவரென்பது அவரது உறைவிடத்தைப் பொறுத்திருந்தது. உறைவிடமென்பது ஓர் இனத்தில் ஒரு மனிதனின் தல நிலையைக் குறிப்பிடுகிறது. அந்த இனத்தில் இவருக்குள்ள நில உடைமையை இது குறிப்பிடாது. நிலச் சொத்துரிமை என்பது ஒருவரின் இன உறுப்பினர் தகுதியையும் அரசியல் உரிமையையும் குறிப்பிடும் அடிப்படை தத்துவமாக இருந்தது.

செர்வியஸின் சீர்திருத்தத்தின் மையக் கருத்தாக இருந்த பதிவு முறை படைச்சார்புயைதாகும். சொத்துடையவர்கள் சேவைத் தகுதி பெற்றதை இஃது ஏற்றுக்கொண்டது. இவர்களே படையினராகச் சேரமுடியும். இவர்களைக் கொண்டமைந்த படை காலாட்படையெனவும் குதிரைப் படையெனவும் இரண்டு பிரிவுகளாக அமைந்தன. செல்வ வளத்தையும் வயதையும் இப் படையமைப்பு வகைப்படுத்துவதற்கான அடிப்படை கருத்துக்களாக ஏற்றுக்கொண்டது. மேலும் போர்த்திற நோக்கங்களுக்காகப் படை நூற்றுவர் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது.

குடிமக்கள் ஐந்து பிரிவுகளாகப் பிரிந்து காலாட் படையை உருவாக்கினர்[2]. இப் பிரிவுகள் பிற்காலத்தில் வகுப்புகளெனப் பெயர் பெற்றன. செல்வத்தின் அடிப்படையில் இப் பிரிவுகள் செய்யப்பட்டன. ஆயினும், பணவடிவில் கணக்கிட்ட செல்வமாக இஃது இருந்திருக்கமுடியாதென்பது உறுதியாகும். நிலமற்றவர் கால்நடைகளைச் செல்வமாக அல்லது கைவினைத் தொழிலில் ஈடுபட்டிருந்த அடிமைகளைச் செல்வமாகப் பெற்றிருந்திருக்கலாம்.

[1] **Mommson, Staatsr. iii. pp. 182, 184.**

[2] அட்டவணையைப் பார்க்கவும்.
**A. H. J. Green, dge. Roman Pub life. p. 71,**

அரசின் உடைமைகள் முறையாக உரிமையாக்கப்படுவதிலும் ஒழுங்கான மதிப்பீடு செய்யப்படுவதிலும் அரசு அக்கறை கொண்டிருந்தது. செர்வியஸின் மக்கள் தொகைக் கணக்கு ஓரளவிற்கு நடப்பு நாணயத்தின் அடிப்படையில் இருந்தது. ஏனெனில், பண்டமாற்றுமுறையில் கால்நடைகள் ஒரு சாதனமாக ஏற்றுக் கொள்ளப்பட்டன.

**அட்டவணை**

குதிரைப்படை

சொத்துடைமைத் தகுதி குறிப்பிடப்படாத 18 நூற்றுவர் பிரிவுகள்.

முதல் வகுப்பு — 100,000 அசெஸ்
முதுநிலைப் பிரிவினர் 40 நூற்றுவர்
இளநிலைப் பிரிவினர் 40 நூற்றுவர் } 80

இரண்டாம் வகுப்பு — 75,000 அசெஸ்
முது நிலையர் 10 நூற்றுவர்
இளநிலையர் 10 நூற்றுவர் } 20

மூன்றும் வகுப்பு — 50,000 அசெஸ்
முதுநிலையர் 10 நூற்றுவர்
இளநிலையர் 10 நூற்றுவர் } 20

நான்காம் வகுப்பு — 25,000 அசெஸ்
முதுநிலையர் 10 நூற்றுவர்
இளநிலையர் 10 நூற்றுவர் } 20

ஐந்தாம் வகுப்பு — 11,000 அசெஸ்
முதுநிலையர் 15 நூற்றுவர்
இளநிலையர் 15 நூற்றுவர் } 30

தச்சர்கள் — 2 நூற்றுவர்*
எக்காளம் ஊதுவோர் — 1 நூற்றுவர்**
பறையடிப்போர் — 1 நூற்றுவர்**
உடைமை இல்லாதார் — 1 நூற்றுவர்

மொத்த நூற்றுவர் பிரிவுகள்
(டயோனிசசு—) 193 அல்லது
(லிவி) 194.

* இவர்கள் முதல் வகுப்பினரோடு வாக்களித்தனரென்று லிவியும் இரண்டாம் வகுப்பினரோடு வாக்களித்தனரென்று டயோனிசசும் கூறுகிறார்கள்.

** இவர்கள் 8 நூற்றுவர்கள் இருத்தனரென்று லிவியும் 2 நூற்றுவர் என்று டயோனிசசும் கூறினர். இவர்கள் நான்காம் வகுப்பினரோடு வாக்களித்ததாக டயோனிசசு கருதினர்.

இத்தகைய மக்கள் தொகைக் கணக்கின்படி ஐந்து பிரிவுகள் உருவாக்கப்பட்டன. மக்கள் தொகை அடிப்படையில் செய்யப்பட்ட மதிப்பீட்டின்படி பிரிவுகள் ஒன்று முதல் ஐந்தின் செல்வமதிப்பு 100,000, 75,000, 50,000, 25.000, 11,000 அசெஸ்[1], என உறுதி செய்யப்பட்டது.

மக்கள்தொகைக் கணக்குப்பட்டியல் போரிடத் தயாராக இருந்த படையினரின் எண்ணிக்கையைக் குறிப்பிடவில்லையெனினும் படைச்சேவைக்குத் தகுதிபெற்றவர்களின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டது. இதன் பயனாக ஒரு குறிப்பிட்ட வகுப்பின் நூற்றுவர் பிரிவுகள் அவ்வகுப்பினரனைவரையும் உட்கொள்ளும் வகையில் அதன் குறிப்பிட்ட அளவிற்கு உயர்த்தப்பட்டது. பல்வேறு வகுப்புகளின் நூற்றுவர் பிரிவுகளின் எண்ணிக்கை வீதம் குறிப்பிடத்தக்கதாகும். முதல் வகுப்பின் நூற்றுவர் பிரிவின் எண்ணிக்கை (80). மற்ற நான்கு வகுப்பினரின் நூற்றுவர் பிரிவின் மொத்த எண்ணிக்கைக்கு (90), பெருமளவு சமமாக உள்ளது. சமூகப்பிரிவுகள் ஒவ்வொன்றுக்குமான தகவுப் பொருத்தத்தை இவ்வட்டவணை வெளிப்படுத்துமாறல், அரசின் நிலத்தை வியக்கத்தக்க முறையில் சமமாகப் பகிர்வு செய்துள்ளதை இது காட்டும். செல்வச் செழிப்புள்ள குடிமக்களின் நூற்றுவர் பிரிவுகள் நிரந்தரப் படையாக அமைந்திருந்ததை வகுப்புகளின் தகவுப்பொருத்தம் வெளிப்படுத்தலாம். மற்றப் பிரிவுகள் பெருமளவிலான மக்களிலிருந்து அமைந்திருந்தாலும் சிறிய அளவினதாக இருந்ததைக் காணலாம். முதல் வகுப்பினர் முழுமையாகப் படைக்கலன் தரித்த வலிமைமிக்க அங்கமாக இருந்தார்கள்.

இலேசான கவசமணிந்த மற்றொரு நூற்றுவர் பிரிவும் உருவாக்கப்பட்டது. தேவையெழும்பொழுது இப் பிரிவினர் திரட்டப்படுவர். இலேசான கவசமணிந்து போர்க்களம் சென்று பாரமான கவசமேற்று தோல்வியுற்ற படைக்குத் தேவையான உதவியை இப் பிரிவு செய்தது[2]. தச்சப்பிரிவு, எக்காள ஒலி எழுப்புநர் பிரிவு இலேசான கவசப்படைப் பிரிவு ஆகிய இம் மூன்றுக்கும் சொத்துடைமைத் தகுதி வலியுறுத்தப்படவில்லை. ஏனெனில் இவைகள் முழுமையான படைக்குரிய தகுதியைப் பெறவில்லை. ஐந்து வகுப்புகளிலும் பதிவுபெருத பெரும் எண்ணிக்கையிலான மக்களிலிருந்து மற்றொரு நூற்றுவர் பிரிவு (உடைமையற்றோர் பிரிவு)

[1] asses என்பது பழைய ரோமானிய செப்பு நாணயம்.
[2] Festos, p. 18.

உருவாக்கப்பட்டதாக லிவியும் டயோனிசசும் குறிப்பிடுகிருர்கள்.[1] இருப்பினும், இந்த அமைப்பின் தொடக்கநிலையில் இருந்த படை இயல்பைக் கருத்திற் கொண்டு பார்த்தால் இந்த வகுப்பிற்கு இவ் வமைப்பில் இடமிருக்க இயலாது. அதனல், இப் பிரிவுகள் செர்வியஸின் அமைப்பின் தொடக்கநிலையில் இடம் பெற வில்லையெனலாம்.

மக்கள்தொகைக்கணக்கில் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்களை மொத்தமாக வகுப்புகள் என விவரிக்கப்பட்டது. இவர்கள் "நில வுடைமையாளர்களெனவும்" "நிலத்திலமர்ந்தவர்"களெனவும் குறிப்பிடப் பெற்ருர்கள். மற்றவர்கள் நிலமற்ற குடிமக்களென (Probtar ii cives) மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் குறிப்பிடப் பெற்ருர்கள். சொத்துரிமைத் தகுதியாலன்றிக் குடும்பத் தலைவர் கள் என்ற தகுதி பற்றியே இவர்கள் கணக்கெடுப்பில் இடம் பெற்ருர்கள். இவர்களை மக்கள்தொகைப் பட்டியல் (Capitecensi) காபிடேசென்சியெனக் குறிப்பிடுகிறது. இவர்களுடைய வருமானம் 1500 அசெசுக்குக் குறைவானதென சிசரோ குறிப் பிடுகிருர்[2]. பின்னர் வரிவிதிப்புக்கு இதே தொகை ஒரு வரம்பாக இருந்தது. படைச்சேவைக்கு விதிக்கப்பட்ட வருமான வரம்பு 4000 அசெசு ஆகக் குறைக்கப்பட்டது.[3] பின் இறுதியாக 375 அசெசு ஆகக் குறைக்கப்பட்டது.[4]

உடைமைத் தகுதிக்குட்படாத பெட்ரிசியப் படைகளைத் தழுவி அமைக்கப்பெற்றதாகக் குதிரைப்படை தோன்றியது. தொடக்கத் திலிருந்து ஆறு பெட்ரிசிய நூற்றுவர் பிரிவு தொடர்ந்திருந்து வந்தது. இப் பிரிவினர் பழைய இனங்களின் பெயர்களையே தொடர்ந்து பெற்றிருந்தனர்[5].

பிளெபியர்களையும் பெட்ரிசியர்களையும்கொண்ட பன்னிரண்டு புதிய நூற்றுவர் பிரிவுகள் சேர்க்கப்பட்டன. அதனல், இவர்கள் சொத்துத் தகுதியுடைய படையில் சேர்த்துக்கொள்ளப்பட வில்லை. சேவைத் தகுதிபெற்றவர்களின் பட்டியலாக இப் பிரிவு அமையவில்லை. அதனல், உண்மையிலேயே படையில் பணிபுரி வோரின் பிரிவாகவே இது இருந்தது. அரசரால் தெரிவு செய்யப் பட்ட நிலைப்படையாக இஃது இருந்தது. இதற்கான செலவைப் பெருமளவிற்கு அரசே ஏற்றுக்கொண்டது. பிற்காலத்தில் இக்

[1] Liv. i. 42.
[2] Cicero. De Rep. ii. 22, 44.
[3] Polyb. vi, 19.
[4] Gell, xvi. 10, 10.
[5] Titienses, Rcm'nes, Lucercs, Priores and Posteriores.

குதிரைப்படையில் சேரும் ஒவ்வொரு வீரனுக்கும் இரண்டு குதிரைகளும், தன்னைப் பேணிக்கொள்ள ஒழுங்காகப் பணமும் அளிக்கப்பட்டன. இப் பணத்தை மணமாகாத பெண்களும் அனாதைகளும் படைவீரர்களுக்குக் கொடுத்தார்கள்.

இந் நூற்றுவர் பிரிவு ஒவ்வொன்றும் ஒரு படையாக அமைந்தது. இந்தப் பதினெட்டு நூற்றுவர் பிரிவுகளும் குதிரைகளோடு கூடிய உரோமானிய வீரர்களும் எண்ணிக்கையில் மாற்றமில்லாது தொடர்ந்திருந்தார்கள். இந்த வகுப்பினருக்குத் திட்டவட்டமான மக்கள்தொகைக் கணக்கு முறை இல்லையெனினும், தொடக்கத்திலிருந்தே இந்த வகுப்பினர் சிறந்த, செல்வவளம்மிக்க குடிமக்களிலிருந்து தெரிவு செய்யப் பெற்றனர்கள். வயதின் அடிப்படையில் முதுநிலையர், இளநிலையர் என இரு பிரிவுகளாக இவ்வகுப்பினர் பிரிக்கப்படவில்லை. இவ்வகுப்பினர் இளைஞர்களாகவே இருந்தனர். வயது முதிர்ச்சியால் சேவைத்திறமை குறையும்பொழுது இவர்கள் படையிலிருந்து விடுதலை பெறுவர்.

இந்த நூற்றுவர் அமைப்பு செர்வியசின் நான்கு இனங்களோடு எத்தகைய தொடர்பு கொண்டிருந்தது என்பது தெரியவில்லை. நிலஅடிப்படையில் தகுதி இருந்ததையும் தனியார் உடைமையாக இருந்த நிலமனைத்தும் இனத்தில் பதிவு செய்யப்பட்டதையும் இவ்வகுப்பினரைப் பொறுத்தவரையில் ஒரு தற்செயல் நிகழ்ச்சியாகக் கொள்ளலாம். முதலில் இஃது ஓர் அவையெனவும், பதிவு செய்து கொள்ளப்பெற்ற படைச் சேவைக்குரியவர்களின் பிரிவு எனவும் இது பொருள்பட்டது. வகுப்பினரின் பதிவு செய்யப்பட்ட செல்வத்தின்மீது விதிக்கப்பட்ட வரியைத் திரட்டும் ஒரு திட்டமெனவும் இது கருதப்பட்டது. பதிவு செய்வதை ஒரு தூய சமயச்சடங்காக அரசர் நடத்தி வைத்தார்; போர்ப்படையினரின் எண்ணிக்கையைக் கணக்கிட்டார்; ஒவ்வொரு (படை) வீரனும் தனக்குரிய படிநிலையில் இருக்குமாறு பார்த்துக்கொண்டார்; பாவக் குற்றம் புரிந்தோரைப் படையிலிருந்து அகற்றினர்; பின் ஒரு தூய்மைச்சடங்கு நடத்தி ஆய்வுகளை முடித்துக்கொண்டார். விதிக்கப்பட்ட வரிகளைத் திரட்டுவதையொட்டியே இனம் சிறப்புப் பெற்றது. நூற்றுவர் பிரிவு ஒரு படைப்பிரிவாகும். படை கலைக்கப்பட்டவுடன் இப் பிரிவும் கலைக்கப்பட்டுவிடும். ஆனல், இனம் நிரந்தரமானது. எனவே தொடக்கத்திலிருந்தே போர்வரியானது இனத்தலைவர்களால் திரட்டப்பட்டது.

பெட்ரிசியர்களிடமிருந்து ஒரு புதிய அவைக்கு அரசியல் வரிகளை மாற்றிவிடுவது இதன் நோக்கமாக இருக்கமுடியாது. இம்

மாற்றம் பற்றி எவரும் சிந்திக்கவுமில்லை. ஆனால், இத்தகைய மாற்றம் சூழ்நிலையைப் பொறுத்தவரையில் நிகழக்கூடியதாகவே இருந்தது. குடிமக்கட்படை அரசியல் அதிகாரத்தில் முதன்மை பெறவேண்டுமென்ற பொதுவான கருத்து ஒருபுறமிருக்க நிறை வேற்ற வேண்டிய சில குறிப்பிட்ட செயல்களை முதலிலிருந்தே செஞ்சுரியேட் அவை செய்துவந்துள்ளது. குயுரியா அவையைக் காட்டிலும் செஞ்சுரியேட் அவை மிக விரைவாகவும் எளிதாகவும் பொருத்தமாகவும் செய்தது. அரசருக்குப் பற்றுறுதி தெரிவிக்கும் பிரமாணத்தைக் குயுரியேட்டாச் சட்டத்தின் வழியாகத் தெரிவிப் பது வழக்கமாக இருந்திருக்கலாம். மக்கள்தொகைக் கணக்கெடுக் கப்படும் ஒவ்வொரு தடவையும் இப் பிரமாணச் சட்டம் புதுப்பிக் கப்படும்.

முற்கால உரோமில் மக்களின் கூற்றுகள் அல்லது சட்டங்கள் படைகள் பற்றியனவாக இருந்திருக்க வேண்டும். வசதிக்காகவா யினும் இக் கூற்றுகளைப் படை அறிவிக்க வேண்டிய நிலையேற் பட்டது. அலுவலர்களைத் தெரிவு செய்யும் உரிமை அரசரிடம் இருந்தது. அதனால் உயர்பேராட்களை அமர்த்துவதில் மக்களின் ஒப்புதலைப் பெறவேண்டுமெனில் இதை நூற்றுவர் பிரிவுகள் விரைந்தளித்திருக்க வேண்டும். மக்கள் மறுத்து மாற்ற விரும்பிய அரச அதிகாரம் முதன்மையாகப் படைத்துறை செயலாட்சி அதி காரமாக இருந்தது. இதனால் அரசர் மேல் முறையீடுகளை அனு மதித்தபொழுது, அப்படி அனுமதிக்கும் அதிகாரம் படைக்குரிய தாகுமென்பதை அரசர் விரைந்துணர்ந்தார். போர் அறிவிப்புப் பற்றிய திட்டத்தை இந்த அவையில் வெளியிடல் பொருத்தமான தாகும். எல்லாவற்றிற்கும் மேலாக வரி செலுத்துவோரை இந்த அவை பிரதிபலித்தது. எனவே போர்வரியை இவ்வவை மதிப் பிட்டது மிகப் பொருத்தமாகும்.

அதிகாரக் கைப்பற்றலில் செஞ்சுரிகள் அடுத்தடுத்து மேற் கொண்ட நடவடிக்கைகள் பற்றியோ, ஒரு படையாக இருந்து ஓர் அவையாக இது வளர்ச்சியடைந்ததையோ நாம் வரைந்துரைப் பதற்கில்லை. முடியாட்சியின் இறுதிக் காலத்திலும் குடியாட்சியின் தொடக்க காலத்திலும் நிகழ்ந்த முதன்மையான அரசியல் மாற் றங்களுக்கு நூற்றுவர் பிரிவின் வளர்ச்சிக்காக எடுத்துக்கொள் ளப்பட்ட நடவடிக்கைகள் காரணமாக இருக்கவேண்டும். முடி யாட்சி அகற்றப்பட்டது புரட்சிகரமாகத் தோன்றிடினும், ஓர் அவையிலிருந்து மற்றொரு அவைக்கு இறைமையின் பண்புகள் மாற்றப்பட்டதைக் காட்டிலும் ஒருவரிடமிருந்து பலருக்கு இறைமை மாற்றப்பட்டதைக் காட்டிலும் அரசியலமைப்பிலும்

அரசு அமைப்பிலும் ஏற்பட்ட மாற்றம் மிகக் குறைவானதே யாகும். கொமிசியா குயுரிட்டாவின் அதிகாரங்கள் திடீரென்று பறிக்கப்படவில்லை. தனிப்பட்ட தலையாய அதிகாரங்களைப் பெற்றிருந்த தலைவன் ஒருவனின் அமைப்பாற்றல் மாற்றத்திற்கு வழி காட்டியது. நேரம் கடந்துவந்த படிப்படியான, இயல்பான, புரட்சிகளின் முன்னோடியாக இம் மாற்றம் அமைந்தது.

இக் காலத்தின் வரலாற்றை முடிவிற்குக் கொண்டுவந்த இம் மாற்றம் பெரும் புரட்சியாக இல்லாதிருந்தபோதிலும் திடீர் நிகழ்ச்சியாகவும் வன்மையாகவும் இருந்தது. முடியாட்சி அகற்றப் பட்டது. இறைமை முழுவதையும் விட்டுக் கொடுத்து மக்களாட்சி பணியை நிறைவேற்ற செர்வியஸ் எண்ணியிருந்தார்.[1] கடைசி அரசராகிய டார்குவின் அரசியலமைப்பு வழக்காறுகளின் வழி யாக மக்களின் பற்றுறுதியை மறுதலிக்காமல் ஆட்சி செய்தார்.[2] அரச அதிகாரம் அஞ்சத்தக்க முறையில் தவறாகப் பயன்படுத்தப் பட்டதை அரசர், அரசாட்சி என்ற சொற்கள் சுட்டிக்காட்டின. டார்க்குவின் அரசர்கள் கொடுங்கோலோச்சியதால் மக்கள் அவர்களை வெறுத்தொதுக்கினர். பிளெபியர்களை ஒடுக்கி, செல்வர்களைக் கொன்று, அவர்களுடைய பொருள்களைக் கைப்பற்றி, செனெட்டின் அதிகாரத்தை எல்லா வகையிலும் குறைத்து, வழக்கங்களையும், முன்னிகழ்வுகளையும் அவமதித்து வெளியார் ஆதரவில் ஆண்டனர். தேர்வுமுறைகள் புறக் கணிக்கப்பட்டன. பெட்ரிசியக் குடிமக்களை இக் கொடுங் கோலாட்சி அச்சுறுத்தியது. எனவே, இவர்கள், கிளர்ந்தெழுந்து அரசைக் கைப்பற்றினர்கள். ஓர் அரசருக்குப் பதிலாக இரண்டு நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்து ஆட்சிப் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்தார்கள். இவ்விருவரும் செஞ்சுரியேட் அவையினரால் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நகர முதல்வர் அவைத்தலைவராக இருந்து இவர்களின் பெயர்களைச் சபையில் வைத்து ஏற்பிணைப் பெற்றார்.[3]

1 Liv. i. 48
2 Liv. i. 49
3 Liv. i. 60

# 3. குடியாட்சி அமைப்பின் வளர்ச்சி

கி.மு. 510-ல் முடியாட்சி வீழ்ச்சியுற்றபின் 509-ல் குடியாட்சி தோன்றியது. உரோமானியச் சமுதாயத்தில் பெட்ரிசியரும் பிளெபியரும் எதிரெதிரான நிலையில் இருந்தனர், அரசின் பல பகுதிகளையும் அணைத்து பிளெபியர்களைப் பாதுகாத்து வந்த முடியாட்சி இப்பொழுது மறைந்துவிட்டது. புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற நிருவாகிகளும் (மாஜிஸ்டிரேட்டுகள்) பெட்ரிசியர்களாகவே இருந்தார்கள். எழுத்துருவில் இல்லாத சட்டங்களும் சமயமும் பெட்ரிசியர்களின் உடைமையாக இருந்தன. அவைகளில் வாக்களிக்கும் அதிகாரமும் இவர்களிடம் இருந்தது போலவே நிலத்தில் பெருமளவு இவர்களின் உடைமையாக இருந்தது. அக் காலத்தில் செனெட் பெற்றிருந்த அதிகாரமும் இவர்களுடையதாக இருந்தது. கடன்பற்றிய சட்டங்களும் கடுமையாக இருந்தன. நிலத்தின் ஒரு பகுதியைப் பெற்றுப் பண்படுத்தும் வாய்ப்பும் குறைந்துகொண்டே போனது. டைபர் ஆற்றுக்கு அப்பால் இருந்த நிலங்களையும் முடியாட்சியின் மறைவிற்குப் பின் உரோம் நகரம் இழந்துவிட்டது. உரோம் நகரை எட்ரஸ்கர்கள் எடுத்துக்கொண்டதுபோல் தோன்றியது. லாட்டினேடு உரோம் போர் தொடுத்திருந்தது. இப் போர்களின் இறுதியில் உரோம் வெற்றி பெற்றது. இருப்பினும், இப் போரின் விளைவாக உரோம் அதற்குச் சொந்தமான நிலத்தையும் செல்வாக்கையும் இழந்துவிட்டது. எனவே பகிர்ந்து கொள்ளக்கூடிய நிலம் குறைந்துவிட்டது. இதற்கிடையில் படையில் சேவை செய்ய வேண்டிய கடமை அனைத்துக் குடிமக்களையும் சார்ந்தது. அமைதிக் காலத்திய துன்பங்கள் வெற்றியற்ற போரினால் அதிகரித்தன.

உரிமையற்றிருந்த பிளெபியர்கள் நிலையை உயர்த்திக் கொள்ள அயராது பாடுபட்டனர். புதிய நிருவாகிகளின் கடுமையான அதிகாரச் செயற்பாட்டிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்வதும், கொடிய கடன் சட்டத்திலிருந்து தப்பித்துக் கொள்

வதும். கடன் கொடுத்தவருக்குக் கடன்பட்டவர் அடிமையாகாமல் பார்த்துக்கொள்வதும் இவர்களுடைய முதல் நோக்கமாக இருந்தது. இவர்களுடைய பயன்பாட்டிற்கென அரசு நிலத்தைப் பெறுவதும் இவர்களின் நோக்கமாக இருந்தது. ஆளும் வகுப்பினராக இருந்த பெட்ரிசியர்களும் இவைகளைப் பிளெபியர்களுக்குக் கொடுப்பதாக இல்லை. அப்பொழுது இருந்த அவைகளில் வாக்களிப்பின் வழியாகப் பிளெபியர்கள் சலுகைகளை வற்புறுத்திப் பெறவும் இயலவில்லை, மேலும் மாற்றங்களைக் கொணரும் எல்லா அதிகாரங்களும் நிருவாகிகளிடமே இருந்தன. பெறவேண்டிய சலுகைகள்மீது வாக்களிக்கும் வாய்ப்பும் குறைந்தே காணப்பட்டது. ஆகவே, பிளெபியர்கள் சமூக, பொருளாதாரத்துயர் தீர்வு பெறப் பயனுள்ள முறையில் வாக்களிக்கும் உரிமையைப் பெறவேண்டும். கூட்டு நடவடிக்கையின்றி இத்தகைய நோக்கங்களை அடையமுடியாது. இதேபோல் தலைவர்களின்றிக் கூட்டு நடவடிக்கையும் எடுக்க முடியாது. கி.மு. 494–449-க்கு இடைப்பட்ட காலத்தில் பிளெபியர்கள் மூன்று சிறந்த நடவடிக்கைகளை எடுத்தார்கள். கி.மு. 494-ல் இவர்களுக்கான அலுவலர்களை அமர்த்திக் கொள்ளும் உரிமையை இவர்கள் பெற்றார்கள். பொதுமக்களின் தலைவர்களாகவும் பாதுகாப்பாளர்களாகவும் செயற்படக்கூடிய அதிகாரமும் டிரிபியூன்களை அமர்த்திக்கொள்ளும் அதிகாரம் பெற்றார்கள், பிளெபியர்களுக்கான கூட்டங்களில் இளவாரியாக வாக்களிக்கும் உரிமையை இவர்கள் கி.மு, 471-ம் பெற்றார்கள். எழுதப்பட்ட சட்டங்களுக்காக இவர்கள் நடத்திய போராட்டத்தின் விளைவாக (கி.மு. 462-450) டிசம்வீர்கள் பன்னிரண்டு சட்டப் படிகைகளை வெளியிட்டார்கள். இவைகள் முதன்முதலில் வெளியிடப்பட்ட உரோமாபுரிச் சட்டங்களாகும். கி.மு.449-ல் இயற்றப்பட்ட வலீரியோ ஹோராசியன் (Valerio Horatian) சட்டங்கள் இதற்குமுன் பெற்ற உரிமைகளையும் சலுகைகளையும் உறுதிப்படுத்தியதோடு நீட்டித்தன. இந்த இயக்கத்தின் பயனை ஸ்பியூரியஸ் காசியஸ் (Spurius Cassius) என்பவரின் திட்டத்தில் காணலாம். அரசின் நிலத்தைத் துண்டுகளாகப் பிரித்து வறிய குடிமக்களுக்களிக்க வேண்டுமென்பது இவருடைய திட்டமாகும் (486). இதன்படி அவென்டைன் குன்று (Aventine Hill) உண்மையிலேயே இவர்களுக்கு ஒதுக்கப்பட்டது (கி.மு. 457), இக் குன்று பகுதியில் தோற்றுவிக்கப்பட்ட குடியிருப்பு ஓரளவிற்கு சிறிது துயர் நீக்கியதெனலாம்.

பிளெபியர்கள் உரோம் நகரைவிட்டு (கி. மு. 494-449) வெளியேறிச் சில நிலைகளில் தங்கி, தம் கோரிக்கைகள் நிறைவேற்றினலன்றி நகருக்குள் வருவதில்லையெனவும் அரசில்

ஓரங்கமாக இருக்கப் போவதில்லை எனவும் அறிவித்தார்கள். இப்படிப் பிரிந்து சென்ற ஒவ்வொரு தடவையும் பிளெபியர்களின் நன்மைக்காக ஒப்பந்தங்கள் செய்துகொள்ளப்பட்டன. கி.மு. 494-ல் செய்துகொள்ளப்பட்ட ஒப்பந்தம் இரு தனிப்பட்ட சமூகங்களுக்கிடையே செய்து கொள்ளப்பட்டதைப்போல் இரண்டு வகுப்பினருக்குமிடையே செய்து கொள்ளப்பட்டதாகும். பிளெபியர்களை ஒரு சுயேச்சையான சமூகமென இவ்வுடன்பாடு ஏற்றுக்கொண்டது, அதாவது ஓர் அரசுக்குள் அரசாக இருப்பதைப்போல் இதுவும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்த உடன்பாட்டின் விளைவாக டிரிபியூனேட் குழு அமைக்கப்பட்டது. பிற்கால வெற்றிகளுக்கு டிரிபியூன்கள் காரணமாயிருந்தார்கள். பெட்ரிசியர்களை மேலும் நெருக்கும்பொருட்டு இவர்கள் படையில் சேர்ந்து பணியாற்ற மறுத்தார்கள். சில சலுகைகளைப் பெறும் வரையில் படைச்சேவைக்கு இவர்கள் பெயர் கொடுக்க மறுத்தார்கள். இத்தகைய முறைகளைப் பயன்படுத்தி பெட்ரிசியர்களின் ஆதிக்கத்தை இவர்கள் தளர்த்தினர்கள். இதே முறைகளால் உரோமானியப் பொதுமக்கள் மேன்மேலும் அரசியல் உணர்வு பெற்றூர்கள்.

முடியாட்சியை முடிவுக்குக் கொண்டுவந்து ஒரு புதிய அரசை நிறுவிய புரட்சியை ஒரு திடீர் நிகழ்வென்று குறிப்பிடுவதற்கில்லையெனினும் நிகழ்ந்த மாற்றங்களைப் பார்க்கும் பொழுது இதை ஓரளவு நம்ப வேண்டியுள்ளது. அரசர் விரட்டப்பட்டாலும் அரசருக்குரிய முழுமையான இறைமை அதிகாரம் [Imperium) அழிக்கப்படவில்லை. அரசின் தலைவர்களாக அமர்த்தப்பட்ட இரண்டு நிருவாகிகளும் அரசரைப் போலவே படைத் தலைமையையும் ஆட்சி அதிகாரத்தையும் பெற்றிருந்தார்கள். இவர்கள் பிரிடோரிகள் (Praetores) நீதிபதிகள் (Judices) என்ற பட்டங்களைப் பெற்றிருந்தபோதிலும் அரசின் தனித் தலைமையதிகாரத்தைக் குறிப்பிடும் பதவிப் பெயர்களாகிய சர்வாதிகாரி (Dictator) அல்லது மக்கள்தலைவர் (magister populi) என்ற பட்டங்களைக் கைவிட்டனர். புதிய நிருவாகிகள் ஓராண்டுப் பதவியிலிருந்த பின் அதிகாரங்களைத் தமக்குப்பின் வந்தவர்களிடம் ஒப்படைத்துச் சென்றூர்கள். அதனல் ஓராண்டுப் பதவிக்காலம் முடிந்தபின் இவர்களைப் பதவியிலிருந்து அகற்றுவதற்கான வழிகள் எதுவும் கூறப்படவில்லை. எனினும், குடிமக்கள் இவர்களுக்கு எதிரான கருத்தை உருவாக்கி இவர்களைப் பதவியிலிருந்து அகற்றலாம். இருவரும் சமமான அதிகாரத்தைப் பெற்றிருந்ததால் ஒருவர் மற்றொருவரின் நடவடிக்கையைத் தடைசெய்து ஒரு முட்டுக்கட்டை நிலையை உருவாக்கலாம். இவர்களுக்குப் பின் பதவிக்குரியவர்களை நியமிக்கலாமெனினும் இவர்களின் நியமன

உரிமை முடிவானதாகாது, ஏனெனில் செஞ்சுரியேட் அவையில் கூடிய மக்கள் இந் நியமனத்திற்கு ஒப்புதலளிக்க வேண்டும். இப் பதவிக்கு வரவிரும்புவோர்களின் பெயர்களை இவர்கள் கொமிசியா முன் வைக்கவேண்டும் என எதிர்பார்க்கப்பட்டது, இருப்பினும் பெயர்களை ஏற்க இவர்கள் மறுக்கலாம். ஏனெனில் நியமனம் என்பது இந் நிருவாகிகளின் தேர்வில் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. உரோமானிய ஆட்சிமுறையில் நேர் முகத்தேர்வு ஒரு புதிய நடைமுறையாகக் கருதப்பட்டது. ஆனால் நியமனத்திற்கு ஒப்புதல் அளிக்கும் பழைய நடைமுறையில் இது ஒரு மேம்பாடேயாகும். முடியாட்சி முறையிலிருந்து முற்றிலும், வேறுபட்ட புதிய கருத்தாகிய கூட்டாளிமுறை (Colleagueship) யான அதிகாரத்தைச் செயற்படுத்தினர். ஆகவே, இருவருக் கிடையே உடன்பாடு இல்லையெனில் மோதல் ஏற்படக்கூடிய நிலை ஏற்படலாம். ஒரு நிருவாகி எடுத்துக்கொண்ட நடவடிக்கைக்கு இன்னொரு நிருவாகி இணக்கம் தெரிவிக்கவில்லையென்றால் எடுத்துக்கொண்ட நடவடிக்கை செல்திறனற்றுப் போகும். இத் தகைய இணக்கம் தெரிவிக்கப்படவில்லையெனில் தனித்த நிருவாகியின் அதிகாரம் சமூகமனைத்தையும் கட்டுப்படுத்தும் திறம் பெற்றிருந்தது. அரசின் தகுதியாற்றல் குறைக்கப்படவில்லை. அதனால், மற்றொரு நிருவாகியால் இது தடை செய்யப்பட்டது. தலைமை அதிகாரம் தவறாகப் பயன்படுத்தப்படுவதைத் தடுக்க இக் கூட்டாளிமுறை ஒரு பாதுகாப்பாக அமைந்தது. புதிய பதவியின் இப் பண்பு உரோமானியரின் கருத்தைக் கவர்ந்தது. "கூட்டாளிகள்" என்ற சொல் எப்பொழுது அலுவல் தொடர்புடைய பதவிப் பெயராயிற்றென்பது தெளிவாகத் தெரியவில்லை. எனினும் நாம் இவர்களை இனிமேல் கான்சல் (Consul)[1] என்று குறிப்பிடலாம், சுவையான கோனாட்சி மரபெச்சங்கள் குடியாட்சியில் தொடர்ந்தன. சில சமயச் சடங்குகளைச் செய்து வைக்கும் குரு ஒருவர் "அரச"ரெனக் குறிப்பிடப்பட்டார். பிற்காலத்தில்கூட இப் பதவியில் (rexSacrorum) இருந்தவர் பெட்ரிசிய வகுப்பின ராகவே இருந்தார். நிருவாகியைப் பதவியிலிருந்து அகற்றும் வழி கூறப்படாமையால் இப் பதவியின் நிரந்தரத்தன்மை உறுதியாகிறது; குவெஸ்டர்களை, [illegible]ன்சல்களே முதலில் அமர்த்தியது உண்மையானால் இது கீழா[illegible]களை அரசர் அமர்த்தும் அதிகாரத்தையே குறிப்பிடுகிறதெனலாம். "இடையாட்சிக்காலம்" என்ற ஏற்பாட்டில் ஒரு பயனுள்ள ஆட்சி நிறுவனம் தொடர்ந்து வந்தது, தலைமை அதிகாரம் பெற்றிருந்த நிருவாகியால்தான் கான்சல் களுக்கான தேர்தலை நடத்தமுடியும். இந் நோக்கத்திற்காக கான்

[1] Momm. Staatsr. ii. p. 77

சல் ஒருவர் செஞ்சுரியேட் அவைக்குத் தலைமைதாங்க முடியாத நிலை ஏற்பட்டதில்லை. ஆனால், அப்படி முடியாமல் போனபொழுது பழைய இடைக்கால அரச முறை மேற்கொள்ளப்பட்டது. ஒரு தலைவரிடம் முழுமையான அதிகாரங்களைக் கொடுக்கவேண்டிய நெருக்கடி நிலை அரசிற்கு ஏற்படலாம். இத்தகைய ஏற்பாடு ஒன்று புரட்சிக்காலத்தில் ஏற்படுத்தப்பட்டிருந்ததா இல்லையா யென்பது தெரியவில்லை. கி.மு. 501-ல் இலத்தீன் போரைச் சமாளிக்க ஒரு தற்காலிக அரசர் அமர்த்தப் பெற்றார் என அறிகிறோம், இவரைச் சர்வாதிகாரி (Dictator) அல்லது மக்கள் தலைவர் (magister populi) என்று மக்கள் பெயரிட்டனர். இவருடைய பதவிக்காலம் ஆறுமாதம். இக்காலத்தில் இவருக்கு அரசின்மீதான முழு செயலாட்சி உரிமை இருந்தது. இவரை செஞ்சுரியேட் (நூற்றுவர் பிரிவு) அவை தேர்ந்தெடுக்கவில்லை. கான்சல் தான் இவரை அமர்த்தினர். நாட்டிற்கு ஏற்படும் உள், வெளி இடர்களைச் சமாளிக்க இவர் அமர்த்தப்பட்டார்.

நிருவாகியின் வரம்பற்ற படைத்துறை அதிகாரம் புதிய ஆட்சிமுறைக்கு உகந்ததாக இருக்கவில்லை. உரோமானிய குடிமக்களுக்கெதிராகக் கொடுக்கப்பட்ட மரணதண்டனையை எதிர்த்து செஞ்சுரியேட் அவையினரிடம் மேல்முறையீடு செய்ய அதிகாரமளிக்கும் சட்டமொன்றை முதலில் அமர்த்தப் பெற்ற கான்சல்களில் ஒருவராகிய வலீரியஸ் நிறைவேற்றினர். கோனாட்சிக் காலத்தில் வளர்ந்துகொண்டுவந்த மக்களதிகாரம் இச் சட்டத்தால் நிறைவுபெற்றது (கி.மு. 509)[1] இதற்குப்பின் உரோம் நகருக்குள் மரணதண்டனை விதிக்கும் அதிகாரத்தை மக்களே பெற்றிருந்தார்கள். மரணதண்டனை விதிக்கும் முதன்மைக் குருவின் அதிகாரமும் வழக்கொழிந்து போயிற்று. நகருக்கு வெளியே கான்சலின் அதிகாரத்தை எதிர்த்து முறையிட முடியாது. எனவேதான் நகருக்குள்ளான தலைமை அதிகாரமெனவும் நகருக்கு வெளியேயான தலைமையதிகாரமெனவும் தலைமையதிகாரம் வேறுபடுத்திக் காட்டப்பட்டது, நகருக்கு வெளியே கான்சல் கோல்களோடு கூடிய கோடாரியைக் கொண்டு செல்லலாம். நகருக்குள் இதைக் கொண்டு செல்லலாகாதென்பது வழக்காறுகும், இம் மரபு கருதியே கான்சல்கள் சபை முன் உரைநிகழ்த்தும்பொழுது இக் கோல்கள் தாழ வைக்கப்பட்டன. இச் செயல் மக்களின் இறைமையை ஏற்றுக் கொண்டதின் அடையாளமாகும், மக்களின் போராட்டத்தால் இப் பெரிய மாற்றம் ஏற்படவில்லையென்பது தெரியவருகிறது. பிளெபியர்களின் குறிப்பிடத்தக்க இயக்கங்களில் இ∴து இடம்

[1] Liv. ii. 8.

பெறவில்லை. கோனாட்சிக் காலத்தில் மறைந்துகொண்டிருந்த இந்த அதிகாரத்தின் தவிர்க்கமுடியாத முடிவை செனெட் சபையும், மக்களும், பெட்ரிசியர்களும், பிளெபியர்களும் உணர்ந்தார்கள்.

முடியாட்சியின் மறைவு நிருவாக அதிகாரத்தைத் தளர்த்தும் முதல் நடவடிக்கையாக இருந்தது, ஆண்டுதோறும் அமர்த்தப் படும் இரண்டு குவெஸ்டர்களை கான்சல்கள் பொது உதவி யாளர்களாகப் பெற்றனர். முடியாட்சிக் காலத்திலும் இத்தகைய அலுவலர்கள் அமர்த்தப்பெற்றதைப் பார்த்தோம்.[1] ஆகவே குடியாட்சியமைப்பில் இவர்கள் இடம் பெற்றிருந்தது முரணு காது. முடியாட்சிக் காலத்தில் அரசப் பேராட்களாக இருந்த குவெஸ்டர்கள் இப்பொழுது கான்சல்களின் நிலையான உதவியாளர்களானார்கள். இவர்களுடைய ஆட்சி எல்லையும் கான்சல்களின் ஆட்சி எல்லையைப்போல் வரம்பற்றுக் காணப் பட்டது. இவர்கள் கான்சல்களின் கட்டளைகளையேற்றுச் செயற்படுத்தவேண்டும். ஆனால், இவர்கள் இரண்டு துறை களில் முதலில் இருந்தே முதன்மையாளர்களாகத் தோன்றினர். குற்றத் தண்டனைத் துறையிலும் நிதித்துறையிலும் இவர்கள் சிறந்து நின்றார்கள். நகருக்கு வெளியே செயற்பட்ட குவெஸ்டர் களிலிருந்து வேறுபடுத்திக்காட்ட பிற்காலத்தில் இவர்கள் நகரக் குவெஸ்டர்கள் என வழங்கப்பட்டார்கள். குற்றத் தண்டனை வழக்குகளை விசாரிப்பதில் இவர்கள் கான்சல்களின் பேராட்களாக அமர்த்தப் பெற்றார்கள், அரசின் நலனைப் பாதிக் காத குற்றத்தண்டனை வழக்குகளை விசாரிக்கும் பொருட்டு மாநிலக் குவெஸ்டர்கள் அமர்த்தப்பட்டார்கள். கி.மு. 459-ல் நடந்த வோல்சியஸ் (M. Volcius) விசாரணையில் இவர்களைப் பற்றி குறிப்பிடப்பெற்றது. இவர்களுடைய நிதிப்பணிகளி லிருந்து அரசுக்குக் கருவூலம் ஒன்று இருந்ததைக் குறிப்பாக அறிந்துகொள்ளலாம். முதல் கான்சல் வெலிரியஸ் காலத்தில் கருவூலம் இருந்ததாக மரபுச் செய்திகள் கூறுகின்றன. இதன் செல்வத்தையும் ஆவணங்களையும் குவெஸ்டர்கள் பாதுகாத்ததாகவும் கூறுகின்றன. அச்சிட்ட நாணயங்கள் புழக்கத்தில் இல்லாதபோது உரோமானியக் கருவூலம் தொடக்க நிலையில் இருந்திருக்க வேண்டும். ஆகவே இக் காலத்தில் நிதி ஒரு தனித்துறையாக இருந்து செயற் பட்டிருக்க வேண்டும். நிதி வெறும் உள்துறைப் பொருளாக மட்டும் இருக்கவில்லை; அரசரின் நிலங்கள் அரசின் நிலங் களாயின; இடையருப் போரில் ஈடுபட்டிருந்த உரோமிற்குப்

[1] Cio. p. 63

போர்வரி தேவைப்பட்டது. கான்சல்களின் பேராட்களைத் தவிர வேறு யாரிடமும் வருவாய்க் கட்டுப்பாட்டையும் செலவையும் ஒப்படைத்திருக்க முடியாது; குவெஸ்டர்கள் வழியாக கான்சல்கள் முறையாகச் செயற்பட்டிருக்க வேண்டு மென நம்பவேண்டியிருந்தது. இந்த அளவிற்கு கான்சல்களின் அதிகாரங்களை இவர்கள் குறைத்திருக்க வேண்டும், மக்களின் நேரடித் தலையீடு இன்றி கான்சல்கள் முதலில் குவெஸ்டர்களை நியமித்திருக்கலாம். ஆனால், இந்த அதிகாரம் மக்களின் ஒப்புதல் அளிக்கும் அதிகாரத்தை விலக்கிவிடவில்லை, வலிரியன் சட்டத்தால் (கி.மு. 449) இந்த மாற்றம் ஏற்பட்டிருக்கலாமென மாம்சன் நினைக்கிறார்.[1] இவர்கள் முதலிலிருந்தே தேர்ந் தெடுக்கப்பட்டார்கள் என்பது புளூடார்க் (Plutarck) என்ப வரின் கருத்தாகும். அரசர் தேர்ந்தெடுக்கப் பட்டபின் இவர் களை அரசரே அமர்த்தினரென்றும், பின், இவர்கள் அமர்த்தப் பட்டதை குயூரியேட்டாச் சட்டம் ஏற்றுக்கொண்டதென்றும், டாசிடஸ் (Tacitus) கூறுகிறார். குவெஸ்டர்களை அரசர் அமர்த் தினர். ஆகவே கான்சல்களும் அமர்த்தும் அதிகாரத்தைப் பெற்றனரென்பது மற்றொரு விளக்கமாகும். கி.மு. 449 வரை யிலும் இவர்களுடைய தேர்தல் இனங்களால் புதிதாக அமைக் கப்பட்ட கொமிசியாவிற்கு மாற்றப்படவில்லை.

இறக்கும்வரை பதவியிலிருக்கும் அரச உரிமையைச் சமயத் துறையில் காணமுடிகிறது. முதன்மை குருமார்களின் குழு சமயத் தலைமையை வரித்துக்கொண்டது. இக் குழுத்தலைவர் போன்டி∴பெக்ஸ் மாக்சிமஸ் (Pontifex Maximus) என்னும் பெயரைப் பெற்று இறக்கும்வரை பதவியிலிருந்தார். டார்குவின் அரசரின் அரண்மனையில் பெரும் சிறப்போடு இவர் வாழ்ந்தார். உரோமானிய ஆண்டுக் குறிப்பேடு முதன்மைக் குருமார்களின் பொறுப்பில் இருந்தது; வரவிருக்கும் விழாக்களைப்பற்றி திங்கள் தோறும் அறிவிப்பார்கள். பொதுக் காரியங்கள் செய்யத் தகாத நாள்களையும் இவர்கள் குறிப்பிட்டார்கள். மற்ற நாள்கள் நல்ல நாள்களே. எனினும், ஒரு சில நாள்களே சபைகளுக்கென ஒதுக் கப்பட்டன. சபைகளுக்கான நாள்கள் தவிர பிற நாள்கள் சட்ட நடவடிக்கைகளுக்கு ஒதுக்கப்பட்டன. இயல்பு திரிந்த நிகழ்வு களுக்கான தெய்வ எச்சரிக்கைகளுக்கு முதன்மைக் குருமார்கள் பொருள் விளக்கம் செய்தார்கள். தெய்வ விருப்பங்களுக் கிணங்க சடங்குகள் செய்ய இவர்கள் ஆணையிட்டார்கள். பறவை கள் பறத்தல் அல்லது உணவு உட்கொள்ளுதல் ஆகியவை பற்றிய குறிகளை நிருவாகிகள் பெற்றார்கள். ஆனால், இக் குறி

[1] Momm. Staatsr. ii. p. 529

சொல்வதற்கான தத்துவங்களைக் குறிசொல்லுநர் குழு முறைப் படுத்தியது. சகுனம் பார்த்தே எல்லா அவைகளும் கூட்டத் திற்கு அழைக்கப்பட்டன. சிறிய சகுன பேதங்கள் சபைகளின் நடைமுறைகளைப் பாதிக்கலாம். சமயக் குருமார்களின் குழுக்கள் பெரும் அரசியல் அதிகாரத்தைச் செயற்படுத்தின. இச் சமய குருமார்கள் அனைவரும் பெட்ரிசியர்களாகவே இருந்தனர். இவர்களுடைய அதிகாரங்களை பெட்ரிசியர்களின் நலனிற்குப் பயன்படுத்தினார்கள்.

பேரரசர்களை, கான்சல்கள் நியமித்ததுபோல் முடியாட்சிக் கால மரபையொட்டி இவர்கள் அரசவையாகிய செனெட் சபை யின் உறுப்பினர்களை நியமித்தார்கள். உறுப்பினர்களைத் தெரிவு செய்வதில் இவர்கள் அரசர்களைப் போல் சுதந்திரம் பெற்றிருந் தார்கள், புதிய உறுப்பினர்களை இவர்கள் சபைக்கு அழைக்க லாம்; அல்லது பட்டியலில் உள்ளவர்களை அழைக்காமல் விட்டு விடலாம். சட்டப்படி ஆண்டுதோறும் சபையின் உறுப்பினர்களை மாற்றியமைக்கலாம். அதனால், மரபு சட்டத்தைவிட வலிமை பெற்றதாக இருந்தது. பிரதிநிதித்துவத் தன்மையாலும், நிரந்தர உறுப்பினர் பதவியாலும் இதை எளிதில் அழிக்கமுடியாததாலும் இச் சபை குறிப்பிடத்தக்க அமைப்பைப் பெற்றது. தாறுமாறான நீக்கம் அல்லது தேர்வு முயற்சியைத் தடைசெய்ய கான்சலின் கூட்டாளி உடனிருந்தார். நிருவாகியின் பதவிக் காலம் ஓராண் டாக இருந்தமையால் இவருடைய வருங் காலத்தைப் பாதிக்கும் வகையில் இவர் அதிகாரத்தைப் பயன்படுத்த விரும்பியதில்லை. பிளெபியர்கள் இப்பொழுது முழுமையான குடியுரிமையைப் பெற் றிருந்ததால் நிருவாகியின் உசித அதிகாரத்தால் பிளெபியர்களை எளிதில் தெரிவு செய்திருக்கலாம்.[1] இத் தெரிவு அடிக்கடி செய் யப்பட்டதாகத் தோன்றவில்லை. பெட்ரிசியக் குலங்கள் செனெட் சபையோடு நெருங்கிய வழிவழித் தொடர்பு பெற்றிருந்தன. இடையாட்சிக் காலம் நெடுங்காலமாக செனெட்டின் சிறப்புரிமை யாக இருந்தது. இக் காலத்தில் குடும்பத் தலைவர்களின் (Patres) ஆதரவை அரசருக்குத் தெரிவித்தார்கள். கீழ்நிலையாளர்களை நிருவாகிகள் சபை உறுப்பினராக அமர்த்தியிருக்க முடியாது. முடியாட்சியின் மறைவிற்குப் பின் குறைந்துபோன சபையின் உறுப்பினர் எண்ணிக்கை புதியவர்களை அமர்த்தி 300 ஆக உயர்த்தப்பெற்றது. புதிய உறுப்பினர்கள் இவர்களுக்கு முன் பிருந்தவர்களைப்போல் பெட்ரிசியர்களே. உறுப்பினர் எண்ணிக் கையின் அதிகரிப்பால் புதிய, பழைய உறுப்பினரென்ற பாகு பாடு தோன்றியது. புதிதாகச் சேர்த்துக் கொள்ளப்பட்ட

[1] Zonars- vii. 9.

உறுப்பினர் என்ற சொல் பிளெபியர்களைக் குறிப்பிடுகிறதென்றால் குடியாட்சி தோன்றிய பின் இச் சொல்லும் தோன்றியிருக்க வேண்டும். செனெட் சபை உறுப்பினராக பிளெபியர்கள் கி. மு. 401-க்குப் பின்னரே அமர்த்தப்பட்டார்கள் என்பது தெளிவு.[1]

அடுத்து வரும் 150 ஆண்டிற்கான வரலாறு, செனெட் சபை பெட்ரிசியரின் வெறுப்பு விருப்புகளின் புகலிடமாக இருந்ததைக் காட்டுகிறது. குடும்பத் தலைவர்களின் அதிகாரப் பிடியி லிருந்து பிளெபியர்கள் விடுதலைப் பெற விரும்பினார்கள். பெட்ரி சியர்கள் பெருமளவில் சபையில் இல்லாதிருந்தால் நிருவாகிகள் இதற்கு விரைந்து விட்டுக்கொடுத்திருப்பார்கள். இருப்பினும் குடியாட்சியின் தொடக்க காலத்தில் செனெட், நிருவாகிகளுக் குப்பின் இரண்டாந்தர நிலையையே பெற்றிருந்தது. "இடை யாட்சிக் கால அதிகாரமும்" குடும்பத் தலைமை அதிகாரமும் இதன் திட்டவட்டமாக இரு சிறப்பதிகாரங்களாகும். இவை களில் முதல் அதிகாரம் அடிக்கடிப் பயன்படுத்தப்படவில்லை. ஏனெனில், இரண்டு கான்சல்களில் ஒருவர் அவருக்குப்பின் வருபவரை நியமிக்கத் தயாராக இருந்தார். எனவே, "இடை யாட்சிக் காலம்" குடியாட்சியமைப்பில் அடிக்கடி நிகழவில்லை. இரண்டாவது அதிகாரம் முடியாட்சிக் காலத்தில் இருந்ததைக் காட்டிலும் இப்பொழுது ஒரு வெற்றுச் சடங்காகவே இருந்தது. முக்கியமான காரியங்களில் முன்பெல்லாம் செனெட் சபையைக் கலந்து செயற்பட வேண்டுமென்பது ஒரு கோரிக்கையாக இருந்தது. ஆனால், இப்பொழுது அரசின் நடைமுறை விதிகளில் இது முழுமையான பாகமாகிவிட்டது. அவையில் வாக்கெடுப்பு நடந்துமுடிந்த பின்னரே இந்த நடைமுறை விதிகள் [illegible] கொள்ளப்பட்டன. தேர்தலோ சட்டமோ மக்களால் நிறைவேற் றப்பட்டபின் செனெட் சபை உறுப்பினரின் முறையான இசைவைப் பெறுமல் செயற்பட முடியாது. கான்சல்களின் காலத்தில் அரசர்களின் காலத்தில் இருந்ததைவிட செனெட் சபை சுதந்திர நிலையில் இருந்தது. கருவூலத்தை நிறுவியதும் நிதிஇயல் குவெஸ்டர்களை செனெட் சபையிலிருந்து அமர்த்திய தும் நிதித்துறையோடான செனெட்டின் தொடர்பு அதிகரித்தது. இத்தாலி மக்களோடு உரோம் இடைவிடாமல் போரில் ஈடுபட் டிருந்ததால் வெளி விவகாரங்கள் சிறப்பான நிலையை எய்தின. எனவே, வெளி விவகாரத் துறையின் மீதான செனெட்டின் கட்டுப் பாடும் அதிகரித்தது.

[1] Liv. v. 12.

குறிப்பாக, குடியரசின் தொடக்க காலத்திய வரலாறு நிருவாகிகளின் அதிகாரப் பெருக்கத்தை விளக்கியது. குடியாட்சி நிறுவப்பெற்று எட்டாண்டுகளான பின்னும் முடியாட்சி மரபுகள் மறக்கப்படவில்லை. மாற்றியமைக்கப்பட உருவத்தில் முடியாட்சி மறுபடியும் தோன்றியது.[1] இலத்தீன் மக்களோடான போரின் போது கி. மு. 501-ல் அரசருக்குக்குரிய பட்டங்களோடும் அதிகாரத்தோடும் கூடிய ஒருவரை கான்சல் நியமித்தார். பிற்காலத்தில் சர்வாதிகாரியென வழங்கப்பெற்ற இந்த மக்கள் நிருவாகி (Magister populi) நெருக்கடி நீங்கும்வரை பதவியில் இருப்பார் எனத் தெரிந்தது. முதலில் இத்தகைய நெருக்கடிகள் படையியல்புடையனவாக இருந்ததால் ஒரு போருக்குத் தயாராகும் காலமாகிய ஆறுமாதம் இவருடைய உயர்ந்த அளவு பதவிக்காலமாக இருந்தது. இக் காலத்தில், நகருக்குள்ளும் வெளியேயும் இவர் முழுமையான அதிகாரத்தைச் செயற் படுத்தினர். அரசருக்குரிய அதிகாரத்தைப் பெற்றிருந்த காலத்தில் இவருக்கு முழுமையான இராணுவ அதிகாரமு மிருந்தது. இந்த அதிகாரச் செயற்பாட்டையொட்டி எவரும் மேல்முறையீடு செய்யமுடியாது. காலாற்படையின் தலைவர் என்ற முறையில் இவர் ஒரு படையினராக முதலில் கருதப் பட்டார்.[2] குதிரைப் படையின் தலைமையை முடியாட்சி மரபுகளை யொட்டி இவர் ஒரு நிருவாகியிடம் ஒப்படைத்தார். இவர் சர்வாதிகாரியின் பேராளாகப் பணியாற்றினர். இவர் இப் பதவியில் இருந்த காலத்தில் குதிரைப் படைத் தலைவரெனப் பட்டம் பெற்றிருந்தார். இப் பட்டம் முதலில் பிரீட்டர் (Praetor) என்றிருந்திருக்கலாமென மாம்சன் கருதுகிருர். கான்சல்களின் உயர்கூட்டாளியாக இவர் இருந்திருக்கலாம். ஓர் இராணுவப் பதவியாகவே இது முதலில் இருந்தது. ஆயினும், பிற்கால அரசியலமைப்பில் இப் பதவி மற்றக் காரியங்களுக்காகவும் பயன் படுத்தப்பட்டுள்ளது. இருப்பினும் இதன் தோற்ற நிலை இயல்புகள் மறைந்துவிடவில்லை. ஒரு சிறிய காலத்திற்கு கான்சல் களின் மிகச் சிறந்த பணிகளைத் தடைசெய்ததெனினும் இஃது அரசியலமைப்பின் ஒத்திவைப்பாக இல்லாமல் ஓர் அம்சமாக இருந்தது. திணறிக்கொண்டிருந்த ஓர் இராணுவச் சட்டத்தைப் பயன்படுத்தியது. அரசிற்கு ஆபத்து ஏற்பட்டபொழுது மக்களின் பாதுகாப்புரிமைகள் அரசின் பாதுகாப்பிற்கு இடராகுமெனக் கருதி அவைகள் கைவிடப்பட்டன. அரசிற்கு உள்ளிருந்தும் வெளி யிலிருந்தும் ஏற்படும் தீமைகளை அகற்றக்கூடிய தன்மையுடைய தாக சர்வாதிகாரம் இருந்தது. அதாவது அரசிற்கு அடங்காத

1 Liv. ii. Festus p. 198.
2 Momm. Staatsr. ii. p. 53.

குடிமக்களைக் கட்டுப்படுத்தவும் வெளியார் தாக்குதலைச் சமாளிக்கவும் இவ்வதிகாரம் தேவையெனக் கருதப்பட்டது. எனவே, கீழ்படியாத பிளெபியர்களுக்கெதிராக பெட்ரிசியர்கள் பயன்படுத்திய ஆயுதமாகவும் இது இருந்தது. இந்த நிறுவனத்தின் பயன்பாடு சிறிதும் குறையாதவாறு நகருக்குள் செயல்படக்கூடிய இராணுவ அதிகாரம் பின்னர் நீக்கப்பட்டது. இஃது உருவாக்கிய ஆட்சி ஒற்றுமையே இதன் உண்மையான சிறப்பாகும். நிருவாகிகளின் அதிகாரங்கள் பிற்காலத்தில் மோதிக்கொண்டபொழுது ஆட்சி ஒற்றுமையின் நன்மைகள் வெளிப்பட்டன. துண்டாடப்பட்ட அதிகாரத்தின் தீமையில் இப்பதவிக்கான தேவையை முதலில் குறிப்பிடவில்லை. மூல முதல் குடியாட்சி அமைப்பில் சர்வாதிகாரம் முழுமையான அங்கமாக இருந்தது. இதை அனுமதித்த சட்டத்தை மக்கள் மறந்துவிட்டார்கள். நிருவாகிகளுக்கெதிரான மேல் முறையீடுகளை மக்களுக்குப் பெற்றுத் தந்தது வலீரியா சட்டமெனலாம். ஆனால் சர்வாதிகாரியை அமர்த்தியதுபோல் இராணுவச் சட்டத்தை அறிவிக்கவும் கான்சல் அதிகாரம் பெற்றிருந்தார். இதேபோல் பிற்காலத்தில் கான்சல்களுக்கு இராணுவ அதிகாரத்தை செனெட்சபை கவர்ந்து கொண்டதும் மறுக்கப்படவில்லை. சர்வாதிகாரியை நியமித்தது அரசியலமைப்பிற்கு முரணானதெனக்கருத இயலாதெனினும் பெட்ரிசிய நிருவாகியின் வலிமை மிக்க ஆயுதமென இதை மக்கள் கருதினர். எல்லாச் சட்டங்களையும் சிறப்புரிமைகளையும் மீறிச்செயற்பட்ட இவ்வதிகாரத்தைக் குறைக்க பிளெபியர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் வெற்றிபெறவில்லை.

இயல்பு கடந்த நிலை காரணமாகச் சர்வாதிகாரி அமர்த்தப்பட்டார் எனலாம். அரசின் அமைதியையும், சட்டத்தின் செயலாட்சியையும், கொமிசியாவில் மக்களின் கருத்து வெளிப்பட்டதையும் பார்க்கும்பொழுது பெட்ரிசிய குடும்பங்களின் வலிமையை நம்மால் மதிப்பிட முடியும்.

குற்றத்தண்டனைச்சட்டம் அலுவளர்களின் தனியுரிமையாக இருந்தது. இக் காலத்தில் இச் சட்டம் சமயத்தின் நேர்முகக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டுச் சமயச்சார்பற்ற தன்மையைப் பெற்றது. நிருவாகியின் செயற்தொடக்கத்தின் பேரில் குற்றத் தண்டனை வழக்குகள் விசாரிக்கபட்டன. நிருவாகியின் விசாரணைக்குப் பின்னரே வழக்குகள் மக்கள்முன் கொணரப்பட்டன. நிருவாகி கொடுக்கும் உருவில் வழக்குகள் மக்கள்முன் வைக்கப்பட்டன. உரோமானிய மக்கள் சபை தொடக்க காலத்தில் திருத்தும் உரிமை பெற்றிருக்கவில்லை. சபையின்முன்

வைக்கப்பட்ட வழக்குகளை அப்படியே ஏற்கவோ மறுக்கவோ மட்டுமே மக்கள் உரிமை பெற்றிருந்தார்கள். மரண தண்டனை விதிக்கப்பட்ட வழக்குகள் மட்டுமே மக்கள் அவைமுன் வைக்கப் பட்டதாக அறிகிறோம்.[1] ஆனால் இத்தகைய வழக்குகள் நிருவாகி யின் நீதிமன்றத்திலிருந்து மேல்முறையீடாக மக்கள் மன்றத்திற்கு சென்றிருக்குமென உறுதியாகச் சொல்வதற்கில்லை. இத்தகைய மேல்முறையீட்டு உரிமையை அளித்த வலீரியா சட்டம் (lex Valeria)சட்டத்தைமீறி தண்டனை வழங்கிய நிருவாகிக்குத்(கான் சலுக்கு) தண்டனை எதையும் குறிப்பிடவில்லை. கான்சலின் கூட் டாளியாகிய மற்றொரு கான்சலின் தடை ஆணையில் மக்கள் நம் பிக்கைவைத்தார்கள். இரண்டு கான்சல்களும்உடன்பட்டுவிட்டால் இவர்கள் எந்தச் சட்டத்தையும் மீறிச் செயற்படலாம். கான்சல் கள் குற்றத்தண்டனை சட்டத்தின் பாதுகாவலர்களாக இருந் தார்களென்பது தெளிவு. இருவேறு அடிப்படை நோக்கங்களுக் காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இவர்களிடமிருந்தும் சட்டத்திற்கான விளக்கத்தைப் பெற்றிருக்க முடியாது. எனவே இத்தகைய விளக் கத்தைப் பெற மக்கள் சமய முதன்மைக் குருமார்களின் குழுவை நாடியிருக்கவேண்டும். இருந்தபோதிலும், இக் குழுவின் செயற் பாட்டையும் அறிவுத்திறத்தையும் பிற்காலத்தில் உரிமைஇயல் சட்டம் எனப் பெயர் பெற்ற குடும்ப, இறைத்தொடர்புடைய சட்டங்களிலிருந்து அறிய முடிகிறது. முடியாட்சியிலிருந்து உயர் குடிக்கான மாற்றம் உரோமில் ஒரு வல்லாட்சியை நிறுவிற்றென லாம். சமயத்துறைக்கும் சமயச் சார்பற்ற துறைக்கும் தலைவராக இருந்த அரசர் வகுப்பினர்களுக்கிடையே ஒரு சமநிலையை நிறு வினர். ஆலோசகர்களை ஆதரிப்பதைவிட இத்தகைய அரசர் அவர்களை அடக்கியே வைத்தார். மக்களின் உரிமையில் சமயத் தின் திமிரான போக்கிற்கு இவர் ஒரு பயனுள்ள தடையாக இருந்தார். அதனால், அரசரை அகற்றிவிட்டு அந்த இடத்தில் பெட் ரிசியர்களைப்போன்ற உயர்குடியரை அமர்த்திச் செயற்படச் செய்தாலும் இவர்களிடையே இகத்தவர், பரத்தவர் என்ற வேறு பாடு இல்லையெனினும், அரசகாரியங்களும் சமய காரியங்களுக்கு மிடையே மோதல் இல்லையென்றாலும், ஒரு மூன்றாவது வலிமை யாளர் பிரிவு இடம் பெற உதவலாமென்றாலும் இந்தப் பிரிவினர் குற்றவியல் சட்டத்தில் தனியுரிமை பெற்றனர் என்றாலும் நிகரற்ற தொரு நீதிமன்ற வல்லாட்சியைத்தான் பெற்றிருக்க முடியும். இருநூறு ஆண்டுகளுக்கு (கி. மு. 509—304) குற்றத்தண்டனை சட்டநடைமுறைகளும் இச்சட்ட நடவடிக்கையின் உட்பொருளாக இருந்த சட்ட ஆக்கங்களும் பெட்ரிசிய சமய குருமார்களின்

[1] Cicero de. Rep. ii 31, 53

உடைமையாக இருந்தன. பன்னிரு பட்டிகைகளாகச் சட்டம் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்ட பின்னரும் இக் குருமார்களே வினைமுறைகளை ஒழுங்காகவும் நுட்பமாக எடுத்துரைத்து வழி காட்டலாமெனக் கருதியதால் இதற்கென இவர்களில் ஒருவர் தனியார் வழக்குகளில் தலைமை தாங்குவதற்கென அமர்த்தப் பெற்றார். உரிமைச்சட்ட விதிமுறைக் கோட்பாடு கோனாட்சிக் காலத்தில் இருந்ததுபோலவே இருந்ததென்பது உண்மையாகும். எப்படிப்பட்ட சிறப்பு விதிமுறைகள் மேற்கொள்ளப்படவேண்டும் என்பதைப் பிற்காலத்தில் கான்சல்கள் முடிவு செய்தார்கள்; இதன்பின், வழக்காடியவர்களால் தெரிவு செய்து கொள்ளப்பட்ட ஒரு நடுவரால் வழக்கு முடிவு செய்யப்பட்டது. கான்சல்கள் இத் துறையில் பயிற்சி பெற்றிருக்கவில்லையாதலால் குருமார்களில் ஒருவர் இவருக்குத் துணைநின்றார். இவ்வாறு துணை நின்றவர் கட்சிக்காரர்களுக்கு அறிவுரை கூறியதோடு இக் கடைமுறை களுக்கு ஒரு சாட்சியாகவுமிருந்தார்.

இருப்பினும், வெறும் சொல் விளக்கம் செய்பவர்களாக மட்டு மில்லாமல் இக் குருமார்கள், சமயச்சட்டங்களின் காவலர்கள் என்ற முறையில், சட்டத்துறையில் ஒரு தனி இடத்தைப் பெற் றிருந்தார்கள். இந் நிலையின் மரபெச்சத்தைப் பிற்காலத்திய குடியாட்சியில் காணலாம். இச் சட்டத்துறையின் எல்லைக்குள் இவர்கள் நீதிபதிகளாக இருந்தனர். பாவங்களுக்கான பரிகா ரங்களைப் படிப்படியாக நிறைவேற்றும் உரிமையைப் பெற்றிருந் தார்கள்; விழாக்கொண்டாட்ட நாள்களின் தூய்மையைப் பேணினார்கள்; தூய்மையான நாளாக அறிவிக்கப்பட்ட நாளில் செயலாட்சி மேற்கொண்ட கான்சலின் மீது நடவடிக்கை எடுத்துத் தண்டனை, விதித்தார்கள்; புனிதமான இடங்களையும் இடுகாடு களையும் பாதுகாக்கும் கட்டளைகளைப் பிறப்பித்துச் செயற்படுத்தி னார்கள். சூளுரைகள் பயனுள்ளவைகளாக இருக்கவேண்டுமென் பதால் குருமார்கள் இவைகளைக் குறித்துக் கொடுத்தார்கள். பலன் தரக்கூடிய வழிபாடுகளை இவர்கள் சரியாக எழுதிக்கொள் ளுவதற்காக வரிவரியாகப் படித்தார்கள். பெட்ரிசியர்களின் இத் தகைய அதிகாரங்களுக்கு நிகராகப் பிளெபியர்கள் எத்தகைய அதிகாரங்களையும் பெற்றிருக்கவில்லை.

கொமிசியா (comitia) அவையில் வாக்களிக்கும் அதிகாரத்தை பிளெபியர்கள் ஓரளவு பெற்றிருந்தார்கள். அதனால் போர் அறி வித்தல், குற்றத்தண்டனை அதிகாரம் ஆகிய நன்றாக நிறுவப்பட்ட கருத்துகளைத் தவிர மற்றக் கருத்துக்களையொட்டிய இவர்களு டைய வாக்களிக்கும் அதிகாரம் பயனற்றிருந்தது. ஏனெனில் இந்த அவையைக் கூடுமாறு அழைக்கவும் அவையின் கருத்தைப்

பெறவும் மக்கள் பெட்ரிசியக் கான்சல்களையே முற்றிலும் நம்பி யிருக்க வேண்டியிருந்தது. சகுனம் பார்க்கும் பெட்ரிசியர்களின் பக்தி உணர்வுகளின் தலையீடுகளும் இவர்களுடைய வாக்களிப்பைப் பாதிக்கலாம். கான்சல்களின் தெரிவைப் பாதிக்கக்கூடிய சில குறிப்பிட்ட மரபொழுக்கங்களுமிருந்தன. இவைகளைக் கருத்தில்கொண்டு பார்க்கும்பொழுது பிளெபியர்களின் வாக்களிக்கும் அதிகாரம் மிகக் குறைவெனலாம். கொமிசியா சென்சூரியேட்டா அவையில் சொத்துடைய வகுப்பினரே முதன்மையாக இருந்தனர். இந்த அவையில் முதலிரண்டு வகுப்பினரும் வீரர்களும் பெட்ரிசியர்களாக இருந்தனர். இவர்கள் சபையில் பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்றிருந்தனர். (193-ல் 118 வாக்குகள்). சிறிய நில உடைமையாளர்களும் தொழில் வினைஞர்களும் 74 அல்லது 75 வாக்குகளையே பெற்றிருந்தனர். பெரும்பாலான பிளெபியர்கள் பிரதிநிதித்துவம்பெற்றிராததால் ஒரேவாக்கினைப் பெற்றிருந்தார்கள். நூற்றுவர் பிரிவுகளில் இடம்பெறாத வகுப்பினர் வேறிடங்களில் பிரதிநிதித்துவம் பெற்றிருந்தார்களா அல்லது பெட்ரிசியர்களும் பிளெபியர்களும் பிரதிநிதித்துவம் பெற்றிருந்த பிறிதொரு சபை உண்மையான அதிகாரம் பெற்றிருந்ததாவென்பதும் ஆய்வுக்குரிய கருத்துகளாகும்.

குடியாட்சியின் முதல் மூன்று நூற்றாண்டிற்குள் பிளெபியர்கள் கொமிசியா குயுரியேட்டாவில் சேர்த்துக்கொள்ளப் பெற்றார்கள் என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.[1] சொத்துரிமையைப் பொறுத்தவரை இரு வகுப்பினருக்கிடையில் சமத்துவம் நிலவியதும், பெட்ரிசியர்களையும் பிளெபியர்களையும் கொண்ட கூட்டமே மக்கள் என்பதை சென்சூரியேட் அவை வலியுறுத்தியதும் இம் மாற்றத்திற்கு வழிகோலியது.

இம் மாற்றம் நிகழ்ந்தபொழுது இது படிப்படியாகவே நிகழ்ந்தது. பிளெபியர்கள் இந்த அவையில் சேர்த்துக்கொள்ளப்பட்டது இந்த அவைக்கு ஜனநாயக உருவைக் கொடுத்தது. ஏனெனில் இச் சபையில் வாக்களிக்க நிலவுடைமைத் தகுதியோ செல்வ வளத்தகுதியோ வற்புறுத்தப்படவில்லை. ஆனால், எல்லாக்குடியினருக்கும் பொதுவான குல(Guria) உறுப்பினர்த் தகுதி மட்டுமே வலியுறுத்தப்பட்டது. ஆனால், பிளெபியர்கள் செஞ்சூரியேட்டா சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்டபொழுது குயுரியோ (குல அமைப்பு) சிறப்பொழிந்து மறைந்தது. பெட்ரிசியர்கள் மட்டுமே இச் சபையில் (குயுரியேட்டா) உறுப்பினராக இருந்தவரையில் குயுரியேட்டா சட்டம் இயற்றும் அதிகாரம் இதன் குறிப்பிடத் தக்க அதிகாரமாக இருந்தது. கொமிசியா செஞ்சூரியேட்டாவில்

[1] Momm. Staater. iii. p 93

பெட்ரிசியர்கள் பெருமளவினராக இருந்தது இரு சபைகளுக் கிடையேயான மோதலைத் தவிர்த்ததெனலாம். ஆனல், செஞ்சுரி யேட்டாவாகக் கூடியிருந்த பெட்ரிசியர், பிளெபியர்களின் முடிவை குயுரியேட்டாவில் கூடியிருந்த பிளெபியர்கள் மாற்றி யிருக்கக்கூடி ஒரு நிலை எப்பொழுதுமே ஏற்பட்டதில்லை.

இந்த நிலையைக் கருத்தில் கொள்ளும்பொழுது நிருவாகி களின் அதிகாரத்தைக் குறைப்பதற்கு உரோமானிய அரசியல மைப்பின் வளர்ச்சிப் போக்கு ஒரு முயற்சியாகும். பிளெபியர் களின் போராட்டமும் சமத்தும நிலையை அடைவதை நோக்க மாகக் கொண்டிருந்தது. இந்த இரண்டு போராட்டங்களும் தனித் தனியே நிகழாமல் இணைந்தே நிகழ்ந்தன. ஏனெனில், இக் காலத் தில்(கி.மு. 494—28)பெட்ரிசியர்களே நிருவாகிகளாக இருந்தனர். இவை அரசியல் உரிமைகளைக் குறைப்பதற்கு அல்லது பெறுவதற் கான முயற்சியாக இருக்கவில்லை! போராட்டத்தின் தொடக் கத்தில் பிளெபியர்களின் நோக்கம் உயர்வாக இராமல் தற்காப் பாகவே இருந்தது. இவர்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பது முதல் முயற்சியாக இருந்ததேயன்றி இந்த வகுப்பினருக்கில்லாத அரசியல் அதிகாரத்தைப் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்ப தில்லை.

பிளெபியர்களின் சமூகப் போராட்டம் தொடக்கத்தில் இரண்டு பிரச்சினைகளை மையமாகக் கொண்டிருந்ததென மரபுகள் கூறுகின்றன. அரசின் உடைமையான பொது நிலங் களைப் பெற்றிருத்தலும், கடன்பட்டவர்—கொடுத்தவர் பற்றிய சட்டம் ஆகிய இரண்டும் பிளெபியர்களின் கடுமையான பிரச்சினை களாக இருந்தன. இவ்விரண்டும் ஒன்றோடொன்று தொடர் புடையனவாக இருந்தன. ஏனெனில், நில ஒதுக்கீடு என்பது கடன் நிவாரணமாக இருந்தது. ஆனல், பொது நிலங்கள் பற்றிய போராட்டம் தனிப்பட்டவர்களால் நடத்தப்பட்டதாக இருந்தது. இப் போராட்டத்தால் நிரந்தர விளைவுகள் ஏதும் ஏற்படவில்லை. இதை ஓர் அரசியல் போராட்டம் என்பதைவிட ஓரளவு அரசிய லமைப்புத் தொடர்புடைய போராட்டமெனக் கருதலாம். முந்தைய பொது நிலங்களின் ஒதுக்கீடு முறைகள் கருதிப்பார்ப் பதற்குரியன. ஏனெனில், பிளெபியர்களின் மனக்குறைகளுக்கு நில ஒதுக்கீடு முறை ஒரு காரணமாக இருந்ததென்பதை மறுக்க முடியாது. முதல் பெரிய அரசியல் சீர்திருத்தத்திற்கு இஃது ஓர் உட்கருத்தாகவும் இருந்திருக்கிறது. எதிரிகளிடமிருந்து வென்று பெற்ற நிலத்தைச் சில சமயங்களில் வறிய குடிமக்களுக்குள் சிறிய துண்டுகளாகப் பிரித்து ஒதுக்கீடு செய்யப்பட்டன. பிற்காலத்தில்

இந் நிலங்கள் அரசால் விற்கப்பட்டன. இவ்விரண்டு நிகழ்வு களிலும் நிலம் தனியுடைமையாயிற்று. ஆனால், குடியாட்சியின் தொடக்கத்தில் வென்று கைப்பற்றிய நிலத்தில் ஒரு பெரும் பகுதியை அரசு நிலமாக்கும் வழக்கம் வளர்ந்துவந்தது. இப் பெரும்பகுதி நிலம் மேய்ச்சல் தரிசாகவும் போரால் பாழாக்கப் பட்டதாகவும் இருந்தது. இந் நிலத்தைப் பண்படுத்திப் பலனை அனுபவிப்பவர்கள் அரசிற்கு விளைபொருளில் ஐந்தில் ஒரு பகுதி, அல்லது பத்தில் ஒரு பகுதியைச் செலுத்த அனுமதிக்கப் பட்டார்கள். இத்தகைய அரசு நிலங்களின் பெரும்பகுதி ஒரு காலத்தில் அரசருக்குரியதாக இருந்திருக்கலாம். அரசரைச் சார்ந்திருந்தவர்கள் இந் நிலத்தைப் பயன்படுத்தியிருக்கலாம். பிளெபிய வகுப்பினரில் கீழ்மட்டத்தில் இருந்தவர்களாக இவர் கள் இருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. ஆனால், புதிய சூழ்நிலையில் இவை அனைத்தும் அரசின் உடைமைகளாக இருந்தன. இக் கருத்தும் உறுதி பெற்றது. பெட்ரிசிய உடைமையாளர்களுக்கு மட்டும் நிலம் தனியுடைமையாக இருந் தது. போரில் வெற்றிபெற்றவர்கள் மட்டுமே வென்று கைப்பற் றிய இடங்களை உரிமையாக்கிக் கொள்ளலாம் என்ற கருத்தை யொட்டி பெட்ரிசியர்கள் இவ்வுரிமை கொண்டாடினார்கள். ஆனால், இப்பொழுது இவ்வுரிமையை ஏற்க இயலாது. ஏனெனில், பிளெபியரும் போருக்குச் சென்று நிலங்களை வென்று கைப்பற்றி வந்துள்ளார்கள். ஏனவே, இவர்களும் வென்று பெற்ற நிலத்தின் மீது உரிமை கொண்டாட முடியும். இக் கருத்தை மெய்யாகவே செயற்படுத்தியிருந்தாலும் சமூகப் பிரச்சினையை முழுமையாகத் தீர்த்துவிட முடியாது. வென்று கைப்பற்றிய நிலங்களில் பங்கு பெற முடியாத ஊழியர்கள் இதில் நியாயமாகவே பங்கு பெற் றிருக்கவியலாது. ஆனால், சிறிய பிளெபிய குடியானவர்கள் இதனால் பயனடைந்திருக்கலாம். ஏனெனில், இப்படிப்பட்ட வருக்கு இத்தகைய பயன் தேவைப்பட்டது.

ஏனெனில் சிறிய நிலச் சொந்தக்காரர்களே மிகக் கேவலமான நிலையில் இருந்தனர். பெட்ரிசியர்களின் சார்பில் இருந்தவர்கள் அல்லது விடுதலை பெற்ற அடிமைகளைவிட இவர்களின் நிலை மோசமாக இருந்தது. இவர்களுக்கு எந்தவிதப் பாதுகாப்பும் அளிக்கப்படவில்லை. இவர்களுடைய அவலநிலைக்குக் கடன்பட்டவர்—கொடுத்தவர் பற்றிய சட்டமே காரணமாகும் என்பர். இத்தகைய சட்டம் பழைமையான பெட்ரிசிய சமூகத்தில் காணப்படவில்லை. பிளெபிய வகுப்பினரிடையே இது தோன்றியது. இதை ஏற்றுப் பயன்படுத்திக் கொண்ட பெட்ரி சியர்கள், பிளெபியர்களைப் பெருங்கொடுமைக்குள்ளாக்கினார்கள்.

கடனுக்காகக் கடன்பட்டவனை அடிமையாக்கிக் கொள்ளுவது நடைமுறையாக இருந்தது. குறிப்பிட்ட காலத்திற்குள் கடனைக் கொடுக்கத் தவறிவிட்டால் கடன்பட்டவன், கடன்கொடுத்த வனுக்கு என்றென்றும் தன் சேவைகளை விற்கவேண்டும். குறிப்பிட்ட காலக்கெடு கடந்ததும் கடன்பட்டவனும் அவனு டைய குடும்பமும் கடன் கொடுத்தவனின் அதிகாரத்திற் குட்படவேண்டும். இவனுடைய உழைப்பால் கடனைத் தீர்க்கும் வரை இவன் கடன் கொடுத்தவனுக்கு அடிமையாக வேண்டும். இத்தகைய சூழ்நிலைகளில் கடனைக் கொடுக்க முடியாமற் போகலாம். செல்வமிக்க பெரிய நிலக்கிழாரின் குடும்பத்தோடு சிறிய நிலச் சொந்தக்காரர்கள் சார்ந்து வாழவேண்டிய நிலை யேற்பட்டது; பெரிய நிலக்கிழாரின் தயவிற்கும் விருப்புவெறுப்பு களுக்கும் கட்டுப்பட்டு வாழவேண்டியிருந்தது. இத்தகைய நிலையை உருவாக்க எத்தகைய சட்டநடவடிக்கைகளும் தேவைப் படவில்லை. உரோமன் சட்டம் அடிமைப்படுத்துவதைத் தடை செய்ததெனினும், கடனுக்காக ஒருவனை அடிமையாக்குவது தொடர்ந்திருந்தது. இப்படிப்பட்ட அடிமை தொடர்ந்து உரிமை பெற்ற ஒரு நகரினனாக இருந்து வந்தானென்றாலும் உரிமைபெற்ற அடிமையின் நிலையை மற்றொரு அடிமையின் நிலையிலிருந்து வேறு படுத்திக் காட்டுவது கடினமாகவே இருந்தது.

ஒப்பந்தக் கட்டுப்பாட்டால் உண்டாக்கப்பட்ட கடனைத் தவிர முற்காலத்தில் பிளெபியர்களின் சட்டம் எந்தக் கடனையும் ஏற்றுக்கொண்டதாகத் தெரியவில்லை. ஆனால், உரோமானிய வாணிகம் வளர்ச்சியடைந்தபொழுது இந்த வரையறைகள் பின்பற்றப்படவில்லை. வெறும் வாய்ச்சொல்லில் அமைந்த பெட்ரிசியமுறைக் கடன்களுக்கும் நுட்பமான விதிமுறைகள் நீட்டிக்கப்பட்டன. பன்னிரு பட்டிகைகளிலிருந்து இதுபற்றிய விதிமுறை வடிவம் தெரிகிறது. கடன்கொண்டது நிரூபிக்கப் பட்டால் அல்லது ஒத்துக்கொள்ளப்பட்டால், கடனைக் கொடுக்கக் கடன்பட்டவருக்கு 30 நாள்கள் தவணை கொடுக்கப்பட்டன. காலக் கெடுவிற்குள் கடன் கொடுக்கப்படவில்லையென்றால் கடன் கொடுத்தவன், கடன்பட்டவனைக் கான்சல் முன் கொண்டுவரவேண்டும். இந்தக் கடனுக்காக வழக்காட ஒருவரு மில்லையென்றால் கடன்பட்டவன், கடன் கொடுத்தவனிடம் அடிமையாக ஒப்படைக்கப்படுகிறான். இவனை வீட்டிற்குக்கொண்டு போய்த் தளையிட்டு வைக்கலாம். ஆனால், இவனுக்கு நாள்தோறும் ஒரு பவுண்டு தானியம் கொடுக்கவேண்டும். இதிலிருந்து 60 நாள் கள் இடைவெளிக்குள் கைதியை மூன்று நீதிமன்ற நாள்களில் நீதி பதிமுன் கொண்டு போக வேண்டும். கடைசி நாளில் கைதியின்

விதி நிருணயிக்கப்படும். இதற்குப் பின் இவனுடைய அடிமை நிலையும் போய்விடும். கடன் கொடுத்தவன் இவனைக் கொன்று விடலாம்; அல்லது டைபர் ஆற்றுக்கப்பால் ஓர் அடிமையாக விற்று விடலாம். கடன்கொடுத்தவர்கள் ஒருவருக்கு மேற்பட்டிருந்தால் கடன்பட்டவனின் உடலை இவர்கள் சமமாகப் பங்குபோட்டுக் கொள்ளலாம்; பங்கிற்கு அதிகமாகத் தசையைப் பெற்றவருக்குப் பன்னிரு பட்டிகைகள் காப்புரிமை அளித்தன. நிரந்தரச் சிறை தண்டனைக்கு மாறாக மரணதண்டனையே சிறந்ததாக இருந்திருக்க லாம். மரணதண்டனைக்குப் பதிலாக சித்திரவதைக்குட்படுத்திச் சிறிதுசிறிதாகக் கொல்லும் முறை மிகக் கொடியதாக இருந்தது. இக் கடன் சட்டத்தைக் கடுமையாகவும் கொடுமையாகவும் பயன் படுத்தியதே பிளெபியர்களின் முதல் எதிர்ப்புக்குக் காரணமாக இருந்தது. உரோமைப் பாதுகாப்பதற்காகப் படைகள் இடை யராது போரில் ஈடுபட்டிருந்தன. படைச்சேவையில் ஈடுபட்டிருந்த சிறுநிலச்சொந்தக்காரர்கள் தலத்தில் இல்லாதபோது நிலத்தைத் தரிசாகப் போடவேண்டிய நிலை ஏற்பட்டது. போரிலிருந்து திரும் பியதும் இவர்கள் உடலைப் பணயம் வைத்து உயிர்வாழ வேண் டியதாயிற்று. எனவே படை திரட்டுவதற்கெதிராக வேலை நிறுத்தம் செய்வதே இதற்கான பரிகாரமாகத் தோன்றியது. இதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன. ஏற்கெனவே, கி. மு. 495-ல் ஒரு கலகம் ஏற்பட்டது. கான்சலின் உறுதி மொழிகளால் இக் கலகம் ஓய்ந்தது. கடன்பட்டுத் தண்டனைக் குள்ளாகியிருப்பவன் போர்ச் சேவைக்கு விடுவிக்கப்பட வேண்டுமெனவும், படைவீரன் போரில் ஈடுபட்டிருக்கும் பொழுது அவனுடைய உடைமைகளை எவரும் கைப்பற் றுவதோ, பணயமாகப் பெறுவதோ தடைசெய்யப்படுமெனவும் கான்சல் அறிவித்தார். சர்விலியஸின் (Servilius) இத் திட்டத்தை எதிர்க்கும் வகையில் இன்னொரு கான்சலாகிய அப் பியஸ் (Appius) கடன்சட்டத்தைக் கடுமையாகச் செயற்படுத் தினர். இதை எதிர்த்து முறையிட்டபோது தம் கூட்டாளியின். நடவடிக்கைகளைத் தடைசெய்யாமல் சர்விலியஸ் இருந்துவிட்டார்; இதிலிருந்து பிளெபியர்களின் சார்பில் கான்சல்களின் உதவி யைப் பெறமுடியாதென்பதைத் தெரிந்துகொண்டார். எனவே, நம்பிக்கை இழந்த நிலையிலிருந்த பிளெபியர்கள் படைதிரட்ட லுக்குக் கடுமையான எதிர்ப்புத் தெரிவித்தார்கள். இவ் வெதிர்ப்பைச் சமாளிக்க பெட்ரிசியர்கள் ஒரு சர்வாதிகாரியை அமர்த்தினர்கள். மறுபடியும் வோல்சியன்களையும் (Volscians) சாபைன்களையும் (Sabines) எதிர்க்கப் படைகள் போர்க்களம் சென்றன.[1] ஆனல் வெற்றி கிட்டிய பின்னரும் மற்றொரு போரை

[1] Liv. ii. 23

எதிர்பார்த்துப் படைகள் கலைக்கப்படவில்லை. உரோமிலிருந்து சென்ற பிளெபியர் படை திடீரென்று ஒரு குன்றை நோக்கிச் சென்றது. இக் குன்றின் உச்சியில் கூடிய பிளெபியர்கள் ஒரு பிரமாணம் எடுத்துக்கொண்டார்கள். போருக்கு முன் சில குழுக்களிலும் கூட்டங்களிலும் ஒரு திட்டம் உருவாக்கப்பட்டு இப்பொழுது நிறைவேற்றப்பட்டது. இவர்களுடைய குறைபாடுகளை விவாதிக்கும் பொருட்டு பிளெபியர்கள், இவர்களுக்குள் சில கூட்டங்களை நடத்தினார்கள். தலைமை ஏற்கத் தக்க பெரும் அதிகாரங்களோடு கூடிய பிளெபிய நிருவாகிகள் இல்லாதது பெரும் குறையாக இருந்தது. போராட்டத்திற்கு இவர்கள் இப்பொழுது தயாராக இருந்தார்கள். இரு கான்சல்களின் அதிகாரங்களையும் எதிர்த்துப் போட்டியிட இரண்டு பிளெபிய நிருவாகிகளைத் தெரிவு செய்தனர். இவர்களும் படைப்பதவிக்குரிய டிரிபியூன்கள்[1] என்ற பெயர்களைப் பெற்றார்கள்; பிளெபியர் ஒருவருக்கு எதிராக கான்சல்கள் பிறப்பிக்கும் கட்டளையை நிறுத்திவைக்கும் அதிகாரத்தை டிரிபியூன்கள் பெறவேண்டுமென்பது பிளெபியரின் கோரிக்கையாகும். பெட்ரிசியரின் அரசில் வசிக்க இதை ஒரு நிபந்தனையாக பிளெபியர் வெளியிட்டனர். ஆனால், அரசிடம் இவர்கள் நம்பிக்கை வைக்காமல், அரசர் வெளியேற்றப்பட்டபோது எடுத்துக்கொண்ட பிரமாணத்தைப் போல் இவர்களுடைய நிருவாகிகளை அவமதித்தவர்களையும் ஊறு விளைத்தவர்களையும் அழிப்பதெனப் பிரமாணமொன்று எடுத்துக்கொண்டார்கள். புதிய நிருவாகிகளையும் இவர்களுடைய பதவிக்குரிய அதிகாரங்களையும் ஒரு சட்டத்தால் (lex Centuriata) ஏற்றுக்கொள்ளப்பட்டது. பிளெபியர்கள் அரசிலிருந்து பிரிந்துசென்ற கி. மு. 494ஆம் ஆண்டில் இச் சட்டம் நிறைவேறியது. கான்சல்களின் பதவியை மாதிரியாகக் கொண்டு டிரிபியூன் (Tribune) பதவியும் உருவாக்கப்பட்டது. இவர்கள் தொடக்கத்தில் இருவராக இருந்தனர். ஒருவரின் நடவடிக்கையை மற்றொருவர் தடைசெய்யும் அதிகாரத்தை இவர்கள் பெற்றிருந்தார்கள். இவர்கள் தொடக்கத்திலிருந்தே பிளெபியர்களின் நிருவாகிகளாக இருந்தமையால் பிளெபியர்களைத் தவிர வேறு எவரும் இப் பதவி வகிக்க முடியாது. இவர்களும் பிளெபியர்களின் அவையினால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இருப்பினும், அந்த அவையின் படைத்துறைப் பண்பு தொடர்ந்து இருந்து வரவில்லை. டிரிபியூன்களை அமர்த்துவதற்கான கூட்டங்களில் வாக்களிப்பதற்கான அடிப்படை பிரிவு குயூரியாவாக இருந்தது. பிளெபியர்களும் சில காலத்திற்கு இதன் உறுப்பினர்களாக இருந்தனர். பிளெபியர்களின் அவை கொன்சிலியம்

[1] Uarro L.L.v. 81.

பிளெபிஸ் குயூரியாட்டிம் (Concilium Plebis Curiatim) என்று வழங்கப்பட்டது.

தொடக்கத்திலிருந்தே டிரிபியூன்கள் இரண்டு அதிகாரங்களைப் பெற்றிருந்தார்கள். பிளெபியர்களைப் பாதுகாக்கும் வகையில் அனைத்து மக்கள்மீதும் இவர்கள் கட்டுப்பாடு செலுத்தினர்கள். பிளெபிய சமூகத்தினரிடையே இவர்கள் அதிகாரம் செலுத்தும் நிலையில் இருந்தார்கள். தடையாணை விதிக்கும் உரிமையில் இவர்களின் முதல் அதிகாரம் வலியுறுத்தப்படுவதைக் காணலாம். பிளெபியர்களின் அவையிலிருந்து தீர்மானங்களைப் பெறுவதில் இரண்டாவது அதிகாரத்தைக் காணலாம். நிருவாகியின் கட்டளையினல் பாதிக்கப்பட்ட பினெபியர்களுக்கு உதவும் பொருட்டுத் தடையாணையைப் பயன்படுத்திக் கட்டளையை நிறுத்தி வைத்தலை இரண்டாவது அதிகாரத்திலிருந்து அறியலாம். முதலில் இந்த அதிகாரம் வரையறைப்படுத்தப்பட்டதெனினும் பின்னர் இவ்வுதவியளிக்கும் அதிகாரம் மக்கள் அனைவருக்கும் நீட்டிக்கப்பெற்றது. கான்சலின் முழுமையான அதிகாரத்தை எதிர்க்கும் வகையில் டிரிபியூன் பதவி உருவாக்கப்பட்டது.[1] ஆயினும், இந்த அதிகாரத்தை டிரிபியூன் நேரிடையாகச் செயற்படுத்தவேண்டுமென்று இவர்மீது சில கடமைப்பொறுப்புகளைச் சுமத்தியது. நகர எல்லைகளுக்கு வெளியே டிரிபியூன் இரவில் தங்க முடியாது; இவருடைய வீட்டின் கதவுகள் இரவும் பகலும் திறந்தே இருந்தன. பிளெபியர்களின் உதவிக் கோரிக்கைகளை ஏற்றுச் சமாளிக்கும் திறமை இத் தலைவர்களுக்கு இல்லாததால் இவர்களுடைய எண்ணிக்கை முதலில் (கி. மு. 471) ஒன்றிலிருந்து நான்காக உயர்த்தப்பட்டது. பின் கி. மு. 449-க்கு முன் இந்த எண்ணிக்கை பத்தாக உயர்ந்தது.[2] தொடக்க முதலில் இவர்களின் எண்ணிக்கை ஐந்தென மற்ற அறிக்கைகள் குறிப்பிடுகின்றன.[3] இவர்களில் இருவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும் மூவர் இவர்களால் தெரிவு செய்யப் பெற்றதாகவும் குறிப்பிடப் படுகிறது. கி. மு. 457-ல் எண்ணிக்கை பத்தாக உயர்ந்ததென்று லிவியும் டயோனிசசுவும் குறிப்பிடுகின்றனர்.[4] இவர்களின் எண்ணிக்கையில் ஏற்பட்ட மாற்றங்கள் செஞ்சுரியேட்டா அவையாலும் செனெட் சபையாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

கான்சல்களின் மீதான கட்டுப்பாட்டைச் செயற்படுத்துவதற்குச் சில வழிகள் இல்லையென்றால் இக் கட்டுப்பாடு முற்றிலும்

[1] Cic de. Rep. ii 33, 58
[2] Diodor xi, 68
[3] Ascon i c.p. 93 Liv. ii. 33
[4] Liv. iii. 30

பயனற்றதாகிவிடும். கட்டாயப்படுத்தும் (Coercitio) அதிகாரம் டிரிபியூன்களுக்கு இல்லாதிருந்ததால், கடன் சட்டங்களைக்கொண்டு செலுத்துவதிலும் பிளெபியர்களைப் படையில் சேரும்படி அழைப்பதிலும் கான்சல்கள் தம் தடைவாக்கை ஒதுக்கி வைத்திருப்பார்கள். இத்தகைய சட்டமீறல்களை மக்கள் அவை தண்டித்திருக்கலாமென நாம் எதிர்பார்க்கலாம். ஆனால், நிருவாகி பற்றிய உரோமானியரின் கருத்திற்கு இது முரணாகும். ஒவ்வொரு நிருவாகியும் கட்டளைகளைச் செயற்படுத்தும் அதிகாரம் பெற்றிருந்தார். முறையீட்டுரிமை அல்லது மற்றொரு கான்சலின் தடைவாக்கு ஆகியவைகளால் இவருடைய அதிகாரம் குறைக்கப்பட்டது. இந்த அதிகாரம் டிரிபியூன்களுக்கு மறுக்கப்படவில்லை. கான்சலின் தடைவாக்களிப்பு உரிமையைப்போல் டிரிபியூன்கள் கான்சல்களுக்கு எதிராகக் கட்டாயப்படுத்தும் அதிகாரத்தைச் செயற்படுத்தலாம். டிரிபியூன்களுக்குக் கொடுக்கப்பட்ட உடல் உயிர் பாதுகாப்பை பிளெபியர்கள் உறுதி செய்ததோடு மக்களும் ஏற்றுக்கொண்டார்கள். இதனால், இவர்களை எதிர்ப்பது பயனற்றுப்போயிற்று. ஏனெனில், கட்டாயப்படுத்துவதற்கான கருவிகளாகிய, கைது செய்தல், சிறைப்படுத்தல், தண்டம் விதித்தல், மரண தண்டனையளித்தல் ஆகியவைகளை இவர்கள் பிளெபியர்களின் சார்பில் பயன்படுத்தலாம்.

விசாரணையின்றித் தண்டிப்பதையும் ஒரு வரம்பிற்கு மேற்பட்டுத் தண்டம் விதிப்பதையும், கசையடி கொடுப்பதையும், முறையீட்டிற்குட்பட்டு மரண தண்டனை விதிப்பதையும், மக்கள் அவை விசாரணையில் இவர்களை (டிரிபியூன்களை) உட்படுத்துவதையும் இக்கட்டாயப்படுத்தும் (Coercitio) அதிகாரம் குறிப்பிடுகிறது. எனவே, இவருடைய தடையாணையின் விளைவாக நீதிசார்ந்த அதிகாரமும் தோன்றியது. இதை டிரிபியூன்களின் தேவையான அதிகாரமெனக் கருதியபொழுது பெட்ரிசியர்கள் இதை எதிர்த்தனர்; ஏனெனில் பிளெபியர்களின் சட்டம் பெட்ரிசியர்களுக்கு நீட்டிக்கப்பட்டதெனவாதித்தனர்.[1] இவ்வெதிர்ப்புப் பொருளற்றதாகும்; ஏனெனில் சட்டமீறலைத் தண்டிக்குமதிகாரமின்றி பிளெபியர்களுக்கு உதவும் அதிகாரம் இருந்திருக்க முடியாது. எனவே, பிளெபியர்களின் உரிமைகள் மீறப்பட்டால் அவைகளைப் பாதுகாக்கக் கட்டாயப்படுத்தும் அதிகாரம் பயன்படுத்தப்பட்டது. அத்தகைய மீறல்கள் டிரிபியூன்களின் மாண்பையும் காப்பையும் மீறிய செயல்களாகக் கருதப்பட்டன; டிரிபியூனின் கட்டளையை மீறி ஒருவருக்குச் செய்யப்பட்ட தீங்குகூட இவர் வழியாக பிளெபியர்களுக்குச் செய்யப்பட்ட தீமையாகக் கருதப்பட்டது. இது சமூகத்

[1] Liv. ii. 35.

தின் மற்றப் பிரிவினரைப் பாதித்ததாகத் தெரியவில்லை. எனவே, மேல்முறையீடு இல்லாத வழக்குகளில் டிரிபியூன் தீர்ப்பு வழங்கிய பொழுது இவர் அவ்வழக்கை பிளெபியர்களின் அவைமுன் கொண்டுவந்ததாகக் கருதப்பட்டது.

பிளெபியர்களைக் கலந்துகொண்டு நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் டிரிபியூன்களுக்கிருந்தது. டிரிபியூனேட் பதவி ஏற்பட்ட பொழுது இந்த அதிகாரத்தைப் பற்றி நினைக்கவில்லை. உதவியளிக்கும் அதிகாரத்தின் விளைவாக இது கருதப்பெற்றது. இந்த அதிகாரத்தை இவர்கள் பெற்றிருந்தது பெட்ரிசிய நிருவாகிகளின் அதிகாரத்தின் வரம்பைக் கடப்பதாக இருந்தது. ஏனென்றால் பிளெபியர்களைக் கூடுமாறு அழைப்பது மக்கள் தொகையில் பெருமளவினரைக் கான்சல்களிடமிருந்து அழைப்பது போலாயிற்று. இரு வேறு நிருவாகிகள் ஒரே மக்களிலிருந்து இரண்டு அவைகளுக்கு அழைப்பாணை விடுப்பது அதிகார மோதலுக்கு ஆதரவளித்தது.

கான்சல்களின் தலையீடு தவிர்க்கப்பட்டாலன்றி பிளெபியர்களோடு செயலாற்றும் டிரிபியூனிய உரிமையைப் பெற்றிருக்க முடியாது. இந்த உறுதிப்பாட்டை பிளெபியர்களின் தீர்மானம் கி. மு. 492-ல் நிறைவேற்றியது. இந்தத் தீர்மானம் இப் பதவி நிறுவப்பட்ட இரண்டாண்டிற்குப்பின் நிறைவேற்றப்பட்டது. செஞ்சுரிகளின் சட்டமொன்று இத் தீர்மானத்திற்கு ஒப்பிசைவு அளித்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது; இச்சட்டத்தின்படி ஒரு டிரிபியூன், பிளெபியரவையில் பேசும்பொழுது இவருக்கெதிராகப் பேசவோ, இடைமறிக்கவோ கூடாது. இக் குற்றம் செய்பவர்கள் மீது தண்டம் விதிக்கலாம்; பிணையம் கேட்கலாம்; பிணையம் கொடுக்க முன்வரவில்லையென்றால் குற்றமிழைத்தவருக்கு மரண தண்டனை விதிக்கலாம்; சொத்துகளைப் பறிமுதல் செய்து கடவுளர்களுக்குக் கொடுக்கலாம்; தண்டத்தொகைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டால் தீர்ப்பை மக்கள் அளிப்பர்.

பிளெபியர்களோடு செயற்படும் டிரிபியூன்களின் உரிமைக்கு மற்றொரு இயல்பு இருந்தது. பிளெபியர்களின் நலன் கருதி இவர்களுடைய அவையில் நிறைவேறிய தீர்மானங்களை வெளிக்கொணர இந்த உரிமை பயன்பட்டது. இந்த அவைக்கு ஒரு கழகத்தின் தன்மையைக் கொடுக்கவும் இது பயன்பட்டது. இக் கழகம் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் இருந்துகொண்டு இதன் உறுப்பினரைக் கட்டுப்படுத்தும் வகையில் விதிகளை வரையலாம். இந்த நிறுவனத்தின் தீர்மானங்கள் இதனைப் பொறுத்ததாக இருந்தவரையில், இவைகள் பொதுச்சட்டத்தை மீறவில்லை.

இவைகளை எல்லா உறுப்பினர்களும் தாமாகவே விரும்பியேற்றுக் கொண்டார்கள். இவைகளை மேல் அதிகார நிறுவனங்கள் முறையாக ஏற்கத் தேவையில்லை. அதனால், சில சமயங்களில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை பிளெபியர்களால் செயற்படுத்த முடியவில்லை. கான்சல்கள் தலைமை தாங்கிய சட்டமியற்றும் அதிகாரமுடைய கொமிசியா செஞ்சுரியேட்டாவிற்கு இத் தீர்மானங்கள் விண்ணப்பங்களாகச் செல்லும். இந்த நடைமுறைக்கு ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம். இதுவரை அரசின் உடைமையாக இருந்த அவன்டைன் குன்றை (Aventine Hill) பிளெபியர்களுக்கு ஒதுக்கி வழங்கவேண்டுமென்று கி. மு. 456-ல் நிறைவேற்றப்பட்ட தீர்மானமொன்றை டிரிபியூன் ஒருவர் வெளிக்கொணர்ந்தார். இதை ஒரு விண்ணப்ப வடிவில் உருவாக்கி கான்சல்கள் முன்னும் செனெட் சபையின் முன்னும் வைத்து, கொமிசியா செஞ்சுரியேட்டாவின் இசைவைப் பெற்றுச் சட்டமாக்கித் தரவேண்டுமென கேட்டுக்கொண்டார்.[1] சமுதாயம் அனைத்தையும் பாதித்த விவகாரங்களைப் பற்றிய தீர்மானங்களுக்கு இதே நடைமுறைகள் பின்பற்றப்பட்டன. பின் கி. மு. 287-ல் முதன்முறையாக பிளெபியர்களின் தீர்மானங்களுக்குச் சட்டத்தின் நிலையளிக்கப்பட்டது. தீர்மானங்களை வரைவதில் கொமிசியா எப்படி கான்சல்களைப் பற்றி நின்றதோ அப்படியே பிளெபியர்களும் டிரிபியூன்களை நம்பி இருந்தார்கள். நிருவாகிகள் கொணரும் தீர்மானங்களுக்கு அவையினர் ஏற்பு அல்லது எதிர்ப்பைத் தெரிவிக்கமுடியும். டிரிபியூன் பதவியிலிருந்து விலகுமுன் அடுத்துப் பதவிக்கு வரவேண்டியவர்களை நியமித்து இவர்களின் பெயர்களை பிளெபியரவை முன் வைத்தார். குயூரியா அடிப்படையில் வாக்களிப்பு நடந்தது: செஞ்சுரி அடிப்படையிலன்று குடும்பத் தலைவர்களின் அதிகாரம் இங்கு இடம் பெறவில்லை; நடைமுறைகளின் செல்திறனுக்குச் சகுனம் பார்த்தலும் தேவையற்றுப் போயிற்று. இருப்பினும், பிளெபியர்களின் நடவடிக்கைகளுக்குப் புனிதத்தன்மை அளிக்கும் பொருட்டு டிரிபியூன்கள் தனிமுறையில் சகுனம் பார்க்கும் உரிமையைப் பயன்படுத்தினர்கள்.

டிரிபியூன்கள் அமர்த்தப்பட்ட ஆண்டில், பிளெபியர்களின் நிருவாகிகளுக்கு இரு உதவியாளர்கள் அமர்த்தப் பெற்றூர்கள். கான்சல்களோடு குவெஸ்டர்கள் கொண்டிருந்த தொடர்பைப் போலவே இவர்களும் டிரிபியூன்களோடு தொடர்பு கொண்டிருந்தார்கள். இவர்களுடைய பணிகள் வரையறுக்கப்படவில்லை. ஆனல், டிரிபியூன்களின் அதிகாரம் நிலைபெற்றபொழுது இவர்களுக்குக் குற்றவியல் விசாரணை, நிதியியல் ஆகிய பொறுப்புகள்

[1] Dionys x, 31, 32.

அளிக்கப்பட்டன. சிரிஸ் (Ceres) கோவிலில் பிளெபியர்களின் ஆவணங்களை இவர்கள் வைத்துப் பேணினார்கள். இதுபற்றியோ இவர்களுடைய பெயர் ஈடில் (Aedile)[1] என வழங்கப்பெற்றது. சிரிஸ் கோவிலில் இருந்த ஒரு பதவியின் பெயரிலிருந்து இப் இப் பெயர் வந்திருக்கலாமென்பது வாரோவின் கருத்தாகும். இதை மாம்சனும் ஆதரிக்கிறார். குற்றவாளிகளைப் பிடிப்பது அவர்களுக்கு மரணதண்டனை அளிப்பது ஆகிய துறைகளில் இவர்கள் டிரிபியூன்களுக்கு உதவினார்கள். குற்றத்தண்டனை அதிகாரத்தை டிரிபியூன்கள் பெற்றபின் இவர்கள் பேராட்களாக இருந்து உதவினார்கள்.[2] தொடக்க நிலையில் இவர்களுடைய நிதிப்பணிகள் வரையறுக்கப்படவில்லை. ஆனால், செரிஸ் கோவிலில் இப் பதவிக்கு நிதிப்பணிகள் குறிப்பிடப்பட்டிருந்தன. இத்தகைய பணிகளைச் சனிக்கடவுள் (Saturn) கோவில் குவெஸ்டர்கள் புரிந்ததாகச் செய்திகள் கூறுகின்றன. பிளெபியர்களின் கட்டாய உழைப்புக் கண்காணிப்பும் பணிகளிலிருந்து இப் பெயர் பெற்றிருக்கலாம். சாலைகள், கட்டடங்கள் ஆகியவைகளைச் செப்பனிடல் பணிகளிலிருந்து இச் சொல் வந்திருக்கலாம். இவர்களுடைய காவற்பணிகள். அங்காடி மேற்பார்வை, அரசின் சமயத்தைப் பேணல் ஆகிய பணிகளைத் தொடக்கக் காலத்திற்குரியனவாகக் கருதமுடியாது. இருப்பினும் இவர்களுடைய இப் பணிகளை கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்குரியனவாக லிவி கருதுகிறார். கி. மு. 463-ல் இவர்கள் காவற்பணி செய்தார்களெனவும்,[3] கி. மு. 428-ல் அரச சமயப் பொறுப்பேற்றார்களெனவும்[4] லிவி கூறுகிறார்.

தொடக்கத்தில் இவர்கள் (ஈடில்கள்) டிரிபியூன்களால் நியமிக்கப்பெற்றார்கள். ஆனால், பிற்காலத்தில் டிரிபியூனின் தலைமையில் கூடிய பிளெபியரவை இவர்களைத் தேர்ந்தெடுத்தது. டிரிபியூன்களோடு இவர்களுடைய பதவியும் சட்டமுறைமை பெற்றது. டிரிபியூன்களைப்போல் இவர்களுடைய உடல் பாதுகாப்பிற்குரியது. இப் பதவி பிரமாணத்தாலும் பின்னர் சட்டத்தாலும் வழங்கப்பட்டது. இப் பதவியின் மாண்புடைமை சட்டத்தின் அடிப்படையில் உருவாயிற்று.

பிளெபிய நிர்வாகிகளின் அதிகாரம் பொதுச் சட்டத்தின்படி அமையாது குருட்டு நம்பிக்கையில் நிலைபெற்றிருந்தது. சட்ட ஒப்புதலைப் பெற்ற குடிமக்களால் இவர்கள் தேர்ந்தெடுக்கப் பெற்

[1] Uarroi, L.L.V. 81.
[2] Liv. xxix 20, xxxviii. 52.
[3] Liv. iii. 6.
[4] Liv. ix, 30

றதால் இவர்களின் பதவி போதிய பாதுகாப்பைப் பெற்றதென லாம். பிளெபியர்கள் சமூகமாக அல்லது சட்ட ஒப்புதல் பெற்ற ஒரு கழகமாக நகருக்குள் அமையவில்லை. ஆகையால், டிரிபியூன் கள் அரசின் நிருவாகிகளாகச் செயற்படவில்லை; இப் பதவிக்குரிய சின்னங்களை இவர்கள் அணிந்துகொள்வதுமில்லை; முழுமையான அதிகாரத்தையும் சகுனம் பார்ப்பதையும் இவர்கள் உரிமை யாகப் பெறவில்லை. எனவே, அரச துரோகச் சட்டத்தால் இவர் கள் பாதுகாப்புப் பெற முடியவில்லை. இச்சட்டத்தின்படி அரசிற் கிழைக்கும் தீங்குகளை நிருவாகிகளுக்கிழைக்கும் தீங்குகளாகக் கருதித் தண்டனை விதிக்கப்படும். மன்னுரிமைக் காவலர்களுக்கு உரோம் அரசு திட்டவட்டமாகப் பதவிப் பாதுகாப்புஅளித்ததென லாம். இப் பாதுகாப்பையும் பதவியின் உயர்நிலையையும் இவர் களுக்கு மக்கள் அளித்தார்கள். உரிமைக் காவலர்களாகிய டிரி பியூன்களை அழித்தவர்களை அழிப்பதாக இவர்கள் எடுத்துக் கொண்ட சூளுரையை இவர்களின் வழிவழி வந்தவர்களுக்கும் விட்டுச் சென்றார்கள். டிரிபியூன்களின் பதவி மாண்பு முதலில் சமய ஒப்பிசைவைப் பெறவில்லை. எனவே டிரிபின்களுக்கு ஊறு விளைத்தவர்களைப் பெருங்குடியினர் சமயக் குற்றவாளிகளாக அறி விக்கவில்லை. பிளெபிய நிருவாகிகளும் அனைத்து மக்கள் சார்பில் பிரமாணம் எடுத்துக்கொள்ளவுமில்லை. டிரிபியூன்களின் உரிமை களை மீறினால் புரட்சி உண்டாகுமென மக்களின் ஒரு பிரிவினர் அறிவித்தார்கள். டிரிபியூன்களை அரசு ஏற்றுக் கொண்டபொழுது இந்த அறிவிப்பையும் ஏற்றுக்கொண்டது. கி. மு. 449-ல் இப் பதவி மறுபடியும் நிறுவப்படும் வரையில் பிளெபிய நிருவாகிகளை மீறுமை, சட்டப்படி ஏற்புப் பெறவில்லை. டிரிபியூனின் மேதகு நிலையை மீறியவர்கள் சட்டக் காப்பற்ற குற்றவாளிகளாகக் கரு தப்பட்டவர்கள்[1]. ஈடில்களும் டிரிபியூனிய டிசம்வீர்களும் இதே பாதுகாப்பிற்குரியவர்களாகக் கருதப் பெற்றார்கள். குறிப்பாக டிரிபியூன்கள் சட்டப்படி பாதுகாப்புரிமை பெறவில்லையெனச் சட்ட அறிஞர்கள் கருதினார்கள். இவர்கள் பெற்றிருந்த பாது காப்புப் பழங்காலப் பிரமாணத்திலிருந்து பெற்றதாகும். தண்ட னையை மட்டுமே சட்டம் அறிவித்தது. பிளெபிய சமுதாயத்தின் உறுப்பினரெவரும் இதை நிறைவேற்றலாம். இக் கருத்து முக்கிய மானது. ஏனெனில், நிருவாகிகள் காயமுற்ற வழக்குகளில் பிளெ பியர்களின் மரண தண்டனை விதிக்கும் அதிகாரம் ஏற்றுக்கொள் ளப்பட்டது. பிற்காலத்தில் இந் நடைமுறை ஏற்கப்படவில்லையெனி னும், இதன் சட்ட இயல்பு ஏற்றுக்கொள்ளப்பட்டது. தம்முடைய சொந்தப் பாதுகாப்பையும் தம்கீழ் பணியாற்றும் அலுவலர்

[1] Dionys vi, 89 & Liv, iii. 55

களின் பாதுகாப்பையும் டிரிபியூன் பாதுகாக்கவேண்டியிருந்தது ஏனெனில் இவரே உடனடியாகத் தண்டனை விதித்தார்; அல்லது கொன்சிலியத்திற்குத் தண்டனையை எடுத்துரைத்தார். சட்டமீறல் கள் எளிதானவைகளாக இருந்தாலும் தண்டனை மரண தண்டனை யாக இருக்கலாம். கொலை முயற்சிக்கு மரண தண்டனை விதிக் கப்படலாம். அதனால் ஒரு டிரிபியூனின் விருப்பத்தைக் கட்டாய மாக எதிர்த்தல் கொலைக் குற்றமாகக் கருதப்பட்டது. பிளெபி யர்களின் கூட்டத்தைத் தடை செய்யக்கூடிய நடவடிக்கைகளும் மரண தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப்பட்டது.

பிளெபியர்களின் தொடக்க காலப் போராட்டத்தில் கூட்டுரி மைக் கழக உரிமைகளை டிரிபியூனின் அதிகாரங்களே பிரதிபலித் தன. இவர் வழியாகத்தான் இக் கழகம் சட்ட ஏற்புப் பெற்றது. எனவே கி. மு. 494-ல் இருந்து பதின் குழுவினரின் (Decemvir) சட்ட ஆக்கம் (451) வரை, பிளெபியர் சமூகத்திற்குச் சிறந்த பிரதிநிதித்துவம் கிடைக்க டிரிபியூன்கள் பெரிதும் முயன் றனர்; சட்டத்தின் செயலாட்சியிலும் இவர்கள் பங்கு பெற முயன்றனர்.

பிளெபியரவை கியூரியாவாகக் கூடுதற்குப் பதிலாக இனங்க ளாக இப்பொழுது கூடியது. பியுபிலியஸ்வோலிரோ (Publius volero) 471-ல் நிறைவேற்றிய தீர்மானத்தையொட்டி இம் மாற்றம் ஏற்பட்டது. இது பிளெபியர்களைப் பொறுத்த சட்டமாக இருந் ததால் இதற்கு செனட் சபை, மக்கள் ஆகியவர்களின் ஏற்பு தேவைப்படவில்லை. இதை பெட்ரிசியர்களும் விரும்பவில்லை. இக் காலத்தில் பிளெபியர் அவையில் பங்கு பற்றிய இவைகளின் எண்ணிக்கை தெரியவில்லை. இஃது இருபத்தொன்ருக இருந்திருக் கலாம். இந்த வளர்ச்சிக்கு செர்வியஸின் கருத்துக் கைவிடப்பட் டதே காரணம். இழந்த இடங்களை உரோமானியர்கள் மீண்டும் பெற்றபொழுது உரோமானிய நிலம் ஒரு புதிய உட்பிரிவிற்கு உட்பட்டது. செர்வியஸ் குறிப்பிட்ட இனங்கள் நகரின் எல்லைக் குட்பட்டிருந்தன. நகருக்கு வெளியே இருந்த இனங்கள் நாட்டுப் புற இனங்கள் என வழங்கப்பெற்றன. நாட்டுப்புற இனங்களில் பதினறு, பெட்ரிசிய குடும்பப் பெயர்களைப் பெற்றிருந்தன. கி. மு. 491-ல் இனங்களின் எண்ணிக்கை இருபத்தொன்ருக இருந்ததென்பதை டயோனிஸஸ் ஏற்றுக்கொண்டார். வாக்களிப் பதற்காக இனம் முதன்முதலில் பயன்படுத்தப்பட்டபொழுது வாக்குகளில் ஓர் ஏற்றத் தாழ்வை உண்டாக்கும்பொருட்டு கி. மு. 471-ல் இருபத்தொன்ருவது இனம் சேர்க்கப்பட்டது. பிளெபியர் கள் புனித குன்றிற்குப் பிரிந்து சென்றதின் நினைவாக இந்த

இனத்திற்குப் பெயரிடப்பட்டது.[1] அரசிற்கு இன்னுமொரு பிரிவைக் சேர்க்க பிளெபியர்கள் கான்சலிடம் விண்ணப்பித்தார்கள்; ஏனெனில், கான்சலே மாற்றங்களைக் கொண்டு வரமுடியும். ஓர் ஆட்சி நடவடிக்கையாகையால் ஓர் இனத்தை உருவாக்குவது நிருவாகியைத் தவிர வேறு எவராலும் முடியாது.

முன் இருந்ததைப் போல், இந்த இனங்கள் தல அமைப்புகளே. இதில் நிலக்கிழார்கள் மட்டுமே சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள் என்ற கருத்திற்குச் சான்றுகள் இல்லை. ஆயினும். பதினேழு நாட்டுப்புற இனங்களில் பெரும்பாலானவைகளில் பெருமளவினர் நிலமுடைய உழவர்களாக இருந்தனர். எனவே, இது குயூரியாவைக் காட்டிலும் பிளெபியர்களுக்குச் சிறந்த நிறுவனமாகத் தோன்றியது. இவைகளில், பெட்ரிசிய நிலக்கிழார்களின் பிரதிநிதிகளாக நிலமற்ற பிளெபிய சார்பாளர்கள் இருந்தனர்.

இம் மாற்றம் சில எதிர்பாராத விளைவுகளைத்தோற்றுவித்தது. பியுபிலியன் சட்டம் நிறைவேறியதற்கும் பன்னிரு பட்டிகைகள் செயற்படுத்தப்பட்டதற்கும் இடைப்பட்ட காலத்தில் அனைத்து மக்களின் கூட்டங்களுக்கு அடிப்படையாக ஒரு புதிய பிளெபிய நடைமுறை மேற்கொள்ளப்பட்டது. மக்கள் இனங்களாகக் கூடி கொமிசியா டிரிபியுடாவை உருவாக்கினர். இந்த அவைக்கு நீதி வழங்கும் அதிகாரம் இருந்ததைப் பன்னிரு பட்டிகைகள் மெய்ப்பிக்கின்றன. ஆனல், இந்த அவையை கொமிசிய செஞ்சிரியேட்டாவிற்கு அடுத்து வைத்த பெரும் மாற்றத்தின் வரலாற்றை நாம் அறியோம். இப் புதிய அவையின் அதிகாரம் முதலில் விரிவானதாக இருக்கவில்லை. நிருவாகிகளிடமிருந்து வந்த சிறிய வழக்குகளை இச் சபை விசாரித்திருக்கலாமெனத் தெரிகிறது. குவெஸ்டர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை இப் புதிய அவையிடம் விடுவது வசதியாக இருக்குமெனக் கருதப்பெற்றது. மக்கள் எளிதாக விரைந்து இனங்களாகக் கூடுவதில் இதன் தன்மை விளங்கியது. அதனல், நகருக்குள் ஒரு படை ஓர் அவையாகக் கூடுவதற்குச் சில ஆரவாரச் சடங்கு முறைகளை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

[1] Dionys vii 64

# 4. குடியாட்சி அமைப்பின் வளர்ச்சி

(தொடர்ச்சி)

## சட்டத்தின் செயலாட்சியில் சமத்துவம் பெறப் போராட்டம்

சட்டத்தின் செயலாட்சியில் சமத்துவம் பெறுவது டிரிபியூனேட் ஆட்சிக் குழுவினரின் அடுத்த பெரும் போராட்ட இயக்கமாக இருந்தது. கி. மு. 462-ல் டிரன்டிலியஸ் அர்சா (Terentilius Arsa) என்பவர் பிளெபியர்களின் அவையில் ஒரு திட்டத்தைக் கொண்டுவந்தார். இதன்படி, சட்ட முறைகளின் விதிமுறைகளைத் தெளிவுபடுத்தவும் இதன் வழியாகக் கான்சல்கள் நீதிமுறையில் மனம் போன போக்கில் நடந்துகொள்வதில் ஒரு வரம்பு கட்டவும், ஐவர் அடங்கிய ஓர் ஆணைக்குழு அமர்த்தப்படவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்பெற்றது. அடுத்த ஆண்டில் இக் கருத்துகளை டிரிபியூனேட் ஆட்சிக்குழு ஒரு தீர்மானமாக வரைந்தது. இந்த நடவடிக்கைக்கு மக்களின் இசைவாணை தேவைப்பட்டது. பல ஆண்டுகளாக இவ்வாணையைப் பெற இயலாது போயிற்று. பிளெபியர்களை மட்டுமே உறுப்பினர்களாக இவ்வாணைக் குழு கொண்டிருக்க வேண்டுமென்பது விருப்பாக இருப்பினும் இத் திட்டம் பெரும் புரட்சிகரமானதெனக் கருதப்பட்டது. இத் திட்டம் ஒரு சட்டத்தொகுப்பைக் கோரியது. நீதி வழங்கலின் நெகிழ்வான கருத்துகளை நீக்கிவிட்டு எழுதப்பட்ட விதிமுறைகளைக் கொண்டுவர விரும்பியது; எழுத்துருவில் இல்லாத விதிகள் பெரிட்ரிசியர்களின் அதிகாரத்தின் அடிப்படையாக இருந்தன; விதிகளை எழுத்துருவில் வரைந்துகொண்டால் கான்சல்களின் புனிதத் தன்மையும் சமயக் குருமார்களின் தூய்மையும் நீங்கிவிடுமெனக் கருதப்பட்டது. பிளெபியர்களின் கோரிக்கைகளை ஏற்கும் இசைவான ஏற்பாடே இச் சட்டத் தொகுப்பு எனச் சிலர் அஞ்சினர்; ஏனெனில், ஆளும் இனமாகிய பெட்ரிசியரின் நிலையை இது குலைத்துவிடும் என அஞ்சினர். ஆகவே, திருவாகி

களாகிய கான்சல்களும் செனட் சபையினரும் இம் மசோதாவை வன்மையாக எதிர்த்தனர். இம்மசோதா பிளெபியரவையில் நிறைவேறினாலும் மேலே செல்ல அனுமதிக்கப்படவில்லை.[1] ஆனால் பிளெபியர்கள் முயற்சியைக் கைவிடவில்லை. பெட்ரிசியர்களின் எதிர்ப்பிற்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் ஆண்டுதோறும் அதே டிரிபியூன்களை பிளெபியர்கள் தேர்ந்தனுப்பிக் கொண்டிருந்தனர். கி. மு. 458-ல் டிரிபியூனிசிய ஆட்சிக் குழுவினர் கான்சல்களை அணுகி மசோதாவை இவர்கள் எதிர்ப்பதற்கான காரணங்களை வரைந்தனுப்புமாறு கேட்டனர். அச் சமயத்தில் ஓர் உடன்பாடு ஏற்படுவதுபோல் தோன்றியது. ஆனால், ஆண்டு இறுதியில் இதற்குத் தேவையான இசைவு மறுபடியும் மறுக்கப்பட்டது. மூன்றாண்டு போராட்டத்திற்குப் பின் திட்டம் கைவிடப்பட வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. ஒரு கூட்டு ஆணைக்குழு அமர்த்துவதற்கு பெட்ரிசிய நிருவாகிகள் எடுத்துக்கொண்ட முயற்சிக்கு, பிளெபியர்கள் விருப்பம் தெரிவித்தார்கள். ஓராண்டு விவாதத்திற்குப் பின் பழைய திட்டம் புதிய உருவம் பெற்றது. வெறும் சட்டத் தொகுப்பிற்குப் பதிலாகக் கட்சிச் சார்பற்ற தன்மையோடு கூடிய சீர்திருத்தம் எடுத்துரைக்கப்பட்டது. மூவர் அடங்கிய குழு ஒன்று கிரேக்க சட்டத் தொகுப்பு பற்றிய செய்திகளைத் திரட்டும் பொருட்டு அமர்த்தப்பட்டது. காலம் தாழ்த்துவதற்கு இது பயன்பட்டது. பணியைத் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் அறிவாற்றலோடு செய்வது போன்றதொரு தோற்றம் இதற்களிக்கப்பட்டது. மேலும் தெளிவற்ற உரோமானிய விதிமுறைகளை ஒழுங்குப்படுத்த இத்தகைய அடிப்படை ஒன்று தேவையெனலாம். ஆணைக்குழுவின் அமைப்புப்பற்றி இரண்டு வகுப்பினருக்கிடையேயான சர்ச்சை ஓர் உடன்பாட்டில் முடிந்தது. பிளெபியர்கள் இதில் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கலாம்; ஆனால் கொமிசிய செஞ்சுரியேட்டாவினால் தெரிவு செய்யப்பெற்றவர்களில் பெருமளவினர் பெட்ரிசியர்களாக முதல் குழுவில் இருந்தனர்.[2] இவ் வாணைக்குழு அமர்த்தப்பட்டது அரசியலமைப்பை வழக்கொழியச் செய்தது. கான்சல் பதவிகள் ஒழிக்கப்பட்டன. பிளெபியர்கள் டிரிபியூன் பதவிகளைக் கைவிட்டனர். புதிய சட்டங்களின் வெளியீடு கான்சல்களின் அதிகாரத்தின் மீதான தடையைத் தேவையற்றதாக்கிவிடுமெனச் சிலர் தவறாகக் கருதினார்கள். எனவே, உடன்பாட்டின் ஒரு பகுதியாக, இதற்கு முன் பிளெபியர்கள் சட்டத்தால் பெற்ற சிறப்புரிமைகளை வழக்கொழியச் செய்துவிடலாகாதெனக் குறிப்பிட்டனர். 451ஆம் ஆண்டிற்கான தற்காலிக அரசு பதின்மரைக் கொண்ட குழுவாகச்

[1] Liv. iii. 11. 25 & 29.
[2] Momms. Staatsr. ii. p. 714.

செயற்பட்டது. இவர்கள் கான்சல்களுக்குரிய அதிகாரத்தைப் பெற்றிருந்தார்கள். அதனால், இவர்கள் மேல்முறையீட்டுச் சட்டங்களுக்கு உட்படவேண்டியதில்லை[1]. இப்பணி ஓராண்டிற்குள் முடிவுற்றது; சட்டத் தொகுப்பும் மக்களுக்கு அறிவிக்கப்பட்டது. ஆணைக்குழு எல்லோருக்கும் உரிமைகளைச் சமமாகப் படைத்துள்ளதை மக்களைக் கூட்டி அறிவிக்கப்பட்டது[2]. இச் சட்டத் தொகுப்பு முழுவதையும் கொமிசியா செஞ்சுரியேட்டா சட்டமாக நிறைவேற்றியது. ஆனால், அந்த ஆண்டின் இறுதியில் இப் பணி நிறைவு பெறவில்லையென அறிவிக்கப்பட்டது. மறுபடியும் அரசியலமைப்பை நிறுத்தி வைத்துப் பத்துப்பேர்களடங்கிய ஒரு புதிய குழு அமர்த்தப்பட்டது; இக் குழுவில் இப்பொழுது பிளெபியர்கள் இடம் பெற்றனர்.[3] சட்டத் தொகுப்பில் மேலும் இரண்டு பிரிவுகளைச் சேர்த்துப் பன்னிரு பட்டிகைகளாக்கப் பட்டன. இவைகளையும் செஞ்சுரிகள் ஏற்று உறுதி செய்தன. இப் பதின்மரின் அரசு அதிகாரங்களைத் தவருகப் பயன்படுத்தி வீழ்ந்தபின் 448-ல் கான்சல்கள் பன்னிரு பட்டிகைகளையும் ஒரு தொகுப்பாக வெளியிட்டனர். பட்டிகைகள் செதுக்கப் பெற்றிருந்த பொருள்களைப் பற்றி மாறுபட்ட கருத்துகள் நிலவின. மரப் பலகைகளில் இத் தொகுப்புச் செதுக்கப்பட்டிருக்கலாம் எனத் தெரிகிறது.[4]

பன்னிரு பட்டிகைகளில் இடம் பெற்ற சட்டங்கள் பெருமளவு அப்பொழுது வழக்கில் இருந்த விதிகளின் தொகுப்பேயென்றும், பிளெபியர்களின் உரிமைகள் ஏற்றுக்கொள்ளப்பெற்றதை இத் தொகுப்புக் குறிப்பிடுகிறது. எனவே, இது பெரும் அரசியல் சிறப்பைப் பெற்றது. அனைத்து மக்களுக்கும் விதிகளை வரைவதில் ஈடுபட்டிருந்த ஆணைக்குழுவினர், பெட்ரிசியரிடையே நிலவிய, வழக்கில் இருந்த சட்டம் தொகுப்பில் இடம் பெற வேண்டுமா அல்லது பிளெபிய சமூகத்தில் நல்லவை என ஏற்றுக் கொள்ளப்பட்ட சட்டம் இடம் பெறவேண்டுமா என்ற கருத்துகளை ஆராயவேண்டிய நிலையில் இருந்தனர். பிளெபியர்களின் உரிமைகளை இவர்கள் மதித்தார்கள் என்பதைவிட சட்டத்தின் எளிமையையும் எங்கும் நிலவிய தன்மையையும் கருத்திற் கொண்டனரெனலாம். சட்டத் தொகுப்பு ஒழுங்கற்றதன்று; அதனால், இத் தொகுப்புச் சரிநுட்பமாக அமைந்ததொன்ருகும். சமப்படுத்துவது இதன் நோக்கமாகும்; வகுப்பினரிடையே ஒரு சமச் சீரான

1 இவர்கள் "செசம்வீர்" எனப் பெயர் பெற்றிருந்தார்கள் Liv. iii. 32.
2 Liv. iii, 34
3 Dionys. 4. 58; Liv. iii, 35.
4 Liv. iii. 57.

நிலையை இஃது உருவாக்கியது. ஒரு வகுப்பினருக்காக ஆணையர்கள் சட்டமியற்றவில்லை. பழமையை மதித்து நிதானமாக உருவாக்கப்பட்டதாகும் இத் தொகுப்பு. ஆனால், பொதுஅறிவை மீறுவதாக அமைந்திருந்த வழக்கங்களை இத் தொகுப்புப் புறக்கணித்தது. இத் தொகுப்பு மாற்றப்படலாம்; ஆனால், ஈடு செய்யமுடியாது. எல்லாப் பொது, தனி, சட்டங்களுக்கும் இது தோற்றுவாயாக அமைந்தது. டாசிடஸ் குறிப்பிடுவதுபோல் இதைச் சம உரிமைகளின் நிறைவு எனலாம்[1]. இதன் இசை நயமோடு கூடிய சொற்றொடர்களைப் பள்ளிச் சிறுவர்கள் கற்றனர். குடியாட்சிக் காலத்திய சட்ட அறிஞர்கள் இதற்கு விரிவான விளக்கங்களை எழுதினர்.

பன்னிரு பட்டிகைகள் உரோமானியச் சட்டமாகஉருப்பெற்றன. தனி, பொது, குற்றவியல் ஆகிய சட்டங்களின் எல்லாத் துறைகளையும் சார்ந்த முக்கியமான அல்லது சர்ச்சைக்குரிய கருத்துக்களையொட்டி இவைகள் முடிவு செய்யப்பட்டுள்ளன.

திருமணம், குடும்பஉறவுகள், உடைமை, உரிமைமாற்றம் பற்றிய பத்திரம், கடன், மரபுவழிச் சொத்து, தகாவட்டி ஆகியவைபற்றிய ஒழுங்குமுறைகளைத்தனியார் பற்றிய சட்டத்தின் மேலாணை கொண்டிருந்தது. முழு இசைவோடுகூடிய பிளெபியர்களின் திருமண ஒப்பந்தம் சட்டத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இவர்களின் விடுதலையின் விளைவுகளும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. சுதந்திரத்தை விலைகொடுத்து வாங்கிய அடிமைகள் விடுதலை பெற இச் சட்டம் வசதியளித்தது. இப்படி விடுதலை பெற்றவர்களும் செல்வ வளமுடைய ஒரு வகுப்பினராயினர். பிளெபியர்களின் ஒப்பந்த உறுதி முறைகளுக்கிணங்க உடைமை உரிமைமாற்றுப் பத்திரம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. உயில் எழுதாமல் இறப்பவர்களின் மரபுவழிச் சொத்துஉரிமை, உரிமைப்பாதுகாப்பு ஆகியவைகளும் முன்னிருந்ததுபோல் ஏற்றுக்கொள்ளப்பட்டன. பட்டிகைகளால் பாதுகாப்புப் பெற்ற ஒப்பந்தங்கள் பழைய கடன் சட்டங்களின் கருத்தையும் உட்கொண்டிருந்தன. ஆனால் தண்டனை வரையறுக்கப்பட்டிருந்தது; விதிமுறைகள் நன்றாக விவரிக்கப்பட்டிருந்தன; கடன்கொண்டவன் தப்பிக்கொள்ள வழிமுறைகள் அளிக்கப்பட்டன. இதே சமயத்தில் தகாவட்டிமுறை கடினமாகத் தண்டிக்கப்பட்டது. பத்துச் சதவீத வட்டி சட்டப்படி ஏற்பு பெற்ற வட்டியாக இருந்தது. இதற்குமேல் வட்டி வாங்கியவர்கள் திருடர்களைவிடக் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். மிகையாக வாங்கிய வட்டியைப் போல் நான்கு பங்கு திருப்பிக்

[1] Liv. iii. 34. Tac. Ann. iii, 27.

கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்டனர். கட்சிக்காரர்களையும் சாட்சிகளையும் முறைமன்றத்திற்கு அழைப்பதுபோன்ற எல்லா சிவில் நடவடிக்கைகளுக்குமான நடைமுறைவிதிகளும் வகுக்கப் பட்டன. விசாரணைக்கான காலவரையும் குறிப்பிடப்பட்டது. ஆனால், நடவடிக்கைகளின் தன்மையைச் சட்டம் வெளியிடவில்லை. சமய முதன்மைக் குருமார்கள் இதை இன்னும் மறைவாகவே வைத்திருந்தனர்.

குற்றத்தண்டனைபற்றிய வழக்குகளைப் பொறுத்தவரை பன்னிரு பட்டிகைகள் பழைய தன்னுதவிக் கருத்தை ஏற்றுக்கொண்டது; அதாவது கண்ணுக்குக் கண் கொடுக்கும் தண்டனை முறையை ஏற்றுக்கொண்டது. ஆனால் சிறிய குற்றங்களுக்கு இழப்பீடு அனுமதிக்கப்பட்டது. பழைய சமயச் சார்புடைய தண்டனைகளும் தொடர்ந்திருந்து வந்தன; பயிர்களை அழித்தவன் கடவுளுக்குப் பலியிடும் வகையில் தூக்கிலிடப்பட்டான்; பேச்சுரிமையைத் தவருகப் பயன்படுத்துகிறவன் வன்மையாகத் தண்டிக்கப்பட்டான். மந்திரிப்புகள் அல்லது குடிமக்களுக்கு எதிரான பொய்யான இகழுரைகள் ஆகிய குற்றங்களுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது[1]. கையூட்டுகளைப் பெற்ற நீதிபதிகளுக்கும் இதே தண்டனை விதிக்கப்பெற்றது; அரசிற்கெதிராக எதிரிகளைத் தூண்டிவிடுதல், அல்லது குடிமகனை எதிரியிடம் காட்டிக் கொடுப்பது போன்ற நாட்டுத் துரோகச் செயல்களுக்கும் சட்டம் மரணதண்டனை விதித்தது. குவெஸ்டர்களைப்பற்றிச் சட்டத்தில் சொல்லப்பட்டிருத்தலால் குற்றத்தண்டனை நடைமுறைகள் மேற்கோள் காட்டப்பட்டிருக்க வேண்டும்.[2]

நேர்மையான விசாரணை முறையைக் குடிமக்களுக்குக் காப்புறுதிசெய்த அரசியலமைப்புக் கருத்து நிலைபெற்றது. ஏனெனில், ஒவ்வொருவகை நீதிமன்றத்திலிருந்தும் தண்டனையிலிருந்தும் மேல்முறையீடு செய்யும் உரிமையைப் பன்னிரு பட்டிகைகள் அளித்தனவென்று சிசரோ கூறியுள்ளார்[3]. ஒரு தனிப்பட்ட குடிமகனுக்கு எதிராக எந்தச் சட்டமும் அல்லது தண்டனையும் இயங்கலாகாதென்பதும், கொமிசியா செஞ்சுரியேட்டா அவையிலன்றி வேறெந்த நிறுவனமும் மரணதண்டனை விதிக்கலாகாதென்பதும், மக்களின் விசாரணை அதிகாரத்திற்கு விதிக்கப்பட்ட வரம்புகளாகும். பிளெபியரவையின் மரணதண்டனை விதிக்கும் அதிகாரத்தை இஃது அகற்றிவிட்டதாகப் பிற்காலத்தில் சட்ட விளக்கம் செய்யப்பட்டது. இருந்தபோதிலும், சமய இசைவின்

[1] Cic de Rep. iv 12.
[2] Pompon in Dig 1, 2, 3 & 24
[3] Cic. de Rep. ii, 31, 54

பேரில் நிலைபெற்றிருந்த இவ்வியல்புகடந்த சட்ட அதிகாரம் எந்த அளவிற்குச் சட்டத்தால் பாதிக்கப்பட்டிருக்கும் என்பது ஐயப்பாட்டிற்குரியதாகும். ஏனெனில் இச் சட்டம் பிளெபியர்களை ஓர் அரசியல் சமூகமாகக் கருதவில்லை. இச் சட்டத்தொகுப்பின் மற்றொரு முக்கியமான பிரிவு யாதெனில் கூடிவாழும் உரிமையாகும். நாட்டுத்துரோக நோக்கமுடைய இரகசியக் கூட்டங்களைப் பன்னிரு பட்டிகைகள் கடுமையாகத் தடை செய்தாலும், தொழிற் கழகங்கள் சுயேச்சையாக அமைவதை அனுமதித்தன. இத்தகைய கழகங்களுக்குத் தனிப்பட்ட சாசனங்கள் தேவைப்படவில்லை. பொதுச்சட்டங்களை மீறுத வகையில் இயற்றப்பட்ட இவைகளின் விதிகள் செல்திறனுள்ளவைகளாக இருந்தன. சோலனின் (Solon) சட்டத்திலிருந்து இந்த விதி பெறப்பட்டதாகச் சொல்லப் படுகிறது[1]. இறுதியாக, பொதுமக்கள் சபையின் சட்டமியற்றும் செயல்களுக்கு வரம்புகள் விதிக்காமல் இதன் இறுதியான சட்ட நிறைவேற்றத்தை முடிவானதாக அறிவித்துச் சபையின் இறைமைக்குப் பன்னிரு பட்டிகை காப்புறுதியளித்தது[2]. சட்டத்தில் முடிவு என்பதில்லையென்ற உரோமானியர்களின் பற்றுக் கோளுக்கு இஃது ஓர் அடையாளமாகும். இப் பன்னிருத் பட்டிகைகளைத் தள்ளுபடி செய்வதை எதிர்க்கும் நடவடிக்கை எதையும் இப் பட்டிகைகள் குறிப்பிடவில்லை. பழைய போக்கைத் தொடர்ந்து வரவிருக்கும் வளர்ச்சிக்கு இஃது ஒரு முன்னறிவிப்பாகும். அரசியலமைப்பின் வளர்ச்சிநிலைகள் நெகிழ்ச்சியையும் வளர்ச்சியையும் குறிப்பிட்டதேயன்றி நெகிழாத்தன்மையையும் புரட்சியையும் குறிப்பிடவில்லை.

புதிய சட்டம் பிளெபியர்களைப் பற்றியும் இவர்களுடைய டிரிபியூன்களைப் பற்றியும் குறிப்பிட்டதாகத் தோன்றவில்லை. ஏனெனில் இவர்கள் அரசியலமைப்பின் ஓர் அங்கமாகக் கருதப்படவில்லை. ஆயினும், பதின்மரின் ஆட்சிக்குழுவின் வீழ்ச்சியைத் தொடர்ந்துவந்த நெருக்கடிகளில் இப் புறக்கணிக்கப்பட்ட அதிகாரங்களைப் பற்றிய பிரச்சினை மற்றப் பிரச்சினைகளைப் பார்வையிலிருந்து மறைத்துவிட்டன.

இரண்டாவது பதின்மர் குழு வல்லாட்சி செய்ய முயன்றிருந்தால் முன்செய்துகொண்ட உடன்பாட்டில் பிளெபியர்கள் மனநிறைவடைந்திருப்பார்கள். பதின்மர் வல்லாட்சியை பெட்ரிசிய வகுப்பினர் ஏற்றுக்கொண்டதை நம்பமுடியவில்லை. இப் பதின்மரின் ஆட்சியைக் காலவரையின்றி நிலைப்படுத்தி, நிருவாகிகளின் மீதான தவிர்க்கமுடியாத தாக்குதல்களைத் தடுத்து நிறுத்துவது

[1] Gaius in Dig 47, 22, 4.
[2] Liv. vii, 17

இவர்களின் நோக்கமாக இருந்தது. எனவே இவர்களின் ஆட்சியைப் பெட்ரிசியர்கள் பொறுத்துக்கொண்டிருந்தார்கள்; பதவியிலிருந்து விலகாததற்கான இவர்களின் சாக்குப்போக்கு களையும் ஆதரித்தார்கள். இவர்களின் இரு கொடுங்கோல் நடவடிக் கைகளால் உரோமானியரின் இரு வகுப்புகளும் கிளர்ந்தெழுந்து கலகம் விளைக்கும்வரை இவர்கள் பதவியில் இருந்தனர். ஆளும் குழுவிற்கு முதலில் பிளெபியர் படையினர் பற்றுறுதியளிக்க மறுத்தனர்; இவர்களால் தெரிவு செய்யப்பட்ட படைத்தலைவர் களின் தலைமையில் அவன் படையினைக் கைப்பற்றினர்; பின்னர் உரோமின் படைக்கலன் தரிக்காத பெரும்பாலான பிளெபியர் களுடன் இரண்டாவது தடவையாக மோன்ஸ் சாசர் (Mons Sac r) சென்றடைந்தனர் (கி. மு. 449). அச்சமுற்ற செனெட் சபை, பிளெபியர்களிடையே செல்வாக்குப்பெற்ற, இரு உறுப் பினர்களை (வலீரியஸ், ஹொரேசியஸ்[1]) அவர்களின் விருப்பை அறிந்துவர அனுப்பியது. பிரிந்து சென்றமையடுத்து எழுந்த படைஒழுங்கு மீறலுக்குப் பொது மன்னிப்பளிக்கப்பட வேண்டு மென்றும் பதின்மர் ஆட்சியை ஒழித்து டிரிபியூனிய அதிகாரம் மீண்டும் நிலைநாட்டப்பட வேண்டுமெனவும் விருப்பம் தெரிவித்த னர். புதிய கோரிக்கைகளை பிளெபியர்கள் எழுப்பவில்லை யென்றாலும் அவர்கள் கோரியதெல்லாம் பாதுகாப்பதேயாகும்.

கேட்டதெல்லாம் கொடுத்தபின் விருப்பமில்லாமல் பதின்மர் கள் பதவி விலகினர்; டிரிபியூன் குழுவினர் மறுபடியும் பதவிக்கு வந்தனர். பிளெபிய நிருவாகிகள் இல்லாதிருந்ததால் சமய முதன்மைக் குருவால் தேர்தல் நடத்தப்பட வேண்டிய வழக்கம் மீறிய ஒரு நிலையேற்பட்டது. மேல்முறையீட்டுரிமைக்கு உட்பட்டு கான்சல் பதவிகள் உண்டாக்கப்பட வேண்டுமென பிளெபியர் களிடமிருந்து ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டது. இத் தீர் மானத்தை ஏற்றுக்கொண்ட செனெட்சபை ஓர் இடைக்கால நிரு வாகியை அமர்த்தியது. கொமிசியா செஞ்சுரியேட்டா, வலீரிய சையும் ஹொரேசியசையும் கான்சல்களாகத் தேர்ந்தெடுத்தனுப் பியது. இவர்களின் மேல்பார்வையில் அவை பல சட்டங்களை நிறைவேற்றின. பிளெபியர்களின் கோரிக்கைகளை இச் சட்டங் கள் ஏற்று நிறைவேற்றின. "ஒரு கான்சலின் செயல்களையொட்டி மேல் முறையீடு செய்யமுடியாத வகையில் வருங்காலத்தில் எவரும் ஒரு கான்சலை (பதவியை)ப் படைக்கலாகாது; அப்படிப்பட்ட ஒரு கான்சலைப் படைக்கும் எவருக்கும் சட்டப் பாதுகாப்பு இராது. தண்டனை விலக்கீட்டுறுதியோடு எவரும் அவரைக் கொல்லலாம்"

[1] Valerius and Horatius.

என்ற சட்டத்தால் மேல்முறையீட்டுரிமை நிரந்தரமாக நிலைபெற காப்புறுதியளிக்கப்பட்டது.[1] பதின்மர்களின் எல்லையில்லா அதிகாரமே இச் சட்டத்திற்குக் காரணமாகும். ஆனால், மக்களின் இணக்கத்தோடு தேர்ந்தமர்த்தப்பெற்ற கான்சலுக்கு ஒரு சர்வாதிகாரியை நியமிக்கும் அதிகாரம் இருந்தது. இச் சர்வ திக்காரியின் செயல்களுக்கு எதிராக எவரும் மேல்முறையீடு செய்ய முடியாது. ஆனால் இம் முறையீட்டின் செயற்பரப்பு நீட்டிக்கப் படவில்லை. அதாவது நகரின் பழைய எல்லைகளுக்கப்பால் முறையீடு நீட்டிக்கப்படவில்லை.

பிளெபிய சமுதாயத்தைச் சட்டப்படியானதாகச் செய்யும் நோக்கமுடன் இரண்டு சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன பிளெபிய நிருவாகிகளுக்கு ஊறுவிளைவிப்பவர் சமூக விரோதியாகக் கருதப்படுவாரென்று ஒரு சட்டம் குறிப்பிட்டது. பிளெபியர் அவை நிறைவேற்றும் தீர்மானங்களுக்கு இன்னும் அதிகமான கட்டுப்படுத்தும் இயல்பை இன்னொரு சட்டம் அளித்தது. இதன் உட்கருத்துத் தெளிவாகத் தெரியவில்லையெனினும் தீர்மானங்களின் செல்திறனின் ஒரு முக்கியமான நிலையை இது குறிப்பிட்டது. பிளெபியர்களின் தீர்மானங்கள் பெட்ரிசியரைக் கட்டுப்படுத்துமா என்ற சர்ச்சைக்குள்ளான பிரச்சினையைத் தீர்க்கும் பொருட்டு இச் சட்டம் கொண்டுவரப்பட்டதென அறிகிறோம்[2]. "பிளெபியர் (இனங்கள் வழியாக) எதுபற்றிக் கட்டளையிட்டாலும் அஃது அனைத்து மக்களையும் கட்டுப்படுத்தும்" என்ற சட்டத்தை நிறைவேற்றி இக் கருத்தை உறுதிப்படுத்திக் கொண்டனர். இச் சட்டத்தின் உட்கருத்தை நாம் தவறாகப் புரிந்துகொண்டிருக்கலாம். இக் காலத்திலிருந்து தீர்மானம் (Plebiscita) சட்டத்தின் (leges) செல்திறனைப் பெற்றிருந்ததென்று உறுதியாகச் சொல்வதற்கில்லை. பிளெபியர்களின் தீர்மானம் சட்டத் திறனைப் பெறவில்லையென்பது ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். 160 ஆண்டுகளுக்குப் பின்னரே இந் நிலை ஒப்புக்கொள்ளப்பட்டது. பிளெபியர்களின் தீர்மானத்தை செனெட் சபை அல்லது கான்சல்களின் வழியாக மக்களைக் கட்டுப்படுத்தும் சட்டமாக மாற்றியமைக்க இச் சட்டம் வசதி செய்ததென அண்மையில் பொருள் விளக்கம் செய்யப்பட்டது[3]. இச் சட்டத்தின் வரைவு இத்தகைய கருத்திற்கு இடமளிக்கவில்லை; இத்தகைய தீர்மானங்களுக்கு "ஒரு கட்டுப்படுத்தும் இயல்பை"க் கொடுப்பதாக இச் சட்டம் கூறுகிறது. இக் காலத்தில் பிளெபியரவையின்

[1] Liv iii.. 55
[2] Liv. iii, 55· D'onys. xi 45.
[3] Mr. Strachan-Davidson in Smith. Dict. of Antique S.V. plebiscitum, and English Historical Review Nos. 2 and 19,

தீர்மானங்களுக்குப் பிளெபிய சமுதாயம் உண்மையிலேயே கட்டுப்படவில்லையென்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். ஏனெனில், பிளெபிய சமுதாயம் சட்டத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு சமுதாயமாகவில்லை. ஆனால் வலீரியோ ஹொரேசியஸ் சட்டம் இத்தகைய ஒரு சமுதாயத்தைப் படைத்திருக்கலாம். இச் சமுதாயம் நிறைவேற்றும் தீர்மானம் இதன் உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தியிருக்கலாம். ஆனால், ஒரு சமுதாயத்திற்குச் செல்லத் தக்கதாக உள்ள சட்டம் சமுதாயத்திற்கு வெளியே உள்ளவர்களுக்கும் செல்லத் தக்கதாகும். கட்டுப்படுத்தும் ஆற்றல் உள்ள மேலாணைகள் ஒரு சமூகத்தின் நடவடிக்கைகளை மட்டுமே உடனடியாகக் குறிப்பிடவேண்டும். இதுவே இத் தீர்மானங்களின் நிலையாகும். பிளெபியர்களைப் பொறுத்த தீர்மானங்கள் அனைத்தும், முதலில் பிளெபியர்களைக் கட்டுப்படுத்தும். இருக்கும் உரிமைகளை மீறுவதானல் அடுத்து பெட்ரிசியர்களைக் கட்டுப்படுத்தும். விரிவான செயற் பரப்புள்ள எல்லாத் தீர்மானங்களுமே கான்சல்களுக்கும் கொடுக்கப்படும் வெற்று விண்ணப்பங்களாகவே இருந்தன. பிளெபியர்கள் செய்யக்கூடியதையும் செய்யக்கூடாததையும் சட்டம் சரிநுட்பமாக வேறுபடுத்தியதென்பதை நம்மால் கருதிப் பார்க்க முடியவில்லை. வகுப்பினர்கள் (கழகங்கள்) அவர்களுக்குரிய விதிகளை அவர்களே வகுத்துக்கொள்ளலாம் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்தாகும். இக் காலத்திலிருந்து கி. மு. 287 வரை தேசிய நலன்கள் அல்லது அரசியலமைப்பில் மாற்றம் செய்வது போன்றவைகளைப் பாதிக்கும் தீர்மானங்களைக் கொண்டுவரும்பொழுது, இவைகளைக் கான்சல்கள் சட்டமாக்குவதற்கு மக்களின் பார்வைக்குக் கொண்டு வருகிறார்கள் என்பதை நாம் அறிகிறோம்.

வலீரியன் சட்டத்தின் விளைவாக, பிளெபியர் ஒருவர் கடமை தவறியதற்குத் தண்டனை விதிக்கப்பெற்றார். டியூலியஸ் (Dulius) என்ற ஒரு டிரிபியூனின் திட்டத்தின்படி, டிரிபியூன்களின்றி ஒருவர் பிளெபியரிடமிருந்து பிரிந்து சென்றாலும் அல்லது மேல் முறையீட்டுரிமையின்றி ஒரு பிளெபிய நிருவாகியை ஒருவர் படைத்தாலும் மரண தண்டனை பெறவேண்டுமென பிளெபியர்கள் முடிவு செய்தனர்[1]. பிளெபியர்கள் உரிமைகளை இழந்துவிடாமல் பாதுகாத்துக் கொள்வதற்கு இவர்கள் இம் முறையைக் கையாண்டனர்.

எனவே பிளெபியர்கள் பழைமையான சிறப்புரிமைகளோடு ஒரு சட்டபூர்வமான நிறுவனமாக ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள்.

[1] Liv. iii, 55

பன்னிரு பட்டிகைகளின் விளைவாக, பிளெபியர்களின் சட்டம் அரசின் சட்டமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இக் காலத்திலிருந்து இரண்டு வகுப்புகளுக்கிடையே சமத்துவ நிலையை உண்டாக்கப் போராட்டம் தொடர்ந்தது. போராட்டத்தை 445-ல் கானுலியஸ் (Canuleius) என்ற டிரிபியூன் தொடங்கினர். அரசியல் சமத்துவத்திற்கு முன் சமூக சமத்துவம் பெற வேண்டுமென இவர் வலியுறுத்தினர். பெட்ரிசியர்களுக்கும் பிளெபியர்களுக்கும் திருமண உறவுகள் ஏற்படவேண்டுமென பிளெபியரவையில் இவர் எடுத்துரைத்தார். பெட்ரிசியர்களின் உணர்ச்சிகளை வெளியிட்ட கான்சல்கள், இம் மண உறவுகளைப் பன்னிரு பட்டிகைகள் தடை செய்ததை ஏற்கத்தக்க ஓர் எதிர்ப்பாகத் தெரிவித்தார்கள் பிளெபியர்கள் புட்குறிபார்க்கும் உரிமையைப் பெறவில்லை என்பதையும் சுத்தமான இனமொன்றின் மறைவினல் அரசிற்கும் கடவுளுக்கும் தொடர்பறுந்து போகுமென்பதையும் சுட்டிக் காட்டிப் பன்னிரு பட்டிகை இத் தடையை விதித்தது[1]. ஆனல் இச் சாக்குப்போக்கு பெட்ரிசியர்களின் அச்சத்தை வெளிப்படுத்தியது. கான்சல் பதவிகளைப் பாதுகாத்துவந்த சமயத் தடைகளை வகுப்புகளுக்கிடையேயான கலப்பு மணம் தகர்த்தெறியலாம். இந் நோக்கத்தை அடையவே பிளெபியர்கள் போராட்டத்தைத் தொடர்ந்தனர். ஆண்டின் தொடக்கத்தில் டிரிபியூன்களிடமிருந்து ஒரு திட்டம் வெளியாயிற்று. இதன்படி, பிளெபியர்களிலிருந்தோ பெட்ரிசியர்களிலிருந்தோ மக்கள் கான்சல்களைத் தேர்ந்தெடுக்க உரிமை பெற்றிருக்கவேண்டும். திருமண உறவுகள் பற்றிய பிரச்சினையையொட்டி வழக்கமான சர்ச்சைகள் தோன்றி வழக்கமான முடிவுகளோடு முடிவடைந்தன. இயன்றவரை கான்சல்கள் எதிர்த்தார்கள்; இறுதியில் செனெட் சபையின் எதிர்ப்புச் சமாளிக்கப்பட்டது. பொது நிருவாகிகள் இப் பிரச்சினையை மக்கள்முன் வைத்தார்கள்; வகுப்புகளுக்கு இடையேயான திருமணங்கள் சட்டப்படி ஏற்றுக்கொள்ளப்பெற்றன. இந்த வெற்றியைத் தொடர்ந்து பிளெபியர்கள், கான்சல் பதவிக்கான உரிமையை வலியுறுத்தினர்கள்; வெளிப்படையான எதிர்ப்பினல் பயனில்லையென்பதை உணர்ந்தனர். பகுத்தறிவுக் கோரிக்கைகளையும், அரசியற் போலி வாதங்களையும் விருப்புவெறுப்புகளையும் சமாளிக்க ஒரு திட்டம் மேற்கொள்ளப்பட்டது. தலையாய பதவிக்கு பிளெபியர்கள் வருவது உடனடியாகத் தீமையாகக் கருதப்பட்டது. அரசின் நிருவாக இயந்திரம் வளர்ந்துவரும் தேவைகளை நிறைவு செய்ய முடியாத நிலையில் இருந்ததை மக்கள் உணரத் தொடங்கினர். இரண்டு

[1] Liv. iv. 6.

கான்சல்களும் படைத் தலைவர்களாகவும், உயர்ந்த நிருவாகிக ளாகவும் குடிமக்களின் மீதான கடமைப் பொறுப்புகளைப் பதிவு செய்யவும் பகிர்ந்து கொடுக்கவும் முழுமையான அதிகாரம் பெற் றவர்களாகவும் இருந்தனர். உரோமானிய அரசியல் அதிகாரம் விரிவடைந்து கொண்டிருந்ததோடு இப் பதவிக்கான பணிகளையும் சேர்ப்பது தொடர்ந்திருந்து வரமுடியாதென்பது தெளிவாயிற்று. தலைமை நிருவாகியின் படை, நீதி, ஆட்சி ஆகியவைகளின் தொடர்பான பணிகளைப் பிரிக்க முதல் முயற்சி மேற்கொள்ளப் பட்டது. இந் நோக்கத்தை நிறைவேற்றவும், இதே சமயத்தில் பிளெபியர்களுக்குச் சில சலுகைகளை வழங்கவும் கான்சல் பதவிக் குப் பதிலாக ஓர் இராணுவ டிரிபியூனை கான்சலின் அதிகாரங்க களோடு அமர்த்த முடிவு செய்யப்பட்டது. ஒரு தனிச் சட்டத் தால் இம் மாற்றம் ஏற்கப்பட்டது கான்சலின் படைத்துறைப் போராளரைப் படைத்தலைமை நிலைக்கு இம் மாற்றம் உயர்த் தியது. இப்பொழுது நிலைகடந்த அலுவலர்களைக் கொமிசியா செஞ்சுரியேட்டா தேர்ந்தெடுத்தது. இவர்களைத் தேர்ந்தெடுத்த அவையின் தலைவராகத் தலைமை நிருவாகிகளில் ஒருவர், அல்லது கான்சல், அல்லது இராணுவ டிரிபியூன் இருந்தார். பழைய படையின் ஆறு டிரிபியூன்கள் குறிப்பிட்டதின்பேரில் அறுவர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனால் இப்படித் தேர்ந்தெடுக்கப்பட் டவர்கள் எல்லோரும் பதவியில் அமர்த்தப்படுவதில்லை. அரசின் நெருக்கடி நிலைகளைக் கருத்திற்கொண்டு ஒரு குறிப்பிட்ட ஆண்டிற்கு எத்தனை இராணுவ டிரிபியூன்களை அமர்த்துவதென்பது முடிவு செய்யப்பட்டது. சில சமயங்களில் மூன்று பேரையும், சில சம யங்களில் நான்கு பேர்களையும் மற்றச் சமயங்களில் ஆறு பேர் களையும் தேர்ந்தெடுத்தார்கள். ஆனால், எக் காலத்திலும் இந்த எண்ணிக்கை ஆறுக்கு மேல் போனதில்லை. இந்த எண்ணிக்கை எட்டாக உயர்ந்ததென லிவி குறிப்பிட்டுள்ளார்[1]. இந்த எண் ணிக்கை ஆறு டிரிபியூன்களையும் இரண்டு சென்சார்களையும் கொண்டிருந்திருக்கலாம்[2]. கி. மு. 403-ல் எட்டுப் பேர் இருந்த தாகவும் லிவி குறிப்பிட்டிருக்கிறார். ஒவ்வோர் ஆண்டிற்கு எத்தனை அலுவலர்களை அமர்த்த வேண்டுமென்பதைத் தேர்தலை நடத்திய நிருவாகி முடிவு செய்வார். ஆனால், நடைமுறையில் இம் முடிவை செனெட் சபை செய்தது. படையின் தலைமைப் பதவிக் குக் கீழுள்ள பதவிகளுக்குப் பிளெபியர்கள் தகுதி பெற்றிருந்த தால் கான்சலர் டிரிபியூன் பதவிக்கும் இவர்கள் தகுதி பெற்றி ருந்தார்கள் என்பது சொல்லாமலே விளங்கும். பிளெபியர்களை இப் பதவிக்குரியவர்களாக்குவதே இம் மாற்றத்தின் நோக்க

1. Liv. v. 1. vi. 27.
2. Momms. Staatsr. ii. p. 184,

மாகும்[1]. இருப்பினும், இப் பதவியின் தொடக்க காலத்தில் பெட்ரிசியர்களே இதற்குரியவர்களாக இருந்து இப் பதவியின் இறுதிக் காலத்திலும் இவர்களே தொடர்ந்திருந்து வந்தனர். கான்சுலர் டிரிபியூன் பதவி நிறுவப்பெற்ற 45 ஆண்டுகளுக்குப் பின்னரே (கி. மு. 400) இப் பதவிக்கு ஒரு பிளெபியர் தேர்ந் தமர்த்தப் பெற்ருர்[2]. இது மாம்சனின் தவறுன கருத்தாகும். கி. மு. 445-ல் பிளெபியரொருவர் இப் பதவியில் இருந்தாரென் பதும், பின் 400, 399, 396-ல் பிளெபியர்கள் பெரும்பான்மை பெற் றிருந்தார்கள் என்பதும் முற்றிலும் பெட்ரிசியர்களைக் கொண்ட குழுக்களைப் பெற்றிருந்தபோதிலும் பிளெபியர்களை மட்டும் கொண்ட ஒரு குழுகூட இல்லையென்பது இங்குக் குறிப்பிடத்தக்க செய்தியாகும். இது தேர்வுக்குரிய பதவிகளின் உயர்குடிப் பண்பு களை வெளியிடுவதாக அமைந்தது. மேலும் பிளெபியரின் முன்னேற் றத்தைவிட மக்கள் அரசின் பாதுகாப்பை விரும்பினரென்பது தெரிகிறது. ஏனெனில், படைத்திறனும், பட்டறிவும், சட்டஞான மும் இக் காலத்திலும் பெட்ரிசியர்களிடமே இருந்தது. கொமிசியா செஞ்சூரியேட்டாவில் பெரும்பான்மையான வாக்குகளை இவர்கள் தொடர்ந்து பெற்றிருந்தது ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாகும். இருந்தபோதிலும் பிளெபியர்கள் அதிகாரத்தோடு படிப்படி யாகத் தொடர்பு கொண்டார்கள்; தலைவர்களிடம் பெரும் நம்பிக்கை வைத்திருந்ததை இவர்கள் வெளிப்படுத்திஞர்கள். இப் பதவியின் வரலாற்றில் கி. மு 400ஆம் ஆண்டு ஒரு திருப்ப மாக அமைந்தது. இந்த ஆண்டிற்குப் பின் 399-லும் 396-லும் குழுவில் இவர்கள் பெரும்பான்மை பெற்றிருந்தனர். குடிமக்க ளின் பெரும்பான்மையினருக்கு இப் பதவியில் ஒன்றை ஒதுக்கி வழங்க வேண்டுமெனக் கேட்டதற்கேற்பச் சில நிகழ்ச்சிகள் தோன்றின.

கான்சுலர் டிரிபியூன்கள் செயற்படுத்திய அதிகாரங்கள் கான்சல்களின் அதிகாரங்களை ஒத்திருந்தன. இவர்களும் முழு மையான அதிகாரங்களைப் பெற்றிருந்தனர். இவர்களுக்குரிய விருதுகளையும் பெற்றிருந்தார்கள். இவர்களுக்குப் பின் பதவிக்கு வரவேண்டியவர்களைத் தோந்தெடுக்கும் அவைக்கு இவர்கள் தலைமை தாங்கிஞர்கள்; இச் சமயங்களில் புட்குறி பார்க்கும் உரிமையைப் பெற்றிருந்தார்கள். சமயச்சார்புடைய வெறுப்பு கள் இறுதித் தடைகளைத் தகர்த்து மக்களைக் கலந்து புட்குறி பார்க்கும் இவர்களுடைய உரிமை இப்பொழுது ஏற்றுக்கொள்ளப் பட்டது. கான்சல் பதவிக்கு இந் நிருவாகக் குழு மாண்பில் குறைந்

[1] Pompon in Dig. 1, 2, 2, 25.
[2] Liv, v. 12.

ததெனவும் அவ்வுயர் பதவியின் நிழல் எனவும்[1] கருதுவதற்கு இக் குழுவில் பலர் உறுப்பினராக இருந்தது காரணமாகும். இருப்பினும், கான்சுலர் டிரிபியூன் எவரும் வெற்றி அணிவகுப்பு உரிமையைப் பெற்றிருக்கவில்லையென்பது வியக்கத்தக்க உண்மையாகும்.[2]

இத் தனிச் சிறப்புவாய்ந்த நிருவாகப்பதவியால் கான்சல் பதவி ஒழிக்கப்பட்டுவிட்டதாகக் கருதிவிடலாகாது. குறிப்பிட்ட சில ஆண்டுகளில் இது நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு ஆண்டும் கான்சல்களை அமர்த்துவதா அல்லது இராணுவ டிரிபியூன்களை அமர்த்துவதா என்பது முடிவு செய்யப்பட்டது. இம் முடிவு செய்யும் அதிகாரம் செனெட் சபையிடம் இருந்ததாக மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. ஆனால், இச் சபை சட்டப்படி இப் பணியைச் செய்ததா அல்லது தேர்தலை நடத்தும் நிருவாகிக்கு அறிவுரை தரும் அவை என்பதால் இப் பணியைச் செய்ததா வென்பது தெரியவில்லை. உசித அதிகாரத்திலிருந்து டிரிபியூனேட் பதவியின் பொதுநிலை கடந்த தன்மை வெளிப்பட்டது. இப் பதவி செயற்பாட்டில் இருந்த காலங்களில் அரசியல், இராணுவ வசதி கருதி கான்சுலர் பதவி தள்ளிவைக்கப்பட்டது. கி. மு. 444-ல் இருந்து 337-க்கு உட்பட்ட 77 ஆண்டுகளுக்கு இராணுவ டிரிபியூனேட் ஆட்சி செலுத்தியது. இந்த ஆண்டுகளில் 27 கான்சுலர் குழுக்களும் 51 இராணுவ டிரிபியூனேட்டுகளும் பதவியிலிருந்தனர்[3]. இந்த இடைக்கால இசைவு ஏற்பாடு அரை நூற்றாண்டிருந்தது. பிளெபியர்களின் கோரிக்கைகளுக்கு இறுதியான முடிவு (கி. மு. 367) ஏற்படும் வரையில் இந்த உடன்பாடு தொடர்ந்தது.

இதற்கிடையில், மற்றொரு வழியில் கான்சல் பதவி மாற்றியமைக்கப் பெற்றது. இவ் வழியால் இப் பதவியின் அதிகாரங்களுக்கு ஆபத்து ஏற்பட்டாலும் பெட்ரிசியர்களின் செல்வாக்கை இது நிலைப்படுத்துவதாக அமைந்தது. சென்சார் பதவி (censor) நிறுவப்பட்டதில், வளரும் அரசின் எல்லாக் காரியங்களையும் இருவர் கவனிக்க முடியாதென்பதையும், தலைமைப்பதவியின் அதிகாரங்களைப் பிளெபியர்களோடு பகிர்ந்து கொள்ளமுடியாதென்பதையும் அரசு மெய்ப்பித்தது.

ஒரு குறிப்பிட்ட கால இடைவெளியில் அரசின் மெய்யான படைபலத்தை மதிப்பீடு செய்தல் அரசருக்கும், பிற்காலத்தில்

[1] Liv. v 2
[2] Zonar vii, 19
[3] Mommson, Staatsr. ii. p. 191.

கான்சல்களுக்கும், ஒரு வழக்கமாகும். எல்லாப் பெட்ரிசியப் பெருங்குடியினரையும் இது பதிவு செய்வதாக முதலில் இருந்தது. ஆனால், செர்வியசின் சீர்திருத்தங்களுக்குப்பின் இது குடிமக்களைக் கணக்கிடுவதாக மாறியது. படைச்சேவைக்குத் தகுதியுடையவர்களைக் கண்டுபிடிக்கவும், எந்த வகுப்பில் இவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டுமென்பதையும், வரி விதிக்கப்பட்டால் சொத்துவரிக்கு ஒவ்வொரு குடும்பத்தலைவரும் உள்ளாக வேண்டியதையும் இப் பதிவு குறிப்பிட்டது. இந்த நோக்கத்தை நிறைவேற்றக் குடும்பத்தலைவர்களை அழைத்து அவர்களை வினவுவது போதுமானதாக இருந்தது. இவர்களுடைய மறுமொழிகளைப் பதிவுகளாகக் கொண்டு, அதற்கேற்றபடி நிதி, படை ஆகிய பொறுப்புகள் அவர்களின்மீது சுமத்தப்பட்டன. இதன் அடிப்படையில் கொமிசியா செஞ்சுரியேட்டாவில் இவர்களின் அரசியல் செல்வாக்குக் கணிக்கப்பட்டது. இப் பதிவுகளில் சேர்க்கப்படுவதையொட்டியேகுடியுரிமைஏற்றுக்கொள்ளப்பட்டது. ஏனெனில் மிகப் பழங்காலந்தொட்டு, ஓர் இனத்தின் உறுப்பினர் பதவியே பொது உரிமையின் சின்னமாக விளங்கியது. ஆனால், இப்பொழுதோ பிளெபியரவைக்கு இனம் அடிப்படையாக அமைந்தது; ஏதாவதொரு இனத்தில் ஒருவர் உறுப்பினராய் இருந்தால் சொமிசியடிரிபியூட்டா அவருக்கு வாக்களிக்கும் உரிமையை வழங்கியது. மக்கள்தொகைக் கணிப்பு பெற்ற முக்கியத்துவம் கான்சல்களின் கடமை நிறைவேற்றத்திற்கு முரண்பட்டதன்று. ஆண்டுதோறும் பதவிக்குவரும் நிருவாகிகளின் நிதி, படைப்பணிகள் இதனுடைய முழுமையிலும் முறைமையிலும் குறுக்கிட்டன. கான்சல்களின் பதவியைத் தற்காலிகமாகத் தள்ளிவைத்தல் இப் பதவியின் கடமைகளை மற்ற நிருவாகிகளிடம் ஒப்படைக்க இஃது ஒரு வாய்ப்பளித்தது. கி. மு. 443 ஆம் ஆண்டில் சென்சார்கள் எனப் பெயர் கொண்ட இரண்டு புதிய அலுவலர்கள் அமர்த்தப்பெற்றனர். இவர்கள் கொமிசியா செஞ்சுரியேட்டாவினால் தேர்ந்தெடுக்கப் பெற வேண்டும். இப் பதவி பெட்ரிசியர்களுக்குரியதாக இருந்தது. ஏனென்றால், மக்கள்தொகைக் கணிப்பை முடிவிற்குக் கொண்டுவரும் புனிதமான தூய்மைச் சடங்கைப் பிளெபியர்கள் சரியானபடி செய்துவைக்க முடியாதெனக் கருதினர். இப் பதவியின் வருங்காலப் பெருமையை எவரும் கருதிப்பார்க்கவில்லை. இதன் தொடக்கம் மிக எளிமையானது. இப் பதவியை நிறுவுவதற்கான சட்டத்தைப் பிளெபியர்கள் எதிர்க்கவில்லை. பிற்காலத்தில் இப் பதவி பெரும் சிறப்பிற்குரியதாயிற்று.

சென்சார் பதவி நிலையானதெனினும் ஒரு பொருளில் பார்க்கும்போது இது அவ்வப்போது நிறுவப்படும் பதவியாக இருந்தது.

மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளுக்கு இடைப்பட்ட காலத்தை இவர்களின் பதவிக்காலமெனக் கொள்ளமுடியாது. வழக்கமாக இந்த இடைப்பட்ட காலம் ஐந்தாண்டாகும். முதலில் இருந்தவர்களின் பதவிக்காலம் தெரியவில்லை. ஒருவேளை சென்சார்களின் பணிகள் நிறைவுறும்வரை இவர்கள் பதவியில் இருந்திருக்கலாம். கி. மு. 434 ஆம் ஆண்டிற்குப்பின் சென்சாரின் பதவிக்காலத்தை ஒரு சட்டம் (lex Aemilia) ஒன்றரை ஆண்டாக வரையறுத்தது. ஒரு குறிப்பிட்ட பதவிக்காலத்தோடு கூடிய சுயேச்சையான நிருவாகி ஒருவரை இச் சட்டம் படைத்ததாக மாம்சன் நினைக்கிறார். இஃது ஒரு சுயேச்சையான நிருவாகப் பதவியாக முதலில் இருந்திருக்கலாம். ஆனல், அப்பொழுது குறிப்பிட்ட பதவிக்காலத்தை இது பெற்றிருக்கவில்லை. எனவே, சென்சார்கள் முதலில் ஐந்தாண்டுப் பதவியிலிருந்ததாக நம்பிக்கையுண்டாயிற்று.[1] மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் தன்மையைப்போல் சென்சாரின் கடமைகளும் பரவலாகக் காணப்பட்டன. பதிவு செய்தல் இவருடைய முதன்மைப் பணியாகும். ஆனல், தனிப்பட்டவர்களின் மீது பணப்பொறுப்பை சுமத்துவதாக இது பொருள் பெற்றது. எனவே சென்சார் நிதியோடு தொடர்புபடுத்தப் பெற்ருர். பதிவையொட்டியெழுந்த மற்ருெரு விளைவு மிகச் சிறப்பு வாய்ந்ததாகும். உரோமில் மிக எளிதான பதவிப் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்குக்கூட குணத்தகுதிகள் தேவையெனக் கருதப்பட்டன. குற்றத்தால் மாசுபடாக் குணத்தினருக்குத்தான் இனங்களிலும் நூற்றுவர் பிரிவுகளிலும் சேரவும் இதன் வழியாகப் பயனுள்ள முறையில் சபையில் வாக்களிக்கவும், படையில் பணியாற்றவும், தகுதியுண்டு. தூய்மைப்படுத்தும் சடங்குகளில் தூய்மையற்றவர் பங்கு பெறலாகாதெனும் சமயச்சார்புடைய கருத்துச் சமயச்சார்பற்றவர்களுக்கும் உதவியாக இருந்திருக்கலாம். கான்சல்கள் மேலெழுந்த வாரியாக இக் குண ஆய்வுகளைச் செய்திருக்க வேண்டும். ஆனல் இப்பொழுது சென்சார் ஒருவர் அமர்த்தப்பட்டிருந்ததால் இவரால் ஆழ்ந்து நிதானமாகக் குணஆய்வு நடத்த முடியும். செயல்முறை விதிகள் காலப்போக்கில் சென்சார் பதவியின் இயல்பை மறைத்துவிடுவதாகவும் இருந்தன.

கான்சுலர் டிரிபியூனேட்டையும் சென்சார் பதவியையும் நிறுவியதோடு புதிதாகப் படைக்கப்பட்ட கொமிசியா டிரிபியூட்டாவிற்கு குவெஸ்டர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை மாற்றியதைத் தவிர கி. மு. 449-க்கும் 377-க்கும் இடைப்பட்ட காலத்தில் வேறெந்த அரசியலமைப்பு மாற்றமும் ஏற்படவில்லை. இக்காலத்தில் உடன்பாடுகள் ஏற்பட்டனவேயன்றித் தீர்வுகள்

[1] Liv. iv. 24 & Liv. ix. 34

எதுவும் காணப்படவில்லை. போர் நெருக்கடியால், சீர்திருத்தம் விரும்பியவர்களின் கிளர்ச்சிப் போக்கு நிறுத்திவைக்கப்பட்டது. ஆளும் வகுப்பினரின் இராணுவக் கொள்கையை இதனால் குற்றம் சாட்ட முடியவில்லை. இக் கொள்கையால் படைகள் பெரும் வெற்றி பெற்றன. பிளெபியர்களின் திறமைக்குத் தேவையான எல்லாச் சலுகைகளையும் அளித்தது. கடன் பளுவினாலும் நிலப் பகிர்வின் தேவையினாலும் இக் காலத்தில் அதிருப்தி காரணமாக மக்கள் கிளர்ச்சி செய்தார்கள். வறுமையை அகற்ற அரசு சில சலுகைகளை அளித்தது. கி. மு. 406-ல் வெளி நாடுகளில் பணியாற்றிய படையினருக்கு ஊதியம் அளிக்கப்பட்டது. வென்று கைப்பற்றிய நிலமும் சிறிது காலத்திற்குப் பின், பிளெபியர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டது. வறியவர்களின் குறைபாடுகளைச் சமாளித்த அரசு உயர்நிலையில் இருந்த பிளெபியர்களுக்கும் சில தவிர்க்க முடியாத சலுகைகளைச் செய்தது. கி. மு. 421-ல் குவெஸ்டர்களின் எண்ணிக்கை இரண்டிலிருந்து நான்காக உயர்த்தப்பட்டது. தொடர்ந்து படைகள் நகருக்கு வெளியில் இருந்ததால் களத்தில் பணியாற்றிய கான்சல்களுக்கு உதவியாக ஒரு குவெஸ்டர் அமர்த்தப்பெற்றார்[1]. இந்தப் பதவிகளில் ஒரு குறிப்பிட்ட அளவு பிளெபியர்களுக்கு ஒதுக்கியளிக்க வேண்டுமென பிளெபியர்கள் கோரினார்கள். இது மறுக்கப்பட்டது. ஆனால், நான்கு இடங்களில் எந்த இடத்திற்கும் பிளெபியர்கள் அமர்த்தப்படலாம் என்ற உடன்பாடு ஏற்பட்டது ஏனெனில் மிக உயர்ந்த நிலைகளில் பிளெபியர்களை ஏற்றுக்கொண்டுவிட்டு கீழ் நிலைகளில் இவர்களைத் தவிர்க்கப் பார்ப்பது தவறான தென்பதை உணர்ந்தனர். ஆனால் கி. மு. 409 வரை இச் சலுகை செயற்படுத்தப்படவில்லையெனினும் இதற்குப் பின், கொமிசியா டிரிபியூட்டா நான்கு காலியிடங்களுக்கு மூன்று பிளெபியர்களைத் தேர்ந்தமர்த்தியது. நிருவாகியின் அதிகாரங்களும் மாண்பும் குறைந்திருந்த போதிலும் முறையாகத் தேர்ந்தெடுக்கப்படும் முதல் நிருவாகப் பதவியை இப்பொழுது பிளெபியர்கள் பெற்றார்கள்.

இதற்கிடையில் தற்காலிக அரசு தொடர்ந்திருந்து வந்தது. இது பல இராணுவ வெற்றிகளைப் பெற்றது. ஆனால், போரின் விளைவுகளும் மக்களுக்குக் கேடு விளைப்பதாக இருந்தன. படையினர் ஊதியம் பெற்றபோதிலும், ஒரு சிலர் நிலம் பெற்ற போதிலும தனிப்பட்ட உழவர்களின் நிலை பரிதாபமாக இருந்தது. அனைத்துப் பிளெபியர்களின் குறைபாடுகளைப் பற்றிப் பேசுவதற்கில்லை; ஏனெனில் செனெட் சபையில் இடம் பெற்ற

Liv. iv. 43

பிளெபியர்களும் அல்லது இராணுவ டிரிபியூன் அல்லது குவெஸ் டர் பதவியை நாடியவர்களும் பெட்ரிசியர்களைப் போலவே மிகச் செல்வ வளமுடையவர்களாக இருந்தனர். இரு வகுப்பின ரிடையே பதவிக்கான போட்டி கடுமையாக இருந்தது. பெட்ரி சியர்கள் இப்பொழுது குயுலை பதவிக்கு மன்றாட வேண்டி யிருந்தது. கி. மு. 432-ல் தேர்தலாதரவு தேடுதலுக்கு எதி ராகச் சட்டம் நிறைவேறியது. தேர்தலுக்குமுன் வேட்பாளர்கள் அங்கிகளை வெண்மையாக்குதல் இச் சட்டத்தால் தடை செய்யப் பட்டது. இந் நடவடிக்கை முதிராப் பண்புடையதாயினும் தேர் தலில் பிளெபியர்களின் செல்வாக்கை இஃது எடுத்துக்காட்டு கிறது. தனிப்பட்ட பிளெபியர்கள் பெருஞ் செல்வத்தில் திளைத் தாலும் பெரும்பான்மையான பிளெபிய உழவர்கள் வறிய நிலையில் இருந்தார்கள்.

வகுப்பினரிடையே சமத்துவத்தைப் பெற விரும்பிய செல்வ முடைய பிளெபியர்கள் மக்களின் மனக்குறையை ஒரு வாய்ப் பாக்கிக் கொண்டனர். கி. மு. 378-ல் செல்வர்களுக்கெதிராக பெருத்த எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டது. வோல்சிய் (Volsci) களோடு போர் ஏற்பட்டதால் படை திரட்டவேண்டிய நிலை ஏற்பட்டது. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு டிரிபி யூன்கள், கடன்பட்டவர்களுக்கு அரசிடமிருந்து சில சலுகைகளைப் பெற்றுத் தந்தார்கள். அடுத்த ஆண்டு இவர்களின்மீது சில கடமைப் பொறுப்புகள் சுமத்தப்பட்டபொழுது இரண்டு ஆர்வ மிக்க பிளெபியர்கள் ஒரு திட்டம் தீட்டினர்[1]. இதன்படி, நிரந்தர மாகக் கீழ்நிலையில் இருந்த பிளெபியர்களின் துயரை நீக்கவேண்டு மெனில் இரண்டு கான்சல் பதவிகளில் ஒன்றைப் பிளெபிய வகுப்பினரடைய வேண்டுமென்பதாகும். இந் நோக்கத்தை எட்ட, அரசியல், சமூக நடவடிக்கைகளைக் கொண்ட ஒரு திட்டத்தை உருவாக்கினர். இவர்கள் அறிவித்த தீர்மானம், கடன் சுமைத் தணிவை அளிப்பதாக உறுதியளித்தது; தனிப்பட்டவர்கள் பெற்றிருக்க வேண்டிய நிலத்திற்கு ஒரு வரையறை விதித்தது; இராணுவ டிரிபியூனேட் ஒழிக்கப்பட வேண்டுமென அறிவித்தது; மறுபடியும் கான்சல் பதவி கொண்டுவரப்பட வேண்டுமென விதித்தது; இனிமேல் இரண்டு கான்சல்களில் ஒருவர் பிளெபிய ராக இருக்க வேண்டுமென எடுத்துரைத்தது. இந்த விரிவான நடவடிக்கை நிலம், முதல், பதவி ஆகியவற்றைத் தாக்கியது. இத் தாக்குதல்களும் எளிதாகச் சமாளிக்கப்பட்டன. இரண்டு டிரிபியூன்கள் தனித்து நின்றனர். இவ்விருவரின் எட்டுக் கூட் டாளிகளும் இப் புரட்சிமிக்க நடவடிக்கைக்குத் தடையாணை

[1] L. Sextins and C. Lignius Stolo.

விதிக்க எளிதாகத் தூண்டப்பட்டனர். ஆனால், பிளெபியர்களின் நலனிற்கு எதிராகத் தடையாணை விதிக்கப்பட்டால், அரசை முடிவிற்குக் கொண்டுவரக் கூடிய டிரிபியூன்களின் எதிர்மறையான அதிகாரத்தைச் செயற்படுத்த வேண்டிவருமென அறிவித்தார்கள். இந்த இரண்டு டிரிபியூன்களும் காலப்போக்கில் பெற்ற தலையாய அதிகாரத்தைப் பயன்படுத்தி மக்களின் நிருவாகி எவரும் தேர்ந்தெடுக்கப்படுவதைத் தடை செய்தனர். கி. மு. 375-ல் இருந்து 371 வரை ஐந்தாண்டுகள் அடுத்தடுத்து லிசினியசும் செக்ஸ்டசும் டிரிபியூன்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இக் காலத்தில் பிளெபிய ஈடில்களும் டிரிபியூன்களும் மட்டுமே நிருவாகிகளாக அமர்த்தப் பெற்றனர். அரசு தலைவரின்றி இருந்தது. போர்சூழ்நிலைக் காரணமாக டிரிபியூன்கள் 370-ல் தம் சட்ட ஒழுங்கற்ற கட்டளையைத் தளர்த்தினர்கள். இந்த நீண்ட போராட்டம் வாக்களிக்கக் கூடிய டிரிபியூன்களின் எண்ணிக்கையை ஐந்தாகக் குறைத்துவிட்டது. முதல் திட்டத்தில் இன்னொரு பிரிவு சேர்க்கப்பட்டது. இதன் விளைவாகப், புனித நூல்களையும் பண்டசாலையையும் பேணுகிறவர்களின் எண்ணிக்கை பத்தாக உயர்த்தப்பட்டது. இப் பத்துப் பேர்களில் பாதிப்பேர் பிளெபியர்களாக இருக்க வேண்டுமென விதிக்கப்பட்டது. 368ஆம் ஆண்டிற்கான டிரிபியூன்கள் எவரும் இச் சட்டத்தின் எப்பிரிவையும் பயனுள்ள முறையில் எதிர்க்கத் தயாராக இல்லை. எனவே, அதிகாரத்தை இழந்துவந்த பெட்ரிசியர்கள் சர்வாதிகாரியின் வழியாகப் பாதுகாப்புப் பெற்றனர். இஃது இவர்களின் அதிகார இழப்பிற்கு ஓர் அடையாளமாகும். ஏனெனில் சர்வாதிகாரியின் பதவி தொடர்ந்திருந்துவர இயலாததாகும். பிளெபியர்களின் பழைய கோரிக்கைகளைப் பற்றி நிற்கச் செய்வதற்கு இவர்களுடைய தலைவர்கள் அயராது பாடுபட வேண்டியிருந்தது. பிளெபிய வகுப்பினரைக் கான்சுலர் டிரிபியூன்களாகவும் குவெஸ்டர்களாகவும் தேர்ந்தெடுக்க உரிமை பெற்றிருந்ததும் அதைப் பயன்படுத்தத் தவறி அயர்ந்துபோயிருந்த பொது மக்கள், சமூக நடவடிக்கைகளை உடனடியாக நிறைவேற்றவும் கான்சல் பதவி பற்றிய பிரச்சினையை வருங்காலத்திற்கு விட்டுவிடவும் முடிவு செய்தனர். ஆனால், லிசினியசும் செக்ஸ்டியசும் இவைகளை நிறைவேற்றிவிட்டு வெறும் சமூகத் தலைவர்களாக இருக்க விரும்பவில்லை. சிக்கலான நடவடிக்கையில் புதிய பதின்மர் குழுவில் பாதிப்பேர் பிளெபியராக இருக்க வேண்டுமென்பதை மட்டும் 368-ல் நிறைவேற்ற இவர்கள் தயாராக இருந்தனர். திட்டத்தின் மற்றப் பிரிவுகள் ஒத்தி வைக்கப்பட்டன. கி. மு. 367-ல் இவர்கள் இருவரும் பத்தாவது முறையாக டிரிபியூன்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள்.

எதிர்ப்பும் மறைந்தது; முன்னிருந்த உருவில் லிசினியோ செக்ஸ்டியன் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. மிகப் பெரிய வெற்றியைப் பிளெபியர்கள் பெற்றார்கள்; இக் காலத்திலிருந்து பிளெபியர்கள் அரசில் உண்மையாகவே ஆதிக்கமுள்ள பிரிவினராகவு இருந்தனர். பிளெபியர் சில காலமாக முழுமையான அதிகாரத்தை வலியுறுத்தாதது பெரும் விளைவுகளை ஏற்படுத்தவில்லை. மேலும், இவர்கள் விரும்பியதை எல்லாம் பெற்றார்கள். உரோமில் நிருவாகப் பதவி மக்களைவிடப் பெரும் அதிகாரம் பெற்றிருந்ததால், இப் பதவி டிரிபியூன்களின் வழியாக மிக உயர்ந்த தடையதிகாரம் முழுவதையும் செயற்படுத்தியது; கான்சல் பதவியின் மிக உயர்ந்த அதிகாரத்தில் பாதிக்குமேல் இது தனியுரிமையாக்கிக் கொண்டது. இப் பதவி தலையாயதென உறுதியாய்ச் சொல்லலாம். பெட்ரிசியர்களின் சிறப்புரிமையாகிய குடும்ப அதிகாரம்கூட இந்த அதிகாரத்திற்குப் பெரும் இடையூறாக இருக்கவில்லை. பெரும் அளவில் பிளெபியர் செனெட் சபையில் நுழைந்ததும் இவ்வதிகாரம் வெற்று முறையாகவே இருந்தது.

அரசிற்கு இரண்டு புதிய நிருவாகிகளைச் சேர்த்தது லிசினியன் சட்டங்களின் எதிர்பாராத விளைவுகளாகும். இப் பதவிகள் பிரீட்டர் (Praetorship) என்றும் குயுருல் ஈடில் (Curale Aedileship) என்றும் பெயர் பெற்றன. பிரீட்டர் பதவி நிறுவப்பட்டதை முதல் முக்கியத்துவம் வாய்ந்த அரசியலமைப்பு மாற்றமெனலாம். பிரீட்டரைக் கான்சல்களின் மூன்றாவது கூட்டாளியெனலாம். வகுப்புகளுக்கிடையே ஏற்பட்ட உடன்பாட்டில் இப் பதவி ஓர் அங்கமாகும். பறிமுதல் செய்யப்பட்ட கான்சல் பதவிக்கு ஈடாக முற்றிலும் வகுப்பு அடிப்படையில் இந் நிருவாகியின் பதவி படைக்கப்பட்டது. ஆனால், பெட்ரிசியர்களுக்கு உட்பட்டதாக பிரீட்டர் பதவியை நாம் கருதினால் பேரார்வத்தைவிட தேவையே இப் பதவியின் படைப்பிற்குக் காரணம் என்பதை மறக்கலாகாது. கான்சலின் அதிகாரங்களைச் செயற்படுத்துவதில் போதிய அளவு கவனம் செலுத்த இயலாமையால் கான்சுலர் டிரிபியூனேட் பதவியை நிறுவுவதற்குக் காரணமாக இருந்தது. இப்பொழுது கான்சல் பதவிகள் நிரந்தரமாக மீண்டும் நிறுவப்பட்டதால் இப் பதவியிலிருந்து நிரந்தரமாக சிவில் செயலாட்சியைப் பிரிப்பதற்கு ஓர் ஏற்பாடு செய்யவேண்டியிருந்தது. இச் செயலாட்சி முழுமையான அதிகாரத்தை உட்கொண்டிருந்ததால் இந்த அதிகாரத்தை பெற்றிருந்தவர்களெல்லாம் கூட்டாளிகளாக இருக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. பிரீட்டரும் கான்சலின் கூட்டாளியாக இருந்தார். "அதே சகுனங்களின்படியே" இப் பதவியும் படைக்கப்

பட்டது. ஆகவே அதே சபையால் அதே சடங்குமுறைகளின்படி இவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். கான்சல்களின் பழைய பட்டங்களை இவர் பெற்றிருந்தார். வழக்கமான இவருடைய அமைதிக் காலப்பணிகளுக்கு இப் பட்டங்கள் பொருத்தமில்லையென்றாலும் தொடர்ந்திருந்து வந்தன. சட்ட அதிகாரத்திற்காக இவர் முதன்மையாகத் தேவைப்பட்டாலும் முழுமையான அதிகாரத்தின் ஒரு பிரிவைத் தனிப்படுத்த இயலாது. போரில் தலைமை தாங்கும் தகுதி, சட்டங்களைக் கொணர்தல், செனெட்சபையைக் கூட்டிக் காரியங்களைச் செயற்படுத்தல் போன்ற தலையாய அதிகாரத்தின் எல்லாப் பண்புகளையும் பிரீட்டர் பெற்றிருந்தார். கான்சலின் அதிகாரங்களோடு இவருடைய அதிகாரங்கள் எவ்வாறு பொருத்தப்பட்டன என்பதையும் கீழ்ப்படுத்தப்பட்டனவென்பதையும் பின்னர் பார்க்கலாம். தொடக்கத்தில் இருந்த பிரீட்டரின் பணிகள் இவருடைய கூட்டாளிகளின் பணிகளோடு மோதவில்லை. கருத்தளவில் சட்ட அதிகாரத்தின் கட்டுப்பாட்டைக் கான்சல்கள் இழந்ததில்லையெனினும் பிரீட்டரின் பணிகளில் குறுக்கிடவில்லை. 120 ஆண்டுகளுக்கு மேலாக (366-242) உரோமில் இவரே தனிப்பட்ட சிவில் மாஜிஸ்டிரேட்டாக இருந்தார். இக் காலத்திற்குப் பின் இரண்டாவது பிரீட்டர் ஒருவர் அமர்த்தப் பெற்றார். வெளிநாட்டினருக்கிடையிலான வழக்குகளையும் குடிமக்களுக்கும் வெளிநாட்டினருக்குமிடையிலான வழக்குகளையும் முடிவு செய்வது இவருடைய கடமையாக இருந்தது. உரோமின் ஆட்சி நிலவளர்ச்சியும் செயற்பெருக்கமும் இக் கூடுதல் பதவிக்குக் காரணங்களாகும். இப் பதவிக்கு வேறெந்த அரசியல் சிறப்புமில்லை.

பிரீட்டர் பதவி பெட்ரிசியர்களின் தனியுரிமையாகக் கடைசிவரை இருக்கவில்லை. இப் பதவி தோன்றி முப்பதாண்டிற்குப்பின் (கி. மு. 337) ஒரு பிளெபியர் (Publilius Philo) இப் பதவிக்குப் போட்டியிட்டு அதில் வெற்றி பெற்றார். தேர்தலை நடத்திய நிருவாகி எழுப்பிய சட்டத்தொடர்புடைய அல்லது வழக்கத்தொடர்புடைய எதிர்ப்புகள் ஏற்கப்படாமல் பிளெபியர்கள் இப் பதவிக்குத் தகுதியுடையவர்களென அறிவிக்கப்பெற்றது.[1]

பிரீட்டர்களோடு அமர்த்தப்பட்ட இரண்டு கூடுதல் ஈடில்கள் பெட்ரிசியர்களுக்கு ஒன்றுங்கொடுக்கவில்லை என்றாலும் அரசிற்குப் பெருமளவு நன்மை செய்தனர். நீதி வழங்குவதையும் பதிவைக் கவனிப்பதையும் கான்சலின் இராணுவக் கடமைகள் தடுத்தன; காவல், அங்காடி ஆகியவைகளின் சிறு விவரங்களில் இவர் ஈடுபடமுடியாமல் தடைசெய்தன. இக் கடமைகள் டிரிபி

[1] Liv. viii 15.

யூனின் இரு உதவியாளர்களிடமிருந்தனவென்பது ஒரு முறை கேடாகும். இவர்களிடமிருந்துதான் இப் புதிய இரு நிருவாகிகளும் பெயர்களைப் பெற்றனர். பிளெபிய அலுவலர்களும் சமூகத்தின் புதிய நிருவாகிகளும் ஒத்த பணிகளாலும் பட்டங்களாலும் ஒரே நிறுவனமாக இணைந்தனர். புதிய நிருவாகிகள் கபிற்காலத்தில் ஈடில் குயூருல் (aediles curules) என்ற பெயர் பெற்றனர். இப் பதவிக்கு முதலில் பெட்ரிசியர்கள் தகுதி பெற்றிருந்தார்கள். ஆனால், அப் பெட்ரிசியர்களிலிருந்தும், பிளெபியர்களிலிருந்தும் மாறிமாறி ஆண்டுதோறும் குயுருல் ஈடில்கள் தெரிவு செய்யப்பட வேண்டுமென்ற ஒரு நடைமுறைக்குப் பதிலாக விரைவில் இது கைவிடப்பட்டது. கி. மு. 213-ல் இது ஒரு விதியாக இருந்தது.[1] குடியரசின் கடைசி நூற்றாண்டுவரை இது விதியாக இருந்ததென மாம்சன் கருதினர்.[2] பிற்காலத்தில் இரு வகுப்பினரும் இப் பதவியைப் பெறத் தகுதி பெற்றனர்.

பிளெபியர்கள் கான்சல் பதவியை ஏற்றது மைய நிலையாயிற்று. மையத்தின் தயக்கத்தை இது தகர்த்தெறிந்தது; சிறிது காலத்தில் பெட்ரிசியர் உரிமை கொண்டாடிய பதவிகள் எல்லாம் கைப்பற்றப்பட்டன. கி. மு. 356-ல் பிளெபியரொருவர் சர்வாதிகாரியாக அமர்த்தப்பெற்றார்.[3] பிளெபியரை இப் பதவியில் அனுமதிப்பதற்குச் சட்டமெதுவும் தேவைப்பட்டதாகத் தெரியவில்லை. கான்சல் பதவிக்கான தகுதிகளே சர்வாதிகாரிக்கும் பொருந்துவதாகக் கருதப்பட்டது. 351-ல் முதன்முறையாக பிளெபியர் ஒருவர் சென்சார் பதவிக்கு ஏற்றுக்கொள்ளப்பெற்றார். முன்பு சர்வாதிகாரியாக இருந்த மார்சியல்ருட்டிலஸ் இப் பதவியில் அமர்த்தப் பெற்றார். ஆனால் ஏற்றுக்கொள்ளப்படும் தன்மை மட்டும் போதாது. எனவே, 339-ல் பிளெபிய சர்வாதிகாரியாய் இருந்த பியுப்லிலியஸ் பிலோ (Publilius Pnilo) என்பவர் சென்சார் பதவிகளில் இரண்டில் ஒன்றை பிளெபிய வகுப்பின் உறுப்பினருக்கு ஒதுக்கி அளிக்கவேண்டுமெனச் சட்டமொன்றை நிறைவேற்றினர். இச் சட்டம் ஒருபுறமிருக்க, கி. மு. 131-ல் முதன்முதலில் பிளெபியருக்கான சென்சார் பதவி ஒதுக்கப்பட்டதிலிருந்து இப் பதவியைப் பெற பிளெபியர் எவ்வளவு பாடுபட்டிருக்கவேண்டுமென்பது தெரிகிறது. இரண்டு கான்சல் பதவிகளையும் பிளெபியர் அடைவதைப் பொறுத்தவரை இதன் முறைமை உடைமைபற்றி ஐயப்பாடு இருந்ததாகத் தெரிகிறது. 342-ல் நிறைவேறிய தீர்மானம் சட்டமாக மாறியபின் இந்த ஐயப்பாடு நீங்கியது. இருப்பினும்,

[1] Polyb x, 4.
[2] Momm. Staatsr. ii. p 482
[3] Marcius Rutiles

கி. மு. 172ஆம் ஆண்டு வரையில் இரு கான்சல் பதவிகளிலும் பிளெபியர் இருக்கவில்லை.[1] கி. மு. 337-ல் இவர்கள் பிரீட்டர் பதவியைக் கைப்பற்றியதை முன்னரே பார்த்தோம்.

இன்னுமொரு வலிமையான பதவியை இவர்கள் கைப்பற்ற வேண்டியிருந்தது. இது சமயகுருமார் குழுவாகும். பிளெபியர்கள் ஏற்கெனவே இடம் பெற்றிருந்த பதின்மர்குழுவைத் தவிர, தலையாய அரசியல் சிறப்பு வாய்ந்த இரண்டு சமயகுழுக்கள் (கழகங்கள்) இருந்தன. இவை தலைமைக் குருமார் குழுவும் குறி சொல்வோர் குழுவுமாகும். முடியாட்சிக் காலத்தில் இத் தலைமைக் குருமார் குழு ஐவரையும் இப்பொழுது நால்வரையும் கொண்டிருந்தது. விரட்டப்பட்ட அரசருக்குரிய இடம் இப்பொழுது காலியாக இருந்தது. இதைப் பற்றி லிவி வியந்துள்ளார். குறி சொல்வோர் குழுவில் மூன்று உறுப்பினரே இருந்தமையால் இதை ஒரு தற்செயல் நிகழ்ச்சியென்கிறார்.[2] ஒவ்வொரு இனத்திற்கும் ஒருவராக மூன்று இனங்களுக்கும் மூவரை உரோமுலஸ் அமர்த்தினர். அரசரையும் சேர்த்து இக் குருமார்கள் குழுவில் நால்வர் இருந்தனர். இவர்களோடு நூமா இருவரைச் சேர்த்தார்.[3] இது குழுவின் உறுப்பினரை அறுவராக்கியது. இந்த உறுப்பினர் எண்ணிக்கை இயல்பானதென லிவி கருதுகிறார். கி. மு. 300-ல், சகுனம் பார்ப்போர் குழு உறுப்பினர் எண்ணிக்கையை ஒன்பதாகவும், குருமார்குழுவின் உறுப்பினர் தொகையை எட்டாகவும், உயர்த்துவதற்கென இரண்டு டிரிபியூன்கள் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார்கள். இவ்விரு குழுக்களிலும் புதிதாக இடம்பெறும் உறுப்பினர்கள் பிளெபியர்களாக இருக்க வேண்டுமென மசோதா விதித்தது. இக் குழுக்களின் உறுப்பினர் எண்ணிக்கை சல்லா (Sulla) வின் காலம் வரை மாற்றப்படாமல் இருந்தது. இவைகளின் உறுப்பினரெண்ணிக்கையைச் சல்லா பதினைந்தாக உயர்த்தினர். இரு குழுக்களுக்கும் ஜூலியஸ்சீசர் பதினாறுவது உறுப்பினரைச் சேர்த்தார்.[4] ஏற்கெனவே குயுரூல் பதவியையும் வெற்றியணிவகுப்பு உரிமையையும் பெற்றிருந்த செல்வம் மிக்க பிளெபியர்களின் நலன் கருதி இந் நடவடிக்கையெடுக்கப்பட்டது. பிளெபியர்களின் உரிமைகளுக்கு இது பெருமளவில் உதவியது. ஏனெனில், சமயத் தடையாணையைக் கீழ்நிலை வகுப்பினரின் நலன்களுக்கெதிராகப் பயன்படுத்திப் பிளெபியர்களின் நடவடிக்கைகளைத் தடைசெய்ய முடியாது. சட்டமாக்கப்பட்ட இந்த மசோதா, வகுப்பினருக்கிடையில் சமத்துவத்தை

[1] Liv, xiii. 9; Fast Cap G I L, i p 25.
[2] Liv. x 6 ii 14, 26.
[3] Cice o de Rep ii. 9, 16,
[4] Liv. x 6. Ep 89

நிறுவியது அரசியலல்லாத குருமார் பதவிகளிலிருந்து பிளெபியர் கள் விலக்கி வைக்கப்பட்டிருந்தார்கள். ஆனால் பிற்காலத்தில் நிறு வப்பெற்ற தேசிய முக்கியத்துவம் வாய்ந்த சமயக்குழு ஒன்று முற்றிலும் பிளெபியர்களை உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. இம் மாற்றம் மறைமுகமாகப் பிளெபியர்களுக்குச் சாதகமாக இருந்தபோதிலும் மக்களாட்சி இயல்புடையதாக இருக்கவில்லை; சமயக் குருமார் அமைப்புகள் அமர்த்தல் வழிமுறையாக ஒரு சில பிரபல குடும்பங்களுக்குட்பட்டவைகளாக இருந்தன. கி.மு. 453-ல் இருந்த ஒத்தத் தேர்ந்தெடுக்கும் முறை பயன்படுத்தப் பெற்றது. குடியரசின் இறுதி நூற்றுண்டில் (கி. மு. 104) தேர்தல் முறையை மக்களிடம் விடாமல், ஒரு சட்டத்தால் சீட்டுக்குலுக்குத் தேர்வு முறையைப் பயன்படுத்தி முப்பத்தைந்து இனங்களில் பதி னேழைத் தேர்ந்தெடுத்து அவைகளைக் கொண்டமைந்த ஒரு தனிப்பட்ட அவையிடம் இத் தேர்தல் விடப்பட்டது. இதன் பின்னும் சமயக்குழுவின் தலைவரால் நியமனம் செய்யும் முறையும் இதன் உறுப்பினர்களால் ஒத்து அமர்த்தும் முறையும் வழுவாமல் பின்பற்றப்பட்டன.[1]

பட்டம் பதவிகளைப் பெறுவதற்கான பிளெபியர்களின் போராட்ட நிகழ்ச்சிகளை வரைவதில் நாம் காலக் கணிப்பு முறையைப் பின்பற்றியுள்ளோம். இக் காலத்தின்போது பொது மக்களும் அரசியல் விடுதலையில் பங்கு பெற்றனர். ஒகுல்னியன் சட்டம் (Oqulnian Law) வருவதற்கு (கி. மு. 300-க்கு) முப்பத் தொன்பது ஆண்டுகளுக்கு முன்பே பிளெபிய சமுதாயத்தின் சுதந்திரத்தை அதிகரிக்கச் சட்டத்தால் வழி செய்யப்பெற்றது. பெட்ரிசியர்களின் சட்டக் கட்டுப்பாட்டிலிருந்து பிளெபியர்களின் அவைகளுக்கு விடுதலையளிக்க சில நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன. கி. மு. 339-ல் தீர்மானங்கள் (plebisita) மக்களைக் கட்டுப்படுத்துவதற்கான சட்டமொன்றைச் சர்வாதிகாரி பியூப் லியஸ் பிலோ என்பவர் நிறைவேற்றினர்[2]. அறிஞர்கள் இச் சட்டத்தின் பொருளைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. வலீரியோ-ஹொரேசியஸின் சட்டத்தைப் போல் இச் சட்டமும் வரையப்பட்டிருந்தது. ஆனல் பிளெபியர்களால் எடுத்துக் கொள்ளப்பெற்ற நடவடிக்கைகளுக்குச் சட்டத்தகவு நிலையை அளிப்பதே இச் சட்டத்தின் நோக்கமாக இருந்தது. தீர்மா னங்கள் சட்டங்களாக மாறியது. ஒரு முறையாக இருந்ததே யன்றி உண்மையில் முக்கியத்துவம் பெறவில்லை. குடும்பத் தலை வர்களின் அதிகாரம் பற்றி இதே சர்வாதிகாரி மற்றொரு சட்டம் இயற்றினர். குடியரசு தோன்றிய காலத்திலிருந்தே இந்த அதி

[1] Cic. de Leg. Agr. ii, 7, 18.
[2] Liv. vi.. 12

காரம் எப்படி வந்ததென்பதை நாம் அறிவோம். பொதுமக்கள் குயுரிகளாகவும் செஞ்சுரிகளாகவும் கூடி நிறைவேற்றும் நடவடிக்கைகளைச் செனெட் சபையின் பெட்ரிசிய உறுப்பினர்கள் ஏற்பதா அல்லது தள்ளிவிடுவதா என்பது ஓர் உரிமைக் கோரிக்கையாக இருந்தது. இது தீர்மானங்களைப் பாதிக்கவில்லை. கொமிசிலா டிரிபியூட்டாவின் நடவடிக்கைகள் அதன் பார்வைக்கு விடப்பட்டதா இல்லையாவென்பதும் தெரியவில்லை. இக் காலத்தில் கொமிசியா குயூரிடே இடையூறுக்குள்ளாக்கப்பட்டது, முக்கியமானதன்று. செஞ்சுரிகளின் அதிகாரங்களுக்கு மட்டுமே பியுப்லிலியஸ் சட்டம் பயன்படுத்தப்பட்டது. வாக்களிப்புத் தொடங்குவதற்கு முன் கொமிசியா செஞ்சூரியேட்டாவினுல் நிறைவேற்றப்பட்ட சட்டங்களுக்கு இசைவளிக்க வேண்டுமென இச் சட்டம் விதித்தது. இச் சட்டப் பிரிவு பிற்காலத்தில் (கி. மு. 338) மற்ருெரு சட்டத்தால் தேர்தல்களுக்கும் நீட்டிக்கப்பட்டது.[1] இந்த இரண்டு சட்டப் பிரிவுகளும் அதிகாரத்தைப் பயனற்றதாகச் செய்யவில்லையென்பது தெளிவு. ஏனெனில், நிறைவேறிய பின் ஒரு சட்டத்தை ஏற்க மறுப்பதைவிட செனெட் சபையின் ஒரு பிரிவினர் ஆய்விற்குரிய ஒரு பொருளை மக்களின் முன் வைக்க மறுப்பது கடினமில்லை. இருந்தபோதிலும், அதிகாரம் வெறும் தோற்றமாக வந்துகொண்டிருந்ததற்கு இந்த ஏற்பாடுகள் அடையாளமாகும். செனெட் சபையில் பிளெபியர்கள் விரைந்து பெருகிவந்ததே இதனுடைய சடங்கியல்பிற்குக் காரணமாகும்.

எனவே, பொதுமக்கள் அவைகள் பெட்ரிசியர்களின் கட்டுப்பாட்டிற்கு உட்படாதிருந்தாலும், செனெட் சபையின் அறிவுரையைப் பெறவேண்டுமென்ற வரம்புகளுக்குட்பட்டு கொமிசியாவிலிருந்து நிருவாகிகள் விரும்பும் எந்தக் கூற்றையும் கோரிப் பெறலாம். சட்ட ஆக்கத்தில் இருந்த இந்தக் குறையை உடனடியாகப் போக்க வேண்டியதாயிற்று. மற்ற அதிகாரங்களைக் காட்டிலும் சூழ்நிலைகளால் தனிச் சிறப்பு நிலைக்கு உயர்த்தப் பெற்ற பிளெபிய நிருவாகிகள் மற்ற நிருவாகிகள் பெற்றிருந்த சுயேச்சையைப் பெற்றிருக்கவில்லை. டிரிபியூன்களின் புதுக் கருத்துரைகள் பிளெபியர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டபொழுதும் சட்டமாவதற்கு மேலும் சில இசைவாணைகளைப் பெற வேண்டியிருந்தது. மக்களின் அவைகளைக் கூட்டவும், தலைமை தாங்கவும் டிரிபியூன்களுக்கு உரிமையளிப்பதாலும், இவர்களையே உண்மையில் மக்களின் நிருவாகிகளாகச் செய்வதாலும், பிளெபியரவையில் டிரிபியூன்களின் சட்ட ஆக்கத்திற்குத் தொடர்ந்து இருந்துவந்த இடையூறுகளை அகற்றுவதாலும், இம் முறை

[1] Cic. Brut. 14, 55. Liv. i. 17.

கேட்டை நீக்கலாம். உரோமானியர்களின் பிற்போக்கியல்பும், பிளெபியர்களின் புதிய கலகத்தின் விளைவுகளும் மூன்றும் நூற்றுண்டின் தொடக்கத்தில் மறுபடியும் தோன்றிய வகுப்புணர்ச்சியும் பின்னர் குறிப்பிட்ட கருத்தை மேற்கொள்ளத் தூண்டின. கடனால் ஒடுக்கப்பட்ட பொதுமக்கள் 287ஆம் ஆண்டில் மறுபடியும் பிரிந்து சென்றார்கள். ஆனால், இப்பொழுது ஜனிகும் என்ற இடத்தை நோக்கிச் சென்றனர். ஒரு தீர்வு காணுவதற்கென அமர்த்தப்பெற்ற பிளெபிய சர்வாதிகாரி சமூக மனக் குறைகளை அரசியல் சலுகைகளால் தீர்த்து வைத்தார். முன்பிருந்த சட்டங்களுக்கு முற்றிலும் மாறுபட்ட திட்டவட்டமான சட்டமொன்றை இவர் நிறைவேற்றினர். ஹோர் சென்கிலா சட்டம் பிளெபியர்களின் கட்டளைகளுக்குச் சட்டங்களின் முழு ஆற்றலையும் கொடுத்ததாக வழக்கறிஞர்கள் கருதினர்கள். இதற்குப் பின், சட்டத்திற்கும் கட்டளைக்கும் (Plebiscitum) உருவிலும் பெயரிலுமே வேறுபாடு இருந்தது; இவைகளின் ஆற்றல் ஒரே மாதிரியாக இருந்தது. சட்டச் சுருக்க விதிமுறைகளும் இச்சொற்களை ஒரே மாதிரியாக பயன்படுத்தியுள்ளன. கட்டளையை ஒரு சட்டம் நீக்கலாம்; சட்டத்தை ஒரு கட்டளை நீக்கலாம். இவைகளுக்கிடையில் மோதல் ஏற்பட்டால் பன்னிரு பட்டிகைகளின் விதிப்படி இது தவிர்க்கப்பட்டது. ஆகையால், நிகழ்ச்சிப் பதிவாளர்கள் பிளெபியர் என்ற சொல்லையும் பொதுமக்கள் என்ற சொல்லையும் நடுநிலையாகப் பயன்படுத்தியுள்ளனர். ஒரு குறிப்பிட்ட சமயத்தில் குறிப்பிட்ட அவைக்குத் தலைமை தாங்கும் நிருவாகியைக் கவனமாகப் பார்த்து, இவர் வெளியிடும் கட்டளை கொமிசியாவிற்குரியதா அல்லது கொன்சிலியத்திற்குரியதாவென்பதை நாம் உறுதி செய்யலாம். முழுமையான அதிகாரத்தைப் பெற்றிருந்த நிருவாகி செஞ்சுரி இனங்கள் ஆகியவைகளின் (கூட்டங்களுக்கு) அவைகளுக்குத் தலைமை தாங்கினர். பிளெபிய நிருவாகிகள் (கொன்சிலியம்) பிளெபியரவையைக் கூட்டவும், உரையாற்றவும் அதிகாரம் பெற்றிருந்தார்கள். இருப்பினும், பல்வேறு அவைகளின் தேர்வு முறைகளும், பணிகளும் கடந்த கால வரலாற்பின்படி திட்டவட்டமாக இருந்தன. இவைகளின் அதிகாரப் பரப்பெல்லைகளை நடைமுறை மேலும் உறுதிப்படுத்தியது. ஆனால் ஹோர்சென்சியா சட்டம் நிறைவேறிய சமயத்தில் பொதுமக்களுக்கும் பிளெபியர்களுக்குமிடையிலான வேறுபாடு நன்ருகக் குறித்துக் காட்டப்பட்டது. ஏனெனில், கொன்சிலயத்திலிருந்து விலக்கப்பட்ட பெட்ரிசியர்களும் கருதத் தக்க நிறுவனமாக இருந்தனர். இறைமையுடைய நிருவாகிகளைப் போல் டிரிபியூன்கள் இன்னும் செனெட் சபையின் பணியாள்களாகவில்லை. அக் காலத்தில் ஹோர்டென்சியன் சட்டத்திற்கு ஓர் அரசியல் தனிமுறைச் சிறப்பு

இருந்தது. பிற்காலத்தில் இச் சிறப்பை இஃது இழந்துவிட்டது. ஆனால் இது மறைவாகப் பெற்றிருந்த உட்பொருள் அரசின் வரலாற்றில் ஒரு முக்கியமான பயனைப் பெற்றிருந்தது. பிளெபியர்களை ஒரு நிறுவனமாகத் தொடர்ந்திருக்கச் செய்து டிரிபியூன் பதவியின் பழமையான மேதகு நிலையை இது வைத்துக் காப்பாற்றியது. ஆகவே, பிற்காலத்தில் செனெட்டின் ஆட்சிக்கும் கோனாட்சிக்கும் கருவியாகப் பயன்படுத்தக் கூடிய அதிகாரத்தை இது பேணிக்கொண்டது.

பிளெபியரின் விடுதலைப் போராட்டத்தின் போக்குகள் பெருமளவில் உயர்நிலை வகுப்புகளுக்குச் சாதகமாக இருந்தன. இஃது ஒரு மக்கள் இயக்கமாக இருந்ததில்லை; மக்களாட்சி மனப்பான்மை கொண்டவர்களாலும் இவ் வியக்கம் நடத்தப்படவில்லை. மக்களை இன்னலுக்குட்படுத்திய பொருளாதாரத் தீமைகளில் இவர்கள் சிறிதும் அக்கறை காட்டவில்லை; மாறாக, மக்களின் துயரை இவர்களுடைய முன்னேற்றத்திற்குக் கருவியாகப் பயன்படுத்திக்கொண்டனர். கடனுக்காக அடிமைப்படுத்துவதைச் சோலன் ஒரேயடியாக ஒழித்துக்கட்டினார்; ஆனால், உரோமானியர் அடிமைத்தனத்தைப் புனிதமாகக் கருதினார்கள். கிரேக்கர்கள் மற்றவர்களுக்காகப் போராடுகையில் உரோமானியர் அவர்களுடைய உயர்வுக்காகப் பாடுபட்டனர். ஆனால் தொடர்ந்திருந்து வந்த அச்சுறுத்தலின் காரணமாக நான்காம் நூற்றாண்டின் பிற்பாதியில் கடன் பளுவைத் தணிக்கும் நோக்கத்தோடு சில தற்காலிக முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. தகா வட்டி விதித்தவரைக் கடன் கொண்டவர் உடனடியாகக் கைது செய்யும் அதிகாரத்தைக் கி மு. 352-ல் ஒரு சட்டம் அளித்தது; சட்டத்திற்கு மாறாக வட்டி விதித்தவரிடமிருந்து தண்டத் தொகை நான்கு மடங்கு வசூலிக்கப்பட்டது. இதை எதிர்த்து செனெட் சபையிடம் முறையிடும் உரிமையையும் இவர்கள் கி. மு. 304-ல் இழந்தனர்[1]. கடனுக்காகத் தண்டனைக்குள்ளாகி இருப்பவர் கடனைத் திருப்பித் தர இயலுமெனக் கடன் கொடுத்தவருக்கு பிரமாணம் செய்து கொடுப்பவரைக் கைது செய்வதை 313-ல் ஒரு சட்டம் தடை செய்தது[2]; எனவே ஆளைப் பிணையமாக வைக்கும் அடிப்படையிலான ஒப்பந்தங்கள் பல ஒழிக்கப்பட்டன. எனினும், நீதிமன்றத்தின் ஆணையால் கடன்பட்டவர்கள் தண்டனை பெறுவதும், சிறைப்படுத்தப்படுவதும் குடியரசிலும், பேரரசிலும் தொடர்ந்திருந்தது. ஆனால், சட்டத்தின் கடுமை ஒரு கொடுமையென்றால், அதன் வடிவங்களின் அறியாமை கொடுமையினும் கொடுமையாக இருந்தது.

[1] Liv. ix. 46.
[2] Varro LLviii. 105

ஒரு தற்செயல் நிகழ்ச்சி இதற்குப் பரிகாரம் அளித்தது. தலைமைக் குரு அப்பிலஸ் கிளாடியஸ் என்பவர் சட்ட நடவடிக்கை முறைகளை எழுத்துருவில் வரைந்து கொடுத்தார். தலைமைக் குருமார்களுக்கு வழிகாட்டும் வகையில் எழுதப்பெற்ற நூலை அவருடைய எழுத்தர் சமயச் சார்பற்ற மக்கள் முன் உடனே வைத்துவிட்டார். சட்ட நடவடிக்கைகளுக்கான நாள்களையும் இவ்வெழுத்தர் ஒரு பட்டியலாக வெளியிட்டார். தலைமைக் குருமார்களின் புனித உறையுள் இப்பொழுது மக்களின் உடைமையாகிவிட்டது. பல நூற்றாண்டுகளாக உரோமானியத் தலைமைக் குருமார்கள் சட்டத்துறையில் பெரும் புகழ் பெற்றவர்களாக இருந்தாலும் இவர்கள் அறிவியலை வெளிப்படையாக ஏற்றுக்கொண்டார்கள். மறைக்கப்பட்டிருந்த சட்ட இயல் நுட்பங்களைச் சமயச்சார்பற்ற கல்வி வெளிக்கொணர்ந்தது.

இச் சிறிய நலன்களைத் தவிர பிளெபியரில் பெரும்பாலோர் தம் வகுப்பினரின் வெற்றியில் பெருமளவு பங்கு பெறவில்லையெனலாம். உரோம் அரசின் அதிகாரப் பகிர்வை நோக்கினல் பல நூற்றாண்டுகளாக நடந்த போராட்டத்தின் விளைவாகப் பெற்ற பயன்கள் மிகக் குறைவேயென்பதை அறியலாம்.

புதிய பதவியைக் கெட்டியாகப் பற்றிக்கொள்வதற்கு இடமளிக்கும் வகையில் பழம் பெருங்குடியினர் தமக்குரிய பதவி மீதான தம் பிடியைத் தளர்த்தினர். முதன்மையான பெட்ரிசியர்களையும், பிளெபியக் குடும்பத்தினரையும் கலப்பாகக் கொண்டு இவ்வுயர்குடி தோன்றியது. குயுருல் பதவி வகிக்கும் உரிமை பெற்றவர்களையும் பதவி வகித்தவர்களையும் இவர்கள் முன்னோர்களையும் சுட்டிக்காட்டும் திறமையுடையவர்களே இப் பெருங் குடியினர். பிளெபியர்கள் முதலில் குயுருல் பதவியைப் பெற்றதால் இவர்கள் புதிய மனிதப் பிறவிகளாகக் கருதப்பட்டார்கள். பெட்ரிசிய குல உறுப்பினர்களுக்கு இப் பெயர் கொடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. உயர்குடியுரிமையை ஒரு முறை பெற்றுல் அதை இழக்க முடியாது. திறமையாலோ, செல்வத்தாலோ சேர்ந்து வராத மரபுவழி வாக்களிப்பு உரிமைச் கோரிக்கையால் பயனென்றுமில்லை. முதல் பியூனிக் போர்களின் போது செல்வ நிலைக்கு ஒரு வகையான சட்ட ஏற்பளிக்கப்பட்டது. பொதுவிளையாட்டிற்கான செலவினங்களைக் கருவூலங்களிலிருந்து சரிக்கட்டலாமென்றும் விதி செய்யப்பட்டது[1]. பெட்ரிசியர்களாயினும் பிளெபியர்களாயினும் நிருவாகப் பதவிகளை

[1] Dionys. vii. 71.

அடைவதற்கு ஈடில் பதவியை முதல் படியாகக் கொள்ளவேண்டு மென்பதில்லை. ஆனால் பிரீட்டர், கான்சல் போன்ற பதவிகளில் இருந்தவர்கள் முதலில் இப் பதவியில் இருந்திருக்கின்றன ரென்று தெரிகிறது.

சிறப்புரிமை பெற்ற குடிகளில் புதிய உறுப்பினரைச் சேர்த்துக்கொள்வது இரண்டாவது பியூனிக் போர்களின்போது முடிவிற்கு வந்தது; போர் முடிந்தபொழுது பழங்குடி முதிர்வுற்றுச் சிதைவுறத் தொடங்கியது. இக் குடியில் புதியவர்கள் நுழைவது அவ்வகுப்பினரை மாசுபடுத்திவிடுமெனக் கருதப் பட்டது. ஆயினும், திறமையடிப்படையில் சிலர் இக் குடியில் புகுந்துகொண்டனர். எல்லாவற்றையும் தூய்மைப்படுத்தும் காலம், வெற்றி பெற்ற பிளெபியரின் அடிமை இரத்தத்தையும் புனிதமாக்கிற்று.

பழமையான எதிரிகளின் இப் புனிதமற்ற கூட்டு இருந்த போதிலும், இவ் வகுப்பினருக்கிடையிலான வேறுபாடுகள் ஒழிக்கபபடவில்லை. சிசரோவின் காலத்தில் பெட்ரிசியர்களின் தனிப்பட்ட உரிமைகள் எடுத்துரைக்கப்பெற்றுப் பாதுகாக்கப் பெற்றன. மேலும், பயனுறுதியற்ற குடும்பத் தலைமை அதிகாரங்களையும், இடையாட்சிக் கால அதிகாரங்களையும் இவர்கள் பெற்றிருந்ததோடு குருமார் குழுவின் உறுப்பினரில் பாதி இடங்களையும் இவர்கள் பெற்றிருந்தார்கள். குருமார்களின் மற்றக் குழுக்களிலும் இரு வகுப்பினர்களும் குறிப்பிட்ட சில குருமார்களும் இடம் பெற்றனர். அரசியலமைப்புக் கோட்பாட்டில் மெய்யாகவே பெட்ரிசியர்கள் ஓர் உன்னத இடத்தைப் பெற்றிருந்தார்கள். இதை நாம் பின்னர் பார்க்கலாம். ஆனால் இக் கோட்பாட்டளவிலான முக்கியத்துவம் இவர்களுக்கு மிகக் குறைவான அதிகாரத்தையே அளித்ததெனலாம். தமக்கென ஒதுக்கியளிக்கப் பெற்ற நிருவாகப் பதவிகளோடும், கான்சல் பதவியில் ஒன்று இவர்களுக்கென ஒதுக்கப்பட்டதோடும் பிளெபியர்கள் இப்பொழுது சென்சார் பதவியையும் ஈடில் பதவியையும் தம் வகுப்பினருக்குப் பெற்றளித்ததோடு உயர் பதவிக்கான நீண்ட போராட்டத்திலும் வெற்றி பெற்றனர்.

# 5. மக்களில் பல வகுப்பினர்

ஹோர்டென்சியா (lexhortensia) சட்டத்தின் நிறைவேற்றத்தோடு (கி. மு. 287) குடியரசின் அரசியல் வளர்ச்சியும் முடிவிற்கு வந்ததெனலாம். வளர்ச்சியடைந்த ஆட்சிமுறை செயற்படும் விதத்தையும், கோட்பாட்டையும் ஆராயும் முன் குடியரசின் பல நூற்றாண்டு வளர்ச்சியில் குடிமக்களின் நிலையிலும் நகரில் வசித்த மற்ற மக்களின் நிலையிலும் எத்தகைய மாற்றங்களை இஃது ஏற்படுத்தியதென்பதைப் பார்ப்போம். சமூக சூழ்நிலையைச் சுருக்கமாகக் குறிப்பிடும் சட்ட விதிகள் எத்தகைய மாற்றங்கள் அடைந்தனவென்பதையும் சிறிது சிந்திக்கலாம்.

இரண்டு வகுப்பினரும் ஒரு சமுதாயமாக இணைந்தபின் பயனுள்ள உரிமைகளைப் பெற்றிருந்த மக்கள் அனைவருக்கும் பொருத்தமான குடியுரிமையை உருவாக்கவேண்டியதாயிற்று. சில இத்தாலியச் சமூகங்களுக்கு அரைகுறையான குடியுரிமை வழங்கும் முறை வளர்ந்து கொண்டிருந்தது. இதனால் முழுமையான குடியுரிமையைப் பெற்றிருந்த குடிமக்களுக்கும் அரை குறையான குடியுரிமையைப் பெற்றிருந்தவர்களுக்குமிடையில் வேறுபாடு காணப்பட்டது. முன்னது நகரக் குடிமக்களென்றும், பின்னதை நகரயல்லாக் குடிமக்களென்றும் குறிப்பிட்டனர். நகரக் குடிமக்களைப்பற்றி இப்பொழுது பார்ப்போம்.

பிறப்பால் குடியுரிமை பெறுவது இயல்பு. இரு குடிமக்களுக்குப் பிறக்கும் அல்லது ஒரு குடிமகனுக்கும் வெளிநாட்டினர் ஒருவருக்கும் பிறக்கும் குழந்தை இயல்பாகவே குடிமை உரிமை பெறும். குழந்தைகள் முழுக் குடியுரிமை பெறப் பெற்றோர்கள் திருமணம் செய்துகொள்ள வேண்டியதின் தேவையைப் பார்க்கலாம். ஒரு குடியுரிமையாளருக்கும், வெளிநாட்டினருக்கும் பிறக்கும் குழந்தையின் பற்றுறுதி முன்மையான பிரச்சினையாகும். பெற்றோர்களிடையில் திருமண உறவு இருந்திருந்தால் குழந்தைகள் தந்தை

யின் குடிமை நிலைப்பெறுவர் என்பதும் திருமண உறவு இல்லா திருந்திருந்தால் குழந்தைகள் தாயின் குடிமை நிலையும் அடைவர் என்பதும் உரோமானியச் சட்டத்தின் பழைமையான கருத்தாகும். ஆனல் உரோமானியர் ஒருவருக்கும் வெளியார் ஒருவருக்கும் மண உறவில்லாமல் கூடிப்பிறக்கும் குழந்தை, குறைந்த உரிமையுடைய பெற்றோரின் குடிமை நிலையை ஏற்கவேண்டுமென உரோமன் சட்டமொன்று முன் குறிப்பிட்ட விதிக்கு விலக்களித்தது. இதன்படி, உரோம் நகரினருக்கும், வெளிநாட்டினருக்கும் பிறக்கும் குழந்தை வெளிநாட்டினராகவே கருதப்படும்.

வெளிநாட்டினருக்குக் குடியுரிமை அளித்தல், அல்லது நகரினரல்லாதாருக்கு முழுமையான குடியுரிமை அளித்தல், ஆகியவைகளை அரசு விதிவிலக்காக் குடிமக்களைப் படைத்தல் எனலாம்.

விதிவிலக்கான முறையில் அரசு குடியுரிமை அளிப்பதற்கு ஒரு தனிப்பட்ட சட்ட நடவடிக்கை தேவையாகும். இந்த முறையைப் பொறுத்தவரை உரோமின் தாராள மனப்பான்மையால் இத்தாலியில் இருந்தவர்களுக்கும, பின் உரோமின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் இருந்தவர்களுக்கும் முழுமையான குடியுரிமை அளிக்கப்பட்டது. ஒரு திடீர் நடவடிக்கையின் விளைவாக இக் கொள்கை உருவாக்கப்படவில்லை. ஆனல் இக் கொள்கை உரோம் நகரின் தோற்றத்திலிருந்தே வந்ததாகும். இந்த முறையையொட்டிப் பெருகிய குடிமக்கள் தொகையை எடுத்துக்காட்ட சில எண் இலக்கங்கள் போதும். பியூனிக் போர் முடிவடைந்த போது (கி.மு.240) மக்கள் தொகைக் கணக்கில் இருந்த ஆண் குடிமக்களின் எண்ணிக்கை 2,60,000. கி. மு. 124-ல் இது 3,90,736-ஆக உயர்ந்தது. இத்தாலியின் பெரும்பகுதிகள் உரோமுடன் சேர்க்கப்பட்ட பின் (85-ல்), 9,93,000-ஆக உயர்ந்தது. அகஸ்டஸின் காலத்தில் இத் தொகை 40,63,000-ஆகவும் (கி. மு. 28-ல்), கி. மு. 8-ல் 42,33,000-ஆகவும், கி. பி. 14-ல் 49,37,000-ஆகவும் இருந்தது. கிளாடியஸின் மக்கள் தொகைக் கணக்கின்படி 69,84,072 குடிமக்கள் இருந்தனர்.[1]

குடியாட்சியில் மக்களின் தனி முறையிலான கட்டளையால் குடியுரிமை அளிக்கப்பட்டது. இக் கட்டளைகள் குறிப்பிட்ட இயல்பினவாக இருந்திருக்கலாம். குடியுரிமையை இவைகள் பரிசாகப் பெறுபவர்களிடம் உடனடியாகக் கொடுக்கலாம்; அல்லது பேராட்கள் வழியாகவும் அளிக்கலாம். உரோமின் சார்பு நாடுகளில் செயற்படுத்தப்பட்ட விதிகளைப் போல் இந்த நிலவர விதிகளும்

[1] Greenidge, A.H.G. Roman Public Life, p. 133. Tac. Ann. xi. 25.

இருந்தன. இலத்தீன் குடியேற்ற நாடுகளின் உரிமைகள் குடியுரிமை பெறுவதற்கான வசதிகளை அளித்தன. வெற்றிகரமான குற்ற வழக்குத் தொடர்வுக்கான ஒரு பரிசாகக் குடியுரிமையை வெளி நாட்டினருக்குச் சில சமயங்களில் குற்றவழக்குச் சட்டம் அளித்தது. குடியாட்சியின் வீழ்ச்சிக்குப்பின், மாநிலங்களிலிருந்து படையினரைச் சேர்த்தல் மிக்க ஆதாயமாக இருந்தது. மாநிலங்களிலிருந்து குடிமக்கள் பெருமளவில் சேர்க்கப்பட்டனர். இக்குடியுரிமைகளை மக்களே நேரடியாக அளிக்காவிட்டாலும் மக்களின் பேராட்கள் என்ற முறையில் செனெட் சபையின் வழியாகவும், குடியேற்றங்களைத் தோற்றுவித்த ஆணையர்கள் வழியாகவும் அளிக்கலாம். குடியாட்சியின் கடைசி நூற்றாண்டில், களத்தில் இருந்த படைத்தலைவர்களுக்குத் தனிப்பட்ட சட்டங்களால் இத்தகைய அதிகாரங்களை அளிப்பதற்கும் வழக்கம் அனுமதிக்கப்பட்டது. கிம்பிரிக் போரில் ஈடுபட்டிருந்த மேரியசிற்குக் குடியுரிமை அளிக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. ஸ்பானியப் போர்களின்போது இத்தகைய அதிகாரம் பாம்பியஸிற்கும் (Pompeius) அளிக்கப்பட்டிருந்தது. விருப்பம்போல் குடியுரிமை அளிப்பதற்கு ஒரே பெரும் படைத்தலைவராக இருந்த பேரரசு (Princep) பெற்றிருந்த உரிமைக்கு இது முதல் படியாக இருந்தது.

அடிமைகளை விடுதலை செய்யும் செல்லத்தக்க அம்முறையும் அடிமைகளுக்குக் குடியுரிமையளிக்கும் எசமானின் முயற்சியால் விடுதலை முறை மேற்கொள்ளப்பட்டது; இந்த முறை வழுவற்றதாக இருப்பதற்கு இவர் சட்டத்தின் குறிப்பிட்ட சில விதிகளைப் பின்பற்ற வேண்டும். ஒரு கோலால் அடிமையைத் தொடும் முறை வழக்கமானதாகும். இழந்த உடைமையை மீளப் பெறுதற்கு அடையாளமாக மேற்கொள்ளப்பட்ட பழங்கால முறையாகும். இது விடுதலையை வலியுறுத்தும் ஒருவர் நிருவாகி முன் தோன்றி அடிமையை விடுதலை பெற்றதாக அறிவித்து அடிமையின் தலையை ஒரு கோலால் தொடவேண்டும். இதற்கு எசமான் இணக்கம் தெரிவித்ததும் நிருவாகி, அடிமை விடுதலை பெற்றவராக அறிவித்தார். மக்கள்தொகைக் கணக்கெடுக்கும்போது எசமானின் வேண்டுகோளின் பேரில் சென்சாரால் கணக்கில் சேர்த்துக் கொள்ளுதல் இரண்டாவது வகையாகும்.

மூன்றாவது வகையும் பிற்காலத்திய வகையும் அடிமைகளை எசமானின் இறுதி விருப்ப ஆவணத்தின்பேரில் விடுதலை செய்வதாக இருந்தன. இதன்படி, அடிமையை விடுதலை செய்யுமாறு எசமானின் இறுதி விருப்ப ஆவணத்தின் வழியாகக் கட்டளையிடுவது அல்லது இதை ஒரு பொறுப்பாக வாரிசுகளிடம் விட்டுச் செல்லுவதுமாகும்.

அடிமைகளை விடுதலை செய்யும் வகைகளில் காணப்பட்ட குறைபாடுகள் மற்ற எளிய முறைகளுக்கு வழிகாட்டின. இவைகளின் படி, நண்பர்கள் முன்னிலையில் விடுதலை அறிவித்தல், அல்லது சுயேச்சை பெற்றவராக வாழும்படி கடிதத்தின் வழியாக அறிவித்தல், அல்லது எசமானுடன் சுதந்திர மனிதனுக உணவு கொள்ள அடிமையை அழைத்தல் ஆகிய முறைகள் பின்பற்றப் பெற்றன. இந்த முறையில் அடிமைகள் விடுதலை செய்யப்பட்டதை உரிமை வழக்கு நீதிமன்றங்கள் ஏற்றுக்கொண்ட போதிலும் இந்த முறைகள் குடிமை உரிமைகளை இவர்களுக்களிக்கவில்லை.

இத்தகைய முறைகளில் குடிமை பெற்றவர் அடிமை விடுதலை பெற்றவராகவும், மற்றவர்கள் குடியாட்சியின் இறுதிக் காலத்தில் சுதந்திரமாகப் பிறந்தவர்களென்றும் கருதப்பெற்ருர்கள். நற்பிறப்பால் அளிக்கப்பட்ட இத் தனிச் சிறப்பு, படை, நிருவாகம், அரசின் உயர்நிலைப்பதவிகள் ஆகியவைகளில் பணியாற்ற இஃது ஒரு தகுதிச் சான்ருகக் கருதப்பட்டதை நாம் பின்னர் பார்க்கலாம். குடியாட்சியின் இறுதிக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட இச் சுதந்திரமான பிறப்புக் கோட்பாடு எளிதாகத் தோன்றினும் இஃது ஒரு வரலாற்றைப் பெற்றிருந்தது. சுதந்திரமாகப் பிறந்தவர்கள் நற்குடிப்பிறந்தாலன்றி எல்லாக் காலங்களிலும் வழங்கப்படவில்லை. கி. மு. நான்காம் நூற்ருண்டின் இறுதியில், சுதந்தரமாகப் பிறந்தவரென்பவர், சுதந்தரமான பெற்ரோர்களிலிருந்து என்பது மட்டுமன்றி சுதந்தரமான முன்னோர்களிலிருந்தும் தோன்றியிருக்க வேண்டுமெனப் பொருள் சொல்லப்பட்டது. இதேபோல் விடுதலைபெற்றவர் என்ற சொல் விடுதலை பெற்ற அடிமையையும் இவருடைய வழிவந்தவரின் முதல் படிமையில் இருந்தவரையும் குறிப்பிட்டது குடியாட்சி முடிவிற்கு வருமுன், விடுதலை பெற்றவனின் மகன் நற்குடிப்பிறந்தவனென்று ஏற்றுக் கொள்ளப்பட்டான். ஆனல் இவன் சுதந்திரமான நிலையில் பிறந்திருக்கவேண்டுமென்பது நிபந்தனையாகும். இதை உறுதிப்படுத்தத் தாயின் நிலைமட்டும் கருத்தில் கொள்ளப்பட்டுத் தந்தையின் நிலை புறக்கணிக்கப்பட்டது. பெற்ரோர்களின் திருமண நிலை இப்பொழுது ஒரு நிபந்தனையாக மேற்கொள்ளப்படவில்லை.

முற்காலத்தில், பிளெபியர்களில் நற்குடிப்பிறப்பிற்குச் சட்டப்படியான மணமுறை நிபந்தனையாக இருந்தது. பழங்கால பெட்ரிசிய சமுதாயத்திலும் இது ஒரு நிலையான நிபந்தனையாக இருந்தது. பழங்கால பெட்ரிசிய சமுதாயத்திலும் இஃது ஒரு நிலையான நிபந்தனையாக இருந்தது. ஆனல் குடியாட்சி முடிவிற்கு வருமுன், இந்த நிபந்தனையும் கைவிடப்பெற்றது. பதவிகளையும், பட்டங்களையும் பொறுத்தவரை முறைகேடாகப்பிறந்த

குழந்தைகளையும் மண ஒப்பந்த அடிப்படையில் பிறந்த குழந்தைகளையும் சமநிலையில் வைத்தனர். இது இயற்கைச் சட்டத்தின் பெரும் வெற்றியாகும்.

முடியாட்சிக் காலத்தில் பிளேபியர்கள் பெற்றிருந்த உரிமைகளைப் போலவே குடியாட்சிக் காலத்தில் குடிமக்கள் உரிமை பெற்றிருந்தனர். பெட்ரிசியர்களுக்குரிய சிறப்புரிமைகள் பலவற்றை இப்பொழுது இவர்கள் பெற்றிருந்தார்கள். திருமண உரிமைகள், வாணிக உரிமைகள், ஆகியவைகளின் விளைவாக எழுந்த குடும்பத்தலைவரின் அதிகாரம், விருப்ப ஆவணங்கள் எழுதிவைக்கும் அதிகாரங்களும் இவைகளில் அடங்கின. இவற்றுடன், அரசு நிலங்களில் குடியேறலும், வாக்குரிமை பெறலும், பதவி பெறலும் சேர்ந்தன. பெட்ரிசியர்கள் தொடர்ந்த சில சிறிய சிறப்புரிமைகளைப் பெற்றிருந்தனர். குறிபார்க்கும் பழமையான உரிமை இவர்களிடம் தொடர்ந்திருந்ததாகப் பழைய கோட்பாடுகள் குறிப்பிடுகின்றன.

அரசிற்குச் சேவை செய்யவேண்டியது குடிமக்களின் கடமையாகும். இச் சேவைகளைச் சொந்த உழைப்பாலும் அல்லது உடைமைகளாலும் செய்யலாம். இக் கடமைகளின் பெயர்களிலிருந்து இவை படைத் தொடர்புடையனவாகத் தெரிகின்றன. இச் சேவைகள் நகரின் படை பாதுகாப்புத் தேவைகளாக இருந்தன. முதலில் இத்தகைய செலவினங்கள் குடிமக்களின் சொந்த உழைப்பின் பயனால் சரிக்கட்டப்பட்டன. நிதிச்சுமைகளைக்கூட குடிமக்கள் சொந்த உழைப்பினால் குறைத்துக்கொண்டார்கள். பிற்காலத்தில் சொத்திலிருந்து இந்த நிதிச்சுமைகள் ஈடுகட்டப்பட்டன. நகரின் சாலைகளையும் சுவர்களையும் செப்பனிட்டுப் பேணுவதற்குக் குடிமக்களின் சேவைகள் நகராட்சியின் சட்டத்தால் பெறப்பட்டன. ஆனால் முன், கட்டாய உழைப்பினால் பெற்ற சேவைகளின் தேவைகள் இப்பொழுது வரிவிதிப்பினால் பெறப்பட்டன. இவ்வரி விதிப்பு எப்பொழுதிலிருந்து ஏற்பட்டதென்பது தெரியவில்லை. குடியாட்சியின் மற்றப் பொதுமக்களின் தேவைகள் சென்சாரால் செய்துகொள்ளப்பெற்ற ஒப்பந்தங்களால் நிறைவேறின. வரிவிதிப்பின் வழியாக உடமைகள் மீதான சுமைக்கும் படைச்சேவையின் வழியாகத் தனியார் மீதான சுமைக்குமிடையே ஒரு தெளிவான வேறுபாட்டை இப்பொழுது காணலாம். அதன் மீதான மற்ற முதன்மையான சுமைகள், பாதுகாவல் பொறுப்பும் ஜூரிகளாகச் செயல்படும் பொறுப்புமாகும். இப் பொறுப்புகள் குற்றத்தண்டனை வழக்குகள் உரிமை வழக்குகள் தொடர்புடையன.

செர்வியனின் மக்கள்தொகைக் கணக்கெடுப்புக் காலத்திலிருந்தே வகுப்புகள் அமைவதற்கு அடிப்படையாக இருந்த உடைமைகள் மீது வரி விதிக்கப்பட்டது. முதலில் இவ்வரி வாங்கப்பட்ட ஒரு பொருளின்மீது விதிக்கப்பட்டது. பின்னர், அனைத்துச் சொத்துகளின்மீதும் இவ்வரி விதிக்கப்பட்டது. பதிவு செய்யப்பெற்ற எல்லாக் குடிமக்களும் இவ்வரியைச் செலுத்தினர். 1600 அசெஸ் மதிப்புடைய சொத்திற்கு மிகக் குறைந்த வரி விதிக்கப்பட்டது. இருந்தபோதிலும், வகுப்புகளின் அமைப்பிற்கேற்றவாறு வரிவிதிப்பு அமையவில்லை. ஆனால் ஒரே சீராக இவ்வரி வசூலிக்கப்பட்டது. வழக்கமாக 1000 அசெசிற்கு 10 அசெஸ் என்ற வீதத்தில் வரி திரட்டப் பெற்றது. இஃது ஓர் இயல்பு மீறிய வரி விதிப்பாகும்; தேவையானபோது, படைச் சேவையைப்போல் குறிப்பிட்ட காலத்தில் இவ் வரி விதிக்கப்பட்டது. அதுவும் கருவூலத்தில் இருப்புநிதி இல்லாதபொழுதுதான் இது விதிக்கப்பட்டது. இதை அரசிற்குச் சேரவேண்டிய பொருளாகக் கருதாமல் கடனாக அரசு கருதியது. அரசின் நிதிநிலை செழிப்பானபோது இக் கடனை அரசு திருப்பிக் கொடுத்தது. மூன்றாவது மாசிடோனியப் போரின் முடிவின்போது அரசு பெரும் வருவாய் பெற்றபோது (கி.மு. 167-ல்) இவ் வரிவிதிப்பு நின்றது. கி. பி. மூன்றும் நூற்றாண்டின் இறுதிவரை உரோமில் மேலும் எத்தகைய நேர்முக வரியும் விதிக்கப்படவில்லை. டையோகிலிடியனும் (Diocletian) மாக்ஸ்மியனும் (Maxmian) இவ் வரியை மீண்டும் விதித்தனர். படைகளின் செலவிற்காக இவ்வரி விதிக்கப்பட்டது; ஆனால் பேரரசு நிறுவப்பெற்றபின் ஒவ்வொரு மாநிலமும் அதன் படைத்துறைக்கான செலவை ஏற்றுச் செலவிட்டது.

படைச் சேவை, கோட்பாட்டளவில், ஒரு கடமைப் பொறுப்பாகும். இதிலிருந்து சிலருக்குச் சில சமயம் விதிவிலக்களிக்கப்பட்டது. படைக்கு ஆள் சேர்க்கும்போது வரத் தவறிய குடிமக்களை அடிமைகளாக டைபர் ஆற்றுக்கப்பால் விற்றனர். இவ் விதி கையாளப்பட்ட முறையும் மக்கள் உணர்ச்சியும் இக் கடமைச் சுமையை ஒரு கௌரவமாக உயர்த்தியது. இக் காரணம் கருதியே சுதந்திரமான பிறப்பு படைச்சேவைக்கு ஒரு தேவையான தகுதியாக எப்பொழுதும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. கீழ்நிலையாளர்களின் சேர்க்கையால் படையினரின் தூய்மை கெட்டதில்லை. படையிலும், குதிரைப் படையிலும் செர்வியசின் மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அளவையொட்டியே படைச் சேவை அளவிடப்பட்டது. குடியாட்சிக் காலத்தின்போது சட்டப்படியான படைச் சேவை ஆண்டுக்கொரு போராகப்

பதினறிலிருந்து பெருமளவு இருபது போர்களிலும், குதிரைப் படைவீரன் ஆண்டுக்கொன்ருகப் பத்துப் போர்களிலும் சேவை செய்ய வேண்டும். வரி செலுத்துவதற்கும் படையில் பணி புரிவதற்கும் மூன்ருவது கடமையொன்றும் தேவைப்பட்டது. மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்போது குடிமகன் பதிவு செய்து கொள்வதற்கு வந்து சேர வேண்டியது அம் மூன்ருவது கடமையாகும். வரத் தவறியவர்கள் அடிமைகளாக டைபர் ஆற்றுக்கு அப்பால் விற்கப்படுவார்கள்[1].

தனிமனிதனை உரிமைகளின் ஆதாரப் பொருளாக்கும் கருத்துகள் படிப்படியாகக் குடிமகனுக்குச் சட்டவுரிமையளிக்கவும் அதை இழக்கச் செய்யும் முறையைக் கூறும் கோட்பாடாக வளர்ந்தன. குடும்ப உரிமைகளின் இழப்பினுல் ஏற்படும் தனிமதிப்பு நிலைக் குறைவாகிப் பழமையான கருத்தோடு இக் கோட்பாடு தொடர்பு கொண்டிருந்தது. படிப்படியாகச் சட்ட இயல் தனிமனிதனின் ஆளுமைக் கருத்தை உருவாக்கியது. ஆளுமை, குடிமையிலிருந்து தனித்து நின்றது. உரிமை இயல் சட்டத்திலிருந்து மாறுபட்ட நாகரிக உலகத்தின் மற்ருெரு சட்டக் கருத்து உருவாகியது. இக் கருத்தின் அடிப்படையில் குடிமை இழப்பைத் தனிமதிப்பு நிலையின் குறைவாகக் கருதலாம். குடிமை இழப்பைக் காட்டிலும் ஆளுமை இழப்புப் பேரிழப்பாகும். இவ்விழப்பே சுதந்திரத்தின் இழப்பாகும். எனவே தனிமதிப்பு நிலையின் இழப்பு மிகப் பெரியதாகக் கருதப்பட்டது.

எதிரியிடம் ஒருவன் கைதியாகிவிட்டால் அதன் விளைவாக அவனுடைய குடிமையையும் சுயேச்சையையும் இழந்து விடுகிருன். அரசியல் சுதந்திரத்தை இழந்தவுடன் அதன் விளைவாகத் தனியுரிமைகளையும் இழந்துவிடுகிருன். மக்களால் ஏற்க இயலாத ஓர் உடன்படிக்கையைச் செய்த உரோமானியப் படைத்தலைவன், மக்களின் நம்பிக்கையை முரித்தவனுகக் கருதப் பெற்ருன். தூதர்களுக்குத் தீங்கிழைப்பவனுக்கும், அல்லது உரோமோடு நேச உறவு கொண்டிருந்த அரசோடு போர் தொடுத்த படைத் தலைவனுக்கும் தண்டனை அளிக்கப்பட்டது.[2] உரிமை இயல்சட்டமும் அடிமைத்தனத்தைப் பொறுத்தமட்டில் தனிமதிப்பு நிலைக் குறைப்புத் தண்டனையளித்தது. படைச் சேவைக்கு வரமறுத்தவர்களுக்கு இத்தகைய தண்டனை அளிக்கப்பட்டது. இதேபோல் கடன்பட்டவரை விற்பதற்கும் இச் சட்டம்

[1] Cic. Pro. Cace. 34. Dionys. iv. 15
[2] Liv. v. 36.

வகை செய்தது. குடிமையை மட்டும் இழக்கச் செய்வதாலும் தனிமதிப்பு நிலையைக் குறைக்கலாம்.

மற்ருெரு நகரின் குடிமையைப் பெற்றவர் தாமாகவே தம் நகரில் குடிமையை இழந்துவிடுகிருர். ஏனெனில், உரோமானியச் சட்டத்தின்படி ஒருவர் இரண்டு சுயேச்சையான நகரங்களில் குடிமை உரிமை பெற்றிருக்கவியலாது. தண்டனைக்குரிய குற்றங் களைச் செய்பவர்களின்மீது நாடு கடத்தல் தண்டனை விதிக்கலாம். இத் தண்டனைக்குள்ளானவர் குடியுரிமையை இழந்துவிடுவார். மேலும் நாடு கடத்தப்படுதல் விருப்புச் செயலாக எப்பொழுதுமே கருதப்பட்டது. ஒரு குற்றத்திற்காக நகரைவிட்டு வெளியேறி விட்டவர்மீதும் நாடு கடத்தப்படுவதற்கான கட்டளையை மக்கள் பிறப்பிக்கலாம். அப்படி நாடு கடத்தப்பட்டவர் சட்டப் பாது காப்பை இழந்துவிடுவதால் குடிமை உரிமையையும் இழந்து விடுவார்.

குடும்ப உரிமைகளின் இழப்பைச் சில சட்ட அறிஞர்கள் குடும்பநிலை மாற்றமெனத் தவருகப் பொருள் கொண்டனர். இதைப் பற்றி நாம் முன் பார்த்தோம்.

இவ்வாறு இழந்த தனிமதிப்பு நிலையை மீண்டும் பெறச் சில வழிமுறைகள் இருந்தன. குடும்பநிலை இழப்பை விடுதலையின் வாயிலாக மீண்டும் பெறலாம். குடிமை இழப்பை அரசு செயற் படுத்தியிருந்தால் அதை அகற்ற அரசு சட்டத்தை விலக்கி விடலாம். சொந்த நாட்டிற்குத் திரும்பிவரும் உரிமையைப் பயன்படுத்தி இழந்த சுதந்திரத்தை மீண்டும் பெறலாம். விருப்ப மின்றித் திட்டமிடாமல் சொந்த நாட்டிற்குத் திரும்பிவரும் கைதி யொருவன் விடுதலை பெற்றவனுகிவிடுகிருன். உரோமிற்குச் சொந்தமான நாட்டில் உரோமானியன் ஒருவன் அடிமைப்பட லாகாதெனும் கருத்தின் விளைவே இது.

உரோமானியக் குடும்பம் பல மாற்றங்களுக்குள்ளாகியது. குடும்பத் தலைவனின் அதிகாரம் தொடர்ந்திருந்து வந்தது. பழைய அதிகார மிடுக்கும் இருந்து வந்தது. குடும்ப உறுப் பினரை வாழ விடுவதும் இறக்கச் செய்வதும் குடும்பத் தலை வரின் அதிகாரமாக இருந்தது. ஆயினும் மணவாழ்க்கைத் வளர்ச்சியால் குடும்பத்தின் ஒற்றுமை மறைந்தது. மணவாழ்க் கைச் சட்டங்களில் மாற்றங்கள் ஏற்பட்டன. மணமக்களின் இணக்கத்தை இச் சட்டங்கள் ஏற்றன. இம் மண உறவுகள் கண வனல் முறிக்கப்படலாம்; அல்லது கணவன், மனைவி இருவரின் ஒப்பிசைவினல் அளித்துவிடலாம். மனைவி அவள் தந்தையின்

குடும்ப உறுப்பினராகத் தொடர்ந்திருப்பாள்; அவளுக்குரிய உடைமைகளோடு வாழ்வாள். ஏனெனில், பெண்களை அடிமைப் படுத்தல் அக் காலச் சட்டங்களுக்கு ஒவ்வாத செயலாகும். குடியரசின் இறுதி நூற்றாண்டில் பெண்கள் சமூக, சட்டத் தளைகளின்றி வாழ்ந்தனர். இவர்களுடைய சுதந்திரமான நிலை அரசியலில் பெரும் விளைவுகளை ஏற்படுத்தியது.

அடிமை மக்களின் வளர்ச்சி உரோமானியச் சமூகத்தில் பெரும் மாற்றத்தை உண்டாக்கியது. நகரிலும், உரோமானியருக்குட்பட்ட இத்தாலியிலும் சுதந்திரக் குடிமக்கள் சிறுபான்மை நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

சர்வதேச விதிகள் சர்வதேச சட்டத்தை ஒத்திருந்தன. சர்வதேசச் சட்டத்தின்படி பிடிபட்டவர் ஒருவர் அவருடைய தாய்நாட்டில் காலடி எடுத்துவைக்கும் வரை அவரைப் பிடித்து வைத்திருந்தவர் அடிமையாக்கிக்கொள்ள உரிமை பெற்றிருந்தார். ஆனல், பிடிபட்டவர் தாய்நாட்டிற்கு வரும்போது அந்நாடு சுதந்திர நாடாக இருக்க வேண்டும். இக் கருத்துச் செயல் பெற்றபொழுது பல்வேறு நாட்டினர் இத்தாலியில் புகத் தொடங்கினர். போர்க்கைதிகள் உடனடியாக அரசின் பொறுப்பிலிருந்து தனியார் பொறுப்பிற்கு மாற்றப்பட்டனர். இவர்களைக் குவெஸ்டர்கள் விற்றூர்கள். எனவே, அடிமை வணிகத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் வெற்றி பெற்ற உரோமானியப் படைத் தலைவனை நாடினர்[1]. போர் முகாமிலே இவ் விற்பனை தொடங்கியது[2]. மிக ஆடம்பரமாக வாழ்க்கை நடத்திய சமூகத்திற்குத் தேவையானவைகளையெல்லாம் போர் அளித்தது. இரண்டாவது மாசிடோனியப் போரின் வெற்றியால் 1,50,000 கைதிகள் இத்தாலியில் நுழைந்தனர். சீசர், லுகுலஸ் போன்றோர்களின் போராலும் பல்லாயிரக் கணக்கில் போர்க் கைதிகள் இத்தாலியில் நுழைந்தனர்[3]. இதனல் அடிமை வியாபாரம் சுறுசுறுப்பாக நடந்தது. கோரிந்தும் கார்த்தேஜும் வீழ்ச்சியடைந்தபின் அடிமை வாணிகம் டிலாஸில் (Delos) மையம் கொண்டது (கி. மு. 146). குடியரசு முடிவடைந்தபொழுது கிசியக் கடற்கொள்ளைக்காரர்கள் நாள் ஒன்றுக்குப் பத்தாயிரம் பேரை இங்கு வாங்கி விற்றனர்[4]. கார்த்தேஜிலிருந்து பிகிரியர், மிசியர், லிடியர், சிகியர், பாப்லா கோனியர் (Paphla Goniars) போன்ற பல

[1] Caesar, B.G. iii. 16.
[2] Liv. x, 42, 46.
[3] Polyb. xxx. 15.
[4] Strabo. xiv. p. 668.

திறமை மிக்கக் கிழக்கிந்திய அடிமைகள் உரோமானிய எசமா ளர்களின் விருப்பத்தைப் பல வழிகளில் நிறைவேற்றினர்.

அடிமைகள் இரு வகைகளில் பயன்படுத்தப்பட்டனர்; பணி மனைகளிலும் கழனிகளிலும் தொழிலாளர்களாகப் பணியேற் றனர்; அல்லது வீட்டு வேலைக்காரர்களாகவும் பணி புரிந்தனர். இவர்கள் எத்துறையில் பணியாற்றினாலும் அதனால் உரோமில் பெரும் விளைவுகள் ஏற்பட்டன. நுட்பக் கலைகளைப் பயின்ற இவர்கள் செல்வந்தர்களின் கலைநுட்பப் பொருள்களின் தேவை களை நிறைவேற்றினார்கள். சுயேச்சையான கைவினைஞர்களின் போட்டி பயனற்றுப் போயிற்று. சுயேச்சைத் தொழிலாளர் களின் இடத்தையும் சுயேச்சைக் குடியானவர்களின் இடத்தை யும் நாட்டுப் புறங்களில் இவர்கள் கைப்பற்றிக்கொண்டு வந்தனர். போர்களின் காரணமாகச் செல்வர்கள் பண்ணைகளைப் பண்படுத் தக் குறைந்த ஊதியத்திற்கு இவர்களைப் பயன்படுத்திக்கொண் டார்கள். உரோமிற்குக் குறைந்த விலையில் உணவளித்த சிசிலி உரோமோடு சேர்த்துக்கொள்ளப்பட்டபின், பெரிய பண்ணை களில் மலிவான உழைப்பு ஒரு பொருளாதாரத் தேவையாயிற்று. மலிவான உழைப்பினால்தான் இப்பொழுது தானியங்களை உற் பத்தி செய்யமுடியும். தோட்டத் தொழிலில் ஈடுபட்டிருந்த தொழி லாளர்களின் நிலை மிகக் கேவலமாக இருந்தது. இருப்பினும் இவர்களின் துயரம் துடைக்க அரசு எதுவும் செய்யவில்லை. அடிமை எந்த உரிமையையும் பெற்றிருக்கவில்லை; உரிமை தேவையெனவும் கருதவில்லை. அறிவாற்றலோடு கூடிய உயர் இனத்தவர்களின் செயல்விளைவுப் பயன்கள் வீடுகளில் அடிமைக ளாக இருந்தவர்களின் உரிமையின்மையை நிறைவு செய்தன. விருப்பத்திற்குகந்தவர்களுக்கு விடுதலை அளிக்கும் முறை அடிமை களுக்கு மேலும் ஓர் ஆறுதலாக இருந்தது. உரோமானியர்கள் நன்றி மறக்கவில்லை. உலகத்தில் உரோமானியர்களை மிக உயர்ந்த நிலைக்கு உயர்த்தியவர்கள் அடிமைகள் என்பதை உரோமானி யர்கள் ஏற்றுக்கொண்டனர். கிராக்கஸ் (C. Gracchus), கிராசஸ் (Crassus), சீசர், பாம்பியஸ் (Pompeius) ஆகியவர்களின் ஆட்சித் திறமைக்குத் தற்கால உலகத்தில்கூட ஈடுஇணை காண முடியாது. சற்றுத் திறமை குறைந்த மக்கள் மீது இவர்கள் செயற்படுத்திய முழுமையான தலைமையே இதற்குக் காரணமாகும்.

அடிமைத்தனம் பற்றிய சட்டங்கள் எசமானனுக்குப் பயன் அளிக்கும் நோக்கத்தோடு செய்யப்பட்டிருந்தன. அயலாருடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தால் அடிமை, எசமானனுக்கு நன்மை செய்யமுடியும். ஆனால் தன் நிலைமையை அடிமை மோசமாக்கிக்

கொள்ளமுடியாது.[1] ஓர் ஒப்பந்தத்தையொட்டி எசமான் வழக்குத் தொடரலாம். அடிமைக்குச் சட்ட உருவமில்லையெனினும் இயற்கையான கடப்பாடுகளுக்குட்படவேண்டும். ஆனால் எசமான் இழப்புகளுக்கு உட்படமாட்டார். இருப்பினும், அயலாரைப் பாதுகாக்கவும், இந்தப் பயனுள்ள நிறுவனத்திற்குத் தேவையான நம்பிக்கையளிக்கவும் எசமானுக்குச் சில அரைகுறையான பொறுப்புக்களை குவெஸ்டர் ஏற்படுத்தினர். இவைகளும் எசமானின் நலனுக்காக அமைந்தன. இவைகளின்றி அடிமைமுறை செயற்பட முடியாது. அடிமையின் ஒப்பந்தத்தை எசமான் ஏற்றுக்கொண்டதால் இவர் சட்டக் கட்டுப்பாட்டிற்குட்பட்டிருந்தார். எசமானின் இசைவோடு அடிமையொருவன் சொத்தை வியாபாரத்தில் ஈடுபடுத்தினல், அச் சொத்துச் சட்டப்படி அடிமைக்குரியதில்லையெனினும், கடன் கொடுத்தவர் இவன் சொத்தைக் கேட்கலாம். ஆனல் எசமானுக்குக் கடனைக் கொடுத்த பின்னரே மற்றவர்களுக்குக்கொடுக்கலாம். இறுதியாகச் சொத்தின்மீதான எக்கடன் பொறுப்புகளையும் கடன் கொடுத்தவர் எடுத்துக் கொள்ளலாம். ஆனல் எசமான் அடிமையின் ஒப்பந்தத்தால் எத்தகைய ஆதாயத்தையும் அடைந்திருந்தால் எசமானின் சொத்து அந்த அளவிற்குக் கடன் பொறுப்புகளுக்கு உட்படவேண்டும். தனக்கென ஓர் ஆளுமையைப் பெற்றிராதலால் அடிமைமுறை சிறந்த நிறுவனமாக இருந்தது. உரோம் நமக்கு விட்டுச்சென்ற இந்த நிறுவனம் அடிமை முறையின் மிகச் சிறந்த, நிரந்தரமான நிறுவனமாகும்.

இத்தகைய உறவுமுறைகள் எசமானுக்கும், அடிமைக்குமிடையில் இருந்தபோதிலும் சட்டம் தொடர்ந்து அடிமையைப் புறக்கணித்தது. சித்திரவதைக்குட்பட்டுத்தான் அடிமை, முறை மன்றங்களில் சான்று கூறமுடியும். இருப்பினும், எசமானின் இசைவு இதற்கு வேண்டும். பொது நீதிமன்றங்களில் அடிமைகள் சான்று கூறுவதும், சித்திரவதைக்குட்படுவதும் அரிதாகும். அடிமைக்குத் தீங்கு நேரும்போது இவனுடைய எசமான் இவனுக்காக இழப்பீடு கோரினர்[2] தமக்கோ தன் வீட்டுடைமைகளுக்கோ எதிராகச் செய்த குற்றங்களுக்கு எசமானே நீதிபதியாக இருந்தார். மற்றவர்களுக்குச் செய்யும் தீங்கிற்கு அடிமையொருவன் இயல்பான முறை குற்றத்தண்டனைச் சட்டத்தால் விசாரிக்கப்பட்டான். இதைச் குற்றம் செய்தவனுக்களித்த சலுகையென்பதைவிட சமூகத்திற்குச் செய்த சலுகையாகக் கருதப்பட்டது. பெருமளவிலான அடிமைகளுக்கிடையே வசித்த சுதந்திரக் குடிமக்களின் அச்ச உணர்வை ஒரு கொடுமையான

[1] Gaius in Dig 50, 17, 133.
[2] Gaius. iii. 210, 222, 223.

சட்டம் வெளிப்படுத்தியது. ஒரே உரோமானியன் அவன் சொந்த வீட்டில் கொலை செய்யப்பட்டதைக் கொலையுண்ட நேரத்தில் அந்த வீட்டில் வசித்த மக்கள் எல்லோரும் பழிவாங்கலாம் என்பதுதான் அச் சட்டம்

அரசு அடிமைகளைச் சொந்தமாகப் பெற்றிருந்தது. சிலர் கோயில்களிலும், குருமார் குழுக்களிலும் சேவை செய்தனர். மற்றவர்களை சென்சார்கள், ஈடில்கள் போன்ற நிருவாகிகளின் பொறுப்பில் இருந்தனர். இவர்கள் சிறிய ஏவல், காவல் வேலைகளுக்குப் பயன்படுத்தப்பட்டார்கள். இந்த நிறுவனம் ஒப்பந்த வகைகளில் அரசிற்குப் பயனுள்ளதாக இருந்தது. சொத்துச் சேர்ப்பதற்காக இத்தகைய நிறுவனம் கருவூலத்தோடு இருந்தது. இந் நிறுவனத்தின் உடைமை அரசின் உடைமையாயிற்று.

சட்டமுறைப்படி விடுதலை பெற்ற அடிமை குடிமகனுகிருன். ஆகவே, விடுதலை பெற்றவன் அரசின் மூன்றும் வகுப்பினனில்லை. இவ்வாறு விடுதலை பெற்றவர்கள் முன்னுள் எசமானர்களுக்குக் குறிப்பிட்ட சில கடமைகளைச் செய்ய வேண்டியிருந்ததால் இவர்களைத் தனிப்படுத்திப் பார்க்கவேண்டும். இவர்கள் சுதந்திரமாகப் பிறக்கவில்லையென்பதால் சில குறிப்பிட்ட அரசியல் தகுதியின்மைகளுக்குட்பட வேண்டியிருந்தது.

முன்னுள் எசமானரோடு, விடுதலை பெற்றவர் கொண்டிருந்த உறவைப் பழங் காலத்தில் பிரபுவோடு சார்பானவர்கள் கொண்டிருந்த உறவோடு ஒப்பிடலாம். ஏனெனில், விடுதலை பெற்ற அடிமைக்கு எசமான் புரவலராகிருர். விடுதலையளித்தவருக்கு விடுதலை பெற்றவன் மதிப்பையும், பணிவையும் தெரிவித்தான். இவனுல் குற்றம் சாட்டமுடியாது; அல்லது எசமானுக்கு எதிராக நீதிமன்றத்தில் சாட்சி சொல்ல முடியாது. முன்னுளைய எசமானுக்கெதிராகவோ, அவருடைய உறவினர்களுக்கெதிராகவோ வழக்குத் தொடர விடுதலை பெற்றவன் பிரீட்டரின் அனுமதியைப் பெறவேண்டும். விடுதலை பெற்றவரின் சொத்துகளுக்கான வாரிசுகளை முடிவு செய்யவேண்டிய உரிமை புரவலர்களைச் சாரும். விடுதலை பெற்றவன் எசமானின் முதலை வைத்து வாழ்க்கையைத் தொடங்கியிருக்க வேண்டுமெனக் கருதப்பட்டதால் உரிமை கொண்டாடப்பட்டது. சில சேவைகளைத் தொடர்ந்து எசமானுக்கு செய்ய வேண்டுமென்பதைக் கருத்தில் கொண்டு ஓர் அடிமை விடுதலை செய்யப்பட்டிருக்கலாம். எனவே, நிபந்தனையின்பேரில் விடுதலை செய்யும் முறை தவருகப் பயன்படுத்தப்பட்டது. இதைப் பிரீட்டரின் கட்டளை வரையறை செய்தது. ஒரு சில குறிப்பிட்டச் சொந்தச் சேவைகளுக்கு மட்டுமே விடுதலை பெற்றவர்களை இக்

கட்டளை உட்படுத்தியது. குடியரசின் இறுதிக் காலத்திலும், விடுதலை பெற்றவன் குடும்பத்தோடு சேர்ந்தவனெனக் கருதப் பெற்ருன்.

விடுதலை பெற்றவனின் அரசியல் நிலை, குடியரசின் முடிவில் இருந்ததைக் காட்டிலும், தொடக்கத்தில் நன்ருக இருந்தது. செர்வியசின் ஆட்சியின்கீழ் இவர்கள் இனங்களில் உறுப்பினராக இருந்தனர். இவர்கள் முதலில் செஞ்சுரிகளில் உறுப்பினராக இருந்தனராவென்பது இவர்களின் சுதந்திரமான பிறப்பைப் பொறுத்திருந்தது. இப் பிறப்புநிலை படைச்சேவைக்கு அடிப்படையான தகுதியாக இருந்ததா அல்லது இல்லையா என்பதற்குப் போதிய சான்றுகளில்லை. ஆனல், கொமிசியா செஞ்சுரியேட்டா ஒரு படை அமைப்பிலிருந்து ஓர் அரசியல் நிறுவனமாக மாறியபின் இவர்கள் இதிலிருந்து விலகியிருந்திருப்பார்கள் என்று கருதுவதற் கில்லை. கொமிசியா, டிரிபியூட்டா, கொன்சிலியம் பிளெபியர் ஆகிய அவைகள் தோன்றிய காலத்திலிருந்து இவர்கள் இவைகளில் உறுப்பினராக இருந்திருக்கலாம். விடுதலை பெற்றவர்கள் பெரு மளவு நுட்பத் தொழிலாளர்களாக இருந்தமையால் நகரின் நான்கு இனங்களில் உறுப்பினராக இருந்தனர். இந்தச் செயல் நிகழ்ச்சி கி.மு. 312-ல் ஒரு சட்டநிலையாக மாறியது. இந்த ஆண் டில் நடைபெற்ற மக்கள்தொகைக் கணக்கில் இது எல்லா இனங்களிலும் பரவலாகக் காட்டப்பட்டது[1]. எனவே, இவர்கள் எல்லா செஞ்சுரிகளிலும் இடம் பெற்றிருக்கலாம். விடுதலை பெற் றவனின் வாக்களிப்பை வரம்பிற்குட்படுத்திய ஏற்பாடு கி. மு. 304-ல் முன்னிலையை அடைந்தது. இவர்கள் வகுப்புகளாகப் பிரிந்ததுபற்றி ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. சீரமைக்கப்பட்ட கொமிசியா செஞ்சுரியேட்டாவின் ஏற்பாட்டின்படி இவர்களை நான்கு இனங்களுக்குட்படுத்தியது. இவர்களுக்கு நாற்பது செஞ் சுரிகளில் மட்டும் செல்வாக்களித்ததெனலாம். கி. மு. 169-ல், இவர்கள் எல்லோரையும் சென்சார்கள் ஓர் இனத்திற்குள் கொண்டுவந்தார்கள். ஆனல், விடுதலை பெற்றவரின் வாக்குரி மைப் பிரச்சினை குடியரசின் இறுதிக் காலத்தில் சர்ச்சைக்குரிய தாக மாறியது. கி. மு. 88-ல் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தால் விடுதலை பெற்றவருக்கு அவருடைய புரவலரின் இனத்தில் இடம் அளிக்கப்பெற்றது. செல்வர்களால் இச் சட்டம் நீக்கப்பட்டது. ஆனல் 84-ல் மக்களாட்சியாளர்களுக்கு வெற்றியின் விளைவாக முன்னிருந்த நிலை மீண்டும் வந்தது. சல்லாவின் காலம் வரை இவர்கள் நான்கு இனங்களுக்குட்படுத்தப்பட்டனர்.

[1] Liv. ix. 46

முறையான படைச் சேவைக்குரியவர்களாக விடுதலை பெற்ற வர்கள் கருதப்படாததால் இவர்களுக்குப் படைச்சேவைப் பொறுப்பு வலியுறுத்தப்படவில்லை. ஆனால் கப்பல் படைகளில் இவர்களுடைய சேவை பயன்படுத்திக்கொள்ளப்பட்டது. சுதந் திரப் பிறப்பில்லாத காரணத்தால் இவர்கள் நிருவாகிகளின் பதவிகளிலிருந்து ஒதுக்கப்பட்டார்கள். இக் காரணம் பற்றிய இவர்களுக்கு செனெட் சபையிலும் இடமளிக்கப்படவில்லை.

### அரசியலமைப்பின் கோட்பாடு

வளர்ச்சியால் உரோமானிய அரசியலமைப்பு அதனுடைய உட்சிக்கல்கள் எதையும் இழந்துவிடவில்லை. ஓர் அரிய, எளிய ஆட்சிமுறைக் காலப்போக்கில் பழக்கவழக்கம், அரசியலமைப்புச் சட்டம் ஆகியவைகளின் பல்பொருள் கூட்டமாக மாறியது. இதை நுட்பமாக ஆராய்ந்து, பொருள்விளக்கம் கொடுத்து ஒரு முறையாக உருவாக்கச் சட்ட அறிஞர்கள் மேற்கொண்ட முயற்சி பலனளிக்கவில்லை. எனவே, இம் முறையற்ற நிலையில் உருவாகிற நிறுவனம் அப்போதைய நிலைக்கு மிகப் பொருத்தமானதாகத் தோன்றியது. உரோம் உலகத்தை வென்றது. ஓரளவு நேர்மை யாகவும் சிறப்பாகவும் அவ்வுலகை ஆள்வதில் வெற்றியும் கண்டது. கோட்பாட்டில் இருப்பதைப் போல் நடைமுறையிலும் ஒரு நடுநிலை அமைதி பேணப்பட்டிருந்தால் கலப்பு அரசிய லமைப்பு உலகின் ஏற்பிற்கு உரியதாக இருந்திருக்கும். அரசிய லமைப்புச் சிக்கல்களை அறிஞர்களால் களைய முடியாதபொழுது அவைகள் வெட்டியெறியப்பட்டன. அரசியலமைப்புத் தோன்றிய நிலையில் இருந்ததைவிட மிக எளிதாக மாறியது. கலப்பு முறையின் குறைபாடு இதை ஒரு நகர அரசிற்கு அல்லது இத்தா லிக்குப் போதுமானதாக்கியது. ஆனால் அந்த ஆட்சிமுறை ஒரு பேரரசிற்குப் பொருந்தாதென்பதை உறுதியாகச் சொல்லலாம். கடுமையான சோதனைக்கு இவ்வரசியலமைப்பு உட்பட்டதால் நலிவுற்றதென்பதற்காக இதை முழுதும் கைவிடத் தேவையில்லை. போரின் விளைவால் இந்த ஆட்சிமுறை உருவானதெனினும் இதன் இயல்புமீறிய வளர்ச்சி இதனுடைய தனிச் சிறப்பியல் புகளை வெற்றியின் விளைவு எனக் காட்டாது.

வரம்பிற்குட்பட்ட இறைமையில் உரோம் அரசு தொடர்ந்து நிலைபெற்றிருந்தது. விருப்பத்தை வெளியிடமட்டுமன்றி உயிர் வாழவும் மெய்யாகவே மக்கள் தலைமை நிருவாகிகளை நோக்கி யிருக்கவேண்டிய அளவிற்கு இவர்களின் இறைமை வரம்பிற்குட் படுத்தப்பட்டிருந்தது. குடியரசின் தொடக்கத்திலிருந்து இறுதி வரை நடைமுறையில், இறப்பாலோ, தேர்ந்தெடுக்கப் பெறாத

தாலோ கான்சல் பதவி தவிர்க்கப்படுமாயின் அரசின் வாழ்வும் தடைபட்டுவிடும். இறைமை பெற்ற கான்சல்களின்றி மக்கள் கூடுவது இயலாது. கான்சல்களின் கூட்டாளியாகப் பிரீட்டர் கருதப்பட்டாலும் இவர் கான்சல்களுக்கான தேர்தலை நடத்த முடியாது. ஒரு கான்சல் தூய்மையான பாதையில் புட்குறி பார்த்து அறிவிக்கும்வரை நகர் உயிரிழந்து காணப்படும். இதற்கிடையில் புட்குறி பார்க்கும் புனிதச் சடங்கு தந்தையர்களைச் சென்றடையும். இவர்களே இதைத் திருப்பிக் கொடுக்க முடியும். ஆகையால், செனெட் சபையின் பெட்ரிசிய உறுப்பினரிடமே இறுதியான இறைமை நிலைபெறுகிறதென்பது உரோமானிய அரசியலமைப்பின் அடிப்படையான இயல்பாகும். கோனாட்சிக் காலத்திலிருந்து குடியரசின் இடையாட்சிக் காலத்தின் விளைவாக இக் கோட்பாடு எவ்வாறு செயற்படுத்தப்பட்டதென்பதையும் நடைமுறையில் என்ன மாற்றங்கள் ஏற்பட்டனவென்பதையும் நடைமுறை விதிகளின் ஆய்வால் காணலாம்.

கான்சல்களோ, கான்சுலர் அதிகாரத்துடன் கூடிய நிருவாகிகளோ, சர்வாதிகாரியோ இல்லாத நிலை இடையாட்சிக் காலத்திற்கான நிலையாகும். மக்கள் நிருவாகி (Magistratus populi) களாகிய மற்றைய பெட்ரிசிய நிருவாகிகளும் ஓய்வு பெற்றுவிட்டால் தூய புட்குறிச் சடங்குகளைச் செய்ய இயலாது போய்விடும். ஆகவே, ஓர் இடைக்கால நிருவாகியை அமர்த்த வேண்டிய திடீர் நிகழ்ச்சியொன்று ஏற்பட்டால், பெட்ரிசிய நிருவாகிகளைப் பதவியிலிருந்து விலகிக்கொள்ளும்படி அறிவிப்பது செனெட் சபையின் கடமையாகும். ஆனால், பிளெபிய நிருவாகிகள் பதவியில் இருந்துகொண்டு பணிகளைச் செய்துவந்தனர்.

குடியரசின் பிற்காலத்தில் மேலும் பல தேவையான நடவடிக்கைகளை செனெட் சபை மேற்கொண்டது. குடியரசின் தொடக்க காலத்தில் இச் சபை கூட்டப்பட்டிருக்க முடியாதாகையால் பெட்ரிசிய செனெட்டர்கள் இடைக்கால நிருவாகியை அமர்த்தும் விருப்பில் கூடியிருக்கலாம். ஆனால், தொடர்ந்து பதவியில் இருந்துவந்த டிரிபியூன் செனெட் சபையோடு தொடர்பு கொண்டு பணியாற்றும் உரிமையைப் பெற்றபின் இவர் பிரச்சினையைச் சபைமுன் வைத்தார். எனவே, இடைக்கால நிருவாகியை அமர்த்துவதற்காகச் செனெட் சபையும் கூடியது. இக் காலத்திலிருந்து வாக்காளர்களும், செனெட் சபையின் பிரேரணையின்றிக் கூட வேண்டியதில்லையெனக் கருதினர். இடைக்கால நிருவாகியை தேர்ந்தமர்த்துவதற்கு மட்டுமன்றி இடைக்கால நிருவாகி ஒவ்வொருவரையும் அவருக்கு முன்னிருந்தவர் நியமிக்கும்பொழுதும் இந் நடைமுறை பின்பற்றப்படவேண்டும்.

இடையாட்சிக் காலத்திற்குரிய கூட்டாளிமுறைக் கருத்தும், வீட்டுக் குலுக்கியெடுக்கும் கருத்தும் மறைந்து விட்டன. பெட்ரிசிய செனெட்டர்களின் இணக்கம் ஓர் இடைக்கால நிருவாகியின் தேர்தல் உருவத்தைப் பெற்றது. கான்சல் சர்வாதிகாரியை நியமனம் செய்ததுபோல் இந் நிருவாகி அவருக்குப்பின் வரவேண்டியவரை நியமனம் செய்தார். அப்படி அடுத்தடுத்து வரும் இடைக்கால நிருவாகி ஒவ்வொருவரும் ஐந்து நாள் பதவியில் இருப்பர். எத்தனை இடைக்கால நிருவாகப் பதவிகள் உருவாக்கப்படலாமென்பதற்கு ஒரு வரம்பில்லை. இதன் எண்ணிக்கை குறைந்தது இரண்டிலிருந்து கூடுதலளவு பதினொன்றாக இருக்கலாம்[1]. ஆனால் குறைந்தது இரண்டு பேராவது இருக்க வேண்டும். புட்குறிச் சடங்குகளை முறையாகப் பெறாததால் முதலாமவர் கான்சலர் தேர்தலை நடத்தும் தகுதியை இழந்துவிடுவார். இடைக்கால நிருவாகப் பதவிக்குப் போட்டியிட ஒருவர் பெட்ரிசியராகவும், செனெட்டராகவும் இருக்கவேண்டும். பல நிகழ்வுகளிலிருந்து குயுரூல் பதவியிலிருந்தவர்களே இப் பதவிக்குத் தெரிவு செய்யப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. முதல் இடைக்கால நிருவாகி தமக்குப் பின் வரஇருப்பவரைத் தெரிவு செய்ய செனெட் சபை அல்லது பெட்ரிசியர்களின் விருப்பத்தை அறிந்துகொண்டு செயற்பட்டிருக்கிறார். இவரை அமர்த்துவதற்குமுன் பட்டியல் முழுவதும் தயாரிக்கப்பட்டுவிடும். முறையான மிக உயர்ந்த பெட்ரிசியப் பதவியாகிய கான்சலைத் தேர்ந்தெடுப்பதோடு இடையாட்சிக் காலம் முடிவிற்கு வரும்; இடைக்கால நிருவாகியும் பதவியிலிருந்து ஓய்வு பெற்றுக்கொள்வார்.

தலைமை நிருவாகியை மீளவும் அமர்த்துவதோடு மக்கள் செயலாற்றத் தொடங்கிவிடுவர். அதாவது நிருவாகப் பதவியின் தொடர்ச்சியில் மக்கள் அதிகாரமும் தொடர்ந்தது. மெய்யாக, கொன்சிலியமும், டிரிபியூன்களும் பெரும்பாலான மக்களைக் கொண்ட ஒரு நிறுவனமாகத் தொடர்ந்திருந்து வந்துள்ளது. கி. மு. 287-ல் இருந்து பிளெபியரவையாகிய கொன்சிலியம் சுயேச்சையான சட்ட ஆக்க இறைமை பெற்ற நிறுவனமாக இருந்தது. ஒரு சட்ட ஆக்க மன்றம் தொடர்ந்திருக்கவும் மற்றொரு சபையாகிய கொமிசியா செஞ்சுரியேட்டா அதனுடைய பல்வேறு தோற்றங்களில் செயலற்றிருந்தது. மக்கள் இறைமைக் கோட்பாட்டின்படி இரு பொருள் தன்மையைக் குறிக்கிறது. கலப்பு அரசின் வகைகளில் நிருவாக, நீதி, சட்டஆக்க அதிகாரங்களைப் பிரிவினை செய்வது இயல்பாகவே இருந்துள்ளது. வரம்பில்லா சட்ட ஆக்க அதிகாரங்களின் பகிர்வு அரிதேயாகும்; உரோம்

[1] Liv. iv. I, viii, 23.

ஆட்சி முறையில் இப் பகிர்வு செய்யப்பட்டிருந்ததைப் போல் வேறெங்கும் பார்க்க முடியாது. ஏனெனில், சட்ட மன்றத்தின் நடவடிக்கைக்கு இரு சபைகளின் ஒத்துழைப்புத் தேவை இல்லை. இச் சபைகள் ஒவ்வொன்றின் கட்டளையும் சட்டத்தின் ஆற்றல் பெற்றிருந்தது. நடைமுறையில் இவ்வடிப்படையான இரு பொருள் தன்மையை மக்கள் உணரவில்லை. ஏனெனில் மக்களிலும், பிளெபியர்களிலும் தனிப்பட்டவர்கள் ஒரே மாதிரியாகத் தான் இருந்தார்கள். இவ்விரண்டு சபைகளையும் பார்த்து இவைகளின் நடைமுறை ஒற்றுமைகளையும், கோட்பாட்டளவிலான வேற்றுமையையும் நாம் வலியுறுத்தலாம். இவைகளின் செயல்திறமை, தேர்தல் பற்றியவைகளைத் தவிர, வேறுபடவில்லை. இவை தனித் தனியே சட்டமன்றமாகவும் நீதிமன்றமாகவும் இருந்தன. ஆனால் மாறுபட்ட நிருவாகிகளின் தலைமையில் இச் சபைகள் இயங்கின. இதனால் இச் சபைகளின் அமைப்பில் சிறிது வேறுபாடு காணப் பட்டது. பிளெபியர்களின் தலைவர்களாகிய டிரிபியூன்கள் சபையைக் கூட்டியபோது பெட்ரிசிய குடும்ப உறுப்பினரில் சிலர் கூட்டத்திற்கு வந்ததில்லை. ஆனால் கான்சல்கள் மக்களை இன வாரியாக அமர அழைத்தபொழுது பெட்ரிசியர்கள் வந்தார்கள். கோட்பாட்டு அடிப்படையிலான இவ் வேறுபாடு நடைமுறையில் எந்த விளைவையும் உண்டாக்கவில்லை.

டிரிபியூனேட்டைப் பேணிய தற்செயலான விளைவைத் தவிர இரட்டை இறைமையால் கேடு விளையவில்லை. பிளெபியரின் சிறப்புரிமைகளின் வளர்ச்சிப் போக்கின் விளைவே இந்த இரட்டை இறைமை. நிருவாகப் பதவி வலிமை இழந்துகொண்டிருந்தது இதன் வருந்தத் தக்க விளைவாகும். உரோமானிய அரசியலமைப்பில் இஃது இரண்டாவது முதன்மையான கருத்தாகும். நிருவாகப் பதவியின் நலிவிற்குச் சுதந்திரப் போராட்டத்தின் விளைவை ஒரு காரணமாகவும், போரின் இடைத்தடங்கல்கள் போன்ற தற்செயல் சூழ்நிலைகளைக் காரணமாகவும் கூறலாம். போராட்டம் பெற்ற உருவம், உரோம் ஒரு மக்களாட்சியாக என்றும் விரிவடைவதைத் தடை செய்தது. பழங்காலக் கிரேக்க அரசுகளும் தலைமை நிருவாகியின் பதவியை வலிமையற்றதாக்க இம் முறையைக் கையாண்டன. முதலில் தலைமை நிருவாகியின் அதிகாரங்களைப் பலர் பிரித்துக்கொண்டனர். இதுவும் போதாதெனக் கண்டபோது பலர் செயல்படுத்திய அதிகாரங்களை வேண்டுமென்றே அவர்களிடமிருந்து எடுத்துக் கவனமாக அமைக்கப்பட்ட மக்கள் அவைகளிடம் கொடுத்தனர். உரோமில் அதிகாரப் பங்கீடு முற்றிலும் தெரியாததன்று. எனவே சென்சார் பதவிகளும் பிரீட்டர் பதவிகளும் கான்சல் பதவிகளிலிருந்து சில

பணிகளை எடுத்துக்கொண்டன. ஆனால் முழுமையாகப் பணிகள் மாற்றப்படவில்லை. மரண தண்டனை விதிக்கும் அதிகாரத்தை மக்கள் கவர்ந்து கொண்டதுகூட நிருவாகிகளின் அமைப்பாணையின்பேரில்தான் மக்கள் கூடலாம் என்ற நிபந்தனையால் மாற்றி அமைக்கப்பட்டது. நிருவாகப் பதவிகளின் குணவியல்புகளை முதன்மையாக மாற்றிவிடாமல் நிருவாகப் பதவிகளின் எண்ணிக்கையைப் பெருக்கி இப் பதவியின் வலிமைக்குறைப்பு முறையை உரோம் மேற்கொண்டது. கூட்டாளிக் கருத்துமுறையை இடைவிடாமல் பயன்படுத்தியதால் எண்ணிக்கை அதிகரிப்பு ஏற்கப்பட்டது. பழைய அதிகாரங்களோடு மோதக்கூடிய புதிய அதிகாரங்களைக் கொண்டுசெலுத்தலும் மற்றொரு முறையாகப் பயன்படுத்தப்பட்டது. விளைவு குழப்பமே. கிளர்ச்சியடைந்த அரசியலமைப்பில் பத்து டிரிபியூன்களும், இரண்டு கான்சல்களும் எட்டு பிரீட்டர்களும் ஆக மொத்தம் ஆண்டிற்கு இருபது நிருவாகிகள் இருந்தனர். இவர்கள் ஒவ்வொருவருக்கும் செல்லத்தக்க நடவடிக்கைகளை எடுக்கும் அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தது. இவர்களுடைய கூட்டாளிகள் கீழ்நிலைப் பதவியிலிருந்தவர்களின் தீர்மானங்கள்மீது தடைவாக்கைப் பயன்படுத்தும் அதிகாரத்தையும் பெற்றிருந்தனர். இவர்களுக்குள் சட்டப்படியான கீழ்ப்படிதல் இருந்ததென்பது உண்மையே. டிரிபியூனுக்குக் கான்சலும், பிரீட்டர் கான்சலுக்கும் கீழ்ப்படிந்திருந்தனர். சட்டத்தைக் கடுமையாகப் பயன்படுத்தியிருப்பதால் உரோமானிய அரசியலமைப்புப் பத்து பேரின் சிலவராட்சியாகத் தாழ்ந்திருக்கும். மெய்யாகவே, டிரிபியூன்கள் அதிகாரங்களை வலியுறுத்த தொடக்கத்திலிருந்தே செல்வந்தர்களோடு சேர்ந்து கொண்டனர்; குழுக்களில் கருத்து வேறுபாடு தலைத் தூக்கி நின்றது. கூட்டாண்மை நிருவாகத்தின் வரலாறு இடையறாத மோதலாக இருந்தது. எனவே இம் முறை ஆட்சி நலிவுற்றது. நிருவாகப் பதவியின் இந் நலிவில் மக்களும் பங்கு பெற்றனர். ஏனெனில் இவர்கள் நிருவாகப் பதவியை முற்றிலும் நம்பி இருந்தனர். பிரதிநிதிகளின் அதிகாரத்தை மக்கள் அசைத்ததில் அவர்களுடைய அதிகாரத்தையே அசைத்துக் கொண்டனர். மக்கள் அமைப்பிலிருந்த சில தீவிரமான குறைபாடுகள் இவர்களுடைய ஆளும் திறமையின்மையை மிகைப்படுத்தின. மக்களையோ நிருவாகிகளையோ ஆற்றுப்படுத்துதல் இல்லாதிருந்தபொழுது, ஒரு தனிப்பட்ட அனுபவமுள்ள, நிரந்தரமான, கலந்தாராயக்கூடிய நிறுவனமாகிய செனெட் சபையிடம் மத்திய அரசு நிலை பெற்றிருக்க வேண்டியது பொருத்தமானதும், இயல்பானதும் கூட. நீண்ட போர்களின் காரணமாக இச் சபையின் அதிகாரம் பெருகிற்று. ஆனால், இப் போர்களுக்கு முன்னரே இதன் எழுச்சி உறுதியாயிற்று. ஒரு சுயேச்சையான

நிறுவனம் அரசு பொறுப்பேற்பதென்பதைப் பழமையான அர சியல் அமைப்பில் காண முடியாது. எனவே, பழமையான அர சியலமைப்புச் சட்டத்தோடு அரசியலமைப்பு வழக்காறுகளும் தோன்ற இஃது உதவியது. அரசின் மூன்று முக்கியக் கூறுக ளாகிய நிருவாகம், மக்கள், செனெட் சபை ஆகியவைகளின் விரிவான ஆய்வால் இப் புதிய தொகுப்பின் பயன்பாட்டை மதிப்பிடலாம்.

# 6. நிருவாகிகள்

**நிருவாகப் பதவியின் பொதுவான இயல்புகள்**

நிருவாகியின் திரளான அதிகாரத்தை இறைமை என்ற சொல்லால் குறிப்பிடலாம். நிருவாகியின் இறைமை அதிகாரங்களைப் பின்னர் அதிகாரமென்றே குறிப்பிட்டனர். காலப் போக்கில் நிருவாகப் பதவிகள் நிறுவப்பெற்றபொழுது இவர்களின் அதிகாரத்தைக் குறிப்பிட இறைமை (imperium) என்ற சொல்லைப் பயன்படுத்தாமல் அதிகாரம் (potestas) என்ற சொல்லையே பயன்படுத்தினர்.

இந்த அதிகாரத்தின் தனிப்பட்ட தோற்றங்களை ஒட்டு மொத்தமாக ஆய்வது கடினமாகும். ஏனெனில் அதிகாரத்தால் மாறுபட்ட பல நிருவாகப் பதவிகள் நிறுவப்பட்டன. எனவே, குழப்பம் தவிர்க்க, இப் பதவியின் முழுமையான அதிகாரங்களைப் பார்த்து, பின் குறிப்பிட்டதொரு நிருவாகிக்கு அளிக்கப்பெற்ற அதிகாரம் என்னவென்பதையும் அளிக்கப் பெறாத அதிகாரம் என்னவென்பதையும் தனித்தனியே பார்ப்பது எளிதாகும். நிருவாக அதிகாரங்களை (1) ஆட்சி இயல் அதிகாரங்கள் எனவும், (2) மக்கள் தொடர்பாகச் செயற்படுத்தப்படும் அதிகாரங்களெனவும், (3) செனெட் சபை தொடர்பாகச் செயற்படுத்தப்படும் அதிகாரங்கள் எனவும், (4) புட்குறிகள் வழியாகக் கடவுளர்களின் விருப்பை விளக்கம் செய்யும் அதிகாரம், கட்டளைகளைச் செயற்படுத்தும் அதிகாரமெனவும் சில குறிப்பிட்ட பொதுவான அதிகாரங்களெனவும் கூறினர்.

ஆட்சி இயல் அதிகாரங்கள்:- குடியரசு தோன்றிய காலத்திலிருந்தே ஆட்சியின் செயற்பாட்டெல்லை உள்ளாட்சித் துறையென்றும் வெளியாட்சித் துறையென்றும் இரண்டு துறைகளாக பட்டிருந்தன. உள் துறையின் ஆட்சி எல்லை நகருக்கு வெளியே முதல் கல் தொலைவோடு நின்றது.

தனிப்பட்ட நிருவாகிகளைப்பற்றிப் பார்க்கும்பொழுது உள்ளாட்சி முறையைப் பற்றிப் பார்ப்போம். ஆனால் இந்த ஆட்சியின் தோற்றம்பற்றி நாம் சில செய்திகளை இப்பொழுது பார்க்கலாம் குவெஸ்டர் முதல் கான்சல் வரையிலான நிருவாகிகளின் கட்டுப்பாட்டின் கீழிருந்த எல்லாத் தனிப்பட்ட ஆட்சிப் பிரிவுகளுக்கும் பொருந்தக்கூடிய கட்டளைகளை ஆணைகள் உருவத்தில் பிறப்பிக்கும் உரிமையை உள்ளாட்சி பெற்றிருந்தது. ஆனால் இந்த உரிமை குவெஸ்டர்களுக்கு இல்லையென்பது மாம்சனின் கருத்தாகும். குவெஸ்டர்களின் கட்டளைகள் குறிப்பிட்டுச் சொல்லப்படவில்லையென்பதால் நிருவாகிகளுக்குப் பொதுவாக இருந்த இந்த உரிமையை மறுப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. தோற்றத்தில் பொதுவாக எல்லா நிருவாகிகளின் கட்டளைகளும் ஒரே மாதிரியாகத்தான் இருந்தன. இந்த ஆணைகளில் கட்டளைகள், விலக்குகள், அறிவுரைகள் அடங்கியிருந்தன. தொடக்க காலத்தில் இவைகள் எழுத்துருவில் பிறப்பிக்கப்பட்டன. குவெஸ்டர்களும், கான்சல்களும் அவ்வப்போது ஆணைகளைப் பிறப்பித்தார்கள். இவைகள் தேவையில்லாத காலத்தில் விலக்கிக்கொள்ளப்பட்டன. ஆனால் சென்சார்கள், பிரீட்டர்கள், குயூருல் ஈடில்கள், மாநில ஆளுநர்கள் ஆகியோரின் ஆணைகள் தொடர்ந்திருந்து வந்தன. இந்த ஆணைகளுக்கான தேவை என்றென்றும் இருந்து வந்ததால் நிருவாகிகள் தமக்குப்பின் வருபவர்களுக்கும் இவைகளை விட்டுச் சென்றனர். தொடர்ந்திருந்துவந்த ஆணைகளில் முக்கியமானவை சென்சார், பிரீட்டர் ஆகியவர்களின் ஆணைகளே. இதில் ஒன்று உரோமானிய நெறிமுறைத் தொகுப்பை உருவாக்கியது; மற்றொன்று சட்ட நடைமுறையை வளர்த்தது.

நகருக்கு வெளியேயான ஆட்சி இறைமையோடு கூடிய நிருவாகிகளுக்குரியதாக இருந்தது. அதாவது இயல்பான நிலைகளில் கான்சல்களும் பிரீட்டர்களும் இந்த உரிமையைப் பெற்றிருந்தனர். ஆனால், இயல்பு மீறிய நிலைகளில் இந்த ஆட்சி உரிமையைச் சர்வாதிகாரிகள் பெற்றிருந்தனர். மாநில ஆட்சி முறையைப் பின்னர் பார்க்கலாம். மற்றவர்களைக் காட்டிலும், படைத்தலைமை இவர்களுக்குத் தனிச் சிறப்பதிகாரங்களை அளித்தது. மேலும் படைத் தலைமையைப் பெற்றிருந்தவர் சில சிறப்பு மரியாதைகளையும் பெற்றிருந்தார்.

கட்டாயப் படை திரட்டலினால் ஒரு படையை உருவாக்கிக் கொள்ளும் முதல் உரிமையைப் படைத்தலைவராக இருந்த நிருவாகி பெற்றிருந்தார். ஆயினும், படைத் தலைமையை முழுமையாகப் பெற்றிருந்த கான்சலோ, சர்வாதிகாரியோ அன்றி ஒரு

பிரீட்டர் இந்த அதிகாரத்தைச் செயற்படுத்தவில்லை. இது நிருவாகிகளின் தனியுரிமையாகும். நான்கு பிரிவுகளைக் கொண்ட படையை அமைப்பதில் கான்சல்கள் முழு உரிமைபெற்றிருந்தனர். தனிச் சிறப்பு வாய்ந்த படைகள் தேவைப்படும் பொழுது செனெட் சபையின் இசைவோடு படைதிரட்ட வேண்டுமென வழக்கம் உருவாகியது[1]. இந்த இசைவிற்குட்பட்டு கான்சல்கள் உசிதம்போல் செயற்பட்டனர். முதலில் காபிட்டோலி (Capitol) லும் பின்னர் காம்பஸ் மாரிட்டஸி (Campus Maritus)லும் கூடும் படி இள நிலையினருக்கு இவர்கள் கட்டளையிட்டனர். இவர்களுடைய மேற்பார்வையில் படைத்துறையைச் சார்ந்த டிரிபியூன்கள் தேவையானவர்களைத் தெரிந்தெடுத்துப் படைத்துறைச் சார்புடைய ஒரு பிரமாணத்தால் கீழ்ப்படியுமாறு கட்டுப்படுத்தினார்கள். தனிப்பட்ட படைத்தலைவர்களுக்கு தனி முறையில் பற்றுறுதியளிப்பதாக இப் பிரமாணம் இருந்தபோதிலும் இரண்டு கான்சல்களுக்கும் உட்படுவதாகவே இப் பிரமாணம் அமைந்தது. தலைமைமாறும் போது இப் பிரமாணம் புதுப்பிக்கப்படும். பகைவர்களுக்கெதிராகப் படைக்கலன்களைப் படைவீரன் ஒருவன் பயன்படுத்திக் கொள்ளும் உரிமையையளிப்பதே இதன் முக்கிய நோக்கமாகும். அதாவது கொள்ளையடிப்பதாக இருந்திருக்கக்கூடிய ஒரு செயலை இப் பிரமாணம் ஒரு முறைப்படியான படைச்சேவையாக மாற்றியது. இப் பிரமாணத்தை மீறியவன் சமயத்தை மீறிய குற்றவாளியாகக் கருதப்பட்டுக் கடவுளர்களின் வெறுப்பிற்குள்ளாகி உடனடியான மரணதண்டனையை அடைவான். படைத்தலைவர் இத் தண்டனையை அளிப்பார்[2]. இருந்தபோதிலும், படைக்கெதிரான குற்றங்களுக்குச் சமயத்தின் இசைவாணையின்றிப் படைத் தலைவரே மரணதண்டனை விதிக்கலாம். மேல் முறையீட்டெல்லைக்கு வெளியே இருந்தபொழுதும் இந்த அதிகாரத்தை ஒரு கான்சல் பயன்படுத்தலாம். படைத்துறை சார்ந்த டிரிபியூன்கள், செஞ்சூரியன்கள், டெக்குரியன்கள், படைப்பிரிவின் தலைவர்கள் ஆகிய படைத்துறை அலுவலர்களை அமர்த்துவதும் போரை நடத்துவதும் இவர்களுடைய அதிகாரமாகும். மிக உயர்ந்த பதவியிலிருந்து கீழ்நிலைப் படைப்பணிகளுக்கு ஆள்களை அமர்த்தும் அதிகாரம் முதலில் கான்சல்களிடம் இருந்தது; ஆனால் மிக உயர்ந்த பதவிகளுக்கு ஆள்களைத் தெரிவு செய்யும் இந்த அதிகாரத்தை நிருவாகிகளிடமிருந்துஅகற்றுவது குடியரசின் மனப்பான்மையாக இருந்தது. நான்கு பிரிவுகளைக் கொண்ட ஒரு நிலைப்படைக்கு அறு படைத்துறையைச் சார்ந்த டிரிபியூன்கள் கி. மு. 362-ல் அமர்த்தப் பெற்றார்கள். இவர்களை மக்கள் அவையாகிய கொமிசியா டிரிபி

[1] Liv. iii. 42. xxvii. 45.
[2] Dionys. xi, 43.

யூட்டார் அமர்த்தியது. பின்னர் 207-ல் எல்லாப் படைத்தலைவர்களை யும் அதாவது 24 பேர்களையும் சபை தேர்ந்தெடுத்தது. எனவே, படைதுறையைச் சார்ந்த டிரிபியூனேட்டுகள் சிறிய நிரந்தர நிருவாகப் பதவிகளாயின. மேலும் திரட்டப்பெற்ற படைகளுக்கு டிரிபியூன்களை கான்சல்களே அமர்த்தினர். சில சமயங்களில், இவர்களிடம் தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தை மக்கள் விட்டுக் கொடுத்தனர். படைக்குத் தேவையான பொருள்களைப் பெறுவ தில் பல நிருவாகிகள் செனெட் சபையைச் சார்ந்திருந்தனர். ஆயினும் தேவையான பணத்தை குவெஸ்டரிடமிருந்து கோரிப் பெறும் பழமையான உரிமையை இவர்கள் பெற்றிருந்தனர்.

போருக்கான ஆயத்தங்கள் முடிந்து கான்சல்கள் களம் புகும் போது போரை நடத்துவதிலும், நிதி, செயலாட்சி போன்றவை களிலும் இவர்களுடைய உசித அதிகாரம் பெருமளவு முழுமை யானதாக இருந்தது. உரோமோடு நேச உடன்பாடு கொண் டிருந்த நாடுகளோடு மக்களின் இசைவின்றிப் போர் தொடுக்க லாகாதெனும் நிபந்தனை இவர்களுடைய முதல் அதிகாரத்தைத் தடை செய்வதாக இருந்தது. கி. மு. 421-ல் படைத்துறை டிரிபியூன்களின் நியமனத்தால் இரண்டாவது அதிகாரத்திற்குச் சில வரம்புகளேற்பட்டன. மூன்றாவது அதிகாரம் குடியரசின் வரலாறு முடியும் வரை வரம்பற்றிருந்தது. ஆனால், உரோமானிய குடிமக்களின் உயிரின் புனிதத்தன்மை பற்றிய உணர்ச்சியின் வளர்ச்சியில் இதில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. படைத்தலைவர் கள் அதிகாரிகள் மீதும் படை வீரர்கள் மீதும் விதிக்கும் மரண தண்டனைகள் இதனால் சிறிது பாதிக்கப்பட்டன. போர்க்களத் தில் படைத்தலைவரின் அதிகாரம் படையோடு மட்டும் நின்றுவிட வில்லை. படைத்தலைவரின் ஆட்சி எல்லைக்குட்பட்ட ஒவ்வொரு உரோமானியரும் படைத்துறைச் சட்டத்திற்குட்படுத்தப்பட்டார். மாநிலங்களில் வசித்தவர்கள் அங்கு வசித்த உரோமானியக் குடி மக்களைக் காட்டிலும் சுதந்திரமாக இருந்தனர். ஏனெனில் இவர் களுடைய உரிமைகள் பறிக்கப்படும் பொழுது இவர்கள் முறை யிடலாம். ஆனால் உரோமானியர்களுக்கிருந்த இம் முறையீட் டுரிமை மறைந்துவிட்டது.

எதிரிகளின்மீது வெற்றிகண்ட படைத்தலைவர் பட்டம் பெறு தலும் மக்கள் வெற்றியைக் கொண்டாடுவதும் ஆகிய இரு சிறப் புரிமைகளைப் பெற்றனர். இவைகளை அரசியலமைப்புச் சட்டம் ஒழுங்குபடுத்தியது. இறைமை பெற்றிருந்த ஒவ்வொருவரும் (imperator) படைத்தலைவராக இருந்தனர். ஆனால், குடியரசின் தொடக்க காலத்திலிருந்தே இவ்விறைமை பெற்றிருந்தவர் இப்

பட்டத்தை (imperator) நகருக்குள் பயன்படுத்துவது முறையற்றதாகக் கருதப்பட்டது. படையை நடத்திச் செல்லும் தலைவருக்கே இப் பட்டம் உரியதாக இருந்தது. அலுவல் முறையிலும் வழக்கிலும் படைவீரர்கள் இப் பட்டப் பெயரிலேயே தலைவரை விளித்தனர். இருப்பினும் இப் பட்டத்தைப் படைத்தலைவர்கள் அலுவல் முறையில் பயன்படுத்தியதில்லை. இதற்கு ஒரு வெற்றி அவசியமாகும். வெற்றிக்குப் பின் படைவீரர்கள் படைத்தலைவரை வெற்றியாளரென அறிவித்துப் பழக்கமான இப் பெயரால் அவரை விளித்துப் பாராட்டினர். இதன்பின், இவருடைய பட்டப் பெயர்களில் இதையும் ஒன்றாகச் சேர்த்தனர். ஓர் அறுதியான பெரும் வெற்றியின் விளைவாகத்தான் இப் பட்டத்தைப் பெறலாமென்பது வழக்காயிற்று.[1] ஆனால், மாநில ஆளுநர்களின் போட்டியும் பேரார்வமும் சிறிய வெற்றிகளையும் பெரிய அளவில் கொண்டாடுமளவிற்குக் கொண்டு வந்துவிட்டன.

வென்று திரும்பும் படையோடு படைத்தலைவர் வெற்றி அணிவகுப்பு நடத்தி ஊர்வலமாக நகர் வழியே சென்று காபிட்டோலை அடைவார். இம்பரேட்டர் என்னும் பட்டம் தனித் தலைமையேற்றிருந்த நிருவாகியாகிய படைத் தலைவருக்கே அளிக்கப்பெற்றது. அதாவது, சர்வாதிகாரி, கான்சல், பிரீட்டர், வெற்றியின்போது மிக உயர்ந்த அதிகாரத்திலிருந்தவர்களே இப் பட்டம் பெற்றனர். எனவே வழக்கமாக, சர்வாதிகாரி, கான்சலையும், கான்சல், பிரீட்டரையும் இதிலிருந்து விலக்கி வைத்தனர். இரண்டு கான்சல்களும் படைத்தலைமை ஏற்றிருந்தபொழுது வெற்றி பெற்ற நேரத்தில் இறைமையையும் புட்குறி பார்க்கும் உரிமையையும் பெற்றிருந்த கான்சலுக்கே இந்த மரியாதை அளிக்கப்பெற்றது[2]. மாநில நிருவாகிகளுக்கு இந்த அணிவகுப்பு மரியாதை அளிக்கப்படுவதற்கும் இதே விதி பின்பற்றப்பட்டது. இங்கும் தனிப் படைத்தலைமை ஒரு நிபந்தனையாக இருந்தது.

மற்றத் தகுதிகள் வழக்கங்களால் உறுதி செய்யப்பட்டன. வெற்றி பெற்ற படை நகருக்குள் ஊர்வலமாக வரவேண்டுமென்பது ஒரு விதியாகும். ஆயினும், நிலைப் படையின் வளர்ச்சிக்குப் பின் இவ் விதி கைவிடப்பட்டது. ஏனெனில், மாநிலங்களும் அமைதிப் பகுதிகளாக அறிவிக்கப்பெற்றன. குடிகள் அல்லது அடிமைகளின் கலகத்தை ஒடுக்குவதாக இல்லாமல் போர் ஒரு நேர்மையான போராக இருக்க வேண்டும். 5000 எதிரிகளாவது போரில் தோற்றிருக்க வேண்டும். அத்தகைய போரினது

[1] Dio. Gass. xxxvii. 40.
[2] Liv. xxviii, 9 (207 B.C.)

வெற்றியே படைஅணிவகுப்பு மரியாதைகளுக்குரியதென வழக்கம் முடிவு செய்தது.

வெற்றிவிழா அணிவகுப்பு நடத்தும் உரிமை முற்றிலும் படைத் தலைவரின் உசித அதிகாரத்திற்குட்பட்டிருந்தது. இப் படை அணிவகுப்பு விழாவை இவர் ஆல்பன் மவுண்டில் (Albon Mount) நடத்துவதை எவரும் தடைசெய்ய முடியாது[1]. நகருக்குள் கவர்ச்சியாக அணிவகுத்துச் செல்வதற்குச் சில இடர்ப்பாடுகள் இருந்தன. முழு இராணுவ அதிகாரங்களையும் வெளிப்படுத்துவதாக இவ் வெற்றி ஊர்வல அணிவகுப்பு இருந்தது. இவ் வெற்றி விழா அணிவகுப்புகளைச் சில நிருவாகிகள் சொந்தப் பொறுப்பில் நடத்திய செய்திகள் பல இருந்தபோதிலும் இத்தகைய அணி வகுப்புக்கு அரசின் இசைவைப் பெற வேண்டுமென மரபு வலியுறுத்தியது. தொடக்கத்தில் இதற்கான இசைவை மக்களே அளித்திருக்கலாம். ஆயினும், முழு அதிகாரத்தையும் வெளிப்படுத்தும் அளவிற்கு வெற்றி விழாவை நடத்துவதற்கு செனெட்டின் இசைவு தேவைப்பட்டது. இவ் விழாவிற்குத் தேவையான பணத்தை அளிக்கவும் மறுக்கவும் செனெட் சபை அதிகாரம் பெற்றிருந்ததால் இதன் இசைவு தேவையாயிற்று.

மாநில நிருவாகிகளின் நிலை வேறு விதமாக இருந்தது. மாநில கான்சல்கள் (proconsuls) இராணுவ அதிகாரம் மட்டுமே பெற்றிருந்தனர். அதுவும் நகருக்குள் அந்த அதிகாரம் செயற்பட்டது. எனவே, இவருக்கில்லாத அதிகாரத்தை வெளிப்படுத்தும் உரிமையை செனெட் சபை ஏற்றுக்கொள்ள இயலாததாயிற்று. இதைப் பொறுத்தமட்டில் சட்டத்திலிருந்து ஒரு தனி ஏற்பாடு தேவைப்பட்டது. இந்த ஏற்பாட்டை முதலில் மக்கள் செய்திருக்கவேண்டும். இந்த ஏற்பாட்டிற்கு இசைவளிக்கும் தீர்மானமொன்றைக் கொண்டுவருமாறு செனெட் சபை டிரிபியூன்களைக் கேட்கலாம்[2]. செனெட் சபை இத்தகைய வேண்டுகோளை பிரீட்டர் வழியாகக் கேட்டிருக்கவேண்டும். ஏனெனில், இந்த முழுமையான அதிகாரத்தைப் பிளெபியர்கள் டிரிபியூன்களுக்கு அளிக்க முடியாது. இறைமை நிருவாகப் பதவியிலிருந்து மாநில நிருவாகப் பதவிக்குத் தொடர்வது முற்காலத்தில் வெற்றிவிழா கொண்டாடுவதற்கு ஒரு நிபந்தனையாக இருந்தது. ஆகவே, இதற்குமுன் எத்தகைய இறைமையையும் செயற்படுத்தாத மூத்த சீபியோ ஆப்ரிகானுககு (Scipio Africanus) அவர் மாநில் கான்சலாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றபோது இது மறுக்கப்

[1] Liv. xxxiii. 23; xiii. 21.
[2] Liv. xxvi, 21. Cf Liv. xiv. 35

பட்டது. குடியரசு முடிவிற்கு வந்தபோது இக் கருத்துகள் புறக் கணிக்கப்பட்டன. முன்னாள் இறைமை பெற்றிருக்க வேண்டு மென்ற விதியைப் பொருட்படுத்தாமல் செனெட் சபை மாநில கான்சல்களுக்கும் வெற்றிவிழா எடுக்கும் உரிமையை அளித்தது. எடுத்துக்காட்டாக பாம்பியசின் (Pompeius) இரண்டு வெற்றி விழா அணிவகுப்புகளைக் (கி. மு. 80, 71-ல்) குறிப்பிடலாம்.

**மக்கள் தொடர்பாகச் செயற்படுத்தப்பெற்ற அதிகாரங்கள்**

மக்களோடு தொடர்புடைய செயல்கள் இரண்டு வகைப் பட்டன. செய்திகளைக் கூற நிருவாகி, மக்களைக் கூட்டியிருக்க லாம். இதுபற்றிய கூட்டத்தைச் சட்டமுறைப்படி கூட்டப்படாத ஒரு கூட்டமெனலாம்; அல்லது சமூகத்தைக் கட்டுப்படுத்தக் கூடிய கட்டளைகளை நிறைவேற்றவும் இவர் மக்களைக் கூட்டலாம். இத்தகைய கூட்டம் கொமிசியாவின் பல உருவங்களில் ஒன் றினைப் பெற்றது. பல முறையவையாக் கூட்டங்களுக்குப் பின் மக்களவைகளின் முறையான கூட்டங்கள் நடந்தன. இக் கூட் டங்களில் தீர்மானங்களும் சட்டங்களும் நிறைவேறின. ஒரு மசோதாவின் குணங்குறை ஆய்வுகளுக்கும் பரிந்துரைகளுக்கும் இம் முறையவையாக் கூட்டங்கள் சிறந்த வாய்ப்பளித்தன. மக் களின் அதிகாரத்தைப் பொறுத்தவரையில் சான்றுகளைப் பற்றிய மதிப்பீட்டை உருவாக்க மக்களுக்கு இக் கூட்டங்கள் உதவின. நிருவாகிகள் கூட்டிய இக் கூட்டங்கள் சட்டப்படியான ஆர்ப் பாட்டங்களுக்கு வழி வகுத்ததோடு உரோமில் மிகச் சிறந்த மக்க ளாட்சி நிறுவனமாகவும் இருந்தன.

ஆனால், சட்ட ஆக்கத்தின் முன்னேற்பாடுகளோடு இக் கூட்டங்களின் பயன் அடங்கிவிடவில்லை. கட்டளைகள் எழுத் துருவிலான ஆணைகளாகப் பிறப்பிக்கப்பட்டபொழுது இவை களைக் கேட்கவும் நிருவாகியின் பொதுவான செயலைப் பார்க் கவும் மக்கள் அழைக்கப்பட்டனர். எடுத்துக்காட்டாக, நகருக்கு வெளியே நிறைவேற்றப்பெறவிருந்த மரண தண்டனைகளைப் பார்க்க இம் முறையில் மக்கள் அழைக்கப்பெற்றனர். நிருவாகி களைச் சந்திக்கவும் அவர்களுடைய கருத்துகளைக் கேட்கவும் மக்கள் அழைக்கப்பட்டு அவையாகக் கூடியது இவ்வவையின் சிறப்பியல்பாகும். மக்கள் தணிக்கையாளர்களாகச் செயற்பட் டனர். முறைப்படியிலான அழைப்பாணை, இறை வணக்கம், நிருவாகி சபையின் தலைவராக உயர்வு பெற்றது ஆகியவை சபை திட்டமிடப்பட்டு அழைக்கப்பட்டதை மெய்ப்பித்தது. இம் முறை யவையாக் கூட்டங்களைக் கூட்டும் உரிமை எந்த அளவிற்கு நீட் டிக்கப்பட்டதென்பதை உறுதியாய்ச் சொல்வதற்கில்லை. கான்

சல்கள், பிரீட்டர்கள், சென்சார்கள், டிரிபியூன்கள் ஆகியோர் இந்த உரிமையைப் பெற்றிருந்தனர்; அதாவது, குவெஸ்டர் வரையிலான எல்லா நிருவாகிகளும் இந்த உரிமையைப் பெற்றிருந்திருக்கலாம். மற்றத் துறைகளில் நிருவாகியின் அதிகாரம் மோதல்களை உண்டாக்கின. கீழ்நிலை நிருவாகியொருவர் கூட்டிய அவையை உயர்நிருவாகி ஒருவர் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பொதுமக்களின் கூட்டத்தை உரோமானிய அரசியலமைப்பு ஏற்கவில்லை. குடிமக்களை மற்றொரு குடிமகன் கூடுமாறு அழைப்பது அமைதியைக் குலைக்கும் செயலாகக் கருதப்பெற்று நிருவாகியொருவரால் தண்டிக்கவும் பெற்றார். ஆனால், நிருவாகிகளின் எண்ணிக்கை பெருகியதும், இவர்களின் மாறுபட்ட கருத்துகளின் வளர்ச்சியும் மக்கள் தண்டிக்கப்படுவதின் மாற்றாக அமைந்தன. ஒரு குடிமகனை நிருவாகியொருவர் சபையில் புகுத்தி அவருக்குப் பேசும் உரிமை அளிக்கும் அதிகாரம் பெற்றிருந்தார். இந்த நடவடிக்கையை மேலதிகாரியொருவர் அல்லது அதிகாரியின் கூட்டாளி தடைசெய்யும் அதிகாரம் பெற்றிருந்தார். ஆனால் வழக்கில் இத்தகைய தடைவாக்குகள் மிகக் குறைவாகவே இருந்தன. மக்களைக் கூட்டும் நிருவாகிகளின் இந்த அதிகாரம் புகழ்பெற்ற தனி மனிதர்களுக்கு வரம்பிற்குட்பட்ட விவாத உரிமை அளித்தது. ஆனால், இதற்காக மட்டும் இக் கூட்டங்கள் கூட்டப்படுவதில்லை. தனிப்பட்ட அரசியல் தலைவர்கள் கருத்தை வெளியிட இஃது ஒரே வழியாக இருந்தது. ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையை நிருவாகியொருவர் மெய்ப்பிக்க இது வசதியானதொரு வழியாக இருந்தது. பொதுமக்களின் மனத்தை மாற்ற வெளிநாட்டரசர் ஒருவரும் ஒற்றர் ஒருவரும் பயன்படுத்தப்பட்ட செய்தியை நாம் அறிகிறோம். எதிர்ப்பைத் தெரிவிக்கும் மக்கள் தலைவரும், நிருவாகிக்குப் பயன்படாதவரும், நிருவாகியாக இல்லாத ஒருவரின் கருத்தைப் பிறர் கேட்கும் வாய்ப்பை உரோமில் பெற்றிருக்கவில்லை.

சபையாகக் கூடியிருக்கும்பொழுது மக்களின் கருத்தைத் தீர்மானங்களின் வாயிலாக அறியும் உரிமை இறைமையில் பொதிந்திருந்த ஓர் இயல்பாகும். எனவே, இயல்பான சூழ்நிலைகளில் இந்த உரிமை கான்சலுக்கும் பிரீட்டருக்கும் உரியதாக இருந்தது; இயல்பு மீறிய நிலைகளில் இது சர்வாதிகாரிக்கும், இடைக்கால நிருவாகிக்கும் கான்சுலர் டிரிபியூன்களுக்கும் உரியதாயிற்று. மிக உயர்ந்த நிருவாகிகளின் பேராள்களும் இந்த உரிமையைப் பெற்றிருந்தனர். எடுத்துக்காட்டாக, கான்சலின் பேராள

ராகிய குதிரைப் படைத்தலைவர் இந்த உரிமையைப் பெற்றிருந்ததை இங்குக் குறிப்பிடலாம். கொமிசியாவை குயுரிகளாகவும், செஞ்சூரிகளாகவும், இனங்களாகவும் இந் நிருவாகிகள் கூட்டலாம். கீழ்நிலை நிருவாகி எவரும் அவையைக் கூட்டவும் தலைமை வகிக்கவும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. ஆனால் மக்கள் அதிகார வளர்ச்சியும் மேல்முறையீட்டின் நீட்டிப்பும் நீதி வழங்கும் அதிகாரம் பெற்றிருந்த கீழ்நிலை நிருவாகிகளும் மக்களைச் சந்திக்கவேண்டிய தேவையை உண்டாக்கின. ஆகவே, கொமிசியா டிரிபியூட்டாவில் குயுருல் ஈடில்கள் தண்டனையை ஆதரித்துப் பேசினர். கான்சலின் குற்றத் தண்டனை அதிகாரம் பற்றிய பேராளரும், மரண தண்டனைக்குரிய வழக்குகளின் பொது விரோதிபற்றிய வழக்குகள் ஆகியவற்றின் தீர்ப்புகளை கொமிசியா செஞ்சூரியேட்டா முன் கொண்டுவந்தார். கொள்ளை, கொலை தொடர்புடைய வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் பிளெபியர்களுக்குக் கிடையாது. எனவே, பிளெபிய நிருவாகியொருவர் தம் விசாரணை அதிகாரத்தைச் செயற்படுத்த விரும்பும்போது மரணதண்டனைக்குரிய வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் பெற்றிருந்த கொமிசியாவை அழைக்குமாறு டிரிபியூன் பிரீட்டரைக் கேட்கவேண்டும்[1]. கொமிசியா கூடுவதற்கான நாளைப் பிரீட்டர் குறிப்பிட்டபின் குற்றம் சாட்டுபவராக டிரிபியூன் சபைமுன் தோன்றுவார். பிளெபியர்களின் கருத்தைத் தீர்மானமாகக் கொண்டுவரும் உரிமை டிரிபியூன்களுக்குரியதாகும். பிளெபியரின் அவைக்கு பிளெபியரே தலைமை தாங்கவேண்டும். ஆனால் மக்களின் விசாரணை அதிகாரம் வளர்ந்தபோது பிளெபிய ஈடிகள் தம் தீர்ப்புகளைப் பிளெபியரவையில் ஆதரித்துப் பேசவேண்டிய அவசியம் ஏற்பட்டது[2].

### செனெட்சபை தொடர்பாகச் செயற்படுத்திய அதிகாரங்கள்

காரியங்களை செனெட் சபைமுன் கொண்டுவருகின்ற உரிமையானது மக்களோடு காரியங்களைச் செயற்படுத்தும் உரிமைக்கு ஒப்பாகும். எனவே, இத்தகைய உரிமை கான்சல்களுக்கும், பிரீட்டர்களுக்கும், சர்வாதிகாரிக்கும், இடைக்கால நிருவாகிக்கும் இருந்ததாக சிசரோ குறிப்பிட்டார். தேவையின் காரணமாக இந்த உரிமை கான்சுலர், டிரிபியூன்களுக்கும் அளிக்கப்பெற்றது. நகரத்தலைவரின் உரிமைகளில் இதுவும் ஒன்று.

[1] Liv. xiii, 16.
[2] Liv, x, 23; xxv, 2; xxxiii, 42; Gell. x, 6.

இந்த உரிமை முதலில் பிளெபியர்களுக்கு அளிக்கப்படவில்லை; புரட்சியின் விளைவாக இவ்வுரிமை பின்னர் கிட்டியது. பல நூற்றாண்டுகளாகப் பிளெபியர் மக்கள் தொகுதியின் தலைவர் என்ற முறையில் இவருக்கு இந்த உரிமை கிடைத்தது. ஆனால் ஹோர்டென்சியா சட்டத்தால் பிளெபியரவை ஒரு சட்ட ஆக்கமன்றமாகிப் பகுப்பற்ற பின்னும் இந்த அவையின் தலைவர்களுக்குச் செனெட் சபையைக் கலந்தாராயும் உரிமை மறுக்கப்படுவது ஆபத்தாகும் என்பதை செனெட்சபை உணர்ந்தது. டிரிபியூன்களின் இந்த உரிமை கி. மு 304-க்குப் பின்னரே தோன்றியிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. செனெட்சபையின் சட்ட ஆக்கத்தில் தொடங்கும் உரிமையின் மீதான நிரந்தரச் செயலாட்சியின் நிபந்தனையின் பேரில் பெட்ரிசிய நிருவாகிகளோடு டிரிபியூன்களும் கலந்தாராயும் உரிமையோடு சேர்த்துக்கொள்ளப் பெற்றனர்கள்.

### பொதுவான அதிகாரங்கள்:

நிருவாகப் பதவியோடு தொடர்புடைய பல அதிகாரங்களை இப்பொழுது பார்க்கலாம். முதலில் புட்குறிபார்க்கும் அதிகாரங்களைப்பற்றிப் பார்க்கலாம். இது நிருவாகியின் உரிமையும்கடமையுமாகும். நிருவாகியின் அதிகாரங்கள் முறைப்படி செயற்படுத்தப்பட வேண்டுமெனில் புட்குறிபார்த்தல் அவசியமாகும். இறைமையோடு புட்குறி பார்க்கும் அதிகாரம் இரண்டறக் கலந்ததாகும். கடவுள்· மனித இயல்புகளின் தோற்றமாக இவ்வதிகாரம் விளங்கியது. மனித நடவடிக்கை ஒவ்வொன்றிற்கும் தெய்வத்தின் துணை நாடப்பெற்றது. தக்க வழிகளால் கடவுளர்களின் விருப்பத்தை அறியலாமென உரோமானியர்கள் நம்பினர்கள். குறிப்பாக, ஒரு நிருவாகியைத் தேர்ந்தெடுக்கும் முன்னும் பதவியேற்கும் முன்னும் சட்டசபையாக கொமிசியா கூடும்முன்னும், போருக்கு ஒரு நிருவாகி புறப்படுவதற்கு முன்னும் புட்குறி பார்த்துக் கடவுளர்களின் உதவியை நாடுவது அவசியமாயிற்று. முதல் மூன்று நிகழ்வுகளிலும் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டிய அதே இடத்தில் அதே நாளில் புட்குறி பார்க்க வேண்டும். நிருவாகியின் தேர்தலுக்கு முன்னும் பின்னும் கெட்ட சகுனங்கள் தோன்றினல் அல்லது சட்டம் நிறைவேற்றும் முன்னும் பின்னும் தீய சகுனங்கள் தோன்றினல் சட்டத்தில் குறைபாடு இருந்ததாகக் கருதப்பட்டது. இதன் விளைவாக, நிருவாகி பதவி துறக்கவேண்டும். சட்டமும் மீளவும் இயற்றப்படவேண்டும். இருந்தபோதிலும், குடியாட்சின் கடைசி காலத்தில் இத்தகைய நுட்பக் குறைபாடுடைய சட்டத்தை செனெட்சபை ஏற்று ஆதரவாகச் செயலாற்றினல் சட்டம் செல்லத்தக்கதாகிவிடும்·

கடவுளர்களால் ஏற்கப் பெருத அரசியல் நடவடிக்கைகளைச் சாதகமான சகுனங்கள் தோன்றிஞல் பின் எடுத்துச் செயற் படுத்தலாம். பாதகமான சகுனங்களைப் கடைப்பிடிக்காததற்குச் சட்டபடியான தண்டனை எதுவுமில்லை.

சில சகுனங்களால் கடவுளர்கள் விருப்பை வெளிப்படுத்திய தாகக் கருதப்பெற்றது. தக்க முறையில் கேட்ட கேள்விகளுக்குத் தக்க மறுமொழிகளால் விடையளித்து விருப்பை வெளியிட்டார் கள். எடுத்துக்காட்டாக, கொமிசியா கூடுமுன் மின்னெளியால் கடவுளர்கள் எச்சரிக்கலாம்; அல்லது சபை உறுப்பினரின் காக்காய் வலிப்பு வடிவில் இந்த எச்சரிக்கை இருக்கலாம். செயலாற்றும் நிருவாகிகள் அல்லது இவர்களால் அமர்த்தப் பெற்ற புட்குறி பார்ப்பவர்கள் புட்குறிபார்த்துக் கடவுளின் இசைவு பெற்றுர்கள். தரையில் சதுரம் வரைந்து குறிபார்த்தல், ஆகாயத்தில் கற்பனையாகச் சதுரம் வரைந்து சகுனம் பார்த்தல், புட்குறிபார்த்தல் எனச் சகுனம் பார்த்தல் மூன்று வகைப் படும். நான்கு கால் பிராணிகளும், புட்களும் இச் சதுரங்களைக் கடப்பதை வைத்துச் சகுனம் பார்ப்பது வழக்கம். வானத்தில், முன்னரே தீர்மானித்த ஓர் இடத்தில் தோன்றும் மின்னலை வைத்துச் சகுனம் பார்ப்பதும் வழக்கமாகும். பூமியில் கோழிக் குஞ்சுகள் உணவு உண்பதை வைத்தும் சகுனம் பார்ப்பதுண்டு.

பாதகமான சகுனங்களென மற்றெரு அலுவலர் அறிவிப்ப தைப் பதவியிலுள்ள நிருவாகி ஒருவர் ஏற்கலாம்; அல்லது ஏற்காமலிருக்கலாம். நிருவாகிகள் மாறுபட்ட சகுனங்களைக் கண்டால் இறைமையுடைய நிருவாகி கண்ட சகுனங்களை ஏற்பது வழக்கமாயிற்று. இருந்தபோதிலும், கீழ்நிலை நிருவாகிகள் ஒரு குறிப்பிட்ட நாளில் புட்குறி பார்ப்பதைத் தடைசெய்து உயர் நிருவாகிகள் மாறுபட்ட சகுனங்களைத் தவிர்த்தனர். புட்குறி பார்த்தல் பழைமையான பெட்ரிசிய வழக்கங்களின் ஓர் அம்சமாகும். எனவே, பல நூற்றுண்டுக் காலமாக டிரிபியூன்கள் இந்த உரிமையைச் செயற்படுத்தவில்லை. பிளெபியர்களின் அவையிலும் இச் சகுனங்களுக்கு எத்தகைய பங்குமில்லை. ஆனால், கி. மு. 155-ல் ஒரு சட்டத்தால் பிளெபியரவையும் இப் புட் குறிகளுக்கு உள்ளாக்கப்பட்டது. இதன் பின் டிரிபியூன் களும் புட்குறிபார்க்கலாம். இதை நிருவாகிகள் டிரிபியூன்களுக் கெதிராகப் பயன்படுத்திஞர்கள். பொதுமக்கள் அவைகளின் கூட்டங்களுக்குப் புட்குறிபார்க்கும் வழக்கம் வசதியானதொரு குறுக்கீடாக இருந்தது. ஒரு குறிப்பிட்ட நாளில் புட்குறி பார்க்க விரும்புவதாக நிருவாகியொருவரின் அறிவிப்பு, கொமிசியா

கூடுவதைத் தள்ளிவைப்பதற்குத் தக்க காரணமாயிற்று. பின்னர் கி. மு. 58-ல் ஒரு சட்டத்தால் பாதகமான சகுனங்கள் தடை செய்யப்பட்டன. புட்குறிபார்ப்பதைத் தவிர, செனெட்சபை அல்லது கொமிசியாவின் ஒத்துழைப்போடு புதிய வழிபாட்டு முறைகளை ஏற்றல், புதிய குருமார்த் தொகுதிகளை நிறுவுதல், கோயில்கள் கட்டுதல், புனித நாள்களை உறுதிப்படுத்தல் போன்ற மற்றச் சமயச் செயற்பாடுகளையும் நிருவாகிகள் நிறை வேற்றினர்.

அரசின் அதிகார முறையிலான பிரதிநிதியென்ற முறையில் போர்க்காலத்தில் நிருவாகி எதிரியோடு தற்காலிக அமைதி உடன்பாடு செய்து கொள்ளலாம்; மக்களின் ஏற்பிற்கிணங்க பகை அரசோடு அமைதி உடன்படிக்கை செய்துகொள்ளலாம். போரில் கைப்பற்றிய பொருள்களையும், நிலத்தையும் குடியரசு காலத்தில் செனெட்சபையும் மக்களும் ஏற்றுப்பயன்படுத்திக் கொண்டனர். இருந்தபோதிலும், வென்று கைப்பற்றிய நிலத் தைப்பற்றிய செயல்களையும் அரசு நிலத்தின் குத்தகை வசூலிப்பு ஆகியவைகளையும் நிருவாகிகள் ஏற்றுச் செயற்படுத்தினர்.

குடியரசின் தொடக்க காலத்தில் உரிமை வழக்குகளையும் குற்றத்தண்டனை வழக்குகளையும் கான்சல் விசாரித்தார். இருப்பினும், காலப்போக்கில் நீதி வழங்கும் பணிகள் அதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பெற்ற நிருவாகிகளின் தனிப்பட்ட சிறப்பதிகாரமாயிற்று. தனியார் கட்சிக்காரர்களாக இருந்த உரிமை வழக்குகளை விசாரிக்கும் பொறுப்புகளிலிருந்து கான்சல்களை விடுவிக்கும் பொருட்டு கி. மு. 366-ல் பிரீட்டர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். மாநிலங்களில் ஆளுநர்கள் நீதி வழங்கினர். வரிவசூலித்தலும், அரசு நிலங்களிலிருந்து குத்தகைப் பணம் வசூலித்தலும் பல உரிமை வழக்குகளை எழுப் பின. இவைகளில் அரசும் ஒரு கட்சிக்காரராக வேண்டியிருந்தது. இத்தகைய வழக்குகளை சென்சார்கள், பிரீட்டர்கள், ஈடில்கள் போன்றோர் விசாரித்தனர். பொது நிதியியல் செயலாட்சி இவர்களுடைய அதிகாரத்திற்குட்பட்டிருந்தது. இச் சட்ட நடை முறை தனியாருக்குப் பாதகமாக இருந்ததென்பது தெளிவு. இந்த நடைமுறைப்படி வழக்கைக் கொண்டுவந்த அல்லது ஆதரித்த நிருவாகிகளே நீதிபதியாகவும் செயலாற்றினார்கள். இந்த நீதிபதியின் தீர்ப்பையொட்டி மேல் முறையீடு செய்ய முடியாது.

நிருவாகியின் குற்றவழக்கு விசாரணை அதிகாரம் ஒரு வரம்பிற்குட்பட்டிருந்தது. ஏனெனில் நிருவாகி விதித்த மரண

தண்டனையையொட்டியும் விதித்த 3020 அசெஸ் தண்டத் தொகையையொட்டியும் தண்டனைக்குட்பட்டவர்கள் மக்கள் அவைக்கு முறையிடலாம். நிலையான நீதிமன்றங்களின் அமைப்பும் இரண்டாம் நூற்றூண்டில் சல்லாவின் ஆட்சிக்காலத்தில் இந் நிறுவனம் அடைந்த மேம்பாடும் நிருவாகியின் குற்ற வழக்கு விசாரணை வரம்பில் மிக முக்கியமான மாற்றங்களை உண்டாக்கின. புதிதாக நிறுவப்பட்ட பல நீதிமன்றங்கள் பிரீட்டரின் தலைமையில் இயங்கின. விசாரணைக்கான முன்னேற்பாடுகளைச் செய்தல், விசாரணையின்போது தலைமை தாங்குதல், குற்றவாளியின் குற்றமின்மையை அறிவித்தல், அல்லது தண்டத் தொகையை உறுதிப்படுத்தல் ஆகியவை பிரீட்டரின் கடமைகளாகும்.

கீழ்ப்படியச் செய்யும் உரிமைகளோடு மக்களைக் கட்டுப்படுத்தும் ஒழுங்குமுறைகளைப் பொதுவாக அறிவிக்கும் உரிமையும் இணைந்திருந்தது. ஆணைகள் உருவிலும், சமுதாயம் முழுவதையும் அல்லது குடிமக்களின் அனைத்து வகுப்புகளையும் அல்லது தனிப்பட்டவர்களையும் பாதிக்கின்ற நிருவாகிகளின் அறிவிப்பு உருவிலும் உரோமானிய ஆணை விளம்பரங்கள் இருந்தன. அதிகார வரம்பிற்குட்பட்டவைகளையொட்டி நிருவாகிகளின் ஆணை விளம்பரங்கள் அமைந்திருந்தன. இந்த ஆணையைப் பிறப்பித்த நிருவாகியின் பதவிக் காலம் முடியும் வரை இவ்வாணை செல்லும். இதைப் பொறுத்தமட்டில் இது சட்டத்திலிருந்து வேறுபட்டது. இருந்தபோதிலும், இது சட்டத்தின் ஆற்றலைப் பெற்றிருந்தது. அடுத்து பதவிக்கு வந்த நிருவாகிகளுக்கு முன் பதவியிலிருந்த நிருவாகிகளின் ஆணைகளை ஏற்று வெளியிட்டால் அவை செல்திறனைப் பெறும்.

அரசியல் பிரச்சினைகளை விவாதிக்கக்கூடிய பொதுக்கூட்டங்களை அலுவலர்கள் கூட்டியதால் இவை அலுவல் தொடர்புடைய இயல்பைப் பெற்றன. இத்தகைய கூட்டங்கள் சட்டமுறைப்படி அமராத கூட்டங்கள் (Contones) எனப் பெயர் பெற்றன. இக் கூட்டங்களுக்கு ஓர் அலுவலர் தலைமை தாங்கினர். இவருடைய இசைவின்றி எவரும் உரையாற்ற முடியாது. சட்டமியற்றுவதற்கும் தேர்தல் நடத்துவதற்கும் கூட்டப்படும் கொமிசியா அல்லது பொதுமக்களின் சபைக் கூட்டங்களுக்கு முன் இக் கூட்டங்கள் அழைக்கப்படுவது வழக்கமாகும்[1]. கொமிசியாவைக் கூட்டித் தலைமைதாங்கும் உரிமையை உயர் நிருவாகிகள் பெற்றி

[1] Çic. de Leg. 3. 10.

ருந்தனர். குறிப்பிட்ட சில நிருவாகிகளுக்குக் குறிப்பிட்ட சில நிகழ்வுகளின் மீதான வரம்புகளைப் பின்னர் பார்க்கலாம்.

அரசின் சட்ட ஆக்கப் பிரிவின் வகையாளாகிய நிருவாகியிடம் ஆட்சி மேற்பார்வையும் நீதிமன்ற முடிவுகளைச் செயற்படுத்தும் அதிகாரமும் நிலைபெற்றிருந்தன. பொதுக் கட்டடங்களைக் கட்டுதல், பொதுப் பணத்தைப் பெறல் பட்டுவாடா செய்தல், அமைதி பேணல் போன்ற பணிகள் இவருடைய பொறுப்பில் இருந்தன.

முக்கியமான பணிகளைச் செய்வதில் இவருக்கு கொன்சிலியம் என்றதொரு நுட்ப அறிவுரைக் குழு உதவியது. எடுத்துக்காட்டாக, இத்தகைய குழு சென்சாருக்கு உதவியது. நீதித் தொடர்புடையவைகளில் பிரீட்டரின் முடிவுகளைச் செயற்படுத்தவும் இக் குழு உதவியது. இக் குழுவின் அடிப்படையில் கருத்தளவில் செனெட் சபை கான்சலோடு தொடர்பு கொண்டது எனலாம்.

**நிருவாகிகளின் பதவிக் காலம்**

எல்லா நிருவாகிகளும் உறுதியான, சுருக்கமான கால அளவிற்குப் பதவி வகித்தனர். ஓர் அலுவலரின் அதிகாரம் எந்த அளவிற்குத் தனிச் சிறப்புடையதாக இருந்ததோ அந்த அளவிற்கு அவருடைய பதவிக் காலமும் சுருக்கமாக இருந்தது. ஆகவே, கான்சல்களும் முறையான நிருவாகிகளில் பலரும் ஓர் ஆண்டுப் பதவியிலிருந்தனர். ஆனால் சர்வாதிகாரியின் பதவிக் காலம் ஆறு மாதங்களுக்கு மேல் மிகலாகாது. இந்த நடைமுறை வழக்கை மீறும் வகையில் இரண்டு நெருக்கடிகள் தோன்றலாம். இயல்பு மீறிய சூழ்நிலைகள் காரணமாக நிருவாகிகளின் ஓராண்டுப் பதவிக் காலம் குறிப்பிட்ட கால அளவிற்குமேல் நீட்டிக்கப்படலாம்; அல்லது நிருவாகியின் சட்டபடியிலான பதவிக்காலம் முடிவடையுமுன் நிருவாகப் பதவிகளில் காலியிடம் ஏற்படலாம். ஒரு முக்கியமான போரையொட்டி முதல் நெருக்கடி ஏற்படலாம். கி. மு. 326-ல் பியுபிலியஸ் பிலோ (Pubbilius Philo)வின் (கான்சல்) பதவிக் காலம் முடிவிற்கு வந்தபொழுது இவர் சாம்னட்டுகளை எதிர்த்துப் போராடிக்கொண்டிருந்தார். போர் முடிவடையும்வரை இவர் படைத் தலைமையில் தொடர்ந்திருக்கப் பணிக்கப் பெற்றார்[1]. இவர் புரோ கான்சலாகச் செயலாற்றியதாகக் கூறப்பட்டது. ஆனால், இவருடைய அதிகாரம் கான்சலின் அதிகாரத்திற்குக் குறைந்தே இருந்தது. ஏனெனில் இந்த அதி

[1] Liv, 8, 23, 12,

காரம் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்கு, ஒரு வரம்பிற்குட்பட்ட இடத்தில் செயற்படுத்தக்கூடியதாகும். ஆனால், இத்தகைய பதவிக் கால நீட்டிப்பு ஓராண்டிற்கு அல்லது அதற்குக் குறைவான காலத்திற்கே அளிக்கப்பட்டது. இருந்தபோதிலும், மூன்றும் நூற்றாண்டின் இறுதியில் இத்தாலியில் நில ஆக்கிர மிப்புக் காலம் தொடங்கியபொழுது உரோமானிய ஆட்சி முறையில் இத் தற்காலிகத் தருமுறை தவிர்க்க முடியாததாயிற்று. மாநில ஆளுநர்களை நேர்முகமாகத் தெரிவு செய்வதற்குப் பதிலாக உரோமில் ஓராண்டு நிருவாகப் பதவியிலிருந்தவர்களைக் கொண்டு இப் பதவியை நிரப்பிப் பதவிக் காலம் நீட்டிக்கப் பெற்றது. மாநில ஆளுநர்கள் புரோ கான்சல்களாகவும் புரோ பிரீட்டர்களாகவும் நிலைக்கேற்பச் செயலாற்றினர். காலப்போக்கில், ஓர் ஆண்டிற்கு மிகாத இப் பதவிக் காலநீட்டிப்பு பின்பற்றப் படவில்லை.

ஒரு கான்சல் அல்லது இரண்டு கான்சல்களின் மரணம் அல்லது பதவி விலகல் ஆகியவைகளால் இரண்டாவது நெருக்கடி நிலை ஏற்படலாம். இரு கான்சல் பதவிகளில் ஒன்றில் காலியிடம் ஏற்பட்டால் பதவிக் காலத்தில் எஞ்சிய காலத்திற்கு அப் பதவிக்குப் புதியதாக ஒருவர் தேர்ந்தெடுக்கப்பெற்றார்[1]. இரண்டு பதவிக்கான இடங்களும் காலியாக இருந்தால் இரு புதிய கான்சல்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள். இவர்கள் இருவரும் பதவியேற்ற நாளிலிருந்து ஓராண்டிற்குப் பதவியில் இருப்பர். இதன் விளைவாக, ஆட்சிக் காலம் ஒரு குறிப்பிட்ட நாளிலிருந்து தொடங்கவில்லை. ஆனால் கி. மு. 217-ல் இருந்து ஆட்சியாண்டின் தொடக்கத்தை மார்ச்சு மாதம் 15ஆம் நாளாக உறுதி செய்யப்பெற்றது. இது கி. மு. 154 வரை தொடர்ந்தது[2]. இதற்குப்பின் கான்சல்கள் ஜனவரி மாதம் முதல் நாளில் பதவி ஏற்றனர்.

கடவுளின் விருப்பைப் புட்குறிகள் வெளிப்படுத்தியிருக்குமானால் நிருவாகியின் விருப்பத்தை அவருடைய வல்லந்தத் தடுப்பு நடவடிக்கை வெளிப்படுத்தியது. இந்த முறையைப் பயன்படுத்தி நிருவாகி தன் கட்டளைக்கு மக்களைப் பணிய வைத்தார்; அரசின் கடப்பாடுகளை மக்கள் நிறைவேற்றத் தூண்டினர்; இப்படித் தூண்டுதல் இவருடைய கடனமயாகும். ஆகையால் குற்றத் தண்டனையோடு இது தொடர்புடையதெனினும் இரு வழிகளில் அதிலிருந்து இது வேறுபட்டது. குற்றத் தண்டனைச் சட்

[1] Herz. 1. 611.
[2] Herz, 1, 614,

டத்தின் நோக்கமாகிய மனிதன் மனிதனுக்குச் செய்ய வேண்டிய கடமைப் பொறுப்புகளைச் செயற்படுத்துவதற்கு இவ் வல்லந்தத் தடுப்பு அதிகாரம் பயன்படுத்தப்படவில்லை. ஆனால் அரசெதிர் நடவடிக்கைகளை ஒடுக்குவதற்கு இது பயன்படுத்தப்பட்டது. மெய்யாகவே, கிடைத்த வல்லந்தத் தடுப்பு வழிமுறைகளை நிருவாகியின் சொந்தப் பொறுப்பில் செயற்படுத்தினர். ஆனால் சட்டச் செயலாட்சி அதிகாரத்தை இவர் மக்களோடு பகிர்ந்து கொண்டார். இந்த வேறுபாட்டை அரசியலமைப்புக் கோட்பாடு அறியாது. தீய அல்லது கீழ்ப்படிய மறுக்கும் குடிமகனுக்கு எதிராக நிருவாகி வல்லந்தத் தடுப்பு முறைகளில் எதையேனும் பயன்படுத்திக்கொள்ளலாம். இவர் தண்டங்களையும், தளைகளையும் கசையடிகளையும் பயன்படுத்தலாம்[1]. ஆனால் குறிப்பிட்ட அளவிற்கு மேற்பட்ட தண்டங்களும் சாட்டையால் அடித்தலும் மேல்முறையீட்டிற்குள்ளாயின.

தனிப்பட்ட குடிமக்களை நோக்கியே நிருவாக வல்லந்தந் தடுப்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. செனெட்டர்களுக்கும், நீதிபதிகளுக்கும் எதிராக இந்த அதிகாரம் பயன்படுத்தப்படலாம். உயர்நிலை நிருவாகி, கீழ்நிலை நிருவாகியின்மீது இந்த அதிகாரம் செயற்படுத்தப்படலாம். கீழ்நிலை நிருவாகியின் கடமைகளை நிறைவேற்றக் கட்டாயப்படுத்தவும் மரியாதையைக் கோரிப் பெறவும் இந்த அதிகாரம் பயன்படுத்தப்பட்டது.

மரண தண்டனை விதித்தல் வன்கண்மையின் மிகக் கடினமான முறையாகும். இறைமையில் வன்கண்மை முதலில் பொதிந்திருந்தது. வலீரியசின் இரண்டு சட்டங்கள் (கி. மு. 509; 449) இவ்வதிகாரத்தைச் செயல் இழக்கச் செய்துவிட்டன. மூன்றாவது சட்டமொன்று (Lex Valeria) கி. மு. 300-ல் மேல் முறையீடு செய்தவருக்கு மரணதண்டனை விதித்தலையோ, கசையடி கொடுத்தலையோ தடை செய்தது. பழைய சட்டங்களின் குறைபாடுகள் இச் சட்டத்திலும் காணப்பட்டது. இதன் மீறல் நிருவாகியின் சாதனையாக அறிவிக்கப்பட்டது. ஆனால் குடியரசின் இறுதிக் காலத்தில் மேல்முறையீட்டை மீறிய நிருவாகி மரண தண்டனையைப் பெறவேண்டிய நிலை ஏற்பட்டது.

டிரிபியூன்களின் மரண தண்டனை விதிக்கும் அதிகாரத்தைப் பொறுத்தவரையில் மேல்முறையீட்டை இவர்கள் ஏற்றுக்கொண்டதிலிருந்து இந்த அதிகாரம் தோன்றியதெனலாம். தம்முடைய உடலை மீறத் தகாத நிலையைப் பாதுகாப்பதற்கு டிரிபியூன் பயன்

[1] Çic. de Leg. iii, 3 6.

படுத்தும் வல்லந்தத் தடுப்பு நடவடிக்கை மேல்முறையீட்டிற்கு உட்பட்டதன்று[1]. பழைய சமயத் தண்டனைகள் செயலில் இருந்தன. கி. மு. 131-ல் டிரிபியூனைப் புறக்கணித்ததற்காக சென்சாரை டார்பியன் குன்றிலிருந்து உருட்டித் தள்ளுவதற்கென இழுத்துச் சென்றதாகச் செய்திகள் கூறுகின்றன. இந்த நிலைக்குள்ளான சென்சாரை டிரிபியூனின் கூட்டாளியின் தடையாணை காப்பாற்றியது[2].

குடியரசின் தொடக்க காலத்தில் படை திரட்டலில் காணப்பட்ட கசையடித் தண்டனை பெருமளவிற்கு நடைமுறையில் ஒழிக்கப்பட்டது.[3] வல்லந்தத் தடுப்பின் ஒரு முறையாகப் பயன்படுத்தப்பட்ட இத் தண்டனை கி. மு. 300-ல் மூன்றுவது வலீரியஸ் சட்டத்தால் நீக்கப்பட்டது. பிற்காலத்திய சட்டங்களும் (leges Porciae) இத் தண்டனை அச்சுறுத்தலை மேல்முறையீட்டிற்குரியதாக்கின. இத் தண்டனைகளை விதித்த நிருவாகிகளின் மீது இச் சட்டங்கள் கடுமையான தண்டனைகளை விதிக்க வழி செய்தன.

சிறைப்படுத்தலை ஒரு தண்டனையாக உரோமானியச் சட்டம் ஏற்கவில்லையெனினும், வல்லந்தத் தடுப்பு நடவடிக்கையில் இது இரட்டைப் பங்கேற்றுச் செயல்பட்டது. தங்களுடைய மாண்பைப் பாதுகாத்துக்கொள்ளவும், கீழ்ப்படிதலைப் பெறவும் நிருவாகிகள் பயன்படுத்திக் கொண்ட முறைகளில் இதுவும் ஒன்றாகும். தனிப்பட்டவர்களிடமிருந்து மட்டுமன்றிக் கீழ்நிலை நிருவாகிகள், செனெட்டுகள் ஆகியோரிடமிருந்தும் பாதுகாத்துக்கொள்ள இவர்கள் இம் முறையைப் பயன்படுத்திக்கொண்டனர். இவர்களால் குற்றம் சாட்டப்பட்ட ஒருவரை விசாரணைக்குக் கொண்டு வர இதை ஒரு முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக மேற்கொண்டனர். டிரிபியூன்களைத் தவிர இந்த அதிகாரத்தை நிருவாகிகள் மீது பயன்படுத்தியது மிகக் குறைவேயாம். அதனால் டிரிபியூன்களின் வரலாற்றில் இது பெரும்பங்குபற்றியது. குடியரசு முடிவிற்குவந்த காலத்தில் கட்சிச் சண்டைகள் காரணமாகக் கான்சல்கள் தற்காலிகமாகச் சிறைப்படுத்தப்படுதல் வழக்கமான நிகழ்ச்சியாகி விட்டது. ஆர்வமிக்க செல்வர்களின் எதிர்ப்பை உடனடியாக ஒடுக்க இம் முறை பயன்படுத்தப்பட்டது. டிரிபியூனின் கூட்டாளிகள் ஒருவரின் தடை ஆணை ஒன்றுதான் அரசுத்தலைவரை மீட்கும். இத் தடைவாக்கினைப் பயன்படுத்தி கி. மு. 59-இல் கான்சல் பிபுலசையும் (Bibulus)

[1] Dio. Cass. iii, 17.
[2] Plin. H.N. vii, 44. Liv. Ep. 59.
[3] Liv. ii. 55. vii. 4.

55-ல் கான்சல் கிராசஸ் (Crassas) சையும் டிரிபியூன்கள் சிறைத்தண்டனையிலிருந்து மீட்டனர். விசாரணைக்கு வரவேண்டு மென்பதற்காகத் தடுப்புக் காவலில் ஒருவரை வைத்தல் என்பது அரிதாகும். பிணையங்களும் காப்புறுதிகளும் வழக்கமாக ஏற்றுக் கொள்ளப்பட்டன. அதனால் பிணையங்களையும், ஈடுகளையும் ஏற்றுக்கொள்வதும் கொள்ளாததும் முற்றிலும் நிருவாகியைப் பொறுத்திருந்தது.[1]

கீழ்ப்படிதலைச் செயற்படுத்துவதற்குத் தண்டம் விதித்தல் என்பது மிகச் சாதாரணமான முறையாகும். இத் தண்டம் விதிக்கும் அதிகாரத்தைக் குவெஸ்டர்களைத் தவிர மற்ற எல்லா நிருவாகிகளும் பெற்றிருந்தனர். வல்லந்தத் தடுப்பு அதிகாரத்தை குவெஸ்டர் பெற்றிருக்கவில்லை என்பது மாம்சனின் கருத்தாகும்.[2] கி.மு. 454-ல் இதுவரை கான்சல்களின் தனியுரிமையாக இருந்த தண்டவிதிப்பு அதிகாரம் எல்லா நிருவாகிகளுக்கும் அளிக்கப்பட்டது. டிரிபியூன்களும் பிளெபிய ஈடில்களும் இந்த அதிகாரத்தைப் பெற்றனர். சொந்தப் பொறுப்பில் ஒரு நிருவாகி மிக உயர்ந்த தண்டத்தொகையாக இரண்டு ஆடுகளை அல்லது முப்பது எருதுகளை விதிக்கலாமென ஒரு சட்டம் உறுதி செய்தது.[3] இதில் முற்குறிப்பிட்ட தண்டத்தொகை வறியவர்களுக்கும் பின் குறிப்பிட்டது செல்வர்களுக்குமாகும். அச்சிட்ட நாணயம் நடப்பில் வந்தபின் (430) ஒரு நிருவாகி 3000 அசெசுகளை மிக அதிகத் தண்டத்தொகையாக விதிக்கலாம்.[4] இதற்கு மேற்பட்ட தண்டத்தொகையை விதிக்கும் நிருவாகியின் நடவடிக்கையை யொட்டி மக்கள்முன் முறையிடலாம். இத்தகைய தண்டங்கள் பெட்ரிசிய நிருவாகிகளால் விதிக்கப்பட்டிருந்தால் கொமிசியாவிற்கும் பிளெபியர்களால் விதிக்கப்பட்டிருந்தால் கொன்சிலியம் அவைக்கும் முறையிடலாம். இம் முறையீடுகளால் இச் சபைகளோடு ஈடில்கள் தொடர்புகொள்ள வாய்ப்பேற்பட்டது. மக்களது தீர்ப்பிற்கு விடப்பட்ட தண்டத்தொகையின் இறுதி வரம்பைச் சில குறிப்பிட்ட சட்டங்கள் நிருணயித்தன. குற்றவாளியின் சொத்து மதிப்பில் தண்டத்தொகை பாதியாக வரையறுக்கப்பட்டது.

ஆனல், பணமாகத் தண்டத்தொகை விதிக்கும் டிரிபியூன்களின் அதிகாரம் மற்ற நிருவாகிகளின் வரம்பிற்கதிகமாக

[1] Liv. xxv. 4. (212. B. C.).
[2] Mom. Staatsr. 1. p. 143. N. I.
[3] Lex Menenia Sextra (452 B. C.)
[4] Cicero de Rep. ii. 35, 60,

விரிவாக்கப்பட்டது. தனியொருவரின் பொருள்களைப் பறிமுதல் செய்து தெய்வகாரியங்களுக்கென ஒதுக்கி வைக்கும் அதிகாரம் இவர்களுக்கிருந்தது. பழைமையான சமயத்தண்டனையை இது நினைவூட்டியது. டார்பியன் குன்றிலிருந்து உருட்டிவிடும் தண்டனைமுறை, கட்சிப் போராட்டங்கள் ஏற்படும்போது பயன் படுத்திக்கொள்ளப்பட்டது.

அலுவலர்களுக்கும், நிருவாகிகளுக்கும் எதிராகப் பயன்படுத் தப்பட்ட வல்லந்தத் தடுப்பு அதிகாரத்தின் மற்றொருமுறை இவர்களுடைய உடைமைகளைப் பிணையமாகக் கைப்பற்றி வைத்துக் கொள்ளுவதாகும். வன்கண்மை அதிகாரத்தைப் பெற் றிருந்த நிருவாகிகள் அனைவரும் இவ்வதிகாரத்தைப் பெற்றிருந் தனர். நன்னடத்தைக் காப்பாகப் பயன்படுத்தப்பட்டதைக் காட்டிலும் ஒரு தண்டனையாகவே இது பயன்படுத்தப்பட்டது. எனவே, பிணையங்கள் அழிக்கப்பட்டன. கான்சலை மதிக்காத பிரீட்டர்களின் குயுருல் நாற்காலிகளை உடைத்தெறிந்து சில சமயங்களில் மனஅமைதி கண்டனர். கான்சல்கள் செல்லும் போது எழுந்து மரியாதை செய்யாத பிரீட்டர்களின் நாற்காலி கள் இக் கதிக்குள்ளாயின.[1]

மேல்முறையீடு அனுமதிக்கப்பெற்ற பின் மரண தண்டனை விதிப்பதும், கசையடிகொடுப்பதும் குறைக்கப்பட்டதெனினும் ஒவ்வொரு நிருவாகியின் வல்லந்தத் தடுப்புமுறை அப்படியே இருந்துவந்தது. உயர்நிலை, கீழ்நிலை நிருவாகிகளுக்கிடையில் இதன் பயன்பாட்டின் வேறுபாடு வேற்றுமைத் தோற்றமாகவே இருந்தது. இறைமை பெற்ற நிருவாகிகளுக்கும் டிரிபியூன்களுக்கு மிடையில் இஃது ஒரு முறையாக இருந்தது. கான்சல்களும் இறைமையதிகாரம் பெற்றிருந்த நிருவாகிகளும் குற்றவாளிகளை நியாயசபைகளுக்கு வருமாறு ஆணையிடலாம்; நேரில் இவர்களை உடனடியாகக் கைதுசெய்யலாம்.[2] குவெஸ்டர்களும், கீழ்நிலை அலுவலர்களும் இந்த அதிகாரங்களைப் பெற்றிருக்கவில்லை. தனி நிலை நிருவாகியாகப் பணியாற்றிய டிரிபியூன் கைதுசெய்யும் அதிகாரத்தை மட்டுமே பெற்றிருந்தார். டிரிபியூன்கள் சில கட்டளைகளை நிறைவேற்றுவதை நாம் பார்க்கலாம். கைது செய்வதைப் பயனுள்ளதாக்குவதற்கு இவர்கள் இருந்தால் போதுமானது. தொடக்க காலத்தில் வன்செயலில் ஈடுபட்ட வர்களைப் பிடிக்க இவர்கள் ஈடில்களைப் பயன்படுத்திக் கொண்டனர்; பிற்காலத்தில் முறைமன்ற அழைப்பாளர்களை

[1] Dio Cass. xlii, 23.
[2] Uarro ap. Gell. xiii. 12.

நிருவாகிகள் பயன்படுத்திக்கொண்டனர்.[1] இத்தகைய விசாரணை களில் ஈடில்கள் பயன்படுத்தப்பெற்றனர். குடியரசு முடிவிற்கு வந்தபோது இவ்வேறுபாடு தெளிவற்றுப்போயிற்று. முறையான உரிமையின்றி டிரிபியூன்கள் தனிப்பட்டவர்களை அழைத்தனர்.[2]

உரோமானிய நிருவாகிகளின் அதிகாரங்களை எடுத்துச் சொல்வதால் மட்டும் அரசியலமைப்பின் செயற்பாடு தெளிவாகி விடாது. நிருவாகிகள் உரோமை ஆளமுடியாமற் போனதற்கு அதிகாரங்களின் மோதலே காரணமாகும்.

மோதலுக்கு முதல் காரணம் சமயச்சார்புடையதாக இருந்தது. புட்குறிகளைப் பயன்படுத்துவதிலும், தவருகப் பயன்படுத்துவதிலும் மோதல் ஏற்பட்டது. பாதகமான சகுனங்களைப் பார்த்தவர்கள் அதுபற்றி நிருவாகியிடம் உடனே சொல்ல வேண்டியது கடமையாகும். கொமிசியா கூடுவதற்கு இத்தகைய சகுனம் அடிக்கடி பார்க்கப்பட்டது. சபை நிகழ்ச்சிகளை நடத்தியவர் சகுன அறிவிப்பாளர் அரசியல் பெற்றிருந்த நிலையையொட்டி சகுனங்களுக்கு மதிப்பளித்தார். தனிப்பட்டவர்கள், முன்பின் அறியாதவர்கள் ஆகியவர்களிடம் இருந்து கிடைத்த அறிவிப்புகள் சந்தேகத்தோடு ஏற்கப்பட்டன. கொமிசியாவின் அருகில் இருந்து சகுனம் பார்த்து அறிவிப்பவர்கள் அல்லது நிருவாகிகளிடமிருந்து வந்த அறிவிப்புகள் மரியாதையோடு ஏற்றுக்கொள்ளப்பட்டன. தனிப்பட்ட குடிமகன், பிளெபிய நிருவாகி ஆகியவர்களின் பாதகமான சகுனம் பற்றிய அறிவிப்பு ஒரு தற்செயல் நிகழ்ச்சியாகவும், ஆனல் பெட்ரிசிய நிருவாகிகளின் அறிவிப்பு ஒரு திட்டத்தின் விளைவாகவும் கருதப்பட்டது. புட்குறிபார்த்தல் நகர நிருவாகியின் விருப்பத்திற்குட்பட்ட பணியாகும். தோன்றிய மின்னல் ஒன்று நிருவாகிக்குச் நல்ல சகுனமாக அல்லது தீயசகுனமாக இருந்திருக்கலாம். ஆனல், வலப்பக்கம் அல்லது இடப்பக்கம் தோன்றினலும் கொமிசியா கூடுவதற்கு மின்னல் சகுனம் பாதகமாகவே கருதப்பட்டது. ஆகையால், கொமிசியா, கொன்சிலியர் ஆகிய அவைகளின் கூட்டங்களைத் தள்ளிவைக்க ஒரு பெட்ரிசிய நிருவாகி, "வானத்தை நோக்கிச் சகுனம் பார்க்கலாம்" என்று அறிவித்தால் போதும். பிளெபியர்களின் குறுக்கீட்டிற்கு (intercessio) ஈடாக அரசியலில் பெட்ரிசியர்களின் பாதகமான சகுன அறிவிப்பு ஒரு வலிமையான கருவியாக இருந்தது. எனவே, பாதகமான சகுனம்பற்றிய விரிவான விளக்கத்தை இரு சட்டங்கள் கி. மு. 153-ல் கொடுத்தன.

[1] Dionys. vii. 26. See page 98, Plut. ii. Gracch. 12, Liv. xxv, 4.
[2] Gell, xiii. 12.

நிருவாகப் பதவியின் அதிகாரங்களின் அடிப்படையில் மற்ற மோதல்கள் ஏற்பட்டன. உயர் நிருவாகிகள் கீழ்நிலையில் இருந்த நிருவாகிகள்மீது தடையதிகாரத்தைச் செலுத்தியதும், உயர் அதிகாரிகள் தடையாணையைக் கீழ்நிலையாளர்கள்மீதும் கூட்டாளிகள்மீதும் செலுத்தியது மோதலையுண்டாக்கியது.

பெரிதான அதிகாரத்தின் விளைவே தடையதிகார உரிமையாகும். எல்லாக் கீழ்நிலை நிருவாகிகள்மீதும் உயர் நிருவாகிகள் இந்த அதிகாரத்தைப் பெற்றிருந்தனர். சர்வாதிகாரி நீங்கலாக மற்ற எல்லா அலுவலர்களுக்கெதிராக டிரிபியூன் இந்த அதிகாரத்தைப் பெற்றிருந்தார். சர்வாதிகாரியையும், டிரிபியூனையும் தவிர மற்ற எல்லா நிருவாகிகள்மீதும் கான்சல் இந்த அதிகாரத்தைச் செலுத்தினர். நிருவாகியின் தடைசெய்யும் உரிமையிலிருந்து நிருவாகியின் தலையிடும் அதிகாரம் மாறுபட்டதாகும். நிறைவுபெற்ற செயலின்மீது தலையிடும் அதிகாரம் பயன்படுத்தப்பட்டது. இதன் விளைவாக அச் செயல் செல்திறனற்றுப்போயிற்று. தடை செய்தல் என்பது உயர் நிருவாகியின் இருப்பில் உள்ள தடை அதிகாரத்தையே குறிப்பிட்டது. இந்த அதிகாரம் வல்லந்தத் தடுப்பைக் குறிக்கும். கட்டளைக்குப் பணியாதபொழுது இந்த அதிகாரம் பயன்படுத்தப்பட்டது. எனவே, வல்லந்தத் தடுப்புப் பயனுறுதியோடு செயல்படுத்தப்படவில்லையென்றால் கட்டளையை மீறிய செயல் செல்திறனைப் பெற்றுவிடும். வல்லந்தத் தடுப்பின் செயற்பாட்டைத் தடையாணையால் நிறுத்திவிடலாம். அப்படிச் செய்யும் பொழுது தடையதிகாரம் பயனற்றுப்போய்விடும்.[1]

இந்த அதிகாரச் செயற்பாட்டின் பரப்பெல்லை சில சூழ்நிலைகளுக்குள்ளாகியது. குறிப்பிட்ட சில செயல்களுக்குக்கெதிராக மட்டுமே இத் தடை அதிகாரம் செயற்படுத்தப்பட்டது. மேலதிகாரிகளின் ஒப்புதலின்றிக் கீழ்நிலை நிருவாகிகள் மக்களோடு தொடர்பு கொள்ளுதல் இந்த முறையால் தடைப்படலாம். கீழ்நிலை நிருவாகிகள் கூட்டங்களை உயர் நிருவாகிகள் விலக்கிவிடலாம். டிரிபியூன் இந்த அதிகாரத்தைப் பெருமளவு பெற்றிருந்தார். இவர் உரையாற்றிக் கொண்டிருந்த மக்களின் ஒரு பகுதியினரை வேறெந்த நிருவாகியும் கூட்டினால் இவருடைய பதவி மாண்பிற்கு இஃது ஓர் ஆழ்ந்த இடையூறெனக் கருதப்பட்டது.[2] பிரீட்டர் ஒரு பிரேரணையைக் கொண்டு வருவதைக் கான்சல் தடுக்கலாம்; இவரே கொமிசியாவின் நிகழ்ச்சிகளை

[1] Liv. ix 34 (N. 7).
[2] Liv. xiii. 16.

நடத்திக் கொண்டிருந்தால் தீய சகுனங்களிலிருந்து கூட்டம் தடைப்படாமல் இருக்கும் பொருட்டு அன்று சகுனம் பார்க்கலாகாதெனச் தடைசெய்யலாம். மக்களை அல்லது செனெட்சபையைக் கலக்காமல் வெற்றிவிழா அணிவகுப்பு நடத்த முற்படுதல் அல்லது பதவியைக் குறிப்பிட்ட காலஅளவிற்கு மேல் நீட்டிக்க முயலுதல் போன்ற செயல்களைத் தடைசெய்ய இந்த அதிகாரம் பயன்படுத்தப்பட்டது. செம்ப்ரோனியஸ் (Sempronias) என்ற டிரிபியூன், அப்பியஸ் கிளாடியஸ் என்ற சென்சார் பதவிக் காலத்தை 18 மாதங்களுக்குமேல் நீட்டிக்க முயன்றபோது பதவி விலகச்செய்தார். சென்சாரைச் சிறைப்படுத்த இவர் முயன்றார். ஆனால், மூன்று டிரிபியூன்களின் தடையாணையால் இம் முயற்சி பலிக்கவில்லை.

சில தனிப்பட்ட சூழ்நிலைகளில் இத் தடையதிகாரம் மிகப் பரவலாகச் சென்று செயல்படும். நிருவாகியின் செயல்கள் அனைத்தையும் தள்ளி வைக்குமளவிற்கு இதை நீட்டிக்கலாம்; அல்லது அரசின் வாழ்க்கைச் செயல்திறத்தை நிறுத்திவிடுவதற்கும் இந்த அதிகாரம் செயற்படுத்தப்படலாம்.

கீழ்நிலை நிருவாகியொருவரின் பதவியைப் பறிக்கவும் அல்லது அவரைப் பதவியிலிருந்து விலகுமாறு கட்டாயப்படுத்தவும் உயர் நிருவாகியால் இயலாதெனினும், அவருடைய பணிகளின் தவறானபயன்பாட்டிற்கு அவருடைய மேல்நடவடிக்கைகளையும் தடைசெய்யலாம். இது ஒருவரைப் பதவியிலிருந்து விலக்கி வைப்பதற்குச் சமமாகிவிட்டது. இரண்டு தடவைகள் பிரீட்டருக்கு எதிராகக் கான்சல் இந்த அதிகாரத்தை இயக்கியுள்ளார்; அவை மரியாதை தவறியதற்கு ஒரு முறையும், மற்றொரு தடவை புரட்சிகரமான நடவடிக்கைகளுக்கும் ஆகும். இந்த அதிகாரம் உரோம் நகரோடு நின்றுவிடவில்லை. ஆட்சியை இகழ்ந்த அலுவலர்களைப் பதவி நீக்கும் இவ்வுரிமையை மாநில ஆளுநர்களும் பெற்றிருந்தனர்.

கீழ்நிலை அலுவலர் அனைவரும் பணிகளை நிறுத்திவைக்க வேண்டுமென விதிக்கும் உயர்நிருவாகியின் ஆணை மிகப் பரவலானதாகும். இதனால் பொதுமக்களின் வாழ்க்கைச் செயல் திறம் அப்படியே நின்றுவிடும். ஒரு குறிப்பிட்ட நெருக்கடி நிலையைச் சமாளிக்கச் சர்வாதிகாரியால் அல்லது கான்சல்களால் அல்லது செனெட்சபையின் முடிவால் இக் கட்டளை பிறப்பிக்கப் படுவது வழக்கமாகும்.[1] திடீரென ஏற்பட்ட போர், இத்தாலிக்குள் ஏற்பட்ட கிளர்ச்சி, ஒரு பேரழிவையொட்டிய தேசிய

[1] Liv. iii. 27. vii. 9.

துக்கநாள், அல்லது புகழ்பெற்ற ஒருவரின் மரணம் ஆகிய நெருக்கடி நிலைகளையொட்டி இக் கட்டளை பிறப்பிக்கப்படுவது வழக்கம். பொதுச் செயல்களின் செயற்பாட்டை ஒரு நிருவாகி யின் அறிக்கையால் நிறுத்தி வைக்கலாம்.

இத்தகைய தடையாணை நீதிமன்றங்களின் நடவடிக்கைகளை நிறுத்தி வைத்ததெனினும், கருவூலங்கள் மூடப்பட்டதெனினும், செனெட்சபையின் கூட்டங்களும் முடிவிற்குவந்தன வெனினும், அரசின் செயல்களையெல்லாம் இது தடுக்க வேண்டிய தேவை யேற்படவில்லை. ஏனெனில், ஆட்சியின் ஒரு தனிப்பட்ட பிரிவை நோக்கி மக்களின் கவனத்தை ஈர்க்க இந்த நடவடிக்கை எடுக்கப்படலாம். எனவே, இடர்க்காலத்திலும், சமூகப்போர் களின்போதும், நீதிமன்ற நடவடிக்கைகள் நிறுத்திவைக்கப் பட்டிருந்த நேரத்திலும் படை திரட்டலுக்கான நடவடிக்கை தொடர்ந்து செயற்பட்டது.

ஆனல், டிரிபியூன்களின் அதிகார வரிசையில் இந்த அதிகாரமும் ஒன்ருக இருந்து ஓர் அரசியல் ஆயுதமாக இது செயற்பட்டதின் மதிப்பு வெளிப்படையானது. இந்த அதிகா ரத்தை டிரிபியூன் லிசினியஸ் (Licinius) எப்படிப் பயன்படுத்திக் கொண்டாரென்பதைப் பார்த்தோம். குடியரசின் கடைசி நூற்ருண்டில் இவருக்குப் பின் வந்த டைபிரியஸ், கிராக்கஸ் (Tiberius, Gracchers) வேளாண்மைக் கிளர்ச்சியின்போது, தம் சட்டத்தின்மீது வாக்கெடுப்பு முடியும்வரை மற்றெல்லா நிருவாகி களின் நடவடிக்கைகளையும் தடைசெய்து ஓர் ஆணையைப் பிறப்பித்தார். குவெஸ்டர் கருவூலத்திலிருந்து பணம் எடுக்க வும் கருவூலத்திற்குள் பணம் போடவும் முடியாதவாறு முத்திரையைப் பொறித்தார். இதற்குப் பணிய மறுத்த குவெஸ்டர் கள் மீது தண்டம் விதிப்பதாகவும் அறிவித்தார். எனவே, அச்சத்தால் இவர்கள் தம் ஆட்சிப்பொறுப்பைக் கைவிட்டனர். உயர் நிருவாகிகளாகிய கான்சலும், பிரீட்டரும் இத்தகைய நேர்முக அதிகாரங்களைப் பயன்படுத்த முடியவில்லை. இருந்த போதிலும், மக்களின் அவசரச்சட்டம் (Plebicitun) நிறைவேறு வதை இவர்கள் மறைமுகமாகத் தடைசெய்யலாம்.

தடையதிகாரத்தை விளக்குவதற்கு தலையீடு சில சமயங்களில் பயன்படுத்தப்பட்டிருப்பினும், உயர் நிருவாகிகள் மட்டுமின்றிச் சமமாக அதிகாரம் பெற்றிருந்தோர் தடையாணை விதிப்போர் ஆகியோர் பெற்றிருந்த அதிகாரத்தையே இது குறிப்பிட்டது. ஆகையால் இது மேலதிகாரத்திலிருந்து மட்டுமன்றிச் சமமான

அதிகாரத்திலிருந்தும் தோன்றியதெனலாம். எந்த நடவடிக்கைக்கு எதிராகத் தலையீடு பயன்படுத்தப்பட்டதோ அந்த நடவடிக்கையின் செல்லாமை இதன் தவிர்க்க இயலாத விளைவாகும். கான்சல்களின் சமமான அதிகாரத்தோடு தலையிடும் அதிகாரம் இணைந்திருந்தது. கீழ்நிலை நிருவாகிகளின் படை மேலதிகாரம் இவர்களைச் சென்றடைந்தது. டிரிபியூனேட்டின் படைப்போடு தலையிடும் அதிகாரத்தின் வளர்ச்சியும் முடிவிற்கு வந்தது. நிருவாகிகளின் சட்டமொவ்வா, நேர்மையற்ற செயல்களுக்கு எதிராக இஃது ஒரு பெரும் பாதுகாப்பாகும். ஏனெனில், ஓராண்டுப் பதவிக் காலத்தில் நிருவாகி யாருக்கும் பொறுப்புடையரல்லர். நிருவாகியின்மீது டிரிபியூன் செலுத்தும் மேலதிகாரம் முதலில் பிளெபியர்களின் நலனைப் பாதுகாப்பதாகவும் பின் அனைத்து சமூகத்தின் நலன் காப்பதாகவும் இருந்தது.

தடையாணைக்குள்ளாகும் செயலைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்திருந்தால்தான் தடையாணையின் அருமை புலனாகும். டிரிபியூனைத் தவிர, தலையிடும் அதிகாரம் கூட்டாளிகளுக்குள் மட்டுமே செயற்பட்டது. இந்த அதிகாரத்தைக் கான்சலுக்கெதிராகச் சர்வாதிகாரியும், பிரீட்டருக்கெதிராகக் கான்சலும், பெற்றிருந்தனர். கூட்டாளிகளல்லாத ஈடில்கள், குவெஸ்டர்கள் ஆகியோரின் நடவடிக்கைகளைக் கான்சல்கள் தடைசெய்யலாம். ஆனால், இத்தகைய தடையாணைகள் விதிக்கப்பட்ட நிகழ்வுகள் உரோமில் இருந்ததாகத் தெரியவில்லை.

குழுவிற்கு வெளியே, டிரிபியூன் இத் தலையிடும் அதிகாரத்தைச் சர்வாதிகாரியைத் தவிர மற்றெல்லா பெட்ரிசிய நிருவாகிகளாகியக் கான்சல், பிரீட்டர், ஈடில், குவெஸ்டர் ஆகியோருக்கெதிராகப் பயன்படுத்தலாம். இருந்தபோதிலும், உரோமானிய அரசியலமைப்பின் வளர்ச்சி நிருவாகிகளைப் படைத்தது. தடையாணையை மெய்ப்பிக்கக்கூடிய அளவிற்கு இந்த நிருவாகிகளுக்கிடையில் தொடர்பு இருக்கவில்லை. எடுத்துக்காட்டாக, ஈடிலுக்கும், குவெஸ்டருக்கும் இடையிலும், கான்சலுக்கும், சென்சருக்குமிடையிலும் இத்தகைய தொடர்பு எதையும் குறிப்பிடுவதற்கில்லை. எனவே, இந்த நிருவாகிகள் மற்றவர்களின் செயற்பாடுகளைத் தடைசெய்யும் அதிகாரத்தைப் பெற்றிருக்கவில்லை.

அரசியலமைப்பின் நடைமுறைச் செயற்பாட்டுத் தத்துவத்தின் விநோதமான அதிகாரத்தை மூன்று பொதுவான குறைபாடுகள் உருவாக்கின. தலையீட்டின் அறுதிநிலை முழுக் குழப்பத்தைத் தடுக்கத் தேவையான முதல் குறைபாடு ஆகும். தடையாணையைத் தடையாணை தடைசெய்ய முடியாது. செல்லாதென அறிவிக்கப்

பட்ட செயலை மறுபடியும் செல்லுபடியாக்க இவ்வதிகாரத்தைப் பயன்படுத்த முடியாது. இரண்டாவது குறைபாடு, உரிமையியல் தொடர்புடையதாகும். போர்க்களத்தில் பிரிவுபட்ட தலைமைகள் ஆதரிக்கப்படவில்லை. ஆகையால், இங்குத் தலையீடு இடம் பெற வில்லை. நிருவாகியின் செயலெனத் தெளிவாகக் குறிப்பிடத்தக்க நடவடிக்கையின்மீது தடையாணையைப் பயன்படுத்தலாமென்பது மூன்றாவதாகும். தலையீட்டின் சிறப்பான பயன்பாட்டில் இவ் விதியின் ஓர் எடுத்துக்காட்டை நாம் காணலாம். உரிமை பற்றிய வழக்குகளின் முடிவையும் நிலையான குற்றத் தண்டனை வழக்கு களின் முடிவுகளையும் நிருவாகியால் செல்லுபடியாகாதென அறி விக்க முடியாது.

நிருவாக அதிகாரத்தின் மூன்று செயலெல்லைக்கு எதிராகச் செயற்படுத்தப்பட்ட தலையீட்டதிகாரத்தைப் பார்க்கலாம். கட்டளை, பிரேரணை, செனெட் சபையைக் கலத்தல் ஆகியவை நிருவாகியின் செயலெல்லைகளாகும்.

உரிமை வழக்கு விசாரணையையொட்டி பிரீட்டரால் பிறப்பிக் கப்பட்ட கட்டளைகளுக்கெதிராகவும், குற்றத் தண்டனை விசாரணை யையொட்டி கான்சல், ஈடில், அல்லது குவெஸ்டரால் பிறப்பிக் கப்பெற்ற கட்டளைகளுக்கெதிராகவும் அல்லது படை திரட்டு வதற்கெதிராகவும் தலையீட்டதிகாரம் செயற்படுத்தப்படலாம். பாதிக்கப்பட்ட தனி மனிதர்கள் உதவியை நாடிச் செய்துகொண்ட மேல்முறையீடுகளில் இத் தலையீட்டதிகாரம் நிலைபெற்றது. தனிப்பட்டமுறையில் பாதிக்கப்பட்டவர்கள் நிருவாகியிடம் முறை யிடவேண்டும். நிருவாகி தனிமுறையில் தலையீட்டதிகாரத்தைச் செயற்படுத்தினர். எனவே, எதிர்பார்த்த படைதிரட்டலின் போது டிரிபியூன்கள் கான்சல்களைப் பின்பற்றிச் செல்வதையும், பிரீட்டர் தம் கூட்டாளிக்கருகில் அமர்ந்து அவருடைய முடிவுகளை யொட்டிய மேல்முறையீடுகளை எதிர்நோக்கியிருத்தலையும் நாம் காணுகிறோம். உரிமை வழக்கு விசாரணையில் நீதிபதிக்கு முன் னிலையில் வழக்கின் நடைமுறையில் எந்நிலையிலும் இத் தலையீடு பயன்படுத்தப்படலாம். பிரீட்டர்கள் வேறுபட்ட நீதித்துறை களைப் பெற்றிருந்தபோதிலும் மேல்முறையீடு ஒரு நகரப் பிரீட்ட ரிடமிருந்து மற்றொரு பிரீட்டரிடம் செல்லும். ஓரளவு ஒரே படித் தான அதிகாரத்தையும், அறிவையும் பெற்றிருந்த நிருவாகிக ளுக்குத் தடையாணை அதிகாரத்தைக் கொடுப்பது பொதுவான கருத்தாக இருந்தது. ஆனால் இந்த விதி டிரிபியூன்களுக்குப் பொருந்தவில்லை. இவர்களுடைய தலையீடு உரிமை வழக்கு, குற்றத் தண்டனை வழக்கு விசாரணைக்கு எதிராகவும் கான்சலின்

ஆட்சி அதிகாரத்திற்கு எதிராகவும் இயக்கப்பட்டது. கான்சல்கள் படை திரட்டல், குவெஸ்டரின் வரி திரட்டல் போன்ற நிகழ்வுகளில் டிரிபியூன்களால் எதிர்க்கப்பட்டது. பொதுக் கட்டளையையன்றி நிருவாகியின் வல்லந்தத் தடுப்பு அதிகாரம் தனிப்பட்ட நிகழ்வுகளுக்குப் பயன்படுத்தப்பட்டதையே எதிர்த்தனர். டிரிபியூன்களிடம் செய்துகொள்ளப்பட்ட இவ்வகையான மேல்முறையீடு சில சமயங்களில் அரைகுறையான நீதி நடைமுறைக்குட்பட்டது. டிரிபியூன்களின் முறைமன்றக் குழு முறையீட்டை ஆராய்ந்து முடிவு செய்தது[1]. இந்த வழக்குகளில் முறைமன்றக்குழு பெரும்பான்மை வாக்குகளால் தீர்ப்பளித்திருக்கலாம். ஆனால் ஒரு டிரிபியூன் விடாப்பிடியாகத் தடை ஆணையைப் பயன்படுத்தி கூட்டாளிகளின் முடிவை மாற்றி விடலாம்.

குடியரசின் தொடக்க காலத்திலேயே பிரேரணைக்கெதிரான தலையீடு டிரிபியூனின் தனிச் சிறப்புரிமையாகிவிட்டது. சபைகளில் கொண்டுவரப்பட்ட எந்த நடவடிக்கைக்கெதிராகவும், தேர்தல்களுக்கெதிராகவும்[2], சட்டங்களுக்கெதிராகவும் சபைகளில் எதிலும் இஃது அறிவிக்கப்படலாம். பிரேரணைக்கெதிரான தலையீட்டிற்குச் சில வழிமுறைகள் பின்பற்றப்பட வேண்டுமென வழக்கம் விதித்தது. வாக்கெடுப்பு நாள் வருமுன் தடையாணை விதித்தல் ஒழுங்கீனமாகக் கருதப்பட்டது. அதிலும் சட்டத்திற்கு ஆதரவான, எதிரான உரைகளைக் கேட்குமுன் தடை விதித்தல் பெருந் தவறாகக் கருதப்பட்டது[3]. சட்டங்களைப் பொறுத்தவரையில், நிருவாகி சட்டத்தைக் கொண்டுவந்து பேசியபின் வாக்கெடுப்புத் தொடங்குமுன்[4] தடையாணைவிதித்தலே சரியான காரியமாகக் கருதப்பட்டது. ஆனால் தேர்தல்களைப் பொறுத்தமட்டில், சபையில் முதல் இனம் வாக்களித்தபின் டிரிபியூன் குறிக்கிடுவதைக் காணலாம்[5].

செனெட் சபையின் கட்டளையை எதிர்த்துத் தலையிடுதல் என்பது செனெட் சபையைக் கலந்துகொண்டு நிருவாகி பிறப்பித்த கட்டளைக்கு எதிரான தலையீடாகும். முதலில் இந்த அதிகாரம் பழம் பெரும் அதிகாரத்தில் நிலைபெற்றிருந்தது. இந்தத்

[1] Liv. xii. 33.
[2] Liv. iv. 50, xxv. 2.
[3] Liv. xiv. 2l.
[4] Momms. Staatsr. I. p. 285,
[5] Liv, xxvii, 6,

தலையிடும் அதிகாரத்தை டிரிபியூன்[1], கான்சல்[2], பிரீட்டர்[3] ஆகி யோரை எதிர்த்துப் பயன்படுத்தினர். குடியரசின் வரலாற்றில், பெரும் பகுதியில் கான்சல் இந்த அதிகாரத்தைக் கான்சலுக்கெ திராகப் பயன்படுத்தினர். கான்சல் உரோமில் இருந்தபொழுது பிரீட்டர் செனெட் சபையைக் கூட்டுவதில்லையாகையால் பிரீட் டரை எதிர்த்து கான்சலின் தலையீடு தேவையற்றுப் போயிற்று. செனெட் சபையைக் கூடுமாறு அழைக்கும் அதிகாரத்தைப் பெற்றிராத, அச் சபையில் உறுப்பினராகவும் இல்லாதிருந்த டிரிபியூன் செனெட் சபையின் கட்டளையைத் தடை செய்யும் அதி காரத்தைப் பெற்றிருந்தார். பழங்காலத்தில் செனெட் சபை யின் நுழைவாயில் இருந்துகொண்டு செனெட் சபை நிறை வேற்றிய கட்டளைகளைக் கவனித்து ஏற்போ, மறுப்போ தெரிவித் தார். ஆனால் காலப்போக்கில் செனெட் சபையைக் கூட்டவும் அச் சபையின் விவாதங்களில் கலந்துகொள்ளவும் டிரிபியூன்கள் உரிமை பெற்றனர். இவர்களுடைய தலையீடு கான்சல்களின் தலையீட்டை அகற்றியது. பிரேரணைக்கெதிரான தலையீடு மறைந்து பல ஆண்டுகளான பின்னும் செனெட் சபையைக் கலந் தாராயும் அதிகாரத்திற்கெதிராக கான்சலின் தடையாணை தொடர்ந்து பயன்பாட்டில் இருந்தது. சல்லாவின் காலத்திற்குப் பின் (கி. மு. 81) இது காணப்படவில்லை. இதற்குப் பின், டிரிபி யூனை ஒரே தடையதிகாரியாக்கவும் இவரையே சட்டத்தின் பாது காவலராக்கவும் வேண்டுமென்ற மனப்பான்மை வளர்ந்தது.

செனெட் சபையில் தடையாணையின் பயன்பாடு எளிதாக்கப் பட்டது. தீர்மானங்களைத் தடுக்க விரும்பிய நிருவாகி தம் விருப் பத்தை முன்கூட்டியே குறிப்பிட்டார். இந்த விருப்பத்தை நிருவாகி (கான்சல்) "சபை நடவடிக்கைகள் எதுவும் தொடர்ந்து நடைபெற அனுமதிக்கமுடியா"தென அறிவித்தார்[4]. இந்த அறிக்கை சபையின் நேரத்தை மிச்சப்படுத்தியது. எப்படி யெனில், விவாதம் நடந்து கொண்டிருக்கையில் தடையாணை அறிவிக்கப்படவில்லை; ஆனால் வாக்களிப்பு நடந்து கொண்டிருக் கையில் அல்லது வாக்களிப்பு நடந்த பின் வழக்கமாக தடையாணை பயன்படுத்தப்பட்டது. எனவே, சபையின் நடைமுறையைத் தடை ஆணை தடுத்து நிறுத்தவுமில்லை; தடை ஆணை பயன்படுத்தப்படு மெனும் அச்சத்தால் சபையின் எந்த நடவடிக்கையும் தள்ளி வைக்கப்படவுமில்லை. தடையாணைக்குள்ளான பிரேரணையை

[1] Cic. Pro Sesh. 31, 68
[2] Cic. Pro Sesh. 34. 74
[3] Cic. ad Fam. x. 12, 3 & 4
[4] Lix. xxvi. 20; xxx. 40

செனெட்சபையின் பெரும்பான்மை ஒப்புதலோடு சபை ஒரு தீர்மானமாக வரைந்தது. இது கட்டளையின் ஆற்றலை இழந்துவிடும். ஆனல் இது நிருவாகியை ஆற்றுப்படுத்தும் ஒரு கருத்தாக இருந்தது. சில வேளைகளில் தலையீடுகளை ஒதுக்கி வைக்குமாறு செனெட்சபை நிருவாகிகளைக் கேட்டுக்கொண்டது[1]. சில சமயங்களில் கட்டளையோடு தடையாணை விதிக்கக்கூடிய நிருவாகியின் மீது ஒரு பொதுவான கண்டனத் தீர்மானத்தையும் சபை இயற்றி இணைத்துவிடும்[2]. செனெட்சபையோடு கலந்து செய்த முடிவின் மீதான தலையீடு சட்டத்தால் தடுக்கப்பட்டது.

அதிகார மோதலின் காரணமாக உரோமானிய நிருவாகப் பதவி பற்றிய பொறுப்புடைமைக் கோட்பாடெதுவும் இருக்கவில்லை; இஃது அதிகாரத் தனி முழுமையைக் குறிப்பிடுகிறது. ஆனல், தண்டிக்கப் பெறுதல், இழப்பீடு அளிப்பதற்குக் கட்டாயப் படுத்தப்படுதல், பணியைத் தவருகப் பயன்படுத்துதல் போன்ற அதிகாரம் பொறுபபுடைமையின் இரண்டாவது இயல்பாக வழங்கப்பட்டது. இது தலையீட்டதிகாரத்திற்கு ஒரு பொருத்தமான பரிசாகும்.

சாதாரண குடிமகனை விசாரித்த அதே நீதிமன்றங்களும், நடைமுறைகளும் நிருவாகியின் குற்றவியல் உரிமை இயல் பொறுப்புடைமையைச் செயற்படுத்தின. இந் நிருவாகிகள் பெற்றிருந்த சிறப்புரிமை என்னவென்ருல், இவர்கள் பதவியில் இருக்கும் காலத்தில் குற்றத்தண்டனைக் குற்றங்களுக்காக விசாரிக்க முடியாது. நிருவாகிகளைத் தவிர குவெஸ்டர்கள், ஈடில்கள் இன்றி எவரையும் பிரீட்டரின் முறை மன்றத்திற்கு அழைக்க முடியாது. நிருவாகிகள் மட்டும் செய்யக்கூடிய அரசியல் குற்றங்களென ஒரு தனி வகைக் குற்றங்கள் கிடையா. ஆயினும் குறிப்பிட்ட சில குற்றங்களுக்காகச் சாதாரண குடிமக்களைவிட இவர்கள் விசாரணைக்குள்ளாளுர்கள். கோழைத் தனத்தாலும், அறியாமையாலும் இவர்கள் அரசிற்குப் பெரும் தீங்கிழைக்கும் திறமை சாதாரண குடிமக்களைவிட இவர்களை அரசத்துரோகக் குற்றத்திற்குள்ளாக்கிவிடும். ஆனல் முறைமன்றம் இவர்களை நிருவாகிகள் என்ற முறையின்றிக் குடிமக்களாகக் கருதி விசாரித்தது. பதவிக் காலத்தில் ஒரு நிருவாகியைக் குற்றச்சாட்டிற்குட்படுத்த முடியாதென்பது இவர் விசாரணைக்குள்ளானபொழுது இவருக்கு ஒரு தனி நிலையை அளித்தது. சட்டமீறிய குற்றங்கள் பொது நீதிமன்ற விசாரணைக்குட்படாதாகையால் சாதாரண உரிமைவழக்கு நியாய

[1] Liv. xxxvi. 40.
[2] Çic. ad. Fam. viii, 8, 6,

சபைகள்முன் இவர் கொண்டுவரப் பெற்றார். இவர் ஒரு குடி மகனைக் கொள்ளையடித்தால் அது திருட்டாகும்; தம்முடைய வல்லந்த தடுப்பு அதிகாரத்திற்கு ஒவ்வாத முறையில் இவர் ஒருவரைத் தாக்கினால் அஃது ஊறு விளைத்த குற்றமாகும். அரசு பணத்தைக் கையாடல் என்ற ஒரு பழிவினையை ஒரு நிருவாகி அல்லது அலுவலர் செய்யமுடியும். பழங்காலத்தில் இக் குற்றம் அரசுத் துரோகமாகக் கருதப்பட்டுக் குற்றத் தண்டனை வழக்காக விசாரிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட்டது. ஆயினும் அரசு பணக் கையாடல் பற்றிய பழைய செய்திகள் எதுவும் குறிப்பிடப் படவில்லை. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டின் சட்டத்தைப் போல் சில சட்டங்கள் முற்றிலும் நிருவாகிகளுக்கு அல்லது அப் பதவிக்கான வேட்பாளர்களுக்கு எதிராக இயக்கப்பட்டன. விதிக்கப் படவேண்டிய தண்டத் தொகையை இச் சட்டங்கள் குறிப்பிட்டன. ஆனால், இவைகளின் பொருள் விளக்கம் கொமிசியாவிடம் விடப் பட்டது. போலிபியஸ் காலத்தில் கையூட்டுக் குற்றத்திற்கான தண்டனை மரண தண்டனையாகும்.

பெட்ரிசிய நிருவாகப் பதவிகளுக்கு பெட்ரிசியக் குடிமகன் எவரும் தகுதிபெற்றவராவார். ஆனால் பிளெபிய நிருவாகப் பதவிகளுக்குப் பிளெபியராகப் பிறந்தவர் எவரும் தகுதி பெற்றவரானர். பதவி மாண்பையொட்டி இந்தப் பொது விதிக்குக் குறிப்பிட்ட சில வரையறைகள் இருந்தன. சில பொறுப்புடை பணிகளை நிறைவேற்றுவதற்காகக் குறிப்பிட்ட வகை அனுபவம் தேவையென்னும் கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டது.

விடுதலை பெற்றவர்கள் அதாவது சுயேச்சையானவர்கள் பதவிகளிலிருந்து சட்டப்படி விலக்கி வைக்கப்படவில்லை. விடுதலை பெற்றவர்களின் புதல்வர்கள் இப் பதவிக்குத் தகுதி பெறவில்லையென்பதை நிருவாகிகளின் பட்டியல் தெரிவிப்பது மட்டுமின்றி நடைமுறையில் இப் பதவி சுயேச்சையான பாட்டனாரைப் பெற்றிருந்த ஒருவருக்கு ஒதுக்கப்பட்டது. இதற்கு விதிவிலக்காக விடுதலை பெற்ற சுயேச்சை மனிதர்களின் புதல்வர்கள் இப் பதவிக்கு கி. மு. 304-லும் 100-லும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்[1].

சில வாழ்க்கைத் தொழில்கள் நிருவாகப் பதவிக்குப் பூர்வாங்கமாகவும், மற்றவைகள் இப் பதவிக்குத் தகுதியற்றனவாகவும் கருதப்பட்டது. இப் பதவிக்குப் படைச் சேவையும் ஒரு தகுதியாக இருந்தது. ஏனெனில், நிருவாகி எந்தச் சமயத்திலும் அரசின் சார்பில் ஒரு படையை நடத்திச் செல்ல வேண்டும். குடி

[1] Momm. Staatsr. i. p. 488. Liv. xi, 46

யரசின் பெரும்பகுதி காலத்தில் போர்க் கைதியாக இருந்தவர் இப் பதவியிலிருந்து விலக்கி வைக்கப்பட்டிருந்தார். பதவிக்குத் தேவையான படைச் சேவையின் கால அளவு தெளிவாகக் குறிப் பிடப்படவில்லே. குவெஸ்டர் பதவிக்கான படைத்துறைத் தகுதி குறைந்த அளவு 28 வயதென விதிக்கப்பட்டது. மாருக, சிசரோ வின் காலத்தில் வயதுத் தகுதி முப்பதாக இருந்தது. ஆனுல் உரோமிற்குப் படைத்துறைத் தகுதி அகற்றப்பட்டுவிட்டதாகத் தெரிகிறது. ஏதாவது ஒரு தொழில் அல்லது பதவியில் இருந்து கொண்டு ஊதியம் பெற்றுவரும் எவரும் இப் பதவியைப் பெறு வதற்கான தகுதியை இழந்து விடுவார். உரோமில் பொதுப் பதவிகளுக்கு ஊதியம் அளிக்கப்படவில்லே.

ஒழுக்கக்கேடுற்றவர்களும், குற்றத்தண்டனே பெற்றவர்களும் இப் பதவிக்குத் தகுதிபெற இயலாது. குணக்கேடுற்ற ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் உரோம் நகரில் பதவிகளிலிருந்து விலக்கி வைக்கப்பட்டனரென்பது தவருகும். குற்றத்தண்டனேச் சட்டங் கள் நிரந்தரமாக அல்லது தற்காலிகமாகச் சிலரை இப் பதவியி லிருந்து விலக்கி வைத்தன. சில தகுதி இழப்புகளேக் கருத்தில் கொள்வது தேர்தலே நடத்தும் நிருவாகியின் விருப்பிற்கு விடப்பட்டது. அனுபவமிக்க ஒரு குழுவினரின் அறிவுரைப்படி இயல்பாக இவர் இயங்கினுலும் இவர் முற்றிலும் உசிதம்போலவே செயற்பட்டார். ஒழுக்கக்கேடானவர்களின் பெயர்களே ஏற்க மறுப்பதில் இவர் அறிவுரைக் குழுவினரின் கருத்துப்படி நடந்து கொண்டார். தமக்குப் பின் பதவிக்கு வருபவரைப் பதவியிலிருக் கும் நிருவாகி நியமனம் செய்தார் என்னும் கோட்பாட்டின் விளேவே இக் குறிப்பிடத்தக்க அதிகாரம். மக்கள் நிருவாகிகளேத் தேர்ந்தெடுத்தனரென்பது ஒரு முழுமையாக்கவல்ல செயலே.

நிருவாகப் பதவியை அடைவதற்கான மற்ற வரம்புகளே இதற்குமுன் பதவியிலிருந்ததைக் கொண்டு வரையறை செய்தனர். முறைப்படியான நிருவாகப் பதவிகளுக்கான காலி இடங்களே நிரப்புவதற்கான தேர்தலே நடத்தும் நிருவாகி தம்மையே அப் பதவிக்குத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாகாது. சட்டத்தால் ஒரு புதிய பதவி நிறுவப்பட்டால் அப் பதவிக்கான வேட்பாளரை எடுத்து மொழிபவரோ அவருடைய கூட்டாளியோ இவர் களுடைய உறவினர்களோ இப் பதவிக்கு தகுதிபெறமாட்டார்கள். ஆனுல், புரட்சிக் காலத்தில் சின்னுவும், கார்போவும் (Cinna and Carbo) அடுத்தடுத்து இரண்டாண்டுகளுக்குத் தம்மையே கான்சல்களாக நியமித்துக்கொண்டார்கள்.[1] சர்வாதிகாரி என்ற

[1] Liv, Ep 83.

முறையில் சீசர், தம்மை கான்சலாகத் தேர்ந்தெடுக்கும் கட்டத்திற்குத் தாமே தலைமை தாங்கினார்.[1]

கி. மு. 342 ஆம் ஆண்டின் சட்டமொன்று நிருவாகப் பதவிகளின் தொடர்ச்சியையும், திரட்சியையும் தடைசெய்தது. ஒரு நிருவாகப் பதவியை வகித்தவர் அதே பதவியை வகிக்க இடையே பத்தாண்டுகள் கழிய வேண்டுமென்றும், ஒரே ஆண்டில் இரு நிருவாகப் பதவிகளை ஒருவர் சேர்த்து வகிக்கலாகாதென்றும் இச் சட்டம் தடை விதித்தது.[2] இச் சட்டம் பின்வரவிருந்த சட்டங்களுக்கு முன்னோடியாக இருந்தது. பல்வேறு நிருவாகப் பதவிகளும் வகிக்கவேண்டிய வரிசை முறையையும், இப் பதவிக்கான வயதுத் தகுதியையும், இரண்டு பதவி வகுப்புகளுக்கிடையே இருக்கவேண்டிய இடைவெளியையும், ஒரே பதவியை வகுப்பதற்கு இடையிலான இடைவெளிக் காலத்தையும் பின்வந்த சட்டங்கள் (leges annals) சுட்டிக்காட்டின. கி. மு. 180-ல் ஒரு சட்டம் (Lex Villia) நிறைவேறியது. நிருவாகப் பதவிகளை வகிப்பதற்கான வயதை, இச் சட்டம் குறிப்பிட்டுள்ளது.[3] இரண்டு பெட்ரிசிய நிருவாகப் பதவிகளை வகிப்பதற்கிடையே இருக்க வேண்டிய இடைவெளிக் காலத்தை இச் சட்டம் உறுதிசெய்தது இரண்டு பெட்ரிசியப் பதவிகளை வகிப்பதற்கிடையில் இரண்டாவது இடைவெளி இருக்கவேண்டுமென்னும் விதி நிலைபெறத் தொடங்கியது. கி. மு. 180 ஆம் ஆண்டுச் சட்டம், குவெஸ்டர் பதவிக்கு வயதுத் தகுதியை 28-ஆக ஏற்றது. சிசரோவின் காலத்தில் கான்சல் பதவிக்கான குறைந்த அளவு வயதுத்தகுதி 43 ஆக இருந்தது. ஆனால், பிரீட்டர் பதவிக்கான வயதுத்தகுதி பற்றி ஒன்றும் தெரியவில்லை; 35-ஆகவும் 40-ஆகவும் இருந்திருக்கலாமென ஊகிக்கப்படுகிறது.[4] ஆனால், கி. மு. 81-ல் இயற்றப்பெற்ற சட்டத்தின்படி பிரீட்டர் பதவிக்கு முன் குவெஸ்டர் பதவியும், கான்சல் பதவிக்குமுன் பிரீட்டர் பதவியும் வகிப்பட வேண்டும்; அதே நிருவாகப் பதவியை மறுபடி வகிக்கப் பத்தாண்டுக் கழியவேண்டும்.

சில குறிப்பிட்ட வினைமுறையைப் பின்பற்றுவதையொட்டியே தேர்தலின் நேர்மைத் தகவு இருந்ததெனலாம். இவைகளில் முதன்மையானது தலைமை தாங்கும் நிருவாகியைப் பற்றியதாகும். பிளெபிய நிருவாகிகளைத் தேர்ந்தெடுக்கையில் பிளெபியர்களே சபைத் தலைவர்களாக இருந்தனரெனினும் மக்கள் நிருவாகியை (Magistratus Populi) கான்சல்களும் பிரீட்டர்களுமே படைத்

[1] Caecs, B. C. iti. 1, 1.
[2] Liv. vii, 42
[3] Liv. xi. 44
[4] Phil, v, 17, 48,

தனர். ஆயினும், கான்சல், பிரீட்டர் பற்றிய தேர்தல்களில் கான்சலைத் தவிர வேறு எவரும் தலைமை தாங்கமுடியாது.

தேர்தலை நடத்தவேண்டிய நிருவாகியிடம் பெயரை அனுப்ப வேண்டியது வேட்பாளரின் முதல் நடவடிக்கையாகும். தேர்தல் நடக்கும் நாளுக்கு மூன்று வாரத்திற்கு முன் இப்பெயர்களை அறிவிக்கவேண்டும். வேட்பாளர்களின் தகுதிகளை ஆய்ந்து ஏற்றுக் கொண்டபின் மக்களுக்காக நிருவாகி வேட்பாளரின் பெயர்ப் பட்டியலைத் தயாரிக்கவேண்டும். கி. மு. 63-க்கு முன் தேர்தலின் போது வேட்பாளர்கள் உரோமில் இருக்கவேண்டியதில்லையென்பது விதியாகும். ஆனால் 63-க்கும் 60-க்கும் இடையில் இயற்றப் பட்ட சட்டங்களின்படி, பெயர் அறிவிப்பை நேரில் சென்று தெரிவிக்கவேண்டும். கி மு. 52-ல் இயற்றப்பட்ட பாம்பியசின் சட்டத்திலும் இதேபோன்ற தொரு விதிசேர்க்கப்பட்டது. பெயர்கொடுத்த தற்கு'ர் தேர்தலுக்கும் இடைப்பட்ட காலத்தில் போட்டியாளர்கள் சுறுசுறுப்பாகத் தேர்தலாதரவு தேட முனைவர். முறைப்படியான ஆர்வம் முறையான செயல் மாண்பையொட்டி வளர்ந்தது. பதவியை நாடுபவர் கவர்ச்சிமிகு வெண்மை நிற ஆடை அணிந்து பரிவாரம் சூழ, நல்ல நினைவாற்றலுள்ள அடிமை ஒருவர் உடன் வரக் காட்சியளித்தார்; மகிழ்ச்சியோடு குடிமக்களுக்கு வணக்கம் தெரிவித்துக் கிராம வாக்காளர்களோடு கைகுலுக்கினர். வாக்குரிமையின் விரிவாக்கத்தால் தேர்தல் முக்கியத்துவம் பெற்றது. ஆனால், சமூகப் போர்களுக்குப் பின் ஆதரவு திரட்டலின் வேகம் குறைந்துவிட்டது. கோடையில் நடைபெறும் தேர்தலுக்கு நாட்டுப்புற வாக்காளர்கள் பெருமளவில் உரோமில் கூடினர். வெற்றியை உறுதிப்படுத்த வேட்பாளர்கள் நாட்டுமக்கள் அனைவரையும் நாடி ஆதரவு தேடினர். பெருமளவில் ஆதரவு திரட்டுவதற்குப் போதிய காலமும் விரிவான அமைப்பும் தேவைப்பட்டது. கி. மு. 64-ல் நடக்கவிருந்த கான்சல் தேர்தலுக்கு ஆதரவு திரட்ட சிசரோ, கி. மு. 65 ஜூலை மாதம் 17ஆம் தேதியே தேர்தல் போராட்டத்தில் இறங்கிவிட்டார். பிறப்பாலும், செல்வத்தாலும், பதவியாலும் நன்னிலையில் இருந்த வேட்பாளர்கள் உரோமில் வளமிக்க குழுக்களை அமைத்துக்கொண்டு நாடு முழுவதிலும் தேர்தல் பதிவாட்களை அமர்த்திக்கொண்டு முழு மூச்சில் செயற்படத் தொடங்குவர். வெற்றி பெறுவதற்கான வழிமுறைகள் முறைகேடானவைகளாக இருந்திருக்க வேண்டுமென்பதில்லை. ஆயினும் தேர்தல் ஒழுங்கீனங்களையும் கையூட்டு ஊழல்களையும் ஒழிப்பதற்கு எண்ணற்ற தண்டங்களை உரோம் விதித்தது. ஆனால் இவ்வொழுங்கீனங்களும் முறைகேடுகளும் பொதுமக்கள் அவைகளின் மறைவோடு மறைந்தன.

மக்களின் வாக்குரிமையால் புதிய நிருவாகியைத் தேர்ந்தெடுத்தபின் இதை முறைப்படி அறிவித்துச் சபைத் தலைவருடைய இறுதிப் பணியை நிறைவேற்றினர். இதை வெறும் சடங்குச் செயலாகக் கருதிவிட முடியாது. ஏனெனில், சட்டப்படியும் நெறிமுறைப்படியும் தகுதி பெருத ஒரு வேட்பாளர் தேர்தலில் பல நிலைகளைக் கடந்து வந்திருந்தாலும் அவரைத் தேர்ந்தெடுக்கப்பட்டவராக அறிவிக்க மறுக்கும் அதிகாரம் சபைத் தலைவருக்கிருந்தது.

பதவி அமர்த்தலுக்கும் பதவியேற்பிற்கும் முதலிலிருந்தே ஓர் இடைவெளி இருந்திருக்க வேண்டும். குடியரசின்போது ஆண்டிற்கொருமுறை தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகப் பதவிகளில் இடைவெளி இருந்துள்ளது. சர்வாதிகாரி, சென்சார்கள், இடையாட்சிக் காலத்திற்கு அமர்த்தப்பட்ட நிருவாகிகள் அல்லது காலியிடங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகிகள் ஆகியோர் மட்டுமே தேர்தலுக்குப் பின் உடனே பதவியேற்றூர்கள். வழக்கமான நிருவாகிகளுக்குத் தேர்தலுக்கும் பதவியேற்புக்கும் கூடவும் குறையவும் இடைவெளி இருந்தது. பெட்ரிசிய நிருவாகிகளுக்கு இந்த இடைவெளி குறைவாக இருந்தது. ஏனெனில், தேர்தலை நடத்துவது கான்சலின் ஆட்சிக்காலத்தில் கடைசிச் செயலாக இருந்தது. மூன்ரும் நூற்ருண்டின் இறுதியில் கான்சல்களும் பிரீட்டர்களும் மார்ச்சு மாதம் 15ஆம் நாள் பதவியேற்றனர். பின் கி.மு. 153-க்குப் பின் ஜனவரி முதல் நாளில் பதவியேற்றனர். குடியரசின் இறுதிக் காலத்தில் சல்லா புகுத்திய மாறுதல்களின் காரணமாகத்தேர்தல்கள் எல்லா இடங்களுக்கும் ஜூலை மாதத்தில் நடந்தேறின. இது கான்சல்களுக்கும் பிரீட்டர்களுக்கும் தேர்தலுக்குப் பின் பதவியேற்கும் காலம் வரை ஆறுமாத இடைவெளியை அளித்தது; குவெஸ்டர்களுக்கும் டிரிபியூன்களுக்கும் நான்கு மாதங்களுக்கு மேல் இடைவெளியை அளித்தது. இவர்கள் டிசம்பர் 5, 10ஆம் நாள் முறையே பதவியேற்றனர்.

இடைவெளிக் காலத்தின்போது தேர்வு பெற்ற நிருவாகியென இவர் பெயர் பெற்றிருந்தார். இவருடைய இறைமையும் அதிகாரமும் செயல்திறமற்றிருந்தபோதிலும் இவர் அரசில் குறிப்பிடத்தக்க நிலையைப் பெற்றிருந்தார். நிருவாகப் பதவிக்கான முன்னேற்பாட்டுச் செயல்களை இவர் மேற்கொள்ளலாம். பதவியேற்றபின் செயற்படத்தக்க ஆணைகளை இவர் பிறப்பிக்கலாம்.[1] தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்படுவதற்கு முன் அரசிற்குப் பற்றுறுதிப் பிரமாணம் எடுத்துக்கொள்வது வழக்கம். தேர்தலுக்

[1] Diocass. xi. 66. Cic in Verr., 1, 41, 105, Liv. xxi. 63.

காக வேட்டாளர் சபையில் இருக்கும்பொழுது மக்கள் முன்னிலை யில் இப் பிரமாணம் எடுத்துக்கொள்ள முடியும்.

பதவியேற்கும்பொழுது சட்டங்களை மதிப்பதாக உறுதிகூறும் மற்ருெரு பிரமாணத்தை நிருவாகி எடுத்துக்கொள்ளவேண்டு மென்பது வழக்கமாகும். ஐந்து நாள்களுக்குள் இப் பிரமாணம் எடுத்துக் கொள்ளத் தவறினல் பதவி இழக்க நேரிடும். பிற்காலக் குடியரசில் பதவிக் காலத்தை ஒரு பிரமாண முடிவிற்குக்கொண்டு வந்ததற்குச் சான்றுகள் இருக்கின்றன. கடமைப் பொறுப்புகள் முடிவிற்கு வந்தபொழுது நிருவாகிகள் மக்களுக்கு உரையாற்றி ஆட்சிக் காலத்தில் அரசின் நலன்களுக்கெதிராக வேண்டுமென்றே எதையும் செய்யவில்லையென்றும், ஆனல் அதன் நல்வாழ்வை மேம்படுத்த முயன்றதாகும் என்றும் கூளுரைத்தனர்.

பதவியேற்பு, மக்களின் தலைவரை மற்றக் குடிமக்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டக்கூடிய உயர் பதவியின் புறத்தோற்றங் களின் சின்னங்களை வெளிப்படுத்த வேண்டியது இப் பதவியோடு கூடிய உரிமையும் கடமையும் ஆகும். லிக்டர்களும் கோல்களும் கோளுட்சியின் எச்சமாகும். இவைகளை உயர்பதவியின் சின்னங் களாக நிருவாகிகள் பயன்படுத்தினர். நிருவாகிகள் இறைமை யோடு வல்லந்தத் தடுப்பு அதிகாரத்தைச் செயற்படுத்தவும் இப் பதவிச் சின்னங்கள் பயன்படுத்தப்பட்டன. மற்ற நிருவாகி களின் விருப்பங்களை நிறைவேற்றுவதற்காப் பணியாள்களை மட்டுமே பெற்றிருந்தனர்.

குடியரசுக் காலத்தில் நிருவாகிகள் லிக்டர்களைப் பெற்றிருந் ததைப்போல் கருஞ்சிவப்பு உடையையும் குயூருல் நாற்காலியை யும் குடியாட்சியின் மரபுரிமையாகப் பெற்றனர். ஆனல், அரசருக்குரிய சில உடையலங்காரத்தை வெற்றி அணிவகுப்பு ஊர்வலத்தின்போது மட்டுமே நிருவாகிகள் பயன்படுத்திக் கொள்ளலாம்; விழாக்களைக் கொண்டாடும்போதும் அரசச் சின்னங்கள் பயன்படுத்திக்கொள்ளப்பட்டன. குயூருல் நிருவாகி களின் அமைதித்தோற்றத்தின் சின்னமாகக் கருஞ்சிவப்பு அங்கி விளங்கியது. குவெஸ்டர்கள் தனிச்சிறப்பு உடைகள் அணிந்து கொள்ளவில்லை. நிர்வாகப் பதவிக்குரிய சின்னங்களின்றி டிரிபியூன்களும் பிளெபில் ஈடில்களும் காட்சியளித்தனர். சமுதாயத்தின் நிருவாகிகளாக இவர்கள் மதிக்கப்படவில்லை என்பதை இது காட்டியது.

போர் உடையில் அரசர் காலத்தில் வண்ணங்கள் மறுபடியும் தோன்றின. நகருக்கு வெளியே நிருவாகிகள் இராணுவ

உடையணிந்து கொள்ளலாம். இவருடைய இடையில் உடை வாளையணிந்திருந்தார். கோல்களோடு கட்டியிருந்த கோடாரி கள் இவருடைய இறைமையின் சின்னங்களாக விளங்கின.

உண்மையான மதிப்பைப் பெறாத அதிகாரத்தை உயர்த்திக் காட்டும் வெற்றுச் சின்னங்களாக இவ்விருதுகள் இருக்கவில்லை. பைரசின் (Pyrrhus) தூதுவருக்கு செனெட்சபை, அரசர்களின் சபையாகத் தோன்றினால், இச் சபையின் உறுப்பினர்கள் இவர்களுடைய காலத்தில் அரசருக்குரிய மரியாதையைப் பெற்றி ருந்ததையும் இவர் பார்த்தார். பதவியின் மாண்பை உரோமானி யர் புனிதப் பொறுப்பாகக் கருதியது குடியாட்சி முறை அரசாங் கத்தின் சிறப்பியல்பாகும். அதிகாரம் பெற்றிருந்த தனி மனிதரை இவர்கள் நிருவாகியாகப் பார்க்காமல் நிருவாகப் பதவியாகப் பார்த்தார்கள். சட்டமுறைகளுக்கு இவர்கள் பெரு மதிப்பளித்தனர். குதிரைச் சவாரிசெய்யும் நிருவாகியைக் கண்டவுடன் எழுந்து மரியாதை செய்தல் உரோமானியரின் வழிப்போன வழக்கமாகும்; அவருக்கு வழிவிடவேண்டும்; கடந்து செல்லும்போது இருக்கையிலிருந்து எழுந்து நிற்க வேண்டும்; கொமிசியாவில் அல்லது அவையில் அவர்முன் உறுப்பினர்கள் எழுந்து நிற்கவேண்டுமென்னும் மரியாதைப் கள் அவர்களுடைய பதவிக்குக் காட்டிய மரியாதையையே காட்டும். இவற்றை அறியாத உரோமானியர்களும் இவருடைய வல்லந்தத் தடுப்பு அதிகாரத்தின் நிலையை உணர்ந்து கொள்ளு வார். இவருடைய உயிர் அரசின் உயிரைப்போல் புனிதமான தெனச் சட்டம் தெளிவுபடுத்தியுள்ளது. உரோமானிய நிரு வாகியைச் சொல்ல முயல்வது அரசத் துரோகக் குற்றமாகும்.

# 7. பல்வேறு நிருவாகப் பதவிகள்

## கான்சல் (Consul)

குடியரசின் தொடக்கத்தில் இரு தலைமை நிருவாகிகளும் பிரீட்டர்கள் (Praetores) என்றும் ஜுடிசஸ் (Judices) என்றும் வழங்கப்பெற்றனர்.[1] படைத்தலைவர் என்ற முறையில் தலைமை நிருவாகியின் அதிகாரங்கள் பொதுப்பணிகளைவிட சிறந்து காணப்பட்டமையாலும் படைத்தலைமையால் இவர் பெற்றிருந்த பதவிமாண்பு, சிறப்பு ஆகியவைகளாலும் இவர் இப் பெயர் பெற்றிருக்கலாம். படைத்துறைப் பணிகளை இவருடைய பிரீட்டர் என்ற பதவிப்பெயரும் ஜுடெக்ஸ் (Judex) என்ற இவருடைய பதவிப்பெயரும் இவருடைய பொதுப்பணிகளையும் குறிப்பிடுகின்றன. கி. மு. 367-க்குப் பின் உரிமை வழக்கு விசாரணை அதிகாரம் தலைமை நிருவாகிக்கு மாற்றப்பட்ட பின் புதிதாய் நிறுவப்பெற்ற நிருவாகப் பதவியின் பெயரை கான்சல் என வழங்கினர். தலையாய அதிகாரம் ஒருவருக்கு மேற்பட்டவர்களிடம் இருந்ததென்பதை இப் பதவிப் பெயராகிய கான்சல் குறிப்பிடுகிறது. இது பற்றியே தலைமை நிருவாகி அரசரிடமிருந்து வேறுபடுகிறார்.[2]

நிருவாகிகளைப் பற்றிப் பொதுவாகவும் இவர்களுடைய பதவித் தகுதி, நியமன முறை, வேட்பு, தேர்தல், பதவியேற்பு, பதவி விலகல் ஆகியவைபற்றிக் குறிப்பாகவும் முன் அதிகாரத்தில் பார்த்த செய்திகள் கான்சல் பதவிக்கும் பொருந்தும். இரு கான்சல்களைக் கொண்ட குழு ஒன்றும் பதவிக்கான முழு அதிகாரத்தையும் பெற்றிருந்தது. இயன்றவரை இவர்களுக்கிடையில் அதிகார மோதலைத் தவிர்க்க கான்சல்கள் மாதத்திற்கொருவராக மாறிமாறிச் செயற்பட்டனர்.[3] இருவரில் மூத்தவர்

1 Cic. de legg iii 8
2 Liv. 3, 55, 12
3 Cic. de Repub. 2. 55, Liv, 3. 36. 3; gell. 2, 15, 4.

அலுவலாண்டின் முதல் மாதம் பதவிக்குரிய அதிகாரங்களைச் செயற்படுத்தும் உரிமையைப் பெற்றார். இந்த உரிமையைப் பெற்று இயங்கிய கான்சல் சில சமயங்களில் மூத்த கான்சல் என வழங்கப்பெற்றார். இருந்தபோதிலும், மாறிமாறிச் செயற்படும் இந்த முறை சிசரோவின் காலத்திற்குமுன் கைவிடப்பட்டது. பின் சீசர் இந்த முறையை மீண்டும் செயற்படுத்தினார். தொடக்கத்தில் போர் நடந்தபொழுது இரு கான்சல்களும் களம் சென்றனர். ஆனால், சல்லாவின் அரசியலமைப்புச் சீர்திருத்தத்திற்குப் பின் இவர்கள் நகரைவிட்டு வெளியே செல்லவில்லை. எனவே இவர்கள் படைத்துறை அதிகாரத்தைப் (இறைமையை) பயன்படுத்தவில்லை.

நிருவாகப் பதவிக்குரிய எல்லா அதிகாரங்களையும் கான்சல் பெற்றிருந்தார். கான்சலின் பதவிக்கான தனிப்பட்ட பணிகளை உள்நாட்டு, வெளிநாட்டு அரசியல் அடிப்படையில் ஆராயலாம். உள்நாட்டு விவகாரங்களைப் பொறுத்தவரையில் செனெட் சபையின் தலைவர் என்ற முறையிலும் மக்கள் சபைகளின் தலைவரென்ற முறையிலும் இவர் சில முக்கியமான அதிகாரங்களைச் செயற்படுத்தினார். நிருவாகிகளைத் தேர்ந்தெடுப்பதற்காகக் கூட்டப்பட்ட கொமிசியா செஞ்சுரியேட்டா அவைக்கு இவர்தாம் தலைமை தாங்கலாம். சர்வாதிகாரி ஒருவரை நியமனம் செய்வதும் இவருடைய அதிகாரத்திற்குட்பட்டதாகும். மிக முக்கியமான மசோதாக்களைச் செஞ்சுரியேட்டா அவையிலும் டிரிபியூட்டா அவையிலும் இவரே கொண்டு வரலாமென்பது வழக்காறு. செனெட்சபையோடான இவரது தொடர்பை வரையறுப்பது மிகக் கடினமாகும். முக்கியமானவைகளைப்பற்றி இவர் இச்சபையைக் கலந்தாராய்வது கடமையாகும். குறிப்பிட்ட நிகழ்வுகளைப் பற்றிய நடைமுறைகளைச் சட்டம் வகுக்கவில்லை. எனவே, இதைப்பற்றிக் கான்சல் விருப்பம்போல் நடந்து கொள்ளலாம். செனெட்சபையின் முன்னிசைவு பெறாமல் மக்கள் சபையில் இவர் ஒரு சட்டத்தைக் கொணரலாம். வேளாண்மை மசோதாவை நிறைவேற்ற சீசர் இந்த நடைமுறையையே பின்பற்றினார்[1]. ஆனால், இத்தகைய நடைமுறைகளைச் சில சமய இடர்ப்பாடுகளைக் கூறிச் செனெட்சபை தடைசெய்துவிடலாம். அல்லது தடையாணையைப் பயன்படுத்துமாறு டிரிபியூன் ஒருவரைக் கேட்டுக்கொள்ளலாம். கி.மு. 59-ல் சீசர் மேற்கொண்ட நடைமுறை புரட்சிகரமானதாகக் கருதப்பட்டது. கான்சல் கொண்டு வரக்கூடிய சட்டங்களுக்கும் டிரிபியூன்கள் கொண்டு வரக்கூடிய சட்டங்களுக்குமிடையேயான வேறுபாடுகளை வரையறுப்பது கடினமாகும். ஆனால், டிரிபியூன்கள்

[1] Liv. Ep. 103.

கொண்டுவரும் மசோதாக்கள் ஒருதலைச் சார்பாக இருப்பது இயல்பு.

கி. மு. 367-ல் பிரீட்டர் பதவிகள் நிறுவப்பட்ட பின் உரிமை வழக்குகள் பற்றிய விசாரணை அதிகாரம் முழுவதும் கான்சலிட மிருந்து அகற்றப்பட்டது. பிற்காலத்தில் அரசின் அதிகாரத்தை உறுதிப்படுத்தும் பொருட்டு இவர்கள், அடிமையின் விடுதலை அல்லது குடும்பத்தலைவரின் அதிகாரப் பிடியிலிருந்து மகனுக்கு விடுதலை ஆகிய வழக்குகளை நட்புமுறையில் தீர்வு செய்தார்கள். முறையீட்டுரிமையை அளிக்கும் சட்டங்களும், பிளெபியரின் அவை நீதி வழங்கும் அதிகாரங்களை மேற்கொண்டதும், பதவியிலிருக்கும் பொழுது அரசுப் பணத்தைக் கையாடிய நிருவாகிகளை விசாரிக்கப் பிரீட்டரின் தலைமையில் முறைமன்றங்களை நிறுவியதும் கான்ச லின் குற்றத்தண்டனை நீதிபதிக்கான பணிகளை இழக்கச்செய்தன. வெளிநாட்டவர்களுக்கெதிரான குற்றத்தண்டனை நடவடிக்கை களும் அடிமைகளுக்கெதிரான நடவடிக்கைகளும் தொடர்ந்து இவருடைய பொறுப்பில் இருந்தன.

கி. மு. 509ஆம் ஆண்டின் புரட்சி, தலைமை நிருவாகியின் சமயப் பணிகளைக் குருமார்களுக்கு மாற்றியது. இருப்பினும், சகுனம் பார்த்தல், பலியிடல், அரசின் பெயரில் சூள் உரைத்தல், சூள்நிறைவேற்றல், திருப்பணி செய்தல், பொது விளையாட்டுகளைக் கண்காணித்தல் போன்ற சில குறிப்பிட்ட சமயக் கடமைகளைக் கான்சல் நிறைவேற்றினர்[1].

பண்டைக்காலத்தில் அரசரும், குடியரசுக் காலத்தில் கான்ச லும் நிதியின் மீது செயற்படுத்திய கட்டுப்பாட்டைப் பிற்காலத்தில் ஒருபுறம், செனெட் சபையும் மக்களும், மறுபுறம், சென்சாரும் குவெஸ்டரும் எடுத்துக்கொண்டார்கள். முதலிலிருந்தே வருவாய் பற்றிய சட்டங்களை இயற்றவும் விலக்கவும் செனெட் சபை அதிகாரம் பெற்றிருந்தது[2]. பிற்காலத்தில் பொது நிதியிலான செலவினங்கள் பற்றியவைகளை கான்சல் கலந்தாராயும் நடைமுறை யைப் பின்பற்றினர். இதனால் காலப்போக்கில் பொதுநிதியின்மீது செனெட் சபை பெருமளவு கட்டுப்பாடு செலுத்தியது. சென்சார் பதவி நிறுவப்பெற்றதும் குவெஸ்டரைச் சுயேச்சையான தேர்விற் குரிய பதவியாக உயர்த்தியதும் கான்சலின் நிதி அதிகாரங்களை மேலும் குறைத்தன[3]. பொதுப் பணம் வழங்கக் குவெஸ்டர் மட்டுமே அதிகாரமளிக்கலாம். அரசு நிலம், வரிகள் விதித்தல்,

[1] Liv. 9, 46. 6; 21, 63, 6.
[2] Liv. 2, 9, 6.
[3] Liv. 44. 16.

பொதுக் கட்டடங்களைக் கட்டுதல், பொதுப்பணி ஆகியவை சென்சாரின் தனிப் பொறுப்பில் அவருடைய பதவிக் காலத்தில் இருந்தன. இருப்பினும், சென்சார் பதவியிலிருந்து விலகியதும், தூய்மைச் சடங்கின் மூன்றரை ஆண்டின்போது இது போன்றவைகளைக் கான்சல் பொறுப்பில் எடுத்துக்கொண்டார்.

நகருக்குள்ளும் வெளியேயும் ஒரு நிருவாகி செயற்படுத்தக் கூடிய அதிகாரங்களை நாம் முன்னர்ப் பார்த்தோம். நகரில் கான்சலின் அதிகாரங்களையும் கடமைகளையும் இதுவரை பார்த்தோம். நகருக்கு வெளியே போரை நடத்துவதும், இத்தாலிய மாநிலங்கள், சுதந்திர அரசுகள் ஆகியவற்ருேடு உள்நாட்டு அரசாங்கத்தின் பிரதிநிதியாகத் தொடர்புகொள்வதும் இவருடைய கடமைகளாகும்.

போர் ஒன்றை அறிவிப்பதற்குக் கொமிசியா செஞ்சுரியேட்டாவின் ஆதரவு எப்பொழுதும் தேவைப்பட்டது. இருப்பினும் நெருக்கடி நிலையில் குடிமக்களைப் போருக்கு அழைக்கும் உரிமை கான்சலிடமிருந்தது. உரோமின் இராணுவ நடவடிக்கைகளின் முக்கியத்துவம் அதிகரித்ததாலும், போர்க்களத்தில் இரண்டு படைத்தலைவர்கள் சேவை செய்ய வேண்டிய அவசியமேற்பட்டதாலும், படை திரட்டலும் அமைப்பும் முற்றிலும் செனெட் சபையின் கருத்தாய்விற்கு விடப்பட்டது. கி. மு. 207-க்குப் பிறகு முறையான படையின் நான்கு பிரிவுகளுக்குமான படைத்துறை டிரிபியூன்களின் தெரிவைக் கான்சல்களிடமிருந்து அகற்றிப் பொதுமக்களின் தேர்வுக்கு விடப்பட்டது[1]. ஒரு முனையில் படை நடவடிக்கைகளை மேற்கொண்டபொழுது அடுத்தடுத்த நாள்களில் கான்சல்கள் தலைமைப் பொறுப்பேற்றனர். ஒரே சமயத்தில் இரு போர் வினைகளில் ஈடுபட்டிருந்தபோது இரு கான்சல்களுக்கும் தனித்தனியே போர்க்களத்தை ஒதுக்குமாறு செனெட்சபை கேட்டுக் கொள்ளப்பெற்றது. இதைப் பயன்படுத்திக் கொண்ட செனெட் சபை படைத்துறை விவகாரங்களில் மேலும் செல்வாக்குப் பெற்றது. போர் முடிந்தவுடன் கோழைத்தனம், கைதிகளைக் கொடுமைப்படுத்தல் ஆகிய இராணுவக் குற்றங்களுக்குப் பிளெபியரவை முன் இவர்கள் பொறுப்பேற்கவேண்டியவர்களாயினும் போரை நடத்துவதில் கான்சல்கள் பொதுவாகக் கட்டுப்பாடின்றிச் செயற்பட்டனர். தொடக்கத்தில் எதிரிகளோடு தலைமை நிருவாகி அமைதி உடன்படிக்கை செய்துகொண்டார். ஆனால், பிற்காலத்தில் 321-க்குப் பிறகு நிரந்தர உடன்படிக்கை செய்வதை மக்களின் தனிப்பட்ட சிறப்புரிமையாகக் கருதி அதை மேற்கொண்டனர்.

[1] Liv. 27, 36, 14.

இத்தாலியின்மீதும் மாநிலங்களின்மீதும் இவர் செயற்படுத்திய கட்டுப்பாடுகள் வேறுபட்டன. மாநில மக்கள் குடிமக்கள் அல்லர்; ஆனால் இத்தாலிய மக்கள் முதல் நூற்றாண்டில் (கி.மு.) முழுமையாகவோ அரைகுறையாகவோ குடியுரிமை பெற்றிருந்தனர். தல, நிதி, நீதி இயல்புடையவைகளைத் தவிர இத்தாலிய விவகாரங்கள் உரோமிலிருந்து இயக்கப்பட்டிருக்கையில் ஒவ்வொரு மாநிலமும் அதன் ஆளுநருக்குட்பட்ட ஒரு பகுதியாக இருந்தது. இத்தாலிய சமூகங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்குமிடையேயான உறவுகள் உடன்படிக்கைகளால் வரையறுக்கப்பெற்றன. இவ் வுடன்பாட்டுறவுகளைப் பேணுதல் கான்சல்களின் முதன்மையான கடமையாகும். செனெட்சபையின் ஒத்துழைப்போடு சதிகளை ஒடுக்குவதும் கிளர்ச்சிகளை அடக்குவதும் கான்சலின் கடமையாகும். படைத் தலைவரென்ற முறையில் இத்தாலிய நேச நாடுகளால் அளிக்கப்பட்ட படைப் பிரிவுகளை இவர் ஏற்றுக்கொண்டு வெளியே இருந்துவந்த தாக்குதலிலிருந்து இத்தாலியைப் பாதுகாத்தார்.

முதலில், வெளிநாட்டில் நடந்த போர்களையும் இத்தாலியில் நடந்த போர்களையும் கான்சலே நடத்தினர். போர் நடந்துகொண்டிருந்த மாநிலம் ஒன்றில் ஏற்கெனவே ஒரு பிரீட்டர் பொறுப்பேற்றிருந்தால் இவர்கள் இருவரும் உரோமில் நிருவாகிகளாக இருந்திருந்தால் எப்படி நடந்துகொண்டிருப்பார்களோ அப்படியே இப்பொழுதும் இவர்கள் இங்கும் நடந்து கொள்ளவேண்டும். ஒரு மாநிலம் பிரீட்டரின்கீழ் இல்லையென்றால் கான்சல் பொதுவான படைத்துறைத் தொடர்புடைய கடமைகளையெல்லாம் ஏற்றார். சல்லாவின் சட்டப்படி, முன்னாள் நிருவாகிகள் உரோமில் பதவிக் காலத்தை முடித்துக்கொண்டதும் மாநிலங்களுக்கு ஆளுநர்களாக அனுப்பப்பெற்றனர். இதனால், சர்வாதிகாரியாக இருந்த கான்சல் ஒருவர் அவருடைய பதவிக் காலத்தில் ஒரு மாநிலத்திற்கு ஆளுநராகச் செல்லவேண்டிய வாய்ப்பு இராது. சல்லாவின் இந்த ஏற்பாடு 52ஆம் ஆண்டுச் சட்டத்தால் சிறிது மாற்றியமைக்கப்பட்டது. இதன்படி உரோமில் வகித்த நிருவாகப் பதவிக்கும் மாநில ஆளுநர் பதவியேற்பிற்கும் இடைவெளிக்காலம் ஐந்தாண்டாக இருக்க வேண்டுமென வரையறுக்கப்பெற்றது[1].

கான்சலின் வழியாகவும் மற்ற அரசுகளோடு பேச்சுவார்த்தைகள் நடத்தப்பட்டன. தூதர்களை இவர் வரவேற்றார்; அவர்களைச் செனெட்சபைக்கு அறிமுகம் செய்து வைத்தார். தகுமெனக்

[1] Dio. 40, 56.

கருதியபொழுது இவர் சர்வதேச அரசியல் பிரச்சினைகளை இச் சபையின் கலந்தாராய்விற்கு அனுப்பினர். வலுவந்தத் தாக்குதல் பற்றியோ அமைதி உடன்படிக்கை பற்றியோ செனெட்சபையின் பரிந்துரைகளை இவர் பொதுமக்கள் சபைக்கு எடுத்துரைத்தார்.

ஒரு நெருக்கடி நேரத்தில் சில இயல்பு மீறிய அதிகாரங்கள் கான்சலுக்கு அளிக்கப்பட்டன. அல்லது இவர் சொந்தப் பொறுப்பில் இவைகளையேற்றார். இந்த அதிகாரங்கள் இவருடைய உள் நாட்டு அதிகாரங்களுக்கும் படைத்துறை அதிகாரங்களுக்குமிடையில் இருந்தன. இச் சிறப்பதிகாரங்கள் மூன்று வழிகளில் ஏதோ ஒன்றில் வந்திருக்கவேண்டும். அவை சிறப்பாய்வு நிறுவப்படுதல், இறுதியாகச் செனெட்சபையைக் கலந்தாராய்தல் நிறைவேற்றப் படுதல் அல்லது நீதிமன்ற நடவடிக்கை நிறுத்திவைக்கப்படுதல் ஆகும். அரசியல் இயல்புடைய குற்றங்களைத் தனிப்பட்டவர்கள் அல்லது நிருவாகி செய்தால் இவைகளை ஆராய்ந்து முடிவுசெய்யச் சாதாரண நீதிமன்றங்கள் தகுந்தவை அல்ல என்பதை அறிந்து குற்றம் சாட்டப்பட்டவரை விசாரித்துக் குற்றவாளியெனக் கண்டால் தண்டனையளிக்கத் தனி நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டன. இவற்றுக்குக் கான்சல்களும் மற்ற நிருவாகிகளும் தலைமை தாங்கினர். இத்தகைய வழக்குகளில் மேல்முறையிடும் உரிமை விலக்கப்பட்டது. அரசின் ஒருமைப்பாட்டையும் பாதுகாப்பையும் சதி, கலகம் அல்லது புரட்சி அச்சுறுத்தும்பொழுது, ஒரு சர்வாதிகாரியை அமர்த்துமாறு கான்சலுக்கு அறிவுறுத்தாமல், பல ஆண்டுகளுக்குச் செனெட்சபை முறையிடும் உரிமையைத் தள்ளி வைத்தும் டிரிபியூன்களின் தடையாணையை விலக்கிவைத்தும் சட்டம் இயற்றி அதிகாரத்தை மேற்கொள்ளும். தம் சொந்தப் பொறுப்பில் கான்சல் நீதிமன்றச் செயற்பாடுகளுக்குத் தடை விதிக்கலாம். இது எடுக்கக்கூடாத நடவடிக்கையாகும். எனவே முன்கூட்டியே செனெட்சபையைக் கலந்தாராய்வது வழக்கமாகும். இதனால் பொதுக்காரியங்கள் விலக்கி வைக்கப்படும். குறிப்பாக நீதி, நிதிகாரியங்கள் நடைபெறா; கடைகள் மூடப்படும்.

## சர்வாதிகாரி (Dictator)

கான்சல் அரசரின் அதிகாரங்களை மரபுவழியாகப் பெற்றார் என்பதைப் முன்னர்ப் பார்த்தோம். எனவே இரு கான்சல்களில் ஒருவராக இப் பதவி உருவாக்கப்பெற்றது. பதவிக்குரியவரைக் கான்சல் நியமனம் செய்தார்; பாதகமான சகுனங்களைத் தவிர்க்கும் பொருட்டு இந் நியமனத்தை நள்ளிரவிற்கும் காலை நேரத்திற்குமிடையில் அறிவித்தார். இருவரில் எந்தக் கான்சல் சர்வாதிகாரியை நியமிக்கவேண்டுமென்பதை, அப்பொழுது கான்சலாகச்

செயலாற்றியவர் நியமனம் செய்யலாமெனும் வழக்கம் ஏற்கப் பெற்றது. பதவியிலிருந்து செயற்படும் கான்சல் கோடரி நடுவே வைக்கப்பெற்ற சலாகைக்கட்டுச் சின்னத்தை விருதாகப் பெற்றிருந்தார். இக் கூட்டாளிகளுக்குரிய நடவடிக்கையை யார் எடுத்து நடத்துவதென்பது உடன்பாட்டாலும் அல்லது சீட்டுக் குலுக்கு முறையாலும் முடிவு செய்யப்பட்டது[1]. ஆனால் கான்சலுக்குரிய இப் பொறுப்பை செனெட்சபை கவர்ந்துகொண்டது. இஃது எப்பொழுது நடந்ததென்பதை உறுதியாகக் கூற இயலாது. இதை மிகப் பழைமையான காலத்திற்குரியதாக வரலாற்றறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர்[2]. இறுதியில் இத்தகைய நியமனத்திற்கு அறிவுரை கூறியதோடு நிற்காமல் செனெட்சபை நியமனத்திற்குரியவரையே அறிவித்தது. அரசியலமைப்பு முறைக்கு இது முரணானதெனினும் செனெட்சபை நடைமுறை இறைமையும் டிரிபியூன்களின் ஆதரவும் இச் செயலை முறைப்படுத்தின. சர்வாதிகாரியாக அமர்த்தப்பட்டவர் முன்னாள் கான்சலாக இருக்க வேண்டுமெனும் விதி நான்காம் நூற்றாண்டில் உறுதியாயிற்று[3]. உரோமில் அப்பொழுது இருந்தவரைத்தான் நியமிக்கவேண்டுமெனும் பழைய விதி கைவிடப்பட்டது. ஏனெனில், சர்வாதிகாரி ஒருவர் அமர்த்தப்படவேண்டுமெனும் செனெட்சபையின் அறிவுரை செய்தியை ஏற்றபொழுது கான்சல் நகரிலிருந்து வெகு தொலைவில் இருந்திருக்கலாம். மேலும் உரோமானிய நிலப்பகுதியென்பது இத்தாலி முழுவதையும் உட்கொண்டிருந்தது. சர்வாதிகாரி புதிய நிருவாகியாக நியமிக்கப் பெற்றபின் இவருடைய இறைமையைக் குயூரியேட்டாச் சட்டம் உறுதிப்படுத்தியது. ஒரு முறையில் சர்வாதிகாரியின் விருதுகள் அரசரின் விருதுகளைவிட அதிகமாக இருந்தன. கான்சல்கள் பன்னிரு லிக்டர்களை (ஊழியர்களை) அதிகாரச் சின்னமாகப் பெற்றிருந்தனரென்றால் சர்வாதிகாரி அவருடைய உயர்நிலை காரணமாக 24 லிக்டர்களைப் பெற்றிருந்தார். இவர்கள் சர்வாதிகாரியின் பரிவாரமாவர். ஆனால், சர்வாதிகாரி நகருக்குள் நடமாடும்பொழுது 12 லிக்டர்களே முன்செல்ல வேண்டுமென்பது விதியாகும். மேலும் இவருடைய இறைமையின் சின்னமாகிய சலாகைக்கட்டுடன் கூடிய கோடரி நகருக்குள்ளும் இவர்முன் கொண்டு செல்லப்பட்டது[4]. போரினால் ஏற்பட்ட நெருக்கடியைச் சமாளிக்கவோ புரட்சியால் ஏற்பட்ட நெருக்கடி நிலையைச் சமாளிக்கவோ சர்வாதிகாரி அமர்த்தப்பெற்றார். இந்த நெருக்கடிகளைக் குறிப்பிடக்கூடிய

1 Livi. xviii. 12.
2 Liv. xxii, 57.
3 Momm Denin C.I.L.1. p. 557.
4 Liv. ii. 18.

பதவிப் பெயர்களை இவர் பெற்றிருக்கவில்லை. அரசு காரியங் களைச் செயலாற்றுவதற்கு அமர்த்தப்பெற்றார் என்று பொருத்த மாக விளக்கப்பெற்றது. ஒரு தனிப்பட்ட நோக்கத்திற்காகவும் அமைதியின் சிறு தேவைகளுக்காகவும் இவர் அமர்த்தப்படலாம்; தேர்தல் நடத்துவதற்குச் சர்வாதிகாரியொருவர் அமர்த்தப்பட்ட தைக் காணலாம். ஒரு சமயத்தில் செனட் சபையின் உறுப்பினர் பட்டியலைத் தயாரிக்க இவர் அமர்த்தப்பெற்றார்.[1] சடங்குகள் அல்லது சமய காரியங்களுக்காகவும் சர்வாதிகாரி அமர்த்தப் பெற்றார். அதாவது விளையாட்டுகளை நடத்தவும், திருவிழாக்களைக் கொண்டாடவும், ஜுபிட்டர் கோயிலில் ஆணி அடிக்கவும்[2] (கொள்ளை நோய் பரவலைத் தடுப்பதற்காக)சர்வாதிகாரிகள் அவ் வப்போது அமர்த்திக்கொள்ளப் பெற்றனர். கி.மு. 363-ல் முதலில் கொள்ளை நோய் கண்டபோது ஆணி அடிக்கப்பட்டதாகச் செய்தி கள் கூறுகின்றன. தனி நோக்கங்களுக்காக அமர்த்தப்பெற்ற சர்வாதிகாரிகள் நோக்கங்களை நிறைவேற்றியபின் பதவியி லிருந்து விலகிக் கொள்ளவேண்டும். சர்வாதிகாரியின் ஆறு மாதப் பதவிக் காலம் சட்டப்படி நீட்டிக்கப்படவில்லை; ஆனால், இப் பதவிக்கால அளவு குறைக்கப்படலாம். எப்படியெனில், சர்வாதிகாரியை நியமனம் செய்த கான்சல் பதவி விலகும் போதும் இவரும் பதவி விலக வேண்டுமென்பது விதியெனத் தெரிகிறது.

சர்வாதிகாரப் பதவி படைக்கப்பட்டதால் மக்களின் மற்ற நிருவாகப் பதவிகள் அகற்றப்படவில்லை. இவர்களுடைய சுயேச்சையான செயற்பாடுகளை மட்டுமே இது தள்ளிவைத்தது. கூட்டாளிகளாகிய கான்சல்களோடு சர்வாதிகாரி மூத்த கூட்டாளியாக இருந்தார். இவருடைய மேற்பார்வையில் கான் சல்கள் தொடர்ந்து படை நடத்திச் சென்றனர். சர்வாதிகாரி யால் படையில் சேர்க்கப்பட்ட வீரர்கள் கான்சலுக்கும் பற்றுறுதி செலுத்தினர். பிரீட்டர்கள் தொடர்ந்து நீதிபதிகளாக அமர்ந்து பணியாற்றினர். கீழ்நிலை அலுவலர்கள் அரசின் சிறிய பொறுப்பு களை ஏற்றுச் செயற்படுத்தினர். அதனால் பிளெபிய நிருவாகி களைத் தவிர மற்ற நிருவாகிகள் சர்வாதிகாரிக்கு இணங்கியே செயற்பட்டனர். சர்வாதிகாரி பதவியில் இருந்ததால் டிரிபியூ னின் அதிகாரங்களில் சட்டப்படி குறைவு ஏற்படவில்லை. அரசு இராணுவச் சட்டத்தின்கீழ் இருந்தபொழுது நகர நிருவாகிகளின் இடருதவியெதுவும் பயனுடையதாக இருக்கக்கூடாதென்பது அரசியலமைப்பு விதித்த வழக்கமாகும். சர்வாதிகாரியின் பணி

[1] Liv. xxiii. 22
[2] Liv. vii. 3

கள் பெருமளவு நகருக்கு வெளியே இருந்ததால் மோதல் எதுவும் ஏற்படவில்லை.

இச் சிறப்பு அதிகாரத்திற்குச் சில வரம்புகள் இருந்தன. சட்ட அதிகாரத்தில் சர்வாதிகாரி தலையிடவில்லை. உரோமில் இருந்தபொழுது கான்சல்கள் பெற்றிருந்த அதிகாரத்தைப் போல், செனட் சபையின் கட்டளையின்றிச் சர்வாதிகாரி அக்க சாலையிலிருந்து பணம் எடுக்க முடியாது. இத்தாலிக்கு வெளியே எக்காரணத்திற்காகவும் நிருவாகிகள் போர் தொடங்கலாகா தென்பது பழைமையான கருத்தாகும். இத்தாலிக்கு வெளியே சர்வாதிகாரி போரில் ஈடுபட்டதாக ஒரே நிகழ்வுதான் இருந்தது.[1]

இவருடைய அதிகாரத்தில் மேலும் ஒரு குறைப்பு பின் புகுத் தப்பட்டது. நகருக்குள் சர்வாதிகாரி மேல்முறையீட்டிற்கு உட் பட்டிருந்தார். இதனால் களத்திலிருந்த நிருவாகியின் அதிகாரம் தடுக்கப்படவில்லையெனினும், ஆட்சி எதிர்ப்பை வன்மையாக ஒடுக்க இதைப் பயன்படுத்துவது தடுக்கப்பட்டது. சர்வாதிகாரி யின் செயலாட்சி அதிகாரத்தில் மீறல் ஏற்படத் தொடங்கிய தென்றாலும் இவருடைய படைத்துறை அதிகாரம் ஒரு நூற்றாண் டிற்குத் தொடர்ந்து செயற்பட்டது. கி. மு. 217-க்குப் பின் இப் பதவியில் பொதுமக்கள் தேர்வும், கூட்டாளி முறையும் புகுத்தப் பட்டன. கி.மு. 217ஆம் ஆண்டில் போரில் தோல்வி ஏற்பட்ட பொழுது எஞ்சியிருந்த ஒரே கான்சலோடு தொடர்புகொள்ள முடியாமல் போகவே ஃபேபியஸ் மாக்சிமஸ் (Fabius Maximus) என்பவர் சர்வாதிகாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இத் தேர்தல் கொமிசியா செஞ்சுரியேட்டாவில் பிரீட்டரின் மேற் பார்வையில் நடந்திருக்கலாம். இதே ஆண்டில் மக்களின் அவ நம்பிக்கையும் தவறாக மினுசியஸ்மீது (Minucius) வைத்த நம்பிக் கையும் குதிரைப்படைத் தலைவராக இருந்த இவரை பேபியசுக் குச் சமமான தலைமை நிலைக்கு உயர்த்தின.[2] இவ்விரு செயல் களும் காலத்திற்கொவ்வாச் செயல்கள் என்பது புலனாயிற்று. கி.மு. 216ஆம் ஆண்டு இராணுவச் சர்வாதிகாரியொருவர் தேர்ந்தெடுக்கப்பட்டது இறுதியான நிகழ்வாகும். கடைசிச் சர்வாதிகாரி கி.மு. 202-ல் அமர்த்தப்பெற்றார். சல்லாவும், சீசரும் சர்வாதிகாரிகளாக இருந்து பின் முறையே அரசிய லமைப்பு முறையிலான பதவிக்கும் கோனாட்சிக்கும் மாற்றம் பெற்றனர். சல்லாவை இடைக்கால நிருவாகி நியமித்தார். ஆயினும், இவருக்குச் சட்டத்தால் அதிகாரம் அளிக்கப்பட்டது. சீசரைப் பிரீட்டர் அமர்த்தினார். பிரீட்டர், சர்வாதிகாரியை நியமிக்

[1] Liv. Ep. 19 Dio Cass. xxxvi, 17,
[2] Liv. xxii, 25

கலாமென புளூடார்க் கூறுகிறூர். ஆனல், இஃது அரசியலமைப்பு முறைக்கு முரணனதென்கிறூர் சிசரோ. எவ்வாருயினும், இவ்விரு நிகழ்வுகளிலும் பழைய நியமனமுறை பின்பற்றப்படவில்லை.

தொடக்க முதலில் சர்வாதிகாரி மக்கள் நிருவாகி (magistor Populi) என வழங்கப்பெற்றூர். இச் சொல் இவர் குதிரைப் படைத் தலைவரோடு கொண்டிருந்த தொடர்பை விளக்குகிறது.[1] இவரைச் சர்வாதிகாரி தம்முடைய பேராளராக அமர்த்தினர். இவர் இறைமை பெற்றிருந்ததோடு அதன் அடையாளச் சின்னமாகிய ஆறு சலாகைக் கட்டுகளையும் பிரீட்டருக்குச் சமமான படிநிலையையும் பெற்றிருந்தார். ஒரேயொரு முறைதான் சர்வாதிகாரி தேர்ந்தெடுக்கப்பெற்றூர். அப்போது குதிரைப் படைத்தலைவரும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவருடைய சின்னங்களையும் இறைமையையும் பார்க்கும்பொது இவர் ஒரு நிருவாகியென்பது தெளிவு. இவருடைய பதவிக்காலம் இவரை அமர்த்தியவரின் விருப்பையொட்டியதாகும். இவர் சர்வாதிகாரியின் முதன்மைக் கீழாளாகப் பணியாற்றினர். சர்வாதிகாரி இல்லாதபொழுது அவருடைய அதிகாரங்களைப் பெற்று இவர் செயலாற்றினர். இவருடைய இறைமைக்கு மக்களின் ஒப்பிசைவைப் பெற்றூர். மக்களை வினவும் அதிகாரத்தோடு இவர் செனெட் சபையோடு தொடர்புகொண்டு செயலாற்றினர். இவர் சுயேச்சையாகச் செயற்பட்டாலும் சர்வாதிகாரிக்குக் கீழ்ப்பட்டுச் செயலாற்றினர். மரணதண்டனையைப் பயன்படுத்திச் சர்வாதிகாரி இவரைப் பணியச் செய்யலாம். இடர்க்காலத்தில் உரோமிற்கு இப் பதவி இரண்டு தேர்ச்சிபெற்ற படைத்தலைவர்களை அளித்தது. தகுதியற்ற கான்சல்களையும் பிரீட்டர்களையும் சர்வாதிகாரி பயன்படுத்திக்கொள்வதைவிட இப் பயிற்சிபெற்ற படைத்தலைவர்களை இவரால் பயன்படுத்திக் கொள்ள முடிந்தது. அந்த முறையில் இப் பதவி பயனுள்ளதாகும். இப் பதவிக்கு அனுபவமுள்ளவர்களைப் பெறுவதற்கு வசதியாக முன்னுள் கான்சல்களையும் பிரீட்டர்களையும் பயன்படுத்திக்கொள்ள வழக்கம் வழிவகுத்துக் கொடுத்தது. சர்வாதிகாரியின் பதவி கைவிடப்பட்டபொழுது இப் பதவியும் மறைந்தது. ஆனல், சீசர் இப் பதவியை மீண்டும் உயிர்ப்பித்தார்.

## கான்சுலர் டிரிபியூன் (Consular Tribune)

படைத்துறை நடவடிக்கைகளின் வளர்ச்சியும் களத்தில் இரண்டிற்கு மேற்பட்ட படைத்தலைவர்களின் தேவையும் இட்

[1] Liv. xxii. 8

பதவி தோன்றுவதற்கான காரணங்களாகும். மிகப் பழங்காலந் தொட்டுச் சமூகத்தின் படைக்குப் படைத்துறை டிரிபியூன்கள் தலைவர்களாக இருந்து வந்தார்கள். முதலில் இவர்களின் எண்ணிக்கை மூன்றாகவும் பின் ஆறாகவும் இருந்தது. ஒன்றுக்குமேல் படை திரட்டப்பெற்றபொழுது, படையொன்றுக்கு அறுவர் இருந்தனர். படைத்துறைக் கான்சுலர் டிரிபியூன்களின் பதவி ஏற்பட்டது முற்றிலும் படைத்துறை அலுவலர்களுக்குக் கான்சலின் அதிகாரங்களை அளிப்பதற்கெனப் பொருள் பட்டது. இவர்களைக் கொமிசியா செஞ்சுரியேட்டா தேர்ந்தமர்த்தியது. எல்லாக் குடிமக்களும் படையில் பணிபுரிந்தனர். இவர்கள் படைத்துறை டிரிபியூனின் பதவிக்குத் தகுதி பெற்றார்கள். கான்சல்களுக்குப் பதிலாக கான்சுலர் டிரிபியூன்களை அமர்த்தியது தலைமை நிருவாகப் பதவிக்குப் பிளெபியர்களைத் தெரிவு செய்வதாயிற்று[1]. பிளெபியர்களின் கோரிக்கை ஒருவாறு சிறிதளவு நிறைவேறியது. ஆனால் அதே சமயத்தில் சாதகமான வாய்ப்புக் கிட்டும்போது தமக்குரிய சிறப்புரிமைகளை மீண்டும் பெறுவதற்குப் பெட்ரிசியர்கள் வழிவகுத்துக் கொண்டனர்.

ஒவ்வொரு படைக்கும் ஒருவராக ஆறு படைகளுக்கும் அறுவர் பொறுப்பேற்றிருந்தனர். இவர்களுடைய குழுவில் மூவர் அல்லது நால்வர் இருந்தது இயல்பாகும். இவர்கள் அனைவரும் கான்சலின் அதிகாரங்களையும் சின்னங்களையும் பெற்றிருந்தனர்; புட்குறி பார்க்கும் உரிமையையும் சர்வாதிகாரியை நியமிக்கும் உரிமையையும் பெற்றிருந்தனர். அதிகாரங்களைப் பிறருக்கு அளிப்பதிலும், பதவிக்கால முடிவின்போது அணிவகுப்பு நடத்த இயலாததிலும், முன்னாள் கான்சல்கள் துய்த்த சிறப்பு உரிமைகளைத் துய்க்க முடியாததிலும் இவர்கள் கான்சல்களைவிட அதிகாரத்திலும் பதவி நிலையிலும் தாழ்ந்தே இருந்தனர்[2]. இறுதியாகக் குறிப்பிட்ட வேறுபாடு அரசியல் சமூக முக்கியத்துவம் பெற்றதாகும். முன்னாள் கான்சல்களின் செனெட்சபையில் பேசவும் வாக்களிக்கவும் முன்னுரிமை பெற்றிருந்தனர். ஆனால், இந்த உரிமை கான்சுலர் டிரிபியூன்களுக்கு அளிக்கப்படவில்லை. இப் பதவியில் இருந்த பிளெபியர்கள் செனெட்சபை விவாதத்தில் கலந்துகொள்ள அனுமதிக்கப் பெறாதிருந்திருக்கலாம். இக் குறைபாடு மற்றவைகளைக் காட்டிலும் பிளெபியர்களுக்கு அதிருப்தி அளித்தது.

[1] Liv. 4. 6. 8.
[2] Liv. 4. 45.

இப் பதவி கி. மு. 444-ல் இருந்து 367 வரை இருந்தது. லிசினியன் சட்டத்தால் இஃது அகற்றப்பட்டது.[1] இந்தப் பதவி தொடர்ந்திருந்தபோது 51 கான்சல் குழுக்களும் இருந்தன. கி.மு. 375—371 வரையிலான நான்காண்டிற்கு குயூருல் நிருவாகிகள் பதவி வகிக்கவில்லை. இருக்கும் இடங்களை அதிகரித்துப் போட்டியிட்ட வேட்பாளர்களைத் திருப்திப்படுத்த கி.மு. 53-ல் கான்சுலர் டிரிபியூனேட்டை மறுபடியும் நிறுவத் திட்டமிடப் பெற்றது. ஆனல் இத் திட்டம் செயற்படுத்தப்பெறவில்லை.

## பிரீட்டர் (Praetor)

நகரின் வளர்ச்சியால் அதிகரித்த பொதுப்பணிகளை இரு கான்சல்களால் முழுமையாக நிறைவேற்ற முடியவில்லை. மேலும், இருவரும் படைத்துறைப் பணிகளை ஏற்கும்பொருட்டு அடிக்கடி நகரத்தைவிட்டு வெளியே செல்லவேண்டியிருந்ததால் நகரத்தின் தேவைகளைச் சமாளிக்க கி.மு. 366-ல் பிரீட்டர் பதவி நிறுவப்பட்டது. தலைமை நிருவாகியின் சில பணிகளைப் பெட்ரிசியர்கள் தம் வசம் வைத்துக்கொள்ள விரும்பியதும் இப் பதவியின் தோற்றத்திற்குக் காரணமாக இருக்கலாம். இப் புதிய நிருவாகிகள் (பிரீட்டர்கள்) கான்சல்களின் கூட்டாளிகளாகக் கருதப்பெற்றனர். முதலில், முன்னாள் கான்சல்களாக இருந்தவர்கள் இப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். கான்சல்களின் முக்கியமான சில கடமைகள் பிரீட்டர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. ஆகையால், இவர்கள் பதவி நிலையில் கான்சலுக்குச் சமமானவர்கள் எனக் கருதப்பட்டதில் வியப்பொன்றுமில்லை. இவருடைய செயலெல்லை சரி நுட்பமாக வரையறை செய்யப்பட்டிருந்தது. இவருக்கும் கான்சலுக்கும் மோதல் ஏற்படக்கூடிய அச்சம் ஏற்படவில்லை. இருப்பினும், அத்தகைய மோதல் ஏற்பட்டால் மேலான இறைமை அடிப்படையில் பிரீட்டர் பணிந்து செயற்பட்டார்[2]. இவருக்கிருந்த ஆறு ஊழியர்களைக் (லிக்டர்) கொண்டு இவருடைய கீழ்நிலையை உணரலாம். நகரில் இவர் நீதிப்பணிகளை நிறைவேற்றும் பொழுது இவருக்குதவ இரண்டு லிக்டர்களே இருந்தனர்.

இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட முறை இவர்களுக்கும் கான்சல்களுக்குமிடையே இருந்த தொடர்பை வெளிப்படுத்தியது. முதலில் இப் பதவிக்கு பெட்ரிசியர்கள் மட்டுமே தகுதி பெற்றிருந்தனர். ஆனல், இப் பதவி நிறுவப்பட்ட முப்பதாண்

1 Liv. 6. 35. 5
2 Gell. 13. 15. 4.

டிற்குள் இது பிளெபியர்களுக்கும் உரியதாயிற்று. இப் பதவி நிறுவப்பட்டபின் தலைமை நிருவாகி பிரீட்டர் என்ற பட்டத்தை இழந்தார். இப் பட்டம் இப்பொழுது புதிய நிருவாகியாகப் பணியாற்றியவருக்குக் கொடுக்கப்பட்டது.

பிரீட்டர் பதவியின் வளர்ச்சியில் மூன்று நிலைகளைக் குறிப்பிடலாம். கி.மு. 367-ல் இருந்து 227 வரை முதல் நிலை; 227-ல் இருந்து 81 வரை இரண்டாம் நிலை; 81-லிருந்து பேரரசுக் காலம் வரை மூன்றும் நிலை. முதல் நிலையில், பிரீட்டரின் சிறப்புப் பணிகள் நீதித் தொடர்புடையனவாக இருந்தன. இரண்டாம் நிலையில் பிரீட்டர்களின் குழு இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டது. ஒரு பிரிவின் உறுப்பினர்கள் நீதிபதிகளாகவும் மற்றொரு பிரிவின் உறுப்பினர்கள் மாநில ஆளுநர்களாகவும் செயலாற்றினர். மூன்றாவது நிலையில், குடியாட்சிக் காலத்தில் எல்லாப் பிரீட்டர்களும் முதலாண்டுப் பதவிக் காலத்தில் உரோம் நகரில் நீதிபதிகளாகவும் அடுத்த ஆண்டில் மாநில ஆளுநர்களாகவுமிருந்தனர்.

கி.மு. 198-க்கும் 81-க்கும் இடையில் உரோமானியப் பேரரசில் பல மாநிலங்கள் உருவாயின. இவைகள் உருவாக்கப்பட்டபொழுது உதவி நிருவாகிகளால் ஆளப்படும் கருத்து வலுப்பெற்று வந்தது. கான்சல்களைப்போல் பிரீட்டர்கள் நகர அலுவலராகிக் கொண்டிருந்தனர். குற்றத் தண்டனைச் சட்டத்தின் வளர்ச்சி இவர்களின் எண்ணிக்கையைப் பெருக்கத் தூண்டியது. உரோமில் இருந்த உரிமை வழக்கு, குற்றவழக்கு நீதிமன்றங்களுக்குத் தலைமை வகிக்கக் குறைந்தது எட்டுப் பிரீட்டர்களாவது தேவைப்பட்டனர். எனவே, சல்லாவின் காலத்தில் எட்டுப் பிரீட்டர்கள் அமர்த்தப்பெற்றனர்.

முதலில் ஒரு பிரீட்டரே இருந்தார். இது பிரீட்டரையும் மற்ற எல்லா நிருவாகிகளையும் வேறுபடுத்திக் காட்டியது. கருத்தளவில் இரண்டு கான்சல்களும் இவரும் சேர்ந்து ஒரு குழுவாகச் செயற்பட்டனர். எனவே, இவரையும் கான்சல் குழு உறுப்பினர்களுள் ஒருவராகக் கருதினர். பிரீட்டரின் நீதிமன்றச் சார்புடைய பணிகள் இவரை நகருக்குள் செயற்படச் செய்தன. ஆனால், கான்சல்கள் அடிக்கடி வெளிநாடுகளில் போரில் ஈடுபட்டிருந்தனர். இவர்களுக்கிடையிலான இப் பணி வேறுபாடு கருதியே நகரப் பிரீட்டர்கள் எனப் பெயர் பெற்றனர். இப் புதிய நிருவாகியின் பணிகள் அதிகரிக்கவே 242-ல் இரண்டாவது பிரீட்டர் தெரிவு செய்யப் பெற்றார். குடிமக்கள்

தொடர்புடைய எல்லா உரிமை வழக்குகளையும் நகரப் பிரீட்டர் ஏற்று விசாரித்தார்[1]. இரண்டாவது நிருவாகி வெளியார் தொடர்புடைய வழக்குகளை விசாரித்து முடிவு செய்தார். இவர் பிரீட்டர் பெரோகிரினஸ் என வழங்கப் பெற்ருர். கி.மு. 227-ல் இப் பிரீட்டர்களின் குழுவில் நால்வரும் 197-ல் அறுவரும் இருந்தனர். இவர்களின் எண்ணிக்கை அதிகரிப்புப் பிரீட்டர் பதவிக்கான பணிகளில் சில மாற்றங்களை ஏற்படுத்தியது. புதிதாக அமர்த்தப்பெற்ற நால்வரும் நான்கு புதிய மாநிலங்களின் பொறுப்புகளையேற்றனர். மாநில ஆளுநர்களின் அதிகரிப்பையும் நகரின் நீதிப் பணிகளை நிறைவேற்றவும் உரோமானியர்கள் அடிக்கடி இவர்களுடைய பதவிக் காலத்தை நீட்டித்தனர். இப் பதவிக்கால நீட்டிப்புமுறை நடைமுறையில் பிரீட்டர்களின் பதவிக் காலத்தை இரண்டாண்டுகளாக்கியது. முறையாகப் பிரீட்டர் களின் பதவிக்காலத்தை ஓர் ஆண்டு நகரிலும் இன்னோர் ஆண்டு மாநிலத்திலுமாக ஒதுக்கியதைச் சல்லாவின் புரட்சிகரமான மாற்றமாகக் கருத முடியாது. இம் மாற்றத்தின் முக்கியத்துவம் என்னவென்ருல், இக் காலத்திலிருந்து குடியாட்சியின் வீழ்ச்சி வரை எல்லாப் பிரீட்டர்களின் கடமைப் பொறுப்புகளும் ஒரே மாதிரியாக இருந்தன. இவர்கள் ஓராண்டு நீதிப்பணிகளையும் ஓராண்டு மாநில ஆளுநர் பொறுப்பையும் ஏற்றுச் செயற் படுத்தினர்கள். சல்லா இவர்களின் எண்ணிக்கையை எட்டாக உயர்த்தினர். பின் சீசர் இதைப் பத்தாகவும், பின் பதினன் காகவும், இறுதியாகப் பதினருகவும் உயர்த்தினர்.

ஒன்றுக்கு மேற்பட்ட பிரீட்டர்களைத் தெரிவு செய்யப்பட்ட திலிருந்து கூட்டாளித்துவ முறையும் இதன் விளைவாகத் தடை யாணையைப் பயன்படுத்தவேண்டிய நிலையும் ஏற்பட்டது. ஆனல் தடையாணை இங்கு அதிகமாகப் பயன்படுத்தப்படவில்லை. ஏனெனில், பல்வேறு பிரீட்டர்களின் கடமைகளும் ஒன்றிலிருந்து மற்றென்று மாறுபட்டிருந்தது. சில சமயங்களில் இரண்டு அல்லது மூன்று பிரீட்டர்கள் பொதுவானவைகளைப் பற்றிக் கூட்டாக நடவடிக்கை மேற்கொண்டனர். மற்றப் பிரீட்டர் களிடையே நகரப் பிரீட்டர் முதன்மை நிலையைப் பெற்றிருந்தார். இரண்டு கான்சல்களும் நகரில் இல்லாதபொழுது தலைமை நிருவாகிப் பதவியை இவர் ஏற்றுச் செயற்படுத்தினர். ஒவ்வொரு பிரீட்டருக்குமான செயலெல்லை ஒதுக்கீடு குலுக்குச் சீட்டு முறையில் செய்யப்பட்டது. சல்லாவின் ஆட்சிக்காலத்தி லிருந்து, தேர்தலுக்குப் பின் முதலாண்டில் பிரீட்டர்களின் பணி களை உறுதிப்படுத்தவும் இரண்டாம் ஆண்டில் எங்கெந்த

[1] Liv. Ep. 19.

மாநிலத்திற்கு எந்தெந்த பிரீட்டர்கள் செல்லவேண்டுமென்பதும் முடிவு செய்யப்பட்டது.

பிரீட்டரின் அதிகாரங்கள் மூன்று வகைப்பட்டவை. இவர் நீதிபதியாகவும், ஆட்சியாளராகவும் மாநில ஆளுநராகவும் செயற்பட்டார். நீதிமன்ற நடைமுறை பற்றிய விவரங்களையும் மாநில ஆளுநரின் பணிகளையும்பற்றிப் பிறிதோர் இடத்தில் பார்ப்போம். நீதிச்சார்புடைய ஓரிரண்டு பொதுவான இயல்பு களை இப்பொழுது பார்க்கலாம்.

இப் பதவி வளர்ச்சியின் மூன்று நிலைகளோடு அரசுப் பணக் கையாடல் ஆய்வுமன்றத்தையும் சேர்த்துக்கொள்ளலாம். இந்த நீதிமன்றத்திற்குப் பிரீட்டர் தலைமை தாங்கினர். இந் நீதிமன்றம் நிறுவப்படும் வரை இவர் உரிமை வழக்கு நீதிபதி யாகவே இருந்து வந்தார். இதன் பிறகு இவர் குற்ற வழக்கு களையும் விசாரித்து முடிவு செய்தார். பிரீட்டரின் குற்றவழக்கு விசாரணை அதிகாரம் உரிமை வழக்கு விசாரணையிலிருந்து எழுந்தது. மாநில ஆளுநர்கள் மக்களை வருத்தி நிதி வசூலித்தலை ஆராய முதலில் இந் நீதிமன்றம் நிறுவப்பட்டது. ஆளுநர்களால் பாதிக்கப்பட்டவர்கள் இந் நீதிமன்றத்திடம் முறையிடலாமென் பதிலிருந்து இஃது ஓர் உரிமைவழக்கு நீதிமன்றத்தின் இயல்பைப் பெற்றிருந்ததை அறியலாம். மற்றொரு நிலையிலிருந்து பார்க்கும் பொழுது இதன் நடைமுறைகள் குற்றவழக்கு இயல்பைப் பெற்றிருந்ததையும் காணலாம். எப்படியெனில், குற்றம் செய்த வர் அரசு அலுவலராகவும் செய்த குற்றம் அரசுக்குப் பாதக மாகவும் இருந்தமையால் இதன் நடைமுறைகள் குற்றத்தண்டனை இயல்புடையனவாக இருந்தன.

நாம் பார்த்த முறைமன்ற அதிகாரங்களில் பிரீட்டரின் ஆணை மிக முக்கியமான நிலையைப் பெற்றது. பதவியேற்கும் பொழுது பிரீட்டர் சட்டத்தின் கருத்துகளையும் நடைமுறை களையும் வெளியிட்டார். இவருடைய பதவிக் காலத்தில் இவை களையொட்டியே ஆட்சி செய்தார். இந்த ஆணை இவருக்கு முன் இருந்தவர் வெளியிட்ட ஆணையைத் தழுவியதாக இருந்தது. எனவே இவை நிலைபெற்ற ஆணைகளாயின. வழக்கமாகப் பிரீட்டர் தமக்கு முன்னிருந்தவரின் ஆணையோடு விரும்பத்தக்க மாற்றங்களையும் சேர்த்துப் புதிதாக ஓர் ஆணையை வெளியிடு வார். இதன் அடிப்படையில் உரோமின் குற்ற, உரிமை இயல் சட்டங்கள் வளர்ச்சியடைந்தன. வெளிநாட்டவர் பற்றிய பிரீட்ட ரின் ஆணைகள் இதேபோல், சர்வதேசச் சட்டத்திற்கு அடிப்படை யாக அமைந்தன.

சுயேச்சையான நிருவாகியென்ற முறையிலும் கான்சலின் பிரதிநிதியென்ற முறையிலும் பிரீட்டர் ஆட்சி நடவடிக்கைகளை மேற்கொண்டார். நிருவாகியென்ற முறையில் ஆட்சி நடவடிக்கையெடுக்க இவர் செனெட்சபையின் அதிகாரம் பெற்றிருக்க வேண்டும். இந் நடவடிக்கைகள், சட்டங்கள் நிறைவேற்றப்படும் பொழுதும், கீழ்நிலை நிருவாகிகளைத் தேர்ந்தெடுக்கும் பொழுதும் கொமிசியாவிற்குப் பிரீட்டர் தலைமை வகிக்கவேண்டுமென்பது போன்றவைகளாகும். மேலும், கான்சலின் கட்டளையின்படி இவர் சில பொதுவானதும் படைத்துறை சார்ந்ததுமான காரியங்களை ஏற்றுச் செயற்படுத்தினர். முன் குறிப்பிட்டது போல் நகரப் பிரீட்டர் சில வரம்பிற்குட்பட்டு நகரில் கான்சல் இல்லாதபொழுது தலைமை நிருவாகியாகச் செயற்பட்டார்.[1]

## சென்சார் (Censor)

இப் பதவி கி.மு. 443-ல் நிறுவட்டது. இப் பதவியைப் பெறுவதற்கு ஒருவர் பெட்ரீசியராக இருக்கவேண்டும். கி.மு. 351-ல் முதல்முறையாகப் பிளெபிய சென்சார் ஒருவரைப்பற்றிக் கேள்விப்படுகிறோம். இரண்டு சென்சார்களில் ஒருவராவது பிளெபியராக இருக்கவேண்டுமென பியூபிலிலியன் சட்டம் விதித்தது.[2] ஆனல், கி.மு. 131-க்கும் பின்னரே நாம் இரு பிளெபிய சென்சார்களைப்பற்றி அறிகிறோம்.

இப் பதவிக்கான தேர்தல் கொமிசியா செஞ்சுரியேட்டாவில் கான்சலின் தலைமையில் நடந்தது. தேர்தலுக்கு செஞ்சுரியேட் சட்டம் (Lex Centuriate) ஒப்புதல் அளித்தது. மற்ற நிருவாகிகளின் தேர்தலுக்குக் குயூரியேட்டா சட்டம் ஒப்புதல் அளித்தது. நல்ல பயிற்சியோடு தொடர்புடைய அலுவலர் அமைப்பைச் சேர்ந்தவர்கள் என்பதை இச் சட்ட ஒப்புதல் குறிப்பிட்டது. நான்கு அல்லது ஐந்தாண்டு இடைவெளிக் காலங்களில் புதிய சென்சார்கள் தேர்ந்தெடுக்கப் பெற்றூர்கள். இவர்கள் 18 மாதங்கள் பதவியில் இருந்தார்கள். முடிக்காமல் இவர்களால் விடப்பெற்ற காரியங்களைக் கான்சல்களும் ஈடில்களும் செய்து முடித்தார்கள்.

சென்சார் ஓர் ஒழுங்கற்ற நிலையைப் பெற்றிருந்தார். இறைமையும், மக்களையும் செனட் சபையையும் கூட்டும் அதிகாரத்தையும் இவர் பெற்றிருக்கவில்லையெனினும் மூத்த நிருவாகியோடு

[1] Cic. pro Belbo, 55. Liv. viii. 17. 12. xxvii. 5. 10.
[2] Liv. viii., 12

வைத்து மதிக்கப் பெற்றார். மிக உயர்வான 'தெய்வ இசைவை' இவர் பெற்றிருந்தார்; குயூருல் நாற்காலியில் அமர்ந்து, கோடிட்ட கருஞ்சிவப்பு அங்கி அணிந்து காட்சியளித்தார். இப் பதவி அரசியல் அடிப்படையில் மிக உயர்ந்த பதவியாகும். ஓய்வு பெற்ற கான்சல்களே பெரும்பாலும் இப் பதவி வகித்தனர். இதன் எல்லையற்ற அதிகாரங்களும், இதன் நன்னெறி சார்ந்த சிறப்பும், அடிக்கடி தேர்ந்தெடுக்கப் பெருத தன்மையும் அரசில் மிக உயர்ந்த பதவியைப் பெற்றவர்களின் கவனத்தைக் கவர்ந்தது. எனவே, இப் பதவியைப் பலர் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர்.

இரண்டாம் நூற்ருண்டின் முற்பகுதியில் மாண்பிலும் செல்வாக்கிலும் இப் பதவி மற்றெல்லா நிருவாகப் பதவிகளையும் விஞ்சி நின்றது. கான்சல்களும் பிரீட்டர்களும் இவருடைய செயல்கள்மீது தடையாணையைப் பயன்படுத்தவில்லை ; டிரிபியூன்களும் இதை அபூர்வமாகவே பயன்படுத்தினர்.[1]

குடிமக்களின் உடைமையை மதிப்பிட்டு அவர்களை இனங்களாகவும், வகுப்புகளாகவும், செஞ்சுரிகளாகவும் ஒழுங்குபடுத்தலும், செனட்சபையினர், வீரர்கள் ஆகியோரின் பட்டியலை மறு ஆய்வு செய்தலும், அரசின் நிதியைச் செயலாட்சி செய்தலும் சென்சாரின் ஆட்சிப் பணிகளாகும். இப் பணிகளை நிறைவேற்றும்போது சென்சார்கள் சமூகத்தின் ஒழுக்கத்தையும் கண்காணித்தனர்.

உடைமையின் மதிப்பீட்டில் முதல் நடவடிக்கையாக எல்லாக் குடிமக்களையும் காம்பஸ் மார்டியஸில்* ஒரு கூட்டமாகக் கூடுமாறு அழைப்பர். இங்கு மக்கள்தொகைக் கணக்கெடுப்புப்பற்றிய சுருக்க விதிமுறை ஆராயப்பட்டது. சொத்து மதிப்பீட்டிற்குப் பின்பற்றப்பட வேண்டிய கருத்துகளும் பட்டியலும் அறிவிக்கப் பட்டன. வயது, உடல்ஊனம், ஆகியவை காரணமாகப் படைச் சேவையிலிருந்து விதிவிலக்குப் பெற்றவர்களும் இங்குக் கூட வேண்டும். குடும்பத் தலைவரின் கட்டுப்பாட்டின்கீழ் இல்லாத சிறுவர்களும் தந்தை அல்லது கணவனின் கட்டுப்பாட்டில் இல்லாத பெண்களும் இங்குக் கூடுமாறு அழைக்கப்பட்டார்கள். இவர்களை ஒரு தனிப் பட்டியலில் பதிவுசெய்துகொண்டார்கள். பதிவு செய்துகொள்ளத் தவறியவர்கள் உடைமையையும் தனி உரிமையையும் இழக்க நேரிடும். ஆனல், பிற்காலத்தில் இவர்களுடைய உடைமை இவர்களின் உதவியின்றி மதிப்பீடு செய்யப்பட்டது.

[1] Liv. xi. 45, 8. Polyb. vi. 53, 7.
* Campus Martius.

இவர்களும் தண்டனையிலிருந்து தப்பினர்கள். இவர்களுக்கு இனங்களின் பிரதிநிதிகள் உதவினார்கள். அலுவலர்களும் நிபுணர்களும் இவர்களுக்குத் துணை நின்றனர்.

ஒவ்வொரு குடிமகனும் தம்முடைய பெயர், வயது, உறைவிடம், தந்தை அல்லது முன்னாள் எசமானின் பெயர், தம்முடைய இனம், குடும்பச் சூழ்நிலைகள், படையில் பணிபுரிந்த ஆண்டுகள் வரிவிதிப்பிற்குள்ளாகும் உடைமையின் அளவு ஆகியவைகளைக் கொடுக்க வேண்டும். கொடுக்கப்பட்ட இந்தத் தகவலின் அடிப்படையில் சென்சார்கள் வரிகளை வரையறுத்து இனங்கள், வகுப்புகள், செஞ்சுரிகள் ஆகியவைகளுக்கு ஏற்பப் பட்டியல் தயாரித்தனர். வகைப்பாட்டின் அடிப்படைகளைப் பின்னர் பார்க்கலாம். ஒவ்வொரு குடிமகனின் வாழ்க்கை முறையையும் குறிப்பாக ஒவ்வொருவரும் எந்த முறையில் அரசிற்குச் சேவை செய்தனர் என்ற விவரங்களை ஆய்வதற்கான சென்சார்களின் கடமைப் பொறுப்புகளைச் சட்டம் அல்லது வழக்கம் வகுத்தளித்தது[1].

திருட்டைப் போன்ற குற்றங்களைச் செய்தல், பிறழ்வு வாழ்க்கை, எதிரிகளுக்குமுன் கோழைத்தனம், பதவியில் நெறி தவறிய நடத்தை, ஆகியவை ஒரு குடிமகனை ஒரு பெரிய இனத்தோடு சேர்க்க வழிவகுக்கும். இதனால் இவருடைய வாக்கின் மதிப்புக் குறையலாம்; அல்லது செஞ்சுரியேட் பிரிவில் வாக்குரிமை இழப்பேற்படலாம். இவரிடமிருந்து குதிரை பறிக்கப்படலாம். அல்லது செனெட்சபையினர் பட்டியலிலிருந்து இவருடைய பெயர் நீக்கப்படலாம். பட்டியலில் குடிமகனின் பெயருக்கெதிரில் ஒரு குறியிட்டுத் தண்டனை விதிப்புச் சுட்டிக் காட்டப்பட்டது. புதிய, மக்கள்தொகைக் கணக்கெடுப்பு எடுக்கும் வரை தண்டனையின் பலன் தொடர்ந்திருந்தது. ஐந்தாண்டிற்கொரு முறை இக் கணக்கு எடுக்கப்பட்டது. ஆடம்பரமான, அருவெறுப்பான வாழ்க்கை முறையைத் தடைசெய்து பேரறிக்கை வெளியிடும் அதிகாரத்தை சென்சார் பெற்றிருந்தார்.

வீரர் நிலையைப் பெறுதற்கு ஓர் அளவு சொத்துடைமை தேவையாக இருந்தது. குடியரசின் இறுதிக் காலத்திலும் பேரரசின் தொடக்கத்திலும் குறைந்த அளவு 400,000 செஸ்டர்செஸ்களுக்குச் சொத்து மதிப்பு இதற்குத் தேவையென விதிக்கப்பட்டது. குடிமக்களின் பொதுவான மதிப்பீடு வீரர்களின் பட்டியல்களை வரைய சென்சார்களுக்கு உதவியாக இருந்தது.

[1] Liv. iv. 8. 2, Cic. de Legg. 3. 7.

ஆனல், குதிரைப் படையினரைத் திரட்டுவதற்கு ஒரு தனிப்பட்ட சடங்கு நடந்தது. அரசிடமிருந்து படைக்கலன்களைப் பெற்ற ஒவ்வொரு குதிரைவீரனும் சென்சாரின் சோதனைக்குக் குதிரையைக் கொண்டு வரவேண்டும். படைக்கலன்களின் தன்மையும் இவனுடைய பணிப்பதிவும் திருப்தியாக இருந்தால் இவன் வீரனை ஏற்றுக்கொள்ளப் பெற்ருன். பாராட்டிற்குரிய சேவைக்கு அப்பொழுது பரிசுகளும் அளிக்கப்பட்டன[1].

நான்காம் நூற்ருண்டின் இறுதியில் ஒவினியன் சட்டத்தால் செனெட்டர்களின் பட்டியலைத் திருத்தியமைக்கும் பணி சென்சாருக்களிக்கப்பெற்றது. சென்சாரின் பதவி முக்கியத்துவத்திற்கு இதுவும் ஒரு காரணமாகும். சென்சார் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தபொழுது சிலரைப் பட்டியலிலிருந்து நீக்கிவிடவும் காலியிடங்களை நிரப்பவும் இவர் அதிகாரத்தைத் தாராளமாகப் பயன்படுத்தினர். சல்லாவின் சீர்திருத்தம் இந்த அதிகாரத்தை சென்சாரிடமிருந்து அகற்றியது. சல்லாவின் சட்டங்களின் பெரும்பகுதி விலக்கப்பட்ட பின்னும் செனெட்டர்களின் பட்டியலில் பெயர்களைச் சேர்க்கும் உரிமையை மீண்டும் பெற முடியவில்லை. இருப்பினும், பட்டியலிலிருந்து பெயர்களை நீக்கும் அதிகாரத்தை இவர் மீண்டும் பெற்ருர்.

வருவாய் திரட்டலும் பொதுப்பணத்தைச் செலவிடலும் சென்சாரின் பொறுப்பாயிற்று. மிக அதிகமான தொகையைச் செலுத்த முன்வருபவரிடம் வரிவிதிப்பை வழங்கல் பொது நிலத்தை விற்றல் அல்லது குத்தகைக்கு விடுதல், அரசாங்கத்தால் கட்டுப்படுத்தப்பட்ட சில உரிமைகளைக் குறிப்பிட்ட தொகைக்கு அளித்தல் போன்றவை வருவாயின் முக்கிய பகுதிகளாகும். கட்டடங்கள், சாலைகள், பாலங்கள், கால்வாய்கள் ஆகியவைகளைக் கட்டவும் செப்பனிடவும் பொதுப்பணம் பெருமளவு செலவிடப்பட்டது. இத் துறையில் இவருடைய கடமைகளின் செயல் எல்லை, உரோம், இத்தாலிய சாலைகளுக்கப்பால் செல்லவில்லை. இப் பணிகளை ஒப்பந்தக்காரர்கள் செய்துகொடுத்தனர். செனெட் சபையால் கொடுக்கப்பட்ட நிதியிலிருந்து இவர்களுக்கு சென்சார் பணம் கொடுத்தார். இவர்களால் செய்துகொள்ளப்பட்ட ஒப்பந்தங்களின் பதிவு ஒன்று கருவூலத்தில் வைக்கப்பட்டது. அரசிற்கும் குடிமகனுக்கும் இடையேயான சிக்கலான வரிவிதிப்புப் பிரச்சினைகளும் ஒப்பந்தக்காரர்களுக்கும் அரசுக்கும் இடையேயான தகராறுகளும் தீர்வுக்காக சென்சா

1 Liv. xix. 37. 9-10.

ரிடம் விடப்பட்டன. அலுவல் சார்புடைய இவருடைய இப் பணி மிக முக்கியமானதாக இருந்திருக்க வேண்டும்.

பலியிட்டுத் துப்புரவாக்கும் சடங்கோடு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு நிறைவு பெற்றது. கூடியிருந்த படையை நகரின் நுழைவாயிலுக்கு நடத்திச் சென்று சென்சார் அதைக் கலைத்து விட்டு, ஒரு கோயிலில் ஆணி அறைந்து, பட்டியலைக் கருவூலத்தில் வைத்துவிட்டுப் பதவி துறப்பார். முடிவுறுப் பணிகளையும் புதிய சென்சார் தேர்ந்தெடுக்கப்படுவதற்கிடையில் எழுந்த பணிகளையும் கான்சல்கள், ஈடில்கள், பிரீட்டர்கள் செய்து முடித்தனர்.

இத்தாலி முழுவதிலும் மக்கள்தொகைக் கணக்கு எடுக்க கி. மு. 45ஆம் ஆண்டுச் சட்டத்தால் ஏற்பாடுகள் செய்யப் பட்டன. உரோமன் மக்கள்தொகைக் கணக்கெடுப்பு முடிவதற்கு அறுபது நாள்களுக்கு முன் இத்தாலிய நகரங்களின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் முடிவுகள் அறிவிக்கப்படவேண்டு மென அறிவிக்கப்பட்டது.

இப் பதவியின் நலிவிற்கும் மறைவிற்கும் காரணங்களை எளிதாகக் குறிப்பிடலாம். மக்கள்தொகை வளர்ச்சியோடும் அரசின் நிதி நலன்களின் பெருக்கத்தோடும் இவர்களுக்கு அளிக்கப்பட்ட கடமையை சென்சார்கள் குறிப்பிட்ட கால வரையறைக்குள் நிறைவேற்ற முடியவில்லை. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலும் முதல் நூற்றாண்டின் தொடக்கத்தி லும் இவர்களுடைய பணிகள் முடிவு பெறாமல் விடப்பட்டன; அல்லது நல்ல முறையில் நிறைவேற்றப்படவில்லை. மேலும் செனெட் சபையை நிரப்புவதற்கு சல்லா மேற்கொண்ட முறை கள் சென்சாரின் மிக முக்கியமான பணிகளைக் கவர்ந்து கொண்டன. கி. மு. 80–க்கும் 70-க்கும் இடையில் சென்சார்களே இல்லை. நகரத்தின் வளர்ச்சியால் நகர சமூகத்தின் ஒழுக்கங் கள்மீது சென்சாரால் செயலாட்சி செய்ய முடியவில்லை. பட்டிய லில் குறிப்பிட்ட குறி ஓர் அரசியல் ஆயுதமாகப் பயன்படுத் தப்பட்டது. இக் குறியிடும் உரிமை ஒரு சட்டத்தால் கி. மு. 58-ல் குறைக்கப்பட்டது. இச் சட்டம் ஆறு ஆண்டிற்குப் பின் விலக்கப் பட்டதெனினும் சென்சாரின் அலுவலகத்தின் இப் பணி மறு படியும் அதன் சிறப்பைப் பெறவில்லை.

## டிரிபியூன் (Tribune)

நிருவாகி என்ற சொல் பயன்படுத்தப்பெற்ற பொருளில் டிரிபியூன் நிருவாகியாக இருந்ததில்லை. ஆனல், பிற்காலத்தில்

குடியாட்சியில் இவருடைய பணிகள் நிருவாகியின் பணிகளை ஒத்திருந்தமையால் இத் தலைப்பின்கீழ் இப் பதவி பற்றி ஆய்கிறோம். டிரிபியூனேட் பதவிக்குரியவர் பிளெபியராக இருக்க வேண்டுமெனச் சட்டம் விதித்தது. கி.மு. 494-ல் இருந்து 471-வரையில் டிரிபியூன்கள் பிளெபியர்களின் குயூரியேட் அவையால் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கலாம். இதற்குப் பின் டிரிபியூன் ஒருவரின் தலைமையில் பிளெபிய இன அவை இவர்களைத் தேர்ந்தெடுத்தது. தொடக்கத்தில் இவர்களின் எண்ணிக்கை உறுதியற்றிருந்தது[1]. ஒவ்வொரு வகுப்பின் பிரதிநிதியாக ஐந்து வகுப்புகளுக்கும் ஐந்து பிரதிநிதிகள் இருந்திருக்க வேண்டும். 457-ல், இந்த எண்ணிக்கை பத்தாக உயர்த்தப்பட்டது. பின் டிரிபியூனின் குழுவில் இந்த எண்ணிக்கை தொடர்ந்திருந்து வந்தது. பதவி விருதுச் சின்னங்களை இவர்கள் பெற்றிருக்கவில்லை. எளிய இருக்கையில் அமர்ந்து அலுவலத் தொடர்புடைய பணிகளை இவர் நிறைவேற்றியது இவருடைய மக்களியல்பைக் குறிப்பிடுகிறது[2]. முதலில் பிளெபிய ஈடில்கள் இவரது உதவியாளர்களாகப் பணியாற்றினர். ஆனால் ஈடில்களின் பணிகளும் சிறப்பும் அதிகரித்தபொழுது இவர்கள் பிரிந்து தனியே செயல் பெற்றனர். இவருடைய கடமைகளை நிறைவேற்றுவதில் இவருக்கு உதவியாக ஏவலர்கள் நியமிக்கப் பெற்றனர்[3].

நிருவாகியின் விதிக்கட்டில்லாச் செயல்களிலிருந்து குடிமக்களை, குறிப்பாகப் பிளெபியர்களைப் பாதுகாக்கும் குறிப்பிட்ட நோக்கத்திற்காக இப் பதவி நிறுவப்பெற்றது. இவருடைய செயற்பாடுகளைப் பயனுடையதாக்க இரண்டு வழிகள் இருந்தன. இவரால் தடை செய்யப்பெற்ற நடவடிக்கையைச் செயற்படுத்தத் துடித்த நிருவாகிமீது இவர் தண்டனை விதிக்கலாம். இத் தண்டனை மரண தண்டனையாகவும் இருக்கலாம். இரண்டாவதாக, இவரது உடலும் உயிரும் புனிதமானதாகக் கருதப்பெற்றது. இப் புனிதத் தன்மையை மீறியவர்களைச் சட்ட நடைமுறை விதிகளின்றி முழுநிறைக் காப்புறுதியோடு கொன்றுவிடலாம். இருந்தபோதிலும், எண்ணிய நடவடிக்கையை எடுக்கும் தருணத்தில் டிரிபியூனின் தடையுத்தரவை நேரில் கொடுக்கவேண்டும். முதலில் இவர்களின் எண்ணிக்கை பத்தாக உயர்ந்ததற்கு இதுவும், நகரில் இரவு நேரங்களில் டிரிபியூன்கள் இல்லாதிருக்கலாதெனும் வழக்காறும், இவர்களுடைய கதவுகள் என்றும் திறந்திருக்க வேண்டுமெனும் வழக்கமும் காரணமாக இருந்தன. இந்த

1 Herz. 1. 153.
2 Liv. xiii, 33. 1.
3 Liv. ii. 56. 13.

ஏற்பாடுகளின் உட்கருத்து, டிரிபியூனால் தடை செய்யப்பெற்ற நடவடிக்கையை ஏன் பின்னால் எடுத்துக்கொள்ளலாம் என்றிருந்த விதியை விளக்கியது. மறுபடியும் இதை டிரிபியூன் தடை செய்யாதவரையில் அந் நடவடிக்கை செல்திறனுடையதாக இருக்கும். நகரின் எல்லைக்குள் மட்டுமே இவ்வதிகாரம் டிரிபியூனால் செயற்படுத்தப்படும். பிளெபியர்களைக் கூட்டும் அதிகாரமும் இவருக்குப் பின் இப் பதவிக்குரியவரைத் தேர்ந் தெடுப்பதற்கே பயன்படுத்தப்பட்டது.

டிரிபியூனின் விரிவான, விரைவான அதிகார வளர்ச்சிக்கு மூன்று காரணங்களைக் கூறலாம். குடியரசின் தொடக்க காலத் திய வளர்ச்சி வரலாற்றில் மக்களின் அரசியல் மனப்பான்மை யும் ஒரு காரணமாகும். இவரது தண்டனை விதிக்கும் அதிகார மும் இவருடைய உடலுக்கும் உயிருக்கும் கேடு நேராமைக் காப்பும் மற்ற இரு காரணங்களாகும். குடியரசு நிறுவப்பட்ட திலிருந்து நான்காம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை சிறிது சிறிதாக பெட்ரிசியர்களுக்கும் பிளெபியர்களுக்கும் இடையில் அரசியல் உரிமைகளில் ஒரு சமன்பாடு காணப்பட்டது. சம உரிமைகளுக்கான பிளெபியர்களின் இயக்கத்தில் டிரிபியூன்கள் இயற்கையாகவே தலைமையேற்றுச் செயற்பட்டனர். இவர்களு டைய அதிகார வளர்ச்சி பிளெபியர்களின் அரசியல் உரிமை களின் வளர்ச்சியின் விளைவாகும். இருந்தபோதிலும், இவருடைய உயிருக்கு அளிக்கப்பட்ட பாதுகாப்பின்றியும் உடனடியாகத் தண்டிக்கும் அதிகாரம் இன்றியும் இருந்திருந்தால் இவர் புதிய அதிகாரங்களைக் கோரிப் பெறவோ, அன்றைய நிலையை மாற்றி யிருக்கவோ இயலாது. இவ்வதிகாரங்களோடு இருந்த இவர் வெல்ல முடியாதவராகத் தோன்றினார். உதவியளிப்பதை எந்த அரசாங்க முறையும் நிரந்தரமாக எதிர்க்கமுடியாது. மேலும், டிரிபியூனின் இரண்டு சிறப்புரிமைகளால் இது பாதுகாக்கப் பட்டது. டிரிபியூனின் அதிகார வளர்ச்சியை மரபுகளிலிருந்து அறிவது கடினமாகும். ஆனால், இதன் கோரிக்கையை ஒருவாறு ஊகித்து அறிந்துகொள்ளலாம்.

குடியரசின் பிற்காலத்தில் உதவியளிக்கும் அதிகாரம்[1] தலை யிடும் அதிகாரமாக[2] நீட்டிக்கப்பட்டது. வல்லந்தப்படுத்தும் சட்டத்தோடு குற்றத்தண்டனை வழக்கு விசாரணை அதிகாரமும் சேர்ந்துகொண்டது. பிளெபியர்களைக் கூட்டும் அதிகாரத்தோடு பெட்ரிசியர்களைக் கூட்டும் அதிகாரமும் சேர்ந்தது. பிற்காலத்

[1] ius au xilii.
[2] intercessio.

தில் இவர் சில பொதுவான ஆட்சியதிகாரங்களையும் பெற்றிருந்தார்.

ஆட்சியின் அலுவல் தொடர்புடைய எந்த நடவடிக்கையையும் குறுக்கிட்டுக் கெடுக்கும் உரிமையைத் தலையிடும் அதிகாரம் பெற்றிருந்தது. இத் தலையீட்டதிகாரம் ஒரு நிருவாகிக்கெதிராக இயக்கப்பட்டது. தடையாணையைப்போல் தலைவர், ஆளுநர் அல்லது நகர முதல்வர் ஆகியோரின் நடவடிக்கைக்கெதிராகப் பயன்படுத்தப்படவில்லை. செனெட்சபையின் நடைமுறைகளில் எந்நிலையிலும் டிரிபியூன் தம்முடைய தலையீட்டதிகாரத்தைப் பயன்படுத்தலாம். எடுத்துக்காட்டாக, செனெட்சபையின் கருத்தாய்விற்கு ஒரு பொருள் வைக்கப்படும்பொழுதும், செனெட்டர்கள் கருத்துத் தெரிவிக்கும்பொழுதும் அல்லது வாக்கெடுப்பு நடைபெறும்பொழுதும் தடையாணை பயன்படுத்தப்படலாம். இதேபோல், கொமிசியா சட்ட ஆக்கத்திற்கு அல்லது நீதி வழங்குவதற்குக் கூடும்பொழுது, மக்களின் முடிவு இறுதியாக அறிவிக்கப்படும் வரையில், எந்த நிலையிலும் தலையீட்டதிகாரம் பயன்படுத்தப்படலாம். ஒரு தனிப்பட்ட மனிதனுக்கு நிருவாகி ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்தபொழுதும் தனிப்பட்ட ஒருவர் டிரிபியூனின் உதவியை நாடியபொழுதும் உதவி அளித்தலோடு இச் சிறப்பு அதிகாரம் எத்தொடர்பும் கொண்டிருக்கவில்லையென்பதை முதல் நோக்கில் அறிந்து கொள்ளலாம். சிறிய அதிகாரத்திலிருந்து பெரிய அதிகாரம் வளர்ந்திருக்கலாம். ஒரு நடவடிக்கை செயற்படும்முன் பெரும் எண்ணிக்கையிலான குடிமக்களைப் பாதிக்கும் ஒரு குறிப்பிட்ட முறையைப் பின்பற்றி நிருவாகிக்கு செனெட்சபை கட்டளையிடும்பொழுது, யாருக்கு எதிராக நிருவாகி நடவடிக்கை எடுத்தாரோ அவர்களைப் பாதுகாக்கும் விருப்பத்தை டிரிபியூன் அறிவிக்கலாம். இதனால், குறிப்பிட்ட அந்த நடவடிக்கை பயனுறுதியற்றுப் போகும். எனவே, நடைமுறை அறிவாற்றல் மிக்க உரோமானியர் நடவடிக்கையெடுக்குமுன் டிரிபியூனைக் கலந்தாராய்வர். செல்லுபடியாகாத சட்டத்தை நிறைவேற்றுவதைவிட அது சபையில் ஆராயப்படும்பொழுது இவருடைய ஒப்புதலைப் பெற்றுச் சட்டத்தை இயற்றிச் செயற்படுத்தினர். மேலும் சட்டம் இயற்றப்பெறும்பொழுது எதிர்ப்பதென்பது இயற்றப்பெற்ற சட்டத்தை எதிர்ப்பதைவிடச் சிறந்ததாகும். இரண்டாவது தடவையாக ஒரு மசோதா செனெட்சபை அல்லது கொமிசியாமுன் கொணர்வதை டிரிபியூனின் தலையீட்டதிகாரம் தடுக்கவில்லை. இருந்தபோதிலும், டிரிபியூன் இடைமறித்து எதிர்ப்புத் தெரிவிக்கவில்லையெனில் மசோதா சட்டமாகிவிடும். ஒரு நடவடிக்கையைத் திட்டவட்ட

மாகத் தடைசெய்வதற்குப் பதிலாக அதை ஆராய ஓர் இரவு அவகாசம் கேட்கலாம். பின், மாற்றியமைக்கப்பட்ட உருவில் டிரிபியூன் தடையாணையைச் செயற்படுத்தலாம். ஏதாவதொரு டிரிபியூன் குறிப்பிட்டதொரு நடவடிக்கைமீது தடையாணை விதித்தால் அது பொதுமக்களுக்கெதிரானதெனும் ஓர் அறிக்கையை, செனெட்சபை சில வேளைகளில் குறிப்பிட்ட நடவடிக்கையோடு இணைத்து டிரிபியூன் தடையாணை விதித்தலைத் தடுக்கும். ஆனால், இந்த ஏற்பாடு எப்பயனையும் அளிக்கவில்லை. கான்சல் பொறுப்பில் இருந்த மாநிலம்பற்றி நடவடிக்கைக்கெதிராக டிரிபியூனின் தடையாணை ஏற்கப்படவில்லை; நிருவாகியின் தேர்தலையும் டிரிபியூன் தடுக்கமுடியாது. டிரிபியூனின் தடையாணைமீது என்ன கட்டுப்பாடுகளைச் சல்லா விதித்தார் என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால், இவை நிரந்தர இயல்புடையனவாகத் தோன்றவில்லை.

கி. மு. 494ஆம் ஆண்டின் சட்டப்படி, தடைக்குள்ளான நடவடிக்கையை விடாது வற்புறுத்தும் நிருவாகியையும் அல்லது இவருடைய உயிருக்கு ஊறுவிளைத்தவரையும் தண்டிக்கும் அதிகாரத்தை டிரிபியூன் பெற்றார். இவர் பிளெபியர்களின் உரிமையின் பிரதிநிதியாக இருந்ததால் இந்த அதிகாரம் இவருக்களிக்கப்பெற்றது. ஒரு குறிப்பிட்ட நிகழ்வில், நிருவாகி வரம்புமீறிய பொழுது இவரால் இந்த அதிகாரம் செயற்படுத்தப்பெற்றது. ஆனால், ஒரு நிருவாகியின் கொள்கை முழுதுமே பிளெபியர்களின் நலனுக்கு எதிராக இருக்கலாம். எனவே, அத்தகைய நிருவாகியை அவருடைய நடத்தைக்குப் பொறுப்புடையராக்குவதற்கு டிரிபியூனின் இத்தகைய அதிகார வளர்ச்சி இயல்பாக இருந்தது. இத்தகைய நிகழ்வுகளில் உடனடியாக விதிக்கப்பட்ட தண்டனை பொருத்தமாக இருக்காது. மேலும் கண்டிக்கத் தக்க செயல்கள் நகருக்கு வெளியேயும் சிறிது நேரத்திற்கு முன்னும் செய்யப்பட்டிருக்கலாம். ஆகையால், குற்றமிழைத்த நிருவாகிகளை பிளெபியரவையில் குற்றம் சாட்ட டிரிபியூனை அனுமதிக்கும் ஒரு வழக்கம் வளர்ந்தது. பிளெபியரின் சிறந்த நலன்களுக்குக் கேடு விளைக்கக்கூடிய நடத்தை அரசுக்குக் கேடு உண்டுபண்ணக்கூடிய நடத்தையெனக் கருதப்பட்டது. ஏனெனில், சமூகத்தில் பிற்காலத்தில் பெட்ரிசியர்கள் மிகக் குறைவாகவே இருந்தனர். அதாவது சமூகம் நடைமுறையில் பிளெபிய சமூகமாகவே இருந்தது. அரசுக்கு எதிரான குற்றங்கள் பொது நேர்மையைப் பாதிக்காதவாறு பிளெபியர் அவைமுன் விசாரிக்கப்படலாம். இம் முறையில், டிரிபியூன்கள் குற்றம் சாட்டுபவர்களாகவும், கோழைத்தனம், பொதுநிதியைக்கையாடல், சட்டத்திற்கு முரண

கப் பதவியிலிருத்தல் போன்றவைகளுக்காகக் குற்றம் சாட்டப் பெற்ற நிருவாகிகளை விசாரிக்கும் நீதிமன்றமாகப் பிளெபியர் களின் அவை வளர்ச்சியடைந்தது. நிலையான கடுஞ்சோதனை நீதி மன்றம் நிறுவப்பட்டபின் இந்த நீதிமன்ற நடைமுறை, படிப் படியாகக் கைவிடப்பட்டது.

கி. மு. 449 வரை, டிரிபியூன்களையும் ஈடில்களையும் தேர்ந் தெடுப்பதற்காகப் பிளெபியர்களின் அவை கூடியது. இந்த அவை தீர்மானங்களையும் ஏற்கக் கூடியிருக்கலாம். சில நிபந்தனை களுக்குட்பட்டுச் சமுதாயம் முழுவதற்கும் சட்டமியற்றும் அதி காரத்தை இவ்வவைக்கு வாலிரியோ ஹோரேசியன் சட்டம் அளித்தது. கி. மு. 339, 287ஆம் ஆண்டுச் சட்டங்கள் இந் நிபந்தனைகளையும் அகற்றின. இம் மாற்றங்களால் டிரிபியூனின் நிலையில் ஏற்பட்ட விளைவுகளை ஏற்கனவே நாம் பார்த்தோம். பிளெபியர்கள் இயற்றிய சட்டம் செல்லுபடியாகச் செய்வதற்கு செனெட்சபையின் பெட்ரிசிய உறுப்பினர்களின் முன்னிசைவைப் பெறவேண்டுமெனச் செய்து டிரிபியூனின் சட்ட ஆக்கத்திறனைச் சல்லா குறைத்தார். ஆனால் இத் தடையும் கி. மு. 70-ல் அகற்றப்பட்டது.[1]

டிரிபியூனேட்டின் தொடக்க காலத்தில் டிரிபியூன்கள் செனெட் சபையின் நுழைவாயிலுக்கு வெளியே அமர்ந்து அச் சபையின் மசோதாக்கள் நிறைவேறுவதற்காகக் காத்திருந்தார் கள்.[2] செனெட் சபையின் ஆய்விலிருந்த மசோதாக்களுக்கு பிளெ பியர்களின் கருத்தைத் தெரிந்துகொள்வது நலமெனக் கருதப்பட் டது. இந் நோக்கத்திற்காக இவர்களுக்குச் செனெட் சபையில் இடமளிக்கப்பட்டதோடு இவர்களுடைய எதிர்ப்பையும் தெரி விக்க அனுமதிக்கப் பெற்றார்கள். சட்ட நிறைவேற்றத்திற்கு இம் மாற்றம் தேவைப்பட்டிருக்காது. செனெட் சபையைக் கூட்டுவதற் கும் இதன் ஆய்விற்குச் சில காரியங்களைச்செய்யவும் டிரிபியூன்கள் உரிமை பெற்றனர். டிரிபியூனுக்கும் செனெட்சபைக்கும் இடையே இருந்த நேச உணர்வுக்கு இதுவும் ஓர் அடையாளமாகும்.[3] செனெட் சபையின் கட்டுப்பாட்டிலிருந்து பிளெபியரவையை ஹோர் சென்சியன் சட்டம் அகற்றியது. ஆனால் மசோதாக்களை டிரிபியூன் நேரே செனெட் சபைக்குக் கொண்டுவர அனுமதிப்ப தால், பிளெபியரவையின் நடவடிக்கைக்குமுன் மசோதாக்களை

[1] Liv. Ep. 97.
[2] Val. Max. ii. 2, 7.
[3] Cic. de Legg. iii. 10.

டிரிபியூன் செனெட் சபையின் கருத்தாய்விற்குக் கொண்டு வருவார் என செனெட் சபை நம்பியது.[1]

சில சமயங்களில் கோயில் நிர்வாகங்களை ஏற்றுக்கொள்ளுதல், நாணய அச்சிடல் மேற்பார்வை போன்றவை டிரிபியூன் கடமைப் பொறுப்புகளாக இருந்தன. ஆனால், குடியரசில் இத்தகைய கடமைகள் பெரும் சிறப்படையவில்லை.

டிரிபியூன் ஓர் அரசியல் தலைவராகச் செயற்பெற்று வந்ததை இங்கும் அங்குமாக இந் நூலில் குறிப்பிட்டுள்ளோம். கி. மு. 494-ல் பிளெபியருக்கும் பெட்ரிசியர்களுக்கும் இடையிலான பிரச்சினையில் பிளெபியருக்கு முழு அரசியல் உரிமைகளை அளித்து முடிவு கண்டிருக்கலாம். ஆனால், பெட்ரிசியர்கள் இவைகளைக் கொடுக்க விரும்பவில்லை. அதே சமயத்தில், பிளெபியர்களும் இவர்களைக் கட்டாயப்படுத்தி உரிமைகளைப் பெறும் வலிமை பெற்றிருக்கவில்லை. கி. மு. 494-க்கும் 337-க்கும் இடைப்பட்ட காலத்தில் பிளெபியர்கள் தம் குறிக்கோளை எட்டினர். இருப்பினும், டிரிபியூனின் தலைமையிலும் டிரிபியூனேட்டின் முதல் 150 ஆண்டுக் காலத்திலும் இதன் விளைவுகள்பற்றிய சிறப்பியல்புகளைக் காணமுடிகிறது. கி. மு. 337-க்குப் பிறகு, பிளெபியர் எல்லா நிருவாகப் பதவிகளையும் பெறுவதற்கான தகுதியைப் பெற்றபொழுது டிரிபியூன், நடைமுறையில் அவ் வகுப்பின் பிரதிநிதியாக இருக்கவில்லை, ஆனால், அரசு, சமுதாயம் ஆகியவைகளுக்கெதிராகத் தனிப்பட்டவர்களின் உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் இவர் காவலராக இருந்தார்.

**பிளெபிய, குயுரூல், ஈடில்கள் (The Aedile, Plebeian and Curule)**

நிருவாகிகள் என்ற தலைப்பில் இவ்விரு வகை அலுவலர்களைப் பற்றிப் பார்த்தோம். பிளெபிய ஈடில்கள் தனி முறையிலான நிருவாகிகளாகக் கருதப்படவில்லையெனினும், இவர்களுடைய கடமைகள் நிருவாகிகளாக இருந்த குயுரூல் அலுவலர்களின் கடமைகளைப் போலவே இருந்தன. வரலாற்றினடிப்படையில் இவ்விரு குழுக்களும் நெருங்கித் தொடர்புகொண்டிருந்தன.

குடியரசின் தோற்றத்திலிருந்தே பிளெபிய ஈடில் பதவிகளும் இருந்து வந்துள்ளன. இப் பதவிக்கான இரண்டு பேர்களை கொன்சிலியம் பிளெபிஸ் தேர்ந்தெடுத்தது. பிளெபியர்கள் மட்டுமே இப் பதவிக்குத் தகுதிபெற்றனர். டிரிபியூன்களைப்போல் இவர்களின் உடலும் உயிரும் புனிதமாக்க கருதப்பட்டதோடு

[1] Herz. I. 284.

இவர்கள் பாதுகாப்பிற்குரியவர்களாக இருந்தனர். டிரிபியூன் களின் கடமைகளை நிறைவேற்றுவதில் அவர்களுக்கு இவர்கள் உதவியாக இருந்தனர். சிரிஸ் கோயிலில் செனெட் சபையின் தீர்மானங்களையும் கட்டளைகளையும் இவர்கள் வைத்தும் பேணி னர்.[1] தொடக்க காலத்திலிருந்து பொதுக் கட்டடப் பணிகளை இவர்கள் மேற்பார்வையிட்டனர். ஓரளவு குற்ற வழக்கு விசாரணை அதிகாரமும் பெற்றிருந்தனர்.[2]

உரோமானியர்களின் நடைமுறை இயல்பிற்கும், ஏற்கனவே உள்ள நிறுவனங்களைப் புதிய நிலைகளுக்கேற்பப் பயன்படுத்திக் கொள்ளும் பண்பிற்கும் இப் பதவி ஒரு சிறந்த எடுத்துக்காட்டா கும். மேலும், உரோமானிய சமுதாயத்தில் இருந்த தனிப்பட்ட இனங்கள் ஒரு சமூகமாக இணைந்ததற்கு ஈடில் பதவியின் வரலாறு திட்டவட்டமான நடைமுறையாக இருந்தது. நகரம் வளர்ச்சியடைந்ததால் மிகத் திறமையான காவற் பணிகளுக்குத் தேவை ஏற்பட்டது. டிரிபியூன்களுக்கு உதவ இவர்கள் ஆற்றிய பணி, இயல்பாகவே இவர்களை இப் பணிக்கு அமர்த்தத் தூண்டி யது. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே ஆபத்துக் காலத்தில் நகரைப் பாதுகாக்கவும் தானியங்கள் குறைந்த விலை யில் விற்கப்படுவதையும் மேற்பார்வையிட ஈடில்கள் அழைக்கப் பட்டனர். இவர்களுடைய இவ் வகையான பணிகள் பெட்ரிசியர் களையும் பிளெபியர்களையும் பாதித்தன.

அதே சமயத்தில், இவர்கள் டிரிபியூனின் பதவியோடு கொண் டிருந்த தொடர்பு சிறிதுசிறிதாகக் குறைந்தது. இவர்களுக்குப் பதிலாக டிரிபியூனுக்கு உதவ ஏவலர்கள் அமர்த்தப்பட்டனர். மெய்யாக, நிருவாகிகளுக்கான பணிகளை இவர்கள் விரைந்தேற்று வந்தனர். இவர்களுடைய அதிகாரம் பெட்ரிசியர்கள் மீதும் செயற்படுத்தப்பட்ட போதிலும் இவர்களுடைய தேர்தலில் பெட்ரிசியர்கள் பங்குபெறவில்லை. இந் நிலை காரணமாக கி.மு. 366-ல், பிளெபிய ஈடில் பதவிகளை ஈடுசெய்ய பெட்ரிசியர்கள் குயுருல், ஈடில்களை நிறுவினர். இப் பதவிக்கு பெட்ரிசியர்கள் தகுதிபெற்றனர். இப் பதவியில் இம் மாற்றங்கள், பிளெபியர் களை மற்ற மக்களோடு கலக்கச் செய்யவும் இவர்களுடைய பிரதி நிதிகளின் தனித் தன்மைகளை நீக்கவும், புதிய கடமைகளை ஏற்றுச் செயற்படுத்தும் அலுவலர்களின் தேவையை வலியுறுத்த வும் உதவின.

1 Dionys. vi. 90, 95, Liv. iii. 55.
2 Dionys. vi, 90.

குயுருல் ஈடில்களும் பிளெபிய ஈடில்களும் பதவியின் இயல்பாலும் நிலையாலும் வேறுபட்டனர். குயுரூல் ஈடில்களை கொமிசியா டிரிபியூட்டா ஒரு நிருவாகியின் தலைமையில் கூடித் தேர்ந்தெடுத்தது.[1] ஒவினியன் சட்டம் நிறைவேறிய பின் இவர்கள் செனெட் சபையில் இடம் பெற்றனர். இவர்கள் கருஞ்சிவப்பு அங்கி அணிந்து குயுரூல் நாற்காலியில் அமர்ந்து செயற்பட்டனர். இந்த இருக்கையின் பெயரிலேயே இவர்களுடைய பதவிப் பெயரும் உருவாகியது. மாறாக, பிளெபிய ஈடில்கள் பிளெபியரவையால் ஒரு பிளெபிய அலுவலரின் தலைமையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இப் பதவிகள் தனிப்பட்ட சிறப்பியல்புகளெதுவுமின்றிக் காணப்பட்டன. குயுரூல் ஈடில்களுக்கான பெட்ரிசியர்களின் தனியுரிமை இப் பதவி ஏற்பட்ட சில ஆண்டுகளுக்குப் பின் கைவிடப்பட்டது. இக் குழுவின் இரண்டு இடங்களுக்கு ஒன்று விட்டு ஓர் ஆண்டிற்குப் பிளெபியர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிளெபிய ஈடில் பதவிகளின் புனித பாதுகாப்புரிமை கைவிடப்பட்டதும் இரு குழுக்களும் நெருங்கித் தொடர்புகொண்டியங்கின. பிளெபிய ஈடில்களும் காலப்போக்கில் செனட் சபையில் இடம் பெற்றனர்.

இவ்விருவகை ஈடில்களும் ஒரே மாதிரியான அதிகாரங்களைப் பெற்றிருந்தனர்; பொது இடங்களைக் கண்காணித்தனர்; தானியம் வழங்கல் பொறுப்பேற்றனர்; வணிக நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டனர்; பொது விளையாட்டுகளை மேற்பார்வையிட்டனர்; இத்துடன் சில அரசியலதிகாரங்களையும் பெற்றிருந்தனர்.

முதலில் டிரிபியூனின் உதவியாளராக இருந்து செயலாற்றிய காவற் பணிகளிலிருந்து இப்போது இடமேற்பார்வை அதிகாரம் வளர்ந்தது. குறிப்பாக இவர்கள் வீதிகள், குளியலறைகள், கோயில்கள், பிற பொதுப்பணிகள் ஆகியவைகளைக் கண்காணித்தனர். பொது இடங்களின் அமைதியைப் பேணுதல் இவர்களின் கடமையாக இருந்தது. வீதிகளில் தடைகள், சுத்தம் ஆகியவை பற்றிய விதிகள் செயற்படு முறையை மேற்பார்வையிட்டனர். பொதுக் கட்டடப் பணிகள் சென்சார் அல்லது கான்சல் பொறுப்பில் இருந்தன. கட்டிமுடிக்கப்பட்டவுடன் அவைகளைப் பேணும் பொறுப்பை ஈடில்கள் ஏற்றுச் செயற்படுத்தினர். பொது இட அமைதி பேணும் பொறுப்பை இவர்கள் ஏற்றுக்கொண்டிருந்ததால் சமயச் சார்புடைய அல்லது சமயச் சார்பில்லாப் பொதுக்

கூட்டங்களிலும், ஊர்வலங்களிலும், விளையாட்டுகளிலும் அமைதி காக்கும் பொறுப்பு இவர்களுடையதாக இருந்தது.

நகருக்கு உணவு தானியங்களை அளிப்பது இவர்களுடைய முக்கியமான கடமைகளில் ஒன்றாகும். கிழக்கிலும் தெற்கிலும் வளமுள்ள மாநிலங்கள் சேர்க்கப்பட்டபின், இத்தாலியில் விவசாயம் வீழ்ச்சியுற்றபொழுதும் இப் பணி பெரும் சிறப்புப் பெற்றது. நகரம் வளர்ந்தபொழுது இதன் சிறப்பு படிப்படியாக அதிகரித்தது. குறைந்த விலையில் உணவுப் பொருள்கள் கிடைக்கச் செய்தல் இவர்களுடைய முதன்மையான நோக்கமாக இருந்தது. தானியங்களின் விலையை நிருணயித்த சட்டங்களை ஈடில்கள் செயற்படுத்தினர். குறிப்பாக, உணவுப் பொருள்களின் விற்பனையை இவர்கள் கண்காணித்தனர்; எடைகளையும் அளவுகளையும் சோதனை செய்தனர். இப் பணிகளைச் செய்யும்பொழுது இவர்கள் நீதிவழங்கும் அதிகாரங்களையும் பெற்றிருந்தனர். இவர்களுடைய ஆட்சி மேற்பார்வைக்குட்பட்டவைகளையொட்டி இவர்கள் ஆணைகள் பிறப்பித்தனர். இம் முறையில் இவர்கள் ஒரு வணிகச் சட்டத் தொகுப்பை உருவாக்கினர். வெளியார்பற்றிய பிரீட்டரின் செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டு இவர்கள் வணிகச் சட்டங்களை ஆராய்ந்து முடிவு செய்தார்கள்.

விளையாட்டு மேற்பார்வைப் பொறுப்பு முதலிலிருந்தே பிளெபிய ஈடில்களிடம் இருந்தது. பொதுவான விழாக்களில் இவர்கள் நிருவாகிகளுக்கு உதவினர். ஒவ்வொரு செப்டம்பர் 4ஆம் நாள் கொண்டாடப்படும் விளையாட்டுகளையும், மருக்கக் காட்சிகளையும், ஏப்ரல் 4ஆம் நாள் நடைபெறும் ஊர்வலங்களையும் விளையாட்டுகளையும் குயுருல் ஈடில்கள் மேற்பார்வையிட்டனர். இக் கொண்டாட்டங்கள் அனைத்தும் இவர்களின் பொறுப்பாக இருந்தன[1]. பொதுவான விளையாட்டுகளை பிளெபிய ஈடில்கள் நடத்தினர்[2].

குற்றம் சாட்டுநராகச் செயற்படும் அதிகாரமும், தகாவட்டி விதித்தவர்களையும் சில குறிப்பிட்ட குற்றங்களைச் செய்தவர்களையும் விசாரணைக்காக கொமிசியா டிரிபியூட்டாமுன் கொண்டுவரும் அதிகாரமும் பெரும் சிறப்புப் பெறவில்லை. மேலும், பெருமளவிற்கு இந்த அதிகாரங்களும் குற்ற வழக்கு நீதிமன்றங்கள் நிறுவப்பட்டபின் சிறப்பிழந்துவிட்டன.

ஈடில்களின் கடமைகள் நகரத் தொடர்புடையனவாக இருந்தன. மேலும், டிரிபியூன்களும் ஈடில்களும் கொண்டிருந்த

[1] Dio. Cass. xiii. 48.
[2] Liv. xxiii. 30.

பழமையான தொடர்பு ஈடில்கள் நகருக்குள் செயற்படுவதை இயல்பாகவே குறைந்துவிட்டது. இந்தத் தடைபாடுகள் குயுருல் ஈடில்களையும் பாதித்தன. இந்த இரு குழுவினருக்கிடையிலான கடமைப் பகிர்வு குறிப்பாக, காவலைப் பொறுத்தவரையில், தல இயல்பினதாகவே இருந்தது.[1] நகரம் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பிரிவும் ஓர் ஈடிலின் கட்டுப் பாட்டின் கீழிருந்தது. மற்றவைகளைப் பொறுத்தவரையில் கடமைகளின் ஒதுக்கீடு வசதி நிருணயிக்கப்பட்டன. ஒரே குழு வாக இவர்கள் செயற்படும்போது இந் நான்கு ஈடில்களும் தனித் தனியே மற்ற ஈடில்களின் நடவடிக்கை மீது தடையாணையைப் பயன்படுத்தலாம். ஆனால் ஓர் உறுப்பினர் இன்னொரு குழு உறுப்பினரின் நடவடிக்கையின்மீது தடையாணையைச் செயற் படுத்த முடியாது. ஈடில்கள் விதித்த தண்டத்தொகையை அவர் களே வைத்துக்கொள்ள வழக்கம் ஒன்று அனுமதித்ததால் இவர் கள் குற்றஞ்சாட்டுதலில் இறங்கிப் பெரும் பொருள் திரட்டினர். இவ்வாறு திரட்டப்பட்டப் பொருளைப் பொதுக்காரியங்களுக் காகச் செலவிட்டனர். இதை நகரக் கட்டடங்களுக்கும் விளையாட்டுகளுக்கும் ஈடில்கள் செலவு செய்தனர்.

### குவெஸ்டர்கள் (Quaestores)

முடியாட்சிக் காலத்தில் குற்ற ஆய்வுநர்கள் இருந்ததாக மரபுகள் கூறுகின்றன. கான்சல்களுக்குக் குற்ற விசாரணையிலும் நிதித் துறையிலும் குவெஸ்டர்கள் உதவியாளர்களாக இருந் தனர். குடியரசுக் காலத்தில் இப் பதவி தொடர்ந்திருந்து வந்தது. ஆயினும் இப் பதவியின் இயல்பில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. அரசியல் சார்பில்லாத குற்ற வழக்குகளில் குவெஸ் டர் அரசின் ஒரே பிரதிநிதியாக இருந்தார். மேலும் அரசின் நிதிகளும் இவருடைய பாதுகாப்பில் இருந்தன. கோனாட்சிக் காலத்தில் இவரை அரசரே நியமித்தார். குடியாட்சிக் காலத்தில் அரசரின் இந்த அதிகாரத்தை கான்சல் மரபுரிமையாகப் பெற்று கி. மு. 447 வரையில் செயற்படுத்தினர். இப் பதவி தேர்வுக் குரியதானபோது பதவிக்குரியவரை கொமிசியா டிரிபியூட்டா தேர்ந்தெடுத்தது. பிளெபியரும் இப் பதவிக்குரியவர்களாக்கப் பெற்றபொழுது (421-ல்) குவெஸ்டர்களின் எண்ணிக்கை இரண்டி லிருந்து நான்காக உயர்த்தப்பட்டது. இவர்களில் ஒருவரைக் களத்தில் செயலாற்றிய கான்சலுக்கு ஒதுக்கினர். கி. மு. 267-ல் இவர்களின் எண்ணிக்கை எட்டாகவும், சல்லாவின் ஆட்சிக்காலத் தில் இருபதாகவும், பின் கி. மு. 45-ல் நாற்பதாகவும் உயர்த்தப்

[1] Munic II 25.

பட்டது.[1] இப் பதவியின் இயல்பில் எந்த மாற்றத்தையும் ஏற் படுத்திவிடவில்லை. மாநிலங்களின் ஆட்சியைக் கவனிக்கவும் இத்தாலிய நிதியாட்சியை மேற்கொள்ளவும் குவெஸ்டர்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது.

குவெஸ்டரின் பதவி ஒரு சுயேச்சையான நிருவாகப் பதவி யானபின் இதன் பதவிக்காலம் ஓராண்டாகத் தொடர்ந்திருந்து வந்தது. பின்னர் கான்சுலர் குவெஸ்டர் மேலதிகாரியின் ஒரு பாகமாகக் கருதப்பட்டபொழுது இரண்டாண்டுப் பதவிக்காலம் நிலைப்பட்டது. இப் பதவிக் காலத்தில் குவெஸ்டர் ஓராண்டு நகரிலும், ஓராண்டு மாநிலத்திலும் செலவிட்டார். குவெஸ்டரின் படிநிலை மிகக் கீழானதாகும். குயுருல் நிருவாகிகள் பெற்றிருந்த எந்தப் பதவி விருதுச் சின்னங்களையும் இவர்கள் பெற்றிருக்க வில்லை.

குவெஸ்டர்கள் பதவியேற்குமுன் செனெட் சபையின் கட்டளை யினால் மாநில குவெஸ்டர்கள் முடிவு செய்யப்பட்டனர். தனிப் பட்ட குவெஸ்டர்கள் பின் சீட்டுக் குலுக்கல் முறையினால் பல்வேறு துறைகளுக்கு ஒதுக்கப்பட்டனர். இருப்பினும் படைத் தலைவர்கள் தம் சொந்த உதவியாளர்களைத் தெரிவுசெய்த நிகழ்வு களும் இருந்தன.[2]

இத் துறைகள் நகர, இராணுவ, இத்தாலியத் துறை களெனப் பிரிக்கப்பட்டிருந்தன.

இரண்டு நகர குவெஸ்டர்களும் கான்சல்களுக்குப் பொது வான பணியில் உதவினர். இரண்டாம் நூற்றாண்டின் இடையில் இவர்களுடைய குற்றத்தண்டனை அதிகாரத்தில் இழப்பு ஏற்பட்ட போது இவர்களுடைய அதிகார இயல்புகளில் ஒன்று குறைக்கப் பட்டது. முதல் குற்ற வழக்கு மன்றம் நிறுவப்பட்ட பின் கொலை வழக்குகளில் இவர்கள் பேராளர்களாக இருக்கவில்லை. இதன் பிறகு இவர்களுடைய பணிகள் நிதித்துறை சார்புடையனவாக இருந்தன. அக்கசாலையோடு இவர்கள் கொண்டிருந்த பழமை யான தொடர்பினால் கருவூலத்தின் சாவிகள் இவர்கள் பாதுகாப் பில் இருந்தன. அரசின் ஆவணமும் இவர்களுடைய பாதுகாப் பில் இருந்தது. குவெஸ்டரின் நிதிக்குரிய கடமைகளைப்பற்றி செய்திகள் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அரசிற்குச் சேர வேண்டிய எல்லாப் பணத்தையும் இவர் ஏற்றுக்கொண்டார்;

[1] Tac. Ann xi, 22
[2] Liv. xxx. 33; Cic ad aH. vi, 6, 4.

அரசின் கருவூல நிலைபற்றிய விவரங்களை வைத்திருந்தார். தனிச் சட்டத்தால் அல்லது குறிப்பிட்ட நிருவாகியால் கொடுக்கப்பட்டிருந்த அதிகாரத்தையொட்டிப் பொது நிதியிலிருந்து இவர் நிதி வழங்கினர். ஒப்பந்த நிறைவேற்றம் போன்றவைகளில் இவர் அரசின் பிரதிநிதியாகச் செயற்பட்டார். பொதுப் பதிவுகளின் பாதுகாப்பும் இவருடைய பொறுப்பாயிற்று. குவெஸ்டர்கள் எல்லா ஆவணங்களையும் பாதுகாத்தனர். ஆனல், குறிப்பிட்ட சில ஆவணங்களை மட்டுமே ஈடில்கள் பாதுகாத்தனர். எனவே இதைப் பொறுத்தவரையில் குவெஸ்டரின் கடமைகளும் பிளெபிய ஈடில்களின் கடமைகளும் ஒரே மாதிரியாகவே இருந்தன. குவெஸ்டர்களின் நிதிச் செயலாட்சியில் இரண்டு குறைபாடுகளைக் காணலாம். பணம் வாங்கும், கொடுக்கும் பேராட்களாக மட்டுமே இவர்கள் இருந்தார்கள். நிதி பற்றியவைகளில் இவர்களுக்குத் தொடக்க உரிமை கிடையாது. சிறிய காரியங்களில் மட்டுமே இவர்கள் விருப்பம்போல் நடக்கலாம். மேலும் இவர்கள் ஓராண்டுக் காலம் மட்டுமே பதவியிலிருந்தனர். இக் குறுகிய காலத்தில் துறைபற்றிய எல்லாக் காரியங்களையும் இவர்கள் அறிந்துகொள்ள முடியாமல் போய்விட்டது. பயிற்சிபெற்ற இவர்களுடைய உதவியாளர்களின் நற்பண்பை நம்பியே இவர்கள் செயற்பட்டனர். இவர்களுக்குக்கீழ் பணியாற்றிய எழுத்தர்கள் நிரந்தரமாகப் பணியில் இருந்தனர். குவெஸ்டர்களின் பதிவுகளும் கணக்குகளும் சனிக் கடவுளரின் கோயிலில் வைக்கப்பட்டிருந்தன.

படைத்தலைமை தாங்கிப் போரில் ஈடுபட்டிருந்த கான்சல் ஒவ்வொருவருக்கும் நிதி அலுவலரை அளிக்கும் பொருட்டு கி. மு. 421-ல் குவெஸ்டர்களின் எண்ணிக்கை இரண்டிலிருந்து நான்காக உயர்த்தப்பெற்றது. போருக்குத் தேவையான பணம் இவர்களிடம் கொடுக்கப்பட்டது. இவர்கள் படைவீரர்களுக்கு ஊதியம் அளித்தனர்; போரில் கைப்பற்றிய பொருள்களை இவர்கள் பொறுப்பேற்றனர். நகர குவெஸ்டர் செயற்படுத்திய பணிகளைப் போலவே களத்தில் இவர்கள் பணிகளை நிறைவேற்றினர். இதே திட்டம் மாநிலங்களுக்கும் மேற்கொள்ளப்பட்டது. இராணுவ குவெஸ்டரைவிட மாநில குவெஸ்டர் மிக முக்கியமான நிலையைப் பெற்றிருந்தார். இவர் ஆளுநருக்கு அடுத்தபடி நிலையில் இருந்தார். ஆளுநர் மாநிலத்தில் இல்லையென்ருலும் இறந்துவிட்டாலும் குவெஸ்டர் அவருக்குப் பதிலாகப் பொறுப்பேற்றுச் செயலாற்றினர்.[1]

[1] Cic. ad Fam. ii. 15, 4.

நாம் முன் பார்த்ததுபோல் 267-ல் நான்கு புதிய குவெஸ்டர்கள் அமர்த்தப்பெற்றார்கள். இவர்களுக்கு இத்தாலியில் பணி ஒதுக்கப்பட்டது. ஆனால் இவர்களுடைய பணியின் தன்மை தெளிவாகக் குறிப்பிடப்படவில்லை. இத்தாலியின் கூட்டரசுகளின் நிதி நலனைப் பாதுகாத்தல் இவர்களுடைய முதன்மையான பணியாகத் தோன்றியது. இவர்களுடைய தலைமையகம் அரிமினம், ஒஸ்டியா, காலிஸ் (Cales) போன்ற இடங்களில் இருந்ததாகத் தெரிகிறது. நான்காவது இத்தாலிய குவெஸ்டர் எங்குத் தங்கிச் செயற்பட்டார் என்பது தெரியவில்லை. ஒஸ்டியாவில் இருந்த குவெஸ்டர் தானியம் வழங்கல் பொறுப்பேற்றிருந்தார்.[1] இத்தாலிய குவெஸ்டர்கள் நேச நாடுகளிலிருந்து படையினரையும் கப்பல்களையும் திரட்டி உதவினர். கப்பற்படை இத்தாலியின் கடற்கரைப் பாதுகாப்பிற்குதவியது.

### நிருவாகிகளின் ஆறு குழுக்கள் (College of Six Magistrates)

குவெஸ்டர் பதவியின்கீழ் இருந்த ஆறு குழுக்களும் சுயேச்சையானவைகளாக இருந்தபோதிலும் இவை ஒவ்வொன்றும் மற்றொன்றைச் சார்ந்தே இருந்தது. ஆயினும், இவை ஒரு பிரிவாக அமைந்து செயற்பட்டன. இவை இருபத்தாறு அலுவலர் குழுவெனப் பெயராகப் பெற்றன. இப் பதவிகளுக்கானவர்களில் பலர் அமர்த்தப்பெற்றார்கள். ஆனால் சிறிது காலத்திற்குப் பின் இவைகளுக்கானவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இப் பதவிக்குரியவர்களை கொமிசியா டிரிபியூட்டா தேர்ந்தெடுத்தது. இவர்களுக்குரிய தனிப்பட்ட கடமைகளைத் தவிர இக் குழுக்களுக்கு செனட் சபை சிறப்புக் கடமைகள் சிலவற்றை அவ்வப்போது அளித்தது. இந்த அலுவலர்களுக்கான பதவிச் சின்னங்கள் எதுவும் கிடையா. இவைகளில் சில சிறிய பதவிகள் ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றின. இவைகள் புனிதமானவைகளாகக் கருதப்பெற்றதோடு டிரிபியூன், ஈடில் பதவிகளோடும் தொடர்பு கொண்டிருந்தன. எனவே, பிளெபியர்களின் பாதுகாப்பிற்கு இப் பதவிகள் நிறுவப்பட்டிருக்கலாம். குடிமைபற்றிய பிரச்சினைகளை இவர்கள் ஆய்ந்து முடிவு செய்திருக்கலாம்; இப் பிரச்சினைகளும் பிளெபியர்களின் உயர் பிரச்சினைகளாக அக் காலத்தில் இருந்தன. சிசரோவின் காலத்தில் இப் பிரச்சினைகள் இவர்களின் பார்வைக்கு வந்தன.[2] முதலில் இப் பதவிகளுக்குப் பிளெபியர்களே தகுதிபெற்றிருந்தனர். இத் தகுதிபற்றிய தடைபாடுகள் பின்னர் கைவிடப்பட்டன. கம்பேனியாவின் நீதித்

[1] Cic. Pro. Sesh. 39.
[2] Cic. Pro. Coec 97 ; de domo 78.

துறையில் இவர்களுள் சிலர் பிரீட்டரின் பிரதிநிதிகளாகவும் இயங்கினர். இவர்கள் முதலில் பிரீட்டரால் நியமிக்கப்பட்டிருக் கலாம்.[1] கி. மு. 290-க்குப் பின் மூவரடங்கிய குற்றத்தண்டனைக் குழுவொன்று நிறுவப்பெற்றது. முதலில் இப் பதவிக்கானவர் களைப் பிரீட்டர் அமர்த்தினர். பின் இப் பதவியும் தேர்தலுக்குரிய தாயிற்று. இவர்கள் காவல் அலுவலராக இருந்தனர். ஈடில் களின் மேற்பார்வையில் இவர்கள், நகரில் அமைதி பேணு தல், குற்றவாளிகளைக் கைது செய்தல், விசாரித்து முடிவு செய்தல் போன்ற பணிகளை நிறைவேற்றினர். இவர்களின் எண்ணிக்கையை சீசர் நான்காக உயர்த்தினர். கருவூல நிருவாகி கள் பற்றிச் செய்திகள் இல்லை. இவர்கள் தனிப்பட்ட ஆணைக் குழுக்களாக இருந்து சில கடமைகளைச் செய்தனர். தெருக்களைப் பார்வையிடவும் அவைகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ளவும் சில நிருவாகிகளை சீசர் அமர்த்தினர்.

### வெற்றிடங்களை நிரப்புதற்கான நிருவாகிகள்

நிருவாகிகள் இல்லாமை அல்லது இறத்தல் காரணமாக ஏற் பட்ட வெற்றிடங்களை நிரப்புதற்கு உரோமானியர் சில ஏற்பாடு களைச் செய்திருந்தனர். கீழ்நிலை நிருவாகக் குழுவின் உரு வளவின் காரணமாக இவர்களைப் பொறுத்தவரை அரிய இடர்கள் எதுவும் தோன்றவில்லை. சென்சார் பதவியில் ஒருவரும் இல்லை யென்றால் அப் பதவிக்கான ஐந்தாண்டுக் காலத்தில் இறுதி 3½ ஆண்டு அப் பதவிப் பொறுப்புகளைக் கான்சலும் ஈடிலும் ஏற்று நிறைவேற்றினர். இருப்பினும், இறப்பு அல்லது இராமை யால் இரண்டு கான்சல்களும் நகரில் இல்லாதபொழுதும், மாநிலங்களிலிருந்து ஆளுநர்கள் திருப்பியழைக்கப்பட்டபொழு தும், களத்திற்கு அதிகமான படைத் தலைவர்களை அளிக்கவேண் டிய தேவையேற்பட்டபொழுதும் மெய்யாகவே இடர்கள் தோன்றின.

கான்சல் பதவியில் ஏற்படும் வெற்றிடத்தை நிரப்ப இடை யாட்சி நிறுவனமொன்றிற்கு வழி செய்யப்பட்டிருந்தது. இது முடியாட்சிக் காலத்திலிருந்தே வந்துள்ளது. இடைக்கால அரசரின் பணிகளை முன்னரே பார்த்துள்ளோம். குடியாட்சிக் காலத்தில், கான்சல்கள் எப்பொழுதும் படைத் தலைவர்களாக இருந்தபொழுது பல சமயங்களில் இரண்டு தலைமை நிருவாகி களும் இறந்த நிகழ்ச்சிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அப்படிப் பட்டி சமயங்களில் அரசர் இறந்துபோனால் என்ன நடைமுறை பின்பற்றப்பட்டதோ அதேமுறை இங்கும் மேற்கொள்ளப்பட்டது.

[1] Liv. ix. 20, 15.

ஆனல், குடியரசில், தலைமை நிருவாகிகளைக் கொமிசியா செஞ்சுரியேட்டா தேர்ந்தெடுத்தது. கொமிசியாவை இடைக்கால நிருவாகி (Interrex) கூட்டி அதற்கு அவரே தலைமைதாங்கித் தேர்தலை நடத்தினர். தேர்தல்களை நடத்துவதற்கே இடைக்கால நிருவாகி அமர்த்தப்பெற்றார். இவ்விடையாட்சிக் காலம் புதிய கான்சல்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் முடிவிற்கு வந்தது. அதே சமயத்தில், கான்சலுக்குரிய எல்லா அதிகாரங்களும் உரிமைகளும் இவருக்களிக்கப்பட்டது. ஆனல் இந்த இடைக்கால நிருவாகியின் பதவிக் காலம் ஐந்து நாள்களேயாகையால் பொதுப் பணிகளை அமைதியாகவும் தொடர்ச்சியாகவும் இவரால் நிறைவேற்ற இயலாது போயிற்று. கி. மு. 53–52-ல் கடைசி இடையாட்சிக் காலம் ஏற்பட்டது.[1]

இரண்டு கான்சல்களும் நகருக்கு வெளியே செல்ல நேரிட்ட பொழுது, கடைசியாக வெளியே செல்லும் கான்சல் தாம் நகரில் இல்லாதபொழுது தமது பிரதிநிதியாகச் செயலாற்ற நகர முதல்வரை அமர்த்தினர். இவர் கான்சலின் எல்லா அதிகாரங்களையும் பெற்றுச் செயலாற்றினர். இருந்தபோதிலும், 366-க்குப் பின், இரண்டு கான்சல்களும் நகரில் இல்லாதபொழுது நகர பிரீட்டர் தலைமை நிருவாகியானர். லாட்டின் நாடுகளின் திருவிழா நடக்கும்போது மட்டும் நகர முதல்வர் தலைமை நிருவாகியாக நகரில் செயற்பட்டார். இதேபோல் மாநிலத்திலிருந்து கான்சுலர் ஆளுநர் ஒருவர் வெளியே சென்றபொழுது, அதாவது இவருக்குப் பதிலாக ஒருவர் வருமுன், இவருடைய இறைமையை குவெஸ்டரிடம் ஒப்படைத்துச் சென்றார். இவர் மாநிலத்தை குவெஸ்டர் புரோபிரீட்டராக இருந்து ஆட்சி செய்தார்.

கீழ்நிலை நிருவாகியிடம் அல்லது தனிப்பட்ட ஒரு குடிமகனிடம் உயர் நிருவாகிகள் அதிகாரங்களையும் உரிமைகளையும் நெருக்கடி காலத்தில் விட்டுச்செல்வதும் உண்டு. இது நடைமுறையில் நிருவாகிகளின் குழுவை மெய்யாகவே பெரிதாக்கியது. இறைமையைப் பெற்றவர்கள் துணை நிருவாகிக்கான பட்டங்களைப் பெறுதல் வழக்கம். கி.மு. 211-ல் ஸ்பெயினில் யாரையாவது ஒருவரைப் படைத்தலைவராக அமர்த்துவதற்கு உதவியாகச் சட்டமொன்றை இயற்றித் தருமாறு செனெட் சபை டிரிபியூன்களை அறிவுறுத்தியது.[2] இச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. முன்னள் ஈடிலாக இருந்த சிபியோ (P. Scipio) அம் மாநிலத்தின் புற மாநிலத் தலைவராக அமர்த்தப்பெற்றார். இதே ஆண்டில்,

[1] Cic. ad Fam. vii, ii. 1.
[2] Liv. xxvi. 2, 5, 18, 4.

முன்னுள் சர்வாதிகாரிகள், கான்சல்கள், சென்சார்கள் ஆகியவர் களுக்கு, நகர்ப் பாதுகாப்புக்காக, செனெட்சபை இறைமை அதிகாரமளித்தது. கி.மு. 77-ல் இந் நடைமுறை மேலும் நீட்டிக் கப்பெற்றது. நிருவாகியாக இல்லாதிருந்த பாம்பே (Pompey) புற மாநிலத் தலைவர் என்ற பட்டத்தோடு ஸ்பெயினில் படைத் தலைவராக அமர்த்தப்பெற்ருர்.

## தேர்ந்தெடுப்பதற்குரிய படைத்துறை அலுவலர்களும் நீதிபதி களும்

படைத்துறை டிரிபியூன்களேயும் கப்பற்படைத்துறை அலுவ லர்களேயும் கொண்ட இரு குழுக்கள் இருந்தன. நிருவாகி களேப்போல் இவர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். ஆனல், பொதுவான பணிகளே இவர்கள் செய்யாததால் நிருவாகிகளிலிருந்து இவர்கள் வேறுபடுகின்றனர்.

கி.மு. 362 வரையில் படைத்துறை டிரிபியூன்கள் கான்சல் களால் அமர்த்தப்பெற்றனர். ஆனல் இதே ஆண்டில் முதல் முறையாக ஆறு பேரை கொமிசியா டிரிபியூட்டா தேர்ந்தெடுத் தது. கி.மு. 311-ல் பதினறு பேரைத் தேர்ந்தெடுக்க மக்கள் அனுமதிக்கப்பட்டனர்; பின் 207-ல் மக்கள் 24 பேரைத் தேர்ந் தெடுத்தனர். ஒரு படைக்கு ஆறு டிரிபியூன்கள் தேவைப்பட்ட தால், கடைசியில் செய்யப்பெற்ற மாற்றத்தால் நான்கு படைகள் அமைக்கவேண்டியதாயிற்று. 24-க்கு மேற்பட்ட டிரிபியூன்கள் தேவைப்பட்டால் அவர்களேக் கான்சல் அமர்த்தினர். முதல் முறையாக இப் படைத்துறை டிரிபியூன்கள் தேர்ந்தெடுக்கப் பட்ட ஆண்டும் லிசினியச் சட்டம் நிறைவேறிய ஆண்டும் ஒத்த நிகழ்ச்சியான செய்தி குறிப்பிடத் தக்கதாகும். இச் சட்டம் கான்சுலர் டிரிபியூனேட்டை ஒழித்துவிட்டு அதற்குப் பதிலாக கான்சல் பதவியைப் புகுத்தியது. இதன் பின் கான்சுலர் டிரிபியூன் கள் அரசியல் அதிகாரங்களோடு கூடிய படைத்துறை டிரிபியூன் களாக மட்டும் இருந்தனர். கான்சுலர் டிரிபியூன் பதவிகள் அகற்றப்பெற்றது மக்களாட்சி முறைக்கு ஓர் இழப்பாயிற்று. ஆகவே, இந்த இழப்பை ஈடுசெய்யும் வகையில் 362-ல் சில சலுகைகள் அளிக்கப்பட்டன. மக்களால் படைத்துறைக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற டிரிபியூன்கள் படைத்துறையின் மக்கள் டிரிபியூன்கள் எனப் பெயர்பெற்றனர். இவர்களுடைய கடமை கள் படைத்துறை இயல்பினவாக இருந்தன. படைத்தலைவர் களால் அமர்த்தப்பட்டவர்களிலிருந்து இவர்கள் எவ்வகையி லும் வேறுபடவில்லே.

படைத்துறை டிரிபியூன்கள் படையில் பெற்றிருந்த அதேநிலையைக் கப்பற்படைத்துறையில் இந்த அலுவலர்களும் பெற்றிருந்தனர். இப் பதவி முதலில் அமர்த்தப்படுதற்குரியதாக இருந்தது. ஆனால் 311-ல், படைத்துறை டிரிபியூன்களின் எண்ணிக்கை பதினாறாக உயர்த்தப்பட்டபொழுது கப்பற்படை அலுவலர்களும் முதன்முறையாக மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்[1]. இவர்கள் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்படவில்லை. குடியரசின் காலத்தில் நிரந்தரமான கப்பற்படை இல்லாததால் கப்பற்படைத் தலைவர்கள் தேவைப்படவில்லை. தேர்தல் நடத்துவதற்கு செனெட்சபை அதிகாரமளித்தது. பிற்காலக் குடியரசில் இப் பதவி பற்றிய செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை.

குற்றவழக்கு நீதிமன்றங்களுக்குத் தலைமை தாங்கப் போதிய அளவு பிரீட்டர்கள் இல்லாததால் இடையிடையே குற்றவியல் நீதிபதிகளை முன்னாள் ஈடில்களிலிருந்து மக்கள் தேர்ந்தெடுத்தனர். பதவி மாண்பைப் பொறுத்தவரை ஈடில் பதவிக்கும் குவெஸ்டர் பதவிக்கும் இடைப்பட்டதாக இஃது இருந்தது. இவர்கள் கொலைக்குற்ற வழக்குகளை விசாரிக்கும் பொறுப்பைப் பெற்றிருந்தார்கள். இந்த நீதிமன்றத்தின் முன் கொண்டுவரப்பட்ட வழக்குகளின் தன்மையையொட்டி இந் நீதிமன்றம் சிறப்புப் பெற்றது. இந் நீதிபதியைப்பற்றி முதன்முறையாக 98-ல் குறிப்பிடப்பட்டது. இதன் பெரும் சிறப்பு சல்லாவின் ஆட்சிக் காலத்தில் உச்சகட்டத்தை அடைந்து அகஸ்டஸின் காலத்தில் மறைந்தது. இப் பதவியிலிருந்தோருக்கு அரசியல் பணிகள் அளிக்கப்பெறவில்லை.

**சிறப்புநிலை அலுவலர்கள் (Extraordinary officials)**

நாம் இதுவரை பார்த்த நிருவாகப் பதவிகளும், அலுவல்களும் குறுகிய அல்லது நீண்ட காலத்திற்கு உரோமானிய ஆட்சியின் முறையான ஒரு பாகமாக இருந்தன. ஆனால் நெருக்கடிகள் தோன்றியபொழுது முறையான அலுவலர்களால் இந் நிலையைச் சமாளிக்க முடியாமற் போய்விட்டது. அத்தகைய சூழ்நிலைகளில் ஒரு குறிப்பிட்ட பணியை நிறைவேற்றத் தனிப்பட்ட சட்டங்களால் சிறப்புநிலைப் பதவிகள் அல்லது அலுவலர் பதவிகள் படைக்கப்பெற்றன. அரசியலமைப்பிற்கு அப்பாற்பட்டவர்களென இச் சிறப்புநிலை அலுவலர்களை வகைப்படுத்திக்கொள்வது வசதியாகும். முதல் வகுப்பு அலுவலர்களில் முதன்மையானவர்கள், நாட்டுத்துரோகம்பற்றி விசாரிக்கும் அலுவலர்கள், வேளாண்மைக்காக நிலம் ஒதுக்கும் ஆணையர்கள், குடியேற்ற

[1] Liv. ix. 30, 4.

ஆணையர்கள், பொதுக்கட்டடங்களை நேர்ந்தளிக்க அல்லது நிதித் தொடர்புடைய திட்டங்களை மேற்கொள்ள நியமிக்கப்பட்ட அலுவலர்கள், தூதர்கள் ஆகியோராவர். இரண்டாவது வகைப்பாட்டின்கீழ், அரசின் அடிப்படையான சட்டங்களைத் திருத்தியமைக்க அமர்த்தப்பட்டோர், அரசியலமைப்பை முற்றிலும் திருத்தியமைப்பதற்காக அமர்த்தப்பட்டோர் என்போராவர். மூவராட்சியில் இருந்த லெபிடஸ், அந்தோணி, அக்டோவியஸ் ஆகியோர் புகழ்பெற்ற அலுவலராவர்.

நாட்டுத்துரோகக் குற்றவிசாரணை நீதிமன்ற நீதிபதி நாட்டுத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டவர்களுக்குத் தீர்ப்பளித்தார். இத்தகைய வழக்குகளில் அரசின் சார்பில் கொமிசியா செஞ்சுரியேட்டா முன் வழக்குரைத்தார். முதலில் இந் நீதிபதி 509-ல் அமர்த்தப்பெற்ருர். பின் 63-ல் இரண்டாவது முறையாக ஒருவர் அமர்த்தப்பெற்ருர். அரசியல் நோக்கங்களுக்காக இந் நிறுவனம் உயிர்ப்பிக்கப்பட்டது. இப் பதவிக்குரிய அதிகாரங்கள் இரண்டு பேர் செயற்படுத்துவதற்கதிகமாகவே இருந்தன. இவர்களின் முடிவையொட்டி கொமிசியா செஞ்சுரியேட்டாவிற்கு மேல் முறையீடுகள் கொண்டு செல்லப்பட்டன. நீதித் தொடர்புடையவைகளை முடிவு செய்வதற்கு இஃது ஒவ்வாத நிறுவனமாக இருந்தது. ஆகவே, அரசுத் துரோகக் குற்றங்களை விசாரிக்கத் தனி நீதிமன்றம் பின் உருவாயிற்று.

ஒதுக்கி அளிப்பதற்காக எடுத்துக்கொண்ட நிலத்தைப் பிரித்து, ஒதுக்கீடு செய்தலும், ஒரு குடியேற்றத்தை நிறுவுவதாக இருந்தால் ஒரு சாசனம் வரைந்து, உடனடியாக அங்கு ஓர் ஆட்சிமுறைக்கு ஏற்பாடு செய்தலும் நில ஆணையர்களின் கடமைப் பொறுப்பாகும். இவ்வாணைக் குழுக்களில் மூன்றிலிருந்து இருபது வரை உறுப்பினர் இருந்தனர். எந்தப் பணிக்காக நிறுவப்பட்டதோ அந்தப் பணி முடிவுற்றவுடன் இக் குழுக்கள் மறைந்துவிடும். இக் குழுக்களைப் படைத்த சட்டம் ஒதுக்கீடுகளின் உருவளவையும் ஒதுக்கீட்டின் நிபந்தனைகளையும் நிருணயித்தது. மக்களுடைய விருப்பின் பேரில் அரசு நிலங்களை ஒதுக்கியளிக்கலாமென்பது மிகப் பழைய கருத்தாகும். ஒரு கோயிலோ பொதுக்கட்டடமோ கட்டும்பொழுது அதற்காகப் பொது இடத்தைப் பயன்படுத்திக்கொள்ளும் அதிகாரத்தைச் சட்டம் அளித்தது. உயர் நிருவாகிகளிடம் கோயில்கள் நேர்ந்தளிக்கப்பெற்றன. கீழ்நிலை நிருவாகிகளும் இவைகளை ஏற்றுக்கொண்டனர். பொருளாதாரத் திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பைத் தனி நிருவாகிகளிடம் விடப்படுவதைவிட ஒரு குழுவிடம்

ஒப்படைப்பதே சிறந்ததெனக் கருதப்பட்டது. தனிப்பட்டோர் கடன் பெறுவதற்கு ஓர் ஆணைக்குழு 351-ல் அமர்த்தப்பட்டது.

வெளிநாட்டுவிவகாரங்களைக் கவனித்துக் கொள்ள அவ்வப் போது செனெட்சபை தூதர்களை அனுப்பியது. செனெட்சபை யின் அறிவுரையின் பேரில் இவர்களை நிருவாகி அல்லது படைத் தலைவர் அமர்த்தினர். இவர்களுக்கு ஒதுக்கியளிக்கப்பட்ட பணி களையொட்டி இவர்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். சுதந்திர அரசுகளுக்குச் செய்திகளைக் கொண்டு செல்ல அனுப்பப் பெற்றவர்களை அல்லது அரச தந்திரப் பேச்சுவார்த்தைகள் நடத்த அனுப்பப்பெற்றவர்களை ஒரு பிரிவில் வைக்கலாம். களத்தில் படைத்தலைவர்களுக்கு உதவியாக இருக்கும் பொருட்டு அனுப்பப்பெற்ற தூதர்களை இரண்டாவது பிரிவில் வைக்கலாம். போர்வினைகளை, செனெட்சபையும் படைத்தலைவர்களும் கூட்டாக இயக்கினர் என்பதைப் பார்த்தோம். ஆகவே, படைத்தலைவ ருக்கு உதவியாக இருக்கும்படி அனுப்பப்பட்ட தூதர் செனெட் சபையின் பிரதிநிதியாக இருந்து செயற்பட்டார். இந்த முறை யில் இவர் போர்க் குழுக்களில் கலந்துகொண்டும் தலைமை யேற்றும் செயலாற்றினர். குடியரசின் பிற்காலத்தில் ஆணைக் குழுக்களை வெளியே அனுப்பும் செனெட்சபையின் உரிமை தவருகப் பயன்படுத்தப்பட்டது. செனெட் உறுப்பினரைத் தூதர்களாக அனுப்பும் வழக்கம் வளர்ச்சியடைந்தது. மாநிலங் களில் இவர்கள் சொந்தக் காரியங்களுக்காகப் பயணம் செய்த பொழுது ஆணையர்களுக்கான அதிகாரங்களையும் சிறப்புரிமை களையும் இவர்கள் தாராளமாகப் பயன்படுத்திக்கொண்டனர். புதிதாகக் கைப்பற்றிய மாநிலங்களுக்கான சட்டங்களை வரை வதற்கென செனெட்சபை ஆணையர்களை வெளிநாட்டிற்கு அனுப் பியது. இவர்களுக்கு மாநிலப் படைத்தலைவர் உதவினர். செனெட்சபை அனுப்பிய இவ்வாணைக் குழுக்களின் எண்ணிக்கை இரண்டிலிருந்து பத்தாக உயர்ந்தது. மாநில அரசியலமைப்பை வரைவதற்கு அமர்த்தப்பெற்ற குழுவில் எப்பொழுதும் பத்துப் பேர் இடம் பெற்றனர். செனெட்சபைக் குழுக்களின் உறுப்பினர் பெரும்பாலும் செனெட்டர்களாகவே இருந்தனர்.

குடியரசில் அரசின் அடிப்படையான சட்டங்களைத் திருத்தி யமைக்க உரோமானியர் தெரிவு செய்த சிறப்புநிலை அலுவலர் களின் எண்ணிக்கை குறைவாக இருந்தது. கி. மு. 451-ல் அமர்த்தப்பட்ட பதின்மர் குழு குறிப்பிடத்தக்கதாகும். நாட்டின் சட்டத்தைத் திருத்தியமைக்கவும், தொகுத்தளிக்கவும் இக் குழு அமர்த்தப்பெற்றது. இதன் உறுப்பினர் மக்களால் தேர்ந்தமர்த் தப்பட்டனர். மற்ற நிருவாகிகளைப்போல் இதன் உறுப்பினர்

குழுவின் மற்ற உறுப்பினரின் தடையாணைக்குட்படுவர். ஆனால் இவர்கள் டிரிபியூனின் தடையாணைக்குட்படுத்தப்படவில்லை. உண்மையில் டிரிபியூனேட் சிறிது காலத்திற்குத் தள்ளிவைக்கப் பட்டது; அல்லது அகற்றப்பட்டது. முதல் பதின்மர் குழுவின் பதவிக்காலம் ஓராண்டாகும்[1]. இரண்டாவது குழு பணி நிறை வேறும் பதவியில் தொடர்ந்திருந்தது. வருங்காலத்தில் இத் தகைய நிருவாகப் பதவி நிறுவப்படுவதை வலீரியோ ஹோரேசி யன் சட்டம் தடை செய்தது[2].

வலீரியா சட்டம் சல்லாவிற்கு ஒரு சிறப்புநிலைச் சர்வாதி காரப் பதவியை அளித்தது. அரசியலமைப்பை முற்றிலும் திருத்தியமைக்கும் அதிகாரத்தை இச் சட்டம் சல்லாவிற்கு அளித்தது. இப் பதவிக்கு வரம்பற்ற அதிகாரம் அளிக்கப் பட்டதையும் அதைச் சல்லா பயன்படுத்திய முறையையும் சிசரோ வன்மையாகக் கண்டித்துள்ளார். இதைப்போல் சீசரின் வல்லாட்சியுமிருந்தது. சர்வாதிகாரியாக இருந்த சல்லாவின் பதவிக்காலம் வரம்பற்றிருந்தது. கி.மு. 48-ல் சீசருக்குச் சர்வாதி காரப் பதவி காலவரையறையின்றி அளிக்கப்பட்டது. ஆனால் 46-ல் இப் பதவி பத்தாண்டிற்கும் 44-ல் ஆயுட்காலம் வரையும் சீசருக்கு அளிக்கப்பெற்றது. நிருவாகிகளின் பெயர்களைக் குறிப்பிடுதல், செனெட்சபைக்கு உறுப்பினரைச் சேர்த்தல், நகராட்சிகளில் நிருவாகிகளைக் குறிப்பிடுதல், மேல்முறையீடு இல்லாத தண்டனைகளை விதித்தல், அரசு நிலத்தைச் செயலாட்சி செய்தல் போன்ற சிறப்பு அதிகாரங்களைச் சல்லாவும் சீசரும் சர்வாதிகாரியென்ற முறையில் செயற்படுத்தினர்.

சீசரின் சர்வாதிகார ஆட்சிக் காலத்தில் அவர் பெற்றிருந்த நிலைக்கொப்ப, லெப்பிடஸ், அந்தோணி, அக்டோவியஸ் அடங்கிய மூவராட்சி இருந்தது. டிட்டியா சட்டத்தால் (lex Titia) இம் மூவர் ஆட்சி ஐந்தாண்டிற்கு நிறுவப்பெற்றது. கி. மு. 38-ல் இது புதுப்பிக்கப்பட்டது. இம் மூவரும் கூட்டாளிக் கருத்தை யொட்டி ஒருமித்த ஆட்சி நடத்தினர். சீசரைப்போல், உரோமின் நிருவாகிகளை அமர்த்தவும், நகராட்சி நிருவாகிகளை நியமிக்கவும் மேல்முறையீடு இல்லாமல் தண்டிக்கவும், அரசு நிலங்களைச் செயலாட்சி செய்யவும் இவர்கள் உரிமை பெற்றிருந்தனர்.

[1] Liv. iii. 32, 6.

[2] Cic de Repab, ii. 54, Liv. iii, 55.

## 8. செனெட் சபை (Senate)

**சபையின் அமைப்பும் உறுப்பினர்களின் சிறப்புரிமைகளும்**

முடியாட்சிக் காலத்தில் செனெட்சபையின் உறுப்பினர் பட்டியலைத் தயாரிக்கும் சிறப்புரிமையை அரசர் பெற்றிருந்தார். முடியாட்சி வீழ்ச்சியடைந்த பின் இந்த உரிமையைக் குடியரசின் தலைமை நிருவாகிகளாகிய கான்சல்கள் பெற்றனர். இந்த உரிமையைச் செயற்படுத்துவதில் தலைமை நிருவாகி பட்டியலி லிருந்து பெயர்களை நீக்கிவிடலாம்; அல்லது புதிய உறுப்பினர் களைச் சேர்த்து உறுப்பினர் தொகையை ஓர் இயல்பான அளவிற்குக் கொண்டுவரலாம். இந்த உரிமையைச் செயற்படுத் தும் அதிகாரம் ஒவ்வொரு கான்சல் குழுவிற்குமிருந்ததால் உறுப்பினர் பட்டியல் ஒவ்வோர் ஆண்டும் மாற்றத்திற்குள்ளாகி யது. நான்காம் நூற்றாண்டின் இறுதியில் ஒவினியன் சட்டத்தால் இந்த உரிமை சென்சாருக்கு மாற்றப்பெற்றது. சல்லாவின் சர்வாதிகார ஆட்சிக்காலம்வரை மரபிற்கும் சட்டத்திற்கும் உட்பட்டு சென்சார் இந்த உரிமையைச் செயற்படுத்தினர். இதன்பின் இப் பதவி மறைந்துவிட்டது. கி. மு. 70-ல் மீண்டும் இப் பதவி நிறுவப்பட்டது. ஆனால் செனெட்சபையிலிருந்து சிலரை நீக்கிவிடும் அதிகாரத்தை மீண்டும் சென்சார் பெற்றா ரெனினும் சபைக்குப் புதியவர்களைச் சேர்க்கும் அதிகாரத்தை மீண்டும் பெறவில்லை. சர்வாதிகாரப் பதவியின் தனிச் சிறப்பு வாய்ந்த அதிகாரத்தால் சல்லாவும் சீசரும் உறுப்பினர்களை அமர்த்தினர்.

கோனாட்சி வீழ்ச்சியடைவதற்கு முன் செனெட் சபையின் இயல்பான உறுப்பினர் தொகை 300 ஆக இருந்தது[1]. மரபு வழிச் செய்திகளின்படி, அரசர்கள் விரட்டப்பட்ட பின் முதல் காரியமாக நலிந்து குறைந்து போயிருந்த சபையின் தொகையை கான்சல்கள் நிரப்பினர். சல்லா இந்த எண்ணிக்கையை 600 ஆக உயர்த்தினார். தற்காலிகமாக இத் தொகையை சீசர் 900 ஆக உயர்த்தினாலும் சபை உறுப்பினரின் எண்ணிக்கை 600 ஆகவே இருந்தது[2].

சபையின் அமைப்பைப் பொறுத்தவரையில் இதன் வரலாற்றை நான்கு காலப்பகுதிகளாகப் பிரிக்கலாம். முதல் காலப்பகுதி கி. மு. 509 வரையிலும், இரண்டாவது, நான்காம் நூற்றாண்டின் இறுதிவரையிலும், மூன்றாவது, சல்லாவின் சர்வாதிகார ஆட்சிக்

[1] Liv. ii. 1, 10.

[2] Appian, B. C. i. 50.

காலம் வரையிலும், நான்காவது, குடியரசின் வீழ்ச்சிவரைக்கும் நீண்டன. முதற் காலப் பகுதியில் பெட்ரீசியர்கள் மட்டுமே உறுப்பினராதற்குத் தகுதி பெற்றிருந்தனர். இருந்தபோதிலும், குடியரசின் தோற்றத்தோடு பிளெபியர்களும் சபையில் உறுப்பினராக இடம் பெற்றனர்[1]. 509ஆம் ஆண்டுப் புரட்சியின் உயர்குடிப் பண்பிற்கு இம் மாற்றம் முரணுகும். ஆனல் கோமுட்சிக்கெதிரான இந்தப் புரட்சியில் செல்வாக்குள்ள பிளெபியர்களை ஈடுபடுத்துவது இம் மாற்றத்தின் உள்நோக்கமாக இருந்தது. ஆனல் இதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே பிளெபியர்கள் இச் சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்க வேண்டுமென்பதைப் பல சான்றுகள் மெய்ப்பிக்கின்றன[2]. பெட்ரிசியர்களிலிருந்து வேறுபடுத்தப் புதிய உறுப்பினர்கள் "சேர்க்கப்பட்டவ"ரெனப் பெயர்பெற்றனர். மூன்ருவது காலப் பகுதியில் பெருமளவிலான முன்னுள் நிருவாகிகளை செனெட்சபை உறுப்பினராகக் கொண்டிருந்தது. இருப்பினும், இம் மாற்றம் திடீரென வந்துவிடவில்லை. செனெட் உறுப்பினர் பட்டியலைத் தயாரிக்கும் பொழுது முன்னுள் நிருவாகிகளுக்கு முன்னுரிமை அளிக்கப்பட வேண்டுமென்னும் வழக்கத்திற்கு இப்பொழுது சட்ட இசைவு அளிக்கப்பட்டது. சல்லாவின் சட்டத்தின்படி செனெட், முற்றிலும் முன்னுள் நிருவாகிகளைக் கொண்ட ஒரு சபையாக மாறியது.

சிசரோவின் காலத்தில் செனெட்சபைக்குத் தகுதிபெற மூன்று முதன்மையான நிபந்தனைகளிருந்தன. செனெட் உறுப்பினர் சுயேச்சையானவராகவும் குடிமகனுகவும் இருக்கவேண்டும்; உயர் நிருவாகப் பதவியிலிருந்தவராக இருக்கவேண்டும்; குறிப்பிடப்பட்ட தொழில் எதிலொன்றிலாவது அவர் ஈடுபட்டிருக்கலாகாது.

முதல் நிபந்தனைக்கு ஒத்துப்போக, செனெட்சபை உறுப்பினர் பதவியை விரும்புபவர் வயது வந்தவராகவும் உரோம் குடிமகனுக்குரிய முழு அரசியல் உரிமைகளைப் பெற்றவராகவும் இருக்கவேண்டுமென்பது உட்கருத்தாகும். மேலும், விடுதலை பெற்றவர்களின் புதல்வர்களும், விடுதலை பெற்றவர்களும் செனட்சாரால் தகுதியற்றவர்களாகக் கருதப்பெற்றனர். ஆயினும், சட்டத்தால் முன் குறிப்பிடப்பட்டவர்கள் செனெட்சபையிலிருந்து தள்ளிவைக்கப்படவில்லை.

நிருவாகப் பதவியில் இருந்ததை, தகுதிக்கான ஒரு நிபந்தனையாக ஒவினியன் சட்டம் குறிப்பிடவில்லை. ஆனல் முன்னுள் நிருவாகிகளுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டது. இருப்பினும்

1 Liv. ii. 1. 10.
2 Festus. p. 254.

நிருவாகிகளின் குழுவின் உருவளவில் சல்லா செய்த அதிகரிப்பு குறிப்பிட்ட அளவில் செனெட் உறுப்பினரின் எண்ணிக்கையை வைத்துக்கொள்வதற்குப் போதிய எண்ணிக்கை முன்னாள் நிரு வாகிகளை அளித்தது. இவருடைய சர்வாதிகார ஆட்சிக்குப் பின் நிருவாகப்பதவி வகிக்காத எவரும் செனெட்சபைக்குத் தகுதி பெறவில்லை. முதல்நூற்றாண்டின் பிற்பகுதியில் பிளெபியர் களின் டிரிபியூனும் ஈடிலும், குவெஸ்டர்கள் உள்பட நிருவாகி களும் செனெட்சபையில் இடம்பெற உரிமை பெற்றனர். எப் பொழுது பிளெபிய ஈடில்களுக்கு இந்த உரிமை அளிக்கப்பட்ட தென்பதைக் கூற இயலாது[1]. 122ஆம் ஆண்டிற்கு முன் இவ் வுரிமை அளிக்கப்பட்டிருக்கவேண்டும். இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் நிறைவேற்றப்பட்ட அட்டினியம் சட்டத்தின்படி (plebiscitum Atinium) செனெட்சபையில் இடம்பெறும் உரிமையைப் பிளெபியர்கள் பெற்றனர்[2]. கி. மு. 81-ல் இதே உரிமையைக் குவெஸ்டர்கள் பெற்றனர்.

குறிப்பிட்ட சில தொழில்கள் ஒருவரின் ஒழுக்கத்திற்கு மாசு கற்பித்தனவென்பது உரோமானியரின் கருத்தாகும். செனெட் உறுப்பினரின் நிலைக்கும் பெருமைக்கும் தகாதெனவும், உறுப் பினரின் கடமைகளை நிறைவேற்ற சில தடையாயினவெனவும்; மற்றும் சில, பொதுப் பிரச்சினைகளை இவர் வெறுப்பு விருப்பின்றி ஆய்ந்து நிறைவேற்றத் தகுதியற்றவராக்கிற்றெனவும் கருதினர். இப் பதவிகளெல்லாம் இவரைத் தற்காலிகமாக அல்லது நிரந் தரமாகத் தகுதியற்றவராக்கின. எடுத்துக்காட்டாக, வாட்போர், மற்போர், நடிப்பு ஆகியவைகளைத் தொழிலாகக் கொண்டிருந் தோர் இப் பதவிக்குத் தகுதியற்றவர்களாகக் கருதப்பட்டனர். ஒருவருடைய சேவைக்குக் கூலி அல்லது ஊதியம் பெறுவதும் இப் பதவியின் மாண்பிற்கு ஒவ்வாதெனக் கருதப்பட்டது. கட்டியம் கூறுநர், எழுத்தர் போன்ற வாழ்க்கைத் தொழில்கள் ஒருவரை செனெட்சபையிலிருந்து விலக்கிவைத்தன[3]. இடை யறாத உழைப்பிலிருந்து ஊதியத்தைப்பெறும் ஒருவர், செனெட் உறுப்பினராக இருந்து கடமைகளை மன நிறைவோடு நிறை வேற்ற இயலாதென்பது உரோமானியரின் கருத்தாகும். இருப் பினும், ஒருவர் இத் தொழிலை விட்டுவிட்டால் உறுப்பினர் பதவிக்குத் தகுதி பெற்றவராகி விடுவார். இறுதியாக, பெரு மளவு செனெட்சபை அரசின் நிதியைச் செயலாட்சி செய்ததால் பொது ஒப்பந்தங்களை ஏற்றுக்கொண்டவர்கள் இச் சபையில் இடம்பெற இயலாதாகும்.

1 Will. I. 231
2 Will. I. 225 tt. I. 688 ff.
3 Gell. vii, 9, 2 f

குடியரசின்கீழ் உறுப்பினருக்குச் சொத்துத் தகுதி இல்லா திருந்திருக்கலாமெனத் தெரிகிறது. ஆனால் செனெட் உறுப் பினருக்கு ஊதியமளிக்கப் பெறாததால் இப் பதவியை நல்ல செல்வ வளமுடையவர்களே பெறத் தகுதி பெற்றனர். மேலும் செனெட் உறுப்பினரின் மதிப்பைப் பேணிக்கொள்ள ஓரளவு செல்வவளம் தேவையானது. எனவே, செனெட் உறுப்பினர் பட்டியலைத் தயாரித்த சென்சார்கள் இத் தகுதிப்பாடுகளை எல்லாம் கருத்தில் கொண்டு செயலாற்றியிருக்கவேண்டும். சட்டத்தால் அல்லது வழக்கத்தால் வயதுத் தகுதியெதுவும் திட்ட வட்டமாகக் குறிப்பிடப்படவில்லை. ஆனால், குவெஸ்டர் பதவியைப் பெறுதற்கான தகுதியைப் பெறாத எவரும் செனெட்சபை உறுப் பினராதல் ஓவினியன் சட்டத்தால் தடுக்கப்பட்டது. ஒருவர் நிருவாகியாவதைத் தடுக்கத் தடைபாடுகள் அவர் செனெட் உறுப்பினராவதையும் தடுத்தன.

குடியரசின் தொடக்கத்திலிருந்தே பிளெபியர்கள் செனெட் சபையில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டன ரென்பதைப் பார்த்தோம். இருந்தபோதிலும் இடைக்கால நிருவாகியாகச் செயற்படும் உரிமையையும், செனெட்டின் கட்டளைமீது வாக்களிக்கும் உரிமையையும் பிளெபிய செனெட் டர்கள் பெறவே இல்லை. நெடுங்காலமாகவே, முன்னரே கொண்டுவரப்பெற்ற பிரேரணையின்மீது வாக்களித்த செனெட் உறுப்பினர்களுக்கும் பிரேரணையைக் கொண்டுவரவும் அதைப் பற்றிப் பேசவும் அழைக்கப்பெறாத உறுப்பினர்களுக்கிடையில் ஒரு வேறுபாடு காணப்பட்டது. இவ்விரு வகுப்பினரின் அமைப்புப் பெரும் சர்ச்சைக்குரியதாகும். தலைமைதாங்கிய அலுவலர் செனெட் உறுப்பினரின் கருத்தை அவர்களின் படிநிலை வரிசைப்படி கேட்டறிந்தார் என்பதைப் பார்க் கிறோம். எல்லா உறுப்பினரும் கருத்துத் தெரிவிக்கும்முன் விவாதத்தை முடிவிற்குக் கொண்டுவரும் அதிகாரத்தையும் பெற்றிருந்தார். ஆகையால், கீழ்நிலை செனெட் உறுப்பினர் கள் விவாதத்தில் கலந்துகொள்ள அனுமதிக்கப்பட்டார்களே யன்றி வாக்களிக்க இசைவு பெறவில்லை. அதாவது, இவர்கள் மற்றவர்களின் கருத்திற்கு ஏற்பளித்தனர். இவர்கள் பெட்ரீ (pedraii) உறுப்பினரென வழங்கப்பட்டனர். உறுப்பினர் களில் குயுரூல் தரத்தை எட்டாதவர்கள் சபையில் விவாதத் தில் பெற்றிருந்த பங்கு மிகக் குறைவேயாம். இவர்களுக்கும் செல்வாக்குடைய உறுப்பினருக்குமிடையிலான வேறுபாட் டைத் தெளிவுபடுத்த முடியவில்லை. எனினும், குயுரூல் பதவியை வகிக்காத பிளெபியர்களே இவர்களெனக் கூறலாம்

இவர்களைப்போல "சேர்க்கப்பட்ட" உறுப்பினர்களும் உரிமைகளைச் சபையில் செயற்படுத்த முடியாதவாறு தடுக்கப்பெற்றனர். சிசரோவின் காலத்தில் இச் சொல் பெட்ரி (pedraii) சிறப்பான பொருளைப் பெறவில்லை. கான்சல்கள், பிரீட்டர்கள், ஈடில்கள், டிரிபியூன்கள், குவெஸ்டர்கள் என்ற படிநிலை முறையையொட்டி செனெட் உறுப்பினர்கள் தரப்படுத்தப்பட்டனர்[1]. இக்குறியிட்ட தரவரிசைப்படியே இவர்களுடைய கருத்துகளும் பெறப்பட்டன. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து சல்லாவின் காலம் வரையில் சென்சார் தரத்திலிருந்த பெட்ரிசிய உறுப்பினரே பட்டியலில் முதலிடம் பெற்றிருந்தார். இவரை உரோமானியர் முதன்மை செனெட்டர் என வழங்கினர். சபை இவருடைய கருத்தை முதலில் அறிந்துகொண்டது[2].

சிசரோவின் காலத்தில் செனெட் சபையின் உறுப்பினர்கள் சில குறிப்பிட்ட விருதுகளாலும் சிறப்புரிமைகளாலும் வேறுபட்டனர். செனெட்சபை உறுப்பினர் அணிந்திருந்த புதை மிதியடி, கருஞ்சிவப்புக் கோடிட்ட மெய்யங்கி, தங்க மோதிரம் ஆகியவை செனெட்டர்களின் அணிகலன்கள் என வழங்கப்பட்டன. தங்க மோதிரம் உறுப்பினர்களின் தனிப்பட்ட அடையாளமாக இருந்த போதிலும், வீரர்களும் தங்க மோதிரம் அணிந்திருந்தனர். குயுரூல் பதவி வகித்த செனெட் உறுப்பினர் தனிச் சிறப்புடைய புதை மிதியடி அணிந்திருந்தனர். உறுப்பினருக்குச் சில குறிப்பிட்ட சிறப்பு உரிமைகளும் அளிக்கப்பட்டன.[3] கி. மு. 194-க்குப் பிறகு பொது விளையாட்டு அரங்குகளில் இவர்களுக்குத் தனியிடங்கள் ஒதுக்கியளிக்கப்பட்டன. நாடக விழாக்களில் இன்னிசைக் குழுவினருக்காக ஒதுக்கப்பட்டிருந்த இடத்தில் இவர்களுக்கும் இடமளிக்கப்பட்டது.[4] உறுப்பினர் தூதர்களாகப் பல இடங்களுக்குச் சபையால் அனுப்பப்படும் உரிமை மிக முக்கியமானதாகும். ஓர் ஐம்பதாண்டுக் காலத்தைத் தவிர இவர்கள் அறங்கூறுயத்தில் இடம்பெறும் சிறப்புரிமையைப் பெற்றிருந்தனர். இச் சிறப்புரிமைகளோடு இவர்களுக்குச் சில கட்டுப்பாடுகளுமிருந்தன.

**செனெட் சபையின் கூட்டங்கள்**

செனெட் சபையைக் கூடுமாறு அழைக்கவும் தலைமை தாங்கவும் சர்வாதிகாரி கான்சல், பிரீட்டர், இடைக்கால நிருவாகி, நகர முதல்வர், குதிரைப்படைத் தலைவர், நான்காம் நூற்றாண்டிற்குப்

[1] Herz. I. 888. n,
[2] Will. I. iii f.
[3] Plin. N. H. 33. 11 f
[4] Liv. xxxiv. 54, 4,

பின், பிளெபிய டிரிபியூன் ஆகியோர் உரிமைப் பெற்றிருந்தனர்.[1] சல்லாவின் ஆட்சிக்காலம் வரையில், ஆண்டின் பெரும்பகுதி கான்சல்கள் நகருக்கு வெளியே இருந்ததால் அக் காலத்தில் நகர பிரீட்டர் செனெட் சபையின் தலைவராகப் பணியாற்றினர். தொடக்க காலத்தில், இரண்டு கான்சல்களும் நகரில் இருந்த பொழுது இறைமைச்சின்னமாகிய சலாகைக் கட்டைப் பெற்றிருந்தவரே தலைமை தாங்கினர். பிற்காலத்தில் இத் தலைமைப் பணி எவ்வாறு முடிவு செய்யப்பட்டதென்பது புரியவில்லை. சபையைக் கூட்டும் உரிமை ஒவ்வொரு கான்சல்களுக்கும் அளிக்கப்பட்டிருந்தது. கான்சல் ஒருவர் சபையைக் கூட்டுவதை மற்றொரு கான்சல் தடையாணையால் தடுக்கமுடியாது. ஆகவே, குடியரசின் பிற்காலத்தில், இவ்விரண்டு கான்சல்களும் வேறுபட்ட கட்சிகளைச் சேர்ந்தவர்களாக இருந்திருந்தால் மோதல்கள் ஏற்பட்டிருக்கும். ஒரு நிகழ்வில், இருவரில் வலிமை குறைந்த ஒருவர் அரசியல் நடவடிக்கையிலிருந்து முற்றிலும் விலகிக்கொண்டார். தலைமை நிருவாகியால் சபை முன் கொண்டுவரப்பட்ட அலுவல் முடிந்த பின், சபை முன் ஒரு பிரச்சினையை வைக்கும் தகுதியுடைய நிருவாகியெவரும் அதைச் சபைக்குக் கொண்டுவரலாம். ஆனால் இத்தகைய நடவடிக்கையைத் தலைமை நிருவாகி தடைசெய்யலாம். இதன் விளைவாக, செனெட் சபை முன் டிரிபியூன் கொண்டுவரவேண்டிய நடவடிக்கையை வழக்கமாக அதன் முன்வைத்தார். டிரிபியூன்கள், செனெட் சபையைக் கூட்டிய நிகழ்வுகள் மிகக் குறைவேயாம். கான்சல்கள், பிரீட்டர்கள், டிரிபியூன்கள் ஆகிய இம் மூன்று அலுவலர்களே செனெட் சபைக்கு அடிக்கடி தலைமை தாங்கியுள்ளனர் எனத் தெரிகிறது. ஆகவே, அலுவல் தொடர்புடைய செய்திகள் இவர்களின் பெயருக்கு அனுப்பப்பட்டன. அரசின் நல்வாழ்வை செனெட்சபை இவர்களுடைய பொறுப்பில் விட்டதோடு இதன் இறுதியான விருப்பையும் இவர்களிடமே தெரிவித்தது. சபையின் பார்வைக்குக் கொண்டுவரும் அதிகாரம், சபையைக் கூட்டுவதற்கு மட்டுமன்றிச் சபையின் கருத்தாய்விற்குப் பொருளை விடவும், அதையொட்டி சட்ட நடவடிக்கையெடுக்கவும் வழி வகுத்தது; நடவடிக்கைகளின் வரிசை முறையை நிருணயிக்கவும் வகைசெய்தது.

ஒரு பொது அறிவிப்பினால் செனெட் சபை கூட்டப்பட்டது. வழக்கமாகச் சபை குயூரியா ஹோஸ்டிலியா (Guria Hostilia) என்னுமிடத்தில் கூடும். உரோமாபுரியின் பொது அங்காடிக்கு வடகிழக்கு முனையில் இவ்விடமிருந்தது. செனெட் கூடுவதற்கான

[1] Gell. xiv. 7, 4.

நாள்கள் சட்டத்தால் குறிப்பிடப்படவில்லை. மாறாக, குடியரசின் பிற்பட்ட காலத்தில்,[1] அதாவது கி. மு. 61-க்குப் பின் கொமிசியா கூடும் குறிப்பிட்ட நாள்களில் இச் சபையைக் கூட்டமுடியாது. சபையின் அமர்வு அதிகாலையில் தொடங்கி மாலையில் முடிவுறும். மெய்யாக, நள்ளிரவு அமர்வில் நிறைவேற்றப்பட்ட செனெட் சபையின் கட்டளையின் சட்டமுறைமை விவாதத்திற்குள்ளானது. இச் சபைக்குப் பொதுமக்கள் அனுமதிக்கப்படவில்லை. ஆனால், விவாதங்களைப் பொதுமக்கள் அறிந்துகொள்வதற்காகச் சபையின் கதவுகள் திறந்து வைக்கப்பட்டன. ஆனால், இவர்களுடைய ஏற்பும் மறுப்பும் சபையின் நடைமுறைச் செயற்பாடுகளைத் தடை செய்தன. எப்போதாவது நிருவாகக் காரியங்களுக்காகச் சபை அமர்வதும் உண்டு. இத்தகைய நிகழ்வுகளில் கதவு மூடப்பட்டு, லிக்டர்கள், அறிவிப்பாளர்கள், சபைக் காவலர்களின்றிச் சபை செயற்பட்டது. சபையில் உறுப்பினர் ஒவ்வொருவரும் விரும்பும் இருக்கையைத் தேர்ந்தமர்வர். நிருவாகிகள் உயர்ந்த மேடையில் அமர்ந்திருந்தனர்; கான்சல்களும் பிரீட்டர்களும் குயுருல் நாற்காலியில் அமர்ந்திருந்தனர்; டிரிபியூன்கள் ஒரு நீண்ட இருக்கையில் இருந்தனர். சபையில் பேசும்பொழுது உறுப்பினர்கள் எழுந்து நின்று பேசினர். நிருவாகிகள் சபைக்குள் வரும் பொழுதும் சபையைவிட்டு வெளியேறும்பொழுதும் உறுப்பினர் எழுந்து நின்றனர்.

சபையின் இயல்பான காரியங்களைச் செயற்படுத்துவதற்குக் குறை நிறைவெண் தேவைப்படவில்லை. ஆனால், சில முக்கியமான காரியங்களையொட்டிய நடவடிக்கைக்குக் குறிப்பிடப்பெற்ற உறுப்பினரின் வருகை தேவையாயிற்று. குடியரசில் இறுதிக் காலத்தில், குறிப்பாக, மாநிலங்களைக் கான்சல் பொறுப்பிற்கு ஒதுக்கச் செனெட் நிறைவேற்றிய கட்டளையைச் சபை ஏற்கக் குறை நிறைவெண் அவசியமாயிற்று. தக்க காரணமின்றி வாராதிருக்கும் உறுப்பினரின் வருகையைச் சபைத் தலைவர் வலியுறுத்தலாம். ஆனால், இத்தகைய கடைசியான நடவடிக்கைக்குத் தேவை பெருமளவு ஏற்படவில்லை.[2]

தலைமை தாங்குவதாக இருந்த நிருவாகி சபை கூடும் முன், பலியிட்டுப் படைத்துத் தெய்வ இசைவு பெற்றார். சபையின் கூட்டத் தொடக்கத்தில் செய்திகள் படிக்கப்பட்டன. தலைவர் அறிக்கைகளை வெளியிட்டார். இவைகளைத் தலைவரால் அனுமதிக்கப்பட்ட ஒருவர் படிக்கலாம். சபைத் தலைவரின் பிரேரணை

[1] Liv. iii. 38, 8
[2] Cic. Ad. San. viii. 9, 2.

யின்பேரில் சபைக்கு நடவடிக்கைகள் கொண்டுவரப்பட்டன. சபையில் குழுமுறை அடிக்கடி பயன்படுத்தப்படவில்லை என லாம். சபைத் தலைவர் எளிதான அறிக்கையொன்றை வெளியிட லாம்; அல்லது குறிப்பிட்டதொரு நடவடிக்கையை எடுத்துரைக் கலாம்; அருநடப்பாக, சில வேளைகளில் இவர் சபை முன் திட்ட வட்டமான ஒரு பிரேரணையைக் கொண்டுவரலாம். இதை யொட்டி இவரது கருத்தைத் தெரிவித்த பின் உடனடியாக வாக் கெடுப்பிற்கு ஆணையிடலாம். எடுத்துக்கொண்ட பொருள் முக்கியமில்லாதபொழுதும் அல்லது குறிப்பிட்ட பிரேரணைக்கான பெரும்பான்மை ஆதரவை முன்கூட்டிப் பெற்றபொழுதும் இந் நடைமுறை பின்பற்றப்பட்டது. மற்ற நிகழ்வுகளில் இந் நடை முறை மேற்கொள்ளப்படவில்லை. ஒரு பிரச்சினையை விவாதிக்க வாய்ப்புக் கோரும் உறுப்பினரின் வேண்டுகோள் மறுக்கப்பட வில்லை. செனெட் சபையின் பணிமுறை அறிவிக்கப்பட்டபின், படிநிலை வரிசை முறையைப் பின்பற்றித் தலைவர் சபை நட வடிக்கைகளைத் தொடங்கினர். படிநிலை வரிசை முறைபற்றி முன் பார்த்துள்ளோம். ஆனல், இரண்டாம் நூற்றுண்டின் இடைப் பகுதிக்குப் பின் தேர்ந்தெடுக்கப்பெற்ற கான்சல் களின் கருத்தை முதலில் தெரிவிக்குமாறு கேட்டுக்கெண்டனர். ஏனெனில், சபையின் கருத்தாய்வில் இருந்த நடவடிக்கையைச் செயற்படுத்துமாறு இவர்கள் கேட்டுக்கொள்ளப்படலாம். வரிசை முறையில் அழைக்கப்பட்ட சபை உறுப்பினர்கள் எடுத்துக் கொண்ட பிரச்சினைபற்றி உரை நிகழ்த்தலாம்; அல்லது பிரேரணை ஒன்ருல் தம் குறிப்புரைகளை முடிக்கலாம்; அல்லது ஏற்கெனவே நிறைவேறிய பிரேரணைக்குத் தம் இசைவைக் குறிப்பிடலாம். தலைவரின் வேண்டுகோளுக்கிணங்க, உறுப்பினர் தம் கருத்தைத் தெரிவிக்கும்பொழுது சபை முன் இருக்கும் பிரச்சினையைப்பற்றி மட்டுமே கருத்துத் தெரிவிக்காமல் முற்றிலும் வேறுபட்ட பொருள்பற்றியும் பேசலாம். தலைவர் இப் பொருளைச் சபைமுன் கொண்டுவர வேண்டுமென்றும் இவர் கேட்டுக்கொள்ளலாம். இச் சிறப்பதிகாரம் மிக முக்கியமானதாகும். ஏனெனில், பிரச்சினைகளை எடுத்துரைப்பதில் இவர்களுக்கில்லா முன்னுரி மைக்கு இஃது ஈடாயிற்று. எடுத்துரைக்கும் முன்னுரிமை நடை முறையில் சபைத் தலைவருக்கு மட்டுமே இருந்தது. உறுப்பினர் எடுத்துக்கொண்ட பொருள்பற்றிப் போதுமானதாகக் கருது மளவு பேசலாம். அப்படியே ஒரு மசோதாவை எதிர்ப்பவர் அதன் மீதான நடவடிக்கையைத் தடுக்கச் சூரியன் மறையும்வரை பேசிக்கொண்டே இருக்கலாம். இந்த முறையைக் கையாண்ட உறுப்பினரைக் காவலில் வைக்குமாறு ஆணையிட்டுத் தொடர்ந்து பேசுவதை நிறுத்தும் உரிமையைச் சபைத் தலைவர் பெற்றிருந்தார்.

ஆனல், ஒரே ஒரு நிகழ்வில் தலைவர் இந்த முறையைக் கையாண்டார். தலைவரின் முயற்சிகள் நடைமுறையில் தோல்வியுற்றன. சொற்பொழிவுகள் வன்மையாகவும் தனி முறையிலுமிருந்தன. இவைகள் சபையின் ஏற்பு அல்லது மறுப்புக் கூச்சல்களால் தடைப்பட்டன. தக்க சமயத்தில் சபைத் தலைவர் விவாதங்களை முடிவிற்குக் கொண்டுவந்தார். உறுப்பினரில் பலர் பேசும் வாய்ப்பைப் பெறவில்லை. செனெட் சபையின் உறுப்பினராக இருந்த நிருவாகிகளின் கருத்தும் கேட்கப்படவில்லை.

விவாதத்தின்போது ஒரே ஒரு பிரேரணை கொண்டுவரப்பட்டு, அது தலைவரால் ஏற்றுக் கொள்ளப்பெற்ருல் வாக்கெடுப்பிற்கு விடப்படும். பல பிரேரணைகள் கொண்டுவரப் பெற்ருல், தலைவரால் ஏற்கப்படாதவைகளைத் தள்ளிவிடும் அதிகாரம் தலைவருக்கிருந்தது. தலைவர் விரும்பிய வரிசை முறையில் மற்றப் பிரேரணைகளை வாக்கெடுப்பிற்கு விடலாம். செனெட் சபையின் பெரும்பான்மை ஆதரவைப் பெற்ற முதல் பிரேரணை சபையின் நடவடிக்கையாக அமைந்தது. ஒரு பிரேரணையில் பல முன்மொழிவுச் செய்திகள் இருந்தால் அதுபற்றி அறிய வாக்கெடுப்பிற்குத் தலைவர் ஆணையிடலாம். ஆனல், இத்தகைய கோரிக்கையைத் தலைவர் ஏற்கவேண்டியதில்லை. இவருடைய வேண்டுகோளின்பேரில் நடவடிக்கையை ஆதரித்தவர்கள் கணக்கிடப்படுவதற்காக சபையின் ஒரு பக்கத்திற்கும் எதிர்ப்பவர்கள் மற்றப் பக்கத்திற்கும் செல்வர். பதவியில் இருந்த நிருவாகிகள் வாக்களிக்கவில்லை. வாக்கெடுப்பின் முடிவு சபைத் தலைவரால் அறிவிக்கப்பட்டது.

தலைமை தாங்கும் அலுவலரின் கூட்டாளி அவருடைய தடை ஆணையால் குறுக்கிடும் உரிமையைப் பெற்றிருந்தார். இருப்பினும் டிரிபியூனைத் தவிர வேறெந்த அலுவலரும் தடையாணையைப் பயன்படுத்தியதில்லை. ஆனல், இவர் தடையாணையைச் சபையின் நடைமுறையில் எந்நிலையிலும் பயன்படுத்தலாமென்பதை முன்னரே பார்த்தோம். அலுவலரின் தடையாணைக்குட்படாத சபையின் நடவடிக்கை செனெட் சபையின் கட்டளை ஆயிற்று. தடை அதிகாரத்திற்குட்படும்போது சபையின் நடவடிக்கை சட்டத்தின் மதிப்பை இழந்துவிடுகிறது. ஆனல், அத்தகைய நடவடிக்கை சபையினரின் பெரும்பான்மையினரின் கருத்தை வெளிப்படுத்தியதால் அறமுறையாற்றலைப் பெற்றது. இவைகளை எழுதிவைத்துப் பேணினர். இவை மக்களின் விருப்பமாக (Senatus antoritas) அமைந்ததோடு பெட்ரிசியரின் விருப்பிலிருந்து இவை வேறுபட்டன.

சபைத் தலைவரால் தெரிவு செய்யப்பெற்ற குழுவின் கூட்டத்திற்குப் பின் பிரேரணை இறுதி வடிவில் எழுதப்பட்டது. இக் குழுவில் மசோதாவை ஆதரித்தவர்கள் இடம் பெற்றனர். இவ்வாறு வரையப்பெற்ற ஆவணங்கள் இரு பிரிவுகளைக் கொண்டிருந்தன. முதல் பிரிவு முகப்புரையையும் இரண்டாவது பிரிவு நடவடிக்கையையும் கொண்டிருந்தது. தலைமை தாங்கிய அலுவலரின் பெயர், கூட்டம் கூடிய இடம், நேரம், சட்டத்தை இறுதி வடிவில் வரைந்தளிக்க அமர்த்தப்பெற்ற குழுவினரின் பெயர்கள் ஆகியவைகளை முகப்புரை அளித்தது. பின் நடவடிக்கையெடுக்கப்பெற்ற பிரச்சினைபற்றிய அறிக்கையொன்று வெளியிடப்பட்டது. இதன் பின் நடவடிக்கை அறிவிக்கப்பட்டது. ஆவணத்தின் முடிவில், எடுத்துக்கொண்ட நடவடிக்கை செனெட் சபையின் கட்டளையாக இருந்தால் இதைச் சபையின் முடிவென்பதையும், (Senatus consultum) நடவடிக்கை நிருவாகியொருவரின் தடையாணைக்குள்ளானல் இதைப் பயன்படுத்திய நிருவாகியின் பெயரையும் குறிப்பிட்டது. தடையாணைக்குள்ளான நடவடிக்கை சபையின் முடிவு (Senatus anetoritas) எனப் பதிவு செய்துகொள்ளப்பட்டது. எடுத்துக்கொண்ட நடவடிக்கையைச் சம்பந்தப்பட்டோருக்கு அனுப்பி வைப்பதுடன் சபையின் பிரேரணையின் படியொன்றைக் கருவூலத்தின் பாதுகாப்பில் வைப்பதும் சபைத் தலைவரின் கடமைப் பொறுப்பாகும். சீசரின் சட்டங்களில் ஒன்றாகிய, 59ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி, செனெட் சபையின் நடைமுறைகள்பற்றிய (அலுவல் முறை) அறிக்கைகள் வெளியிடப்பட வேண்டுமென்பதாகும்.

உரோமன் செனெட் சபையில் அலுவல் நடைமுறைகள் தற்காலச் சட்டமியற்றும் நிறுவனங்களின் நடைமுறையில் குறிப்பிடத்தக்க அளவில் மாறுபடுகின்றன. தற்காலச் சட்டசபைகளில் பெருமளவிலான பணிகளைச் சபையின் நிலையான அல்லது தனிமுறையிலான குழுக்கள் ஏற்றுச் செய்கின்றன. இவை விரிவான ஆய்வுகளை நடத்தி இதன் பயனாகப் பெற்ற தகவல்களின் அடிப்படையில் சபையின் நடவடிக்கைக்கு இவை பரிந்துரை செய்கின்றன. உரோமானியர்கள் நடைமுறையில் குழு முறையைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. தற்காலச் சட்டசபைகளில் முக்கியமான குழுக்கள் இருக்கின்றன. இவைகளின் உறுப்பினர்களைச் சபைத் தலைவர் தெரிவு செய்கிறார். உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தவும் சட்ட ஆக்கத்தை இயக்கவும் இது தலைவருக்குப் பெரும் செல்வாக்கை அளிக்கிறது. உரோமானிய செனெட் சபைத் தலைவருக்குச் சபையைக் கட்டுப்படுத்த இத்தகைய வழிகள் கிட்டவில்லை. மேலும் உரோமில் நன்கமைக்கப்பெற்ற கட்சி

கள் இருக்கவில்லை. சபைத் தலைவர், எடுத்துக்காட்டாக, அமெரிக்கப் பிரதிநிதிகளின் சபைத் தலைவரைப்போல், ஒரு கட்சியின் தலைவருமல்லர். குறிப்பிட்ட திட்டம், கட்சிக்குழு, ஒன்று பட்ட செயல் ஆகிய கட்சி அரசாங்கத்தின் செயல்முறைகளை அக்காலத்திய உரோமானியர் அறிந்திலர்.

நிருவாகி ஒருவரால் கூட்டப்படும்பொழுது செனெட் சபை கூடலாமென்பதிலிருந்து இது தற்காலப் பாராளுமன்றங்களிலிருந்து வேறுபடுகிறது. செனெட் சபை சட்டமியற்றும் மன்றமாகச் செயற்படாமல் அறிவுரையளிக்கும் சபையாகச் செயல்பட்டது இந்நிலைக்குச் காரணமாகும். அறிவுரை எப்பொழுது தேவைப்படுமென்பதை நிருவாகியே முடிவு செய்தார். செனெட் உறுப்பினர்கள் சபையில் இருந்ததால் இத் திட்டம் வசதியாகச் செயற்பட்டது. சபையின் பணிகளுக்கிணங்க இதன் தலைவர் இதன் அலுவல் நடைமுறை வரையறை செய்தார். இக் காலம் போல் இதைச் சபையே நிருணயிக்கவில்லை. செனெட் சபை உறுப்பினர்கள் சட்டங்களைக் கொண்டுவரும் உரிமை பெற்றிருக்கவில்லையென்பதையும், பேசுமாறு அழைக்கப்பட்டாலன்றிப் பேச இயலாதென்பதையும், தக்க நேரத்தில் தலைவர் விவாதத்தை நிறுத்திவிடலாமென்பதையும் இவரால் ஏற்க இயலாது. பிரேரணையைச் சபையில் வைக்க இவர் மறுக்கலாமென்பதையும் இக் கோட்பாடு தெளிவாக்குகிறது. இருப்பினும், இக் கட்டுப்பாடுகளில் பெரும்பாலானவை நடைமுறையில் செயலற்றிருந்தன. சபையைக் கூட்டுமாறு நிருவாகியை வலியுறுத்த செனெட் சபை பயனுறுதிமிக்க விதிமுறைகளைக் கையாண்டது. ஆகவே, நடைமுறையில் சபையின் ஒத்துழைப்பைப் பெறுமல் எந்த நிருவாகியும் ஆட்சி செய்ததில்லை. கருத்தளவில் மறுக்கப்பட்ட, சட்டங்களைக் கொணரும் உரிமையைக்கூட சபை சுற்றிவளைத்துப் பெற்றதெனலாம். ஒரு நெகிழ்வான முறையைப் பின்பற்றி செனெட் சபை சிக்கலான அலுவல்களை அறிவாற்றலோடும் ஒழுங்காகவும், அமைதியாகவும் செயலாற்றியது வியப்புக்குரியதாகும். இதற்கான அலுவல் நடைமுறையைக் குழு தயாரிக்கவில்லையென்பதை நாம் முன் கவனித்தோம். ஆனால், சிக்கலான எல்லாப் பிரச்சினைகளும் முதன்முறையாகச் சபையிலேயே எடுத்துக்கொள்ளப்பட்டன. மேலும், முக்கியமான பிரச்சினைகளில் முடிவு காண மிகக் குறைந்த காலமே இதற்களிக்கப்பட்டது. பொது விவகாரங்களை அமைதியாகச் செயற்படுத்தத் தேவையென நாம் கருதுகிற பாராளுமன்ற நிறுவனங்கள் எதுவும் உரோமில் இல்லை. திட்டவட்டமான அலுவல் செயல்முறை எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. சபையில் ஒரு குறை நிறைவெண் இயல்பாகத் தேவைப்படவில்லை. பல பிரேரணைகள் சபையின் கருத்தாய்

விற்கு ஒரே சமயத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கலாம்; சபையின் கருத்தாய்விற்குக் கான்சலால் கொண்டுவரப்பட்ட பிரச்சினையை விட்டுவிட்டு இதற்கு முற்றிலும் வேறுபட்ட பிரச்சினையொன்றை உறுப்பினர் விவாதத்தை இவரால் தடை செய்ய முடியாதிருந்தது நிலையை மேலும் மோசமாக்கியது. பிரேரணைகள் பெரும்பாலும் எழுதிக்கொள்ளப்படவில்லை. ஒரு கூட்டத்தின் அலுவலர் சார்புடைய குறிப்புகள் வைத்துக்கொள்ளப்பெறவில்லை. சபைத் தலைவரின் நினைவாற்றலையும் தனிப்பட்ட உறுப்பினர்களின் குறிப்புகளையும் சபை நம்பியிருந்தது. இறுதியாக, பத்து டிரிபியூன்களில் யாராவது ஒருவர் தடையாணையால் குறுக்கிட்டு செனெட் சபையின் நடவடிக்கையைப் பயனற்றதாக்கிவிடலாம். அடிக்கடி சபையைக் கூட்டுவதாலும், உறுப்பினரில் பெரும்பாலோர் ஆட்சி இயல் அனுபவமுடையவர்களாக இருந்ததாலும், அனுபவத்தைப் பயன்படுத்திக்கொள்ளும் விருப்பத்தாலும் சபைக்கு அறிவுரை வழங்கியவர்களின் அறிவாற்றலலாலும், நாம் மேலே குறிப்பிட்ட குறைபாடுகள் அகற்றப்பெற்றன.

செனெட் சபையின் அதிகாரங்கள் சபையின் பெட்ரிசிய உறுப்பினர்கள் பெற்றிருந்த அதிகாரங்களைப்பற்றி முன் பார்த்தோம். இவ்வுரிமைகளில் ஒன்றான, பெட்ரிசியர்களின் அதிகாரத்தின்மீது வாக்களிக்கும் உரிமையை கி. மு. 339ஆம் ஆண்டுச் சட்டம் நீக்கியது. இத்தோடு இவ்வுரிமையின் தனிச் சிறப்பியல்புகளும் நீங்கின. பெட்ரிசியர்களிலிருந்து இடைக்கால நிருவாகி ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, குடியரசின் குழப்பமான இறுதிக் காலத்தில், ஓர் அரசியல் சிறப்புரிமையாக இருந்தது. எல்லா வகைகளிலும் அரசாங்கத்தின் தொடர்ச்சியான செயற்பாட்டிற்குச் செனெட் சபை பணியாற்றியது.

பொதுமக்களின் அவைகளோடும் நிருவாகிகளோடும் இச்சபை கொண்டிருந்த தொடர்பு படிப்படியாகப் பெரும் மாற்றத்திற்குள்ளாகியது. நிருவாகப் பதவியின் ஆதிக்க காலத்தில் நிருவாகி செனெட் சபையின் தலைவர், அமைச்சர் என்ற நிலையில் சற்றே உயர்ந்து விளங்கினர். சட்ட ஆக்கத்தின் பெரும் அளவு செனெட் சபையின் பொறுப்பாயிற்றேயன்றி கொமிசியாவின் பொறுப்பாக இருக்கவில்லை. மக்கள்சபை முடிவு செய்ய வேண்டியவைகளைக்கூட செனெட் சபை விவாதித்து, இறுதி வடிவில் மக்கள்சபையின் ஏற்பிற்கு விட்டது. இருந்தபோதிலும், குடியாட்சியில் பொதுமக்களின் அவைகளோடு இச்சபையின் நடவடிக்கை கொண்டிருந்த தொடர்பை வழக்காறுகள் உறுதிப்படுத்தின. செனெட் சபையின் கட்டளை சட்டத்தின் தரத்தை எட்டவில்லை. இஃது ஒரு சட்டத்தை விலக்கமுடியாது. சட்டத்தின் பிரிவுகளை இது மீறினால் செல்லாமல் போய்விடும். எனினும்

பொதுமக்களுடைய சபைகளின் சட்டங்களுக்கு செனெட் சபை விளக்கமளிக்கலாம். இவைகள் எடுத்துக்கொள்ளாத நடவடிக்கை களை செனெட் சபை எடுத்துச் செயற்படுத்தலாம். இப்படிச் செய்வதால் செனெட் சபை கொமிசியாவின் சட்டப்படியான உரிமைகளைக் கவர்ந்துகொண்டதுபோல் தோன்றியது. ஏனெனில், டிரிபியூன் தடையாணையால் குறுக்கிடவில்லையென்றால் செனெட் சபையின் நடவடிக்கை மக்களுக்கு ஏற்புடையதெனக் கொள்ளலாம்.

இதனுடைய செயற்பாடு மூன்று துறைகளில் சிறந்து விளங்கியது. அவை சமயம், நிதி, வெளி விவகாரம் ஆகும். இயல்பான சமய விவகாரங்கள் சமயத் தலைவரிடமும், குருமார்களிடமும் விடப்பட்டன. ஆனால், ஒழுங்காக நடைபெறக்கூடிய சமய இயல்புடைய, விளையாட்டு விழாக்கள் போன்ற செயல்கள் நிருவாகியின் பொறுப்பில் விடப்பட்டன. அரசின் நல்வாழ்வு கடவுளர்களின் ஆதரவைப்பற்றி நின்றது. எனவே, இயல்புமீறிய வகையில் கடவுளர்கள் விருப்பத்தைக் காட்டியபொழுதும், சமயத் துறையில் பெருமாற்றம் செய்யவேண்டியபொழுதும், இவைகள் அரசியல் முக்கியத்துவம் பெற்றமையால் செனெட் சபையின் அறிவுரையை நாட வேண்டியதாயிற்று. இதுபற்றியே, அருநிகழ்ச்சிகள் தோன்றியபொழுதும், புதிய சடங்குகள் புகுத்தப் பட்டபோதும் அல்லது சமயச் சடங்குகள் ஒழுங்குபடுத்தப்பட்ட போதும் செனெட் சபையோடு கலந்தாராயப்பட்டது.[1] இயல்பாக, இவ் விவகாரங்கள் நிருவாகிகளிடம் விடப்படும்; இவைகளைத் தக்க சமய நிறுவனங்களின் ஆய்விற்கு நிருவாகி விடுவார்; இவ்வாய்வின் முடிவுகளின் அடிப்படையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அருநிகழ்விற்கான காரணங்கள் ஆராயப்பட்டு, பலியிட்டுப் படைத்தல், விழாக்கள் எடுத்தல் ஆகியவைகளால் அகற்றப்பெற்றன. பண ஒதுக்கீட்டுக் கட்டுப்பாட்டினால் செனெட் சபை இயல்பான சமய விவகாரங்களின் செயலாட்சி மீது அதிகாரம் செலுத்தியது.

குடியரசில் பொதுநிதி இயலின் செயலாட்சி ஓர் அரசியலமைப்புப் பிரச்சினையென்பதைவிட ஓர் ஆட்சி இயல் பிரச்சினையெனலாம். பணத்தைப் பெற்றுக்கொண்டு, பொது நிதியிலிருந்து செலவிடும் உரிமை நிருவாகியின் மிகப் பழைய உரிமையாகும். இந்த உரிமையை ஓர் அளவு இவர் செனெட் சபையிடம் விட்டு வைத்தார். நிருவாகி விருப்பிலேயே அடிக்கடி இத்தகைய விவகாரங்களை செனெட் சபையின் ஆய்விற்கு விட்டார். இவ்வாறு

[1] Gell. iv. 5, 1 f.

செய்ததால் சபையின் அறிவுரையைப் பெற்றதோடு அதன் ஆதரவையும் இவர் தேடிக்கொண்டார். நிருவாகியின் வழக்க மான சிறப்புரிமைகளைக் கவர செனெட் சபைக்கு உதவிய அதே விளைவாற்றல்கள் இதிலும் செயற்பட்டன. ஆயுட்கால உறுப் பினர் பதவியைப் பெற்றிருந்த செனெட்டர்களைக் குறுகிய பதவிக் காலத்தைப் பெற்றிருந்த நிருவாகிகள் எதிர்த்து நிற்க முடிய வில்லை. நிதியைப் பொறுத்தவரையில் செனெட் சபையின் அத்துமீறுகைக்கு இரண்டு தனிப்பட்ட செயல்கள் உதவின. தொடக்க காலத்தில் கருவூல மேற்பார்வை பணி கான்சலிட மிருந்து எடுத்துக் கீழ்நிலை அலுவலராகிய பிரீட்டரிடம் கொடுக் கப்பட்டது. கான்சலைக் காட்டிலும் பிரீட்டர் நிலையால் செனெட் சபையோடு ஒத்துப்போகும் இயல்பினராக இருந்தார். மேலும், ஐந்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்குப் பின் கான்சலின் நிதி அலுவல்களின் பெருமளவு சென்சாருக்கு மாற்றப்பட்டது. இம் மாற்றங்கள் எப்படியிருந்தபோதிலும், கான்சல் சுயேச்சையாகச் செயற்படும் உரிமையைத் தொடர்ந்து பெற்றிருந்தார். இன வாரியாகப் பண ஒதுக்கீடு செய்யாமல் மொத்தமாகப் பண ஒதுக் கீடு செய்ததால் நிருவாகி செனெட் சபைக்கு இன வாரியாகக் கொடுக்கவேண்டிய நிலை ஏற்படவில்லை. தற்காலப் பாராளுமன் றங்கள் அரசின் நிதிகளின்மீது செலுத்தும் கட்டுப்பாட்டைவிட உரோமானிய செனெட் சபையின் செயலாட்சி முழுமையற்றதாக வும் உறுதியற்றதாகவும் இருந்தது. படைக்காகவும், பொது விளையாட்டுகளுக்காகவும், பொதுப்பணிகளுக்காகவும் செனெட் சபை பண ஒதுக்கீடு செய்தது. திறை விதிப்பிற்கு இச் சபை அதிகாரமளித்ததோடு மாநிலங்கள் அளிக்க வேண்டிய திறைத் தொகையை நிருணயித்தது. அரசு நிலக் கட்டுப்பாடு பற்றிய தகராறு செனெட் சபைக்கும் மக்களின் அவைகளுக்கும் தொடர்ந் திருந்து வந்துள்ளது. அக் காலத்தில் மக்களாட்சி அல்லது செல்வர் ஆட்சியின் போக்கிற்கேற்ப மக்கள் அவைகளின் செல் வாக்கு மாறியது.

போரை அறிவிக்கவும் அமைதி உடன்படிக்கை செய்வதற்கு மான இறுதியான உரிமை மக்களிடம் நிலைபெற்றிருந்தது. இருப் பினும், நடைமுறையில் இவ்விரண்டு பிரச்சினைகளையும் செனெட் சபை முடிவுசெய்தது. முதலில் செனெட் சபையை முன்னரே கலந்துகொள்ளாமல் ஒரு கான்சல் இத்தகைய முக்கியமான பிரச்சினைகளைக் கொமிசியா முன் கொண்டுவரும் பொறுப்பை எடுத்துக்கொள்ளமாட்டார். உடன்படிக்கை அல்லது போர் அறிவிப்பில் முடிந்த எல்லா அரசதந்திரப் பேச்சுவார்த்தைகளை மெய்யாகவே செனெட் சபை நடத்தியது. வழக்கமாக இப் இப் பேச்சுவார்த்தைகளெல்லாம் செனெட் சபைக்கும் தொடர்

புடைய அரசின் தூதருக்குமிடையில் நடைபெற்றன; அல்லது செனெட் சபையின் ஆணைக்குழுவிற்கும் தொடர்புடைய மக்களின் அரசாங்கத்திற்கும் இடையே நடைபெறும். திட்டவட்டமான முடிவை எட்டியதும் நடவடிக்கைக்காக முடிவு மக்கள் முன் வைக்கப்படும். தொடக்க காலத்தில் உரோமிற்கு அருகில் போர்கள் நடந்தபோது போரை நடத்தியதில் செனெட் சபை பெரும் பங்கேற்றுச் செயற்பட்டது, பிற்காலத்தில், போர்கள் தொலைவில் நடந்தபொழுது போரின் மீதான விரிவான கட்டுப்பாடு இயலாது போயிற்று. இருந்தபோதிலும் போரை நடத்திய படைத் தலைவர்கள் இதன் விருப்புகளை எதிர்நோக்கினர். படைப்புடைப்பெயர்ச்சிபற்றிய அறிக்கைகள் சபைக்குத் தவறாமல் அனுப்பப்பட்டன. போர் வினைக்காகப் பண ஒதுக்கீடு செய்தல், படைக்கலன்கள் அளித்தல். வெற்றி அணிவகுப்பிற்கு அனுமதியளித்தல் போன்றவைகளில் களத்திலிருந்த படைத்தலைவர்களைக் கட்டுப்படுத்துவதற்கு செனெட் சபை பயனுள்ள ஒரு வழிமுறையைக் கண்டது.[1]

உரோமானியக் குடியுரிமையின் விரிவாக்கத்திற்கு மக்களின் இசைவு தேவைப்பட்டது. ஒரு குடியேற்றத்தை நிறுவ மக்களின் இசைவோடு ஒரு சட்டமும் தேவைப்பட்டது. இருப்பினும், செனெட் சபையின் கட்டளையால் ஓர் இலத்தீன் குடியிருப்பை நிறுவலாம். குடியேறுபவர்களின் எண்ணிக்கையையும், இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒதுக்கப்படவேண்டிய நிலத்தின் அளவையும் இக் கட்டளை முடிவு செய்யலாம். இத்தாலியின் விவகாரங்களின் பொதுவான கட்டுப்பாட்டை கான்சலும் செனெட் சபையும் பகிர்ந்துகொண்டன. இத்தாலியைத் தாக்குதல்களிலிருந்து பாதுகாத்தலும் எல்லைக்குள் அமைதியைப் பேணலும் கான்சலின் பொறுப்புகளாக இருந்தன. மத்திய அரசாங்கத்தின் நலன்களைப் பாதுகாத்தலும் குறிப்பிட்ட நிகழ்வுகளில் நீதி வழங்குவதற்கான ஏற்பாடு செய்தலும் செனெட் சபையின் கடமைகளாக இருந்தன. அரசுத் துரோகம், சதி, கலகம் அல்லது ஆட்சி எதிர்ப்புப் புரட்சி ஆகியவைகளைச் சமாளிக்கவும், புலனாய்வு செய்யவும் தண்டனை விதிக்கவும் இறைமை அதிகாரத்தோடு ஒரு நிருவாகியை செனெட் சபை அமர்த்தி அனுப்பி வைத்தது. இதே முறையில், தல ஆட்சியில் கட்டுப்படுத்த முடியாத குற்றப்பரவல் தடை செய்யப்பட்டது. இரண்டு சமூகங்கள் தகராறுக்குட்பட்டால் தகராறுகளைத் தீர்க்கும் பொருட்டு செனெட் சபை உறுப்பினரில் ஒருவரை அமர்த்தியது. உரோமுக்கு அடங்கி நடக்காத சமுதாயங்கள் நிலையைத் தெளிவுபடுத்தப் பிரதிநிதிகளை உரோமுக்கு

[1] Liv. xiii. 2, 34.

அனுப்பவேண்டும். இவர்களுடைய விளக்கங்கள் திருப்தியாக இல்லையெனில் குறிப்பிட்ட சமுதாயங்கள் தண்டிக்கப்பட்டன.[1]

மாநிலங்களின் அமைப்பில் செனெட் சபை பெரும் பங்கு பற்றியது. ஆனல், மாநில சாசனம் ஒன்று வரையப்பட்டவுடன் இதன் கட்டுப்பாடு முடிவிற்கு வந்துவிடவில்லை. வழக்கமாக ஆண்டின் தொடக்கத்தில் கான்சுலர் மாநிலங்களாக இருக்க வேண்டியவைகளையும் பிரிட்டோரிய மாநிலங்களாக இருக்க வேண்டியவைகளையும் செனெட் சபை முடிவு செய்துவிடும். அதன் பின், கான்சல்களும், பிரீட்டர்களும் தம்முடைய மாநிலங்களுக் காகச் சீட்டுக் குலுக்குவர்; அல்லது இப் பொருள்பற்றி நட்பு முறையில் உடன்பாட்டிற்கு வருவர். சில வேளைகளில் தேர்தலுக் குப் பின் முடிவுசெய்யப்பட்டது; ஆனல், இம் முடிவு ஆண்டு முடிவதற்கு முன் செய்யப்பட்டது.[2] கான்சல்கள் தேர்ந்தெடுக்கப் படுவதற்கு முன்னரே கான்சுலர் மாநிலங்களை யாருக்கு ஒதுக் கலாமென்பதை முடிவு செய்ய வேண்டுமென செம்ப்ரோனிய (Lex Sempronia) சட்டம் இதற்கு முன்னிருந்த ஏற்பாட்டில் ஒரு மாற்றத்தைப் புகுத்தியது. அரசியல் நண்பர்களை ஆதரிப்பது அல்லது அரசியல் எதிரிகளைத் தண்டிப்பதிலிருந்து இதைத் தடுத்தது. தேர்தல் நடந்த பின் பிரிட்டோரிய மாநிலங்கள் ஒதுக்கப்பட்டன. கி. மு. 81-ல் கோர்னிலியா சட்டம் (Lex Cornelia) மாநிலங்களுக்குப் புற நிருவாகி முறையை உறுதியாக நிறுவியது. ஆனல், மாநில ஆளுநர்களை அமர்த்துவதில் செனெட் சபைக்கான பங்குப் பணியைப்பற்றி முக்கியமான மாற்றம் எதையும் செய்யவில்லை. கி.மு. 52-ல் நிறைவேறிய பாம்பிய சட்டம் (Lex Pompeia), உரோமில் ஒருவர் பிரீட்டராகவோ கான்சலாகவோ செயலாற்றியதற்கும் மாநிலத்தில் ஆளுநர். பதவியை ஏற்பதற்கும் ஐந்தாண்டுக் காலம் இடைவெளி இருக்க வேண்டுமென விதித்தது. மாநிலங்களுக்கு ஆளுநர்கள் செல்வ தற்குச் சற்றுமுன் கான்சுலர் அல்லது பிரிட்டோரியா மாநிலங்கள் பெயர் சூட்டப்படவேண்டுமெனவும் இச் சட்டம் கட்டளையிட்டது; அதாவது உரோம் நகரில் இவர்களுடைய பதவிக்காலம் முடிந்த பின் நான்காண்டுகளுக்குப் பின்னரே இவர்களுக்குரிய மாநிலங் களின் பெயர் குறிப்பிடப்பட வேண்டுமென்பது இவ் விதியின் பொருளாகும். மாநிலங்கள் ஒதுக்கியளிக்கப் பெற்றபின், பல மாநிலங்களுக்குப் படைகளையும் பணத்தையும் ஒதுக்கீடு செய்வ தற்கான கட்டளையை செனெட் சபை பிறப்பித்தது. மாநில மக்களின் மனக்குறைகள் செனெட் சபைக்கு அனுப்பிவைக்கப்

[1] Liv. xxvii. 38.
[2] Liv. xxiv. 43, 9.

பட்டன. மாநிலத்தின் ஆட்சியில் இது தலையிடவில்லையெனினும், மாநில முறையீட்டைச் சாதகமாக ஆராய்ந்தபொழுது மாநில ஆளுநர்களின் ஆணைக்குமேல் இதன் நடவடிக்கை மேலோங்கிச் செயற்பட்டது.

உரோமோடு போர் தொடுத்த மக்களோடு உடன்படிக்கை செய்துகொள்வதற்கு மக்களின் இசைவாணை தேவைப்பட்டது. உரோமானியர்களின் பெயரில் வெளிநாட்டோடு நேச உடன்பாடு ஒன்று செய்துகொள்வதற்கும், ஓரிடத்தில் காப்பாட்சியை ஏற்கவும், வெளிநாட்டதிபருக்கு அரசரெனப் பட்டமளிக்கவும் அல்லது அவரை உரோமானியர்களின் நண்பராக்கிக் கொள்ளவும் செனெட் சபை தகுதித்திறன் பெற்றிருந்தது. உரோமானியர்களைப்பற்றி அல்லது உரோமானிய அலுவலர்களைப்பற்றி வெளியரசுகள் செனெட் சபையிடம் முறையிட்டன. இதேபோல் கோரிக்கைகள் அல்லது வேண்டுகோள்களை செனெட் சபை வெளிநாடுகளுக்கனுப்பியது. பகை அல்லது நட்பு நாடுகளிலிருந்து தூதுக் குழுக்கள் உரோமிற்கு வந்தன. பொதுச் செலவில் நட்பு நாடுகளின் பிரதிநிதிகள் நகரில் வரவேற்கப்பட்டனர். பகை நாட்டிலிருந்து வந்த தூதுக்குழுவின் அறிக்கையை செனெட் சபை கேட்க விரும்பினால் நகருக்கு வெளியே ஒரு கூட்டம் நடத்தப்பட்டது. இதற்கு இணங்கவில்லையெனில் தூதர்கள் உடனே இத்தாலியைவிட்டு வெளியேறவேண்டும். நட்பு நாட்டின் தூதுக் குழுவின் கருத்தை செனெட் சபை கேட்கவேண்டிய நாளில், தூதுவர்களுக்கென ஒதுக்கப்பட்ட குயூரியாவிற்கருகிலுமான ஓரிடத்திற்கு இவர்கள் அழைத்துச் செல்லப்பெற்று, பின் நிருவாகியால் செனெட் சபைக்குள் அழைத்துச் செல்லப்பெற்று இலத்தீன் மொழியில் ஓர் அறிக்கை வெளியிட அனுமதிக்கப் பெற்றனர். குறிப்பிட்ட காலத்திற்குப் பின் கிரேக்க மொழியும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன் பின் செனெட் சபை உறுப்பினரால் இவர்கள் வினவப்பட்டனர். விவாதத்தின்போது சபையிலிருந்து வெளியேறி பின் சபையின் முடிவைக் கேட்கச் சபைக்குத் திரும்பினர். சில சமயங்களில் தூதர்களோடு கலந்து பேசி அறிக்கை தர செனெட் சபை ஒரு குழுவை அமர்த்தியது. வெளிநாடுகளுக்குத் தூதுக் குழுக்களை அனுப்ப செனெட் சபை அதிகாரமளித்தது. இத் தூதுக் குழுக்களின் எல்லா உறுப்பினர்களும், வழக்கமாக மூன்று உறுப்பினர்களும், செனெட் சபையின் உறுப்பினராக இருந்தனர். குறிப்பாக இரண்டு சூழ்நிலைகள் முதலாம் நூற்றூண்டில் வெளி விவகாரங்களில் செனெட் சபை பெற்றிருந்த செல்வாக்கைக் கொள்ளை கொண்டன. ஒன்று, தொடக்க காலத்தில் உரோமானியர்களோடு அரசியல் செயல்திற உறவு கொண்

டிருந்த மக்கள் இப்பொழுது உரோமானியக் குடிமக்களாயினர். இவர்களை உரோமானிய அலுவலர்கள் ஆட்சி செய்தனர். இரண்டு, போர் வினைகள் உரோமிலிருந்து வெகு தொலைவில் நடைபெற்றமையால் உடன்படிக்கை செய்துகொள்வது செனெட் சபையால் இயலாது போகவே, செனெட் சபையைக் கலக்காமல் பேச்சுவார்த்தை நடத்துவது படைத் தலைவர்களுக்கு எளிதாகத் தோன்றியது. மேலும், சல்லா, சீசர், பாம்பே போன்றவர்களும் சூழ்நிலைகள் ஏற்குமாறு அனுமதித்த அதிகாரங்களும், காலத்தில் இருந்த படைத் தலைவர்களுக்கு அளித்த இயல்புமீறிய அதிகாரங்களும் இந்த முடிவிற்கு வழிசெய்தன.

பெரிய பொது நெருக்கடி நேரங்களில் பல்வேறு இயல்பு மீறிய நடவடிக்கைகளை செனெட் சபை எடுத்தது. பெரும் குழப்பநிலை அறிவிப்பு அல்லது பொதுத் துக்க அறிவிப்பு, சர்வாதிகாரி ஒருவரை அமர்த்தல், செனெட் சபையின் இறுதிக் கட்டளை ஆகியவைகளை இந் நடவடிக்கைகள் கொண்டிருந்தன.

செனெட் சபையிலிருந்து எந்நடவடிக்கையையும் எதிர்பார்க்காமல் சர்வாதிகாரி ஒரு குழப்ப நிலையை அல்லது ஒரு துக்க நிலையை அறிவிக்கலாம். ஆனால், சர்வாதிகாரி பதவியில் இல்லையென்றால் இப்பொழுது அறிவிப்பை செனெட் சபை செய்யும். ஒரு குழப்ப நிலை அறிவிக்கப்பட்டபொழுது படைகள் நகரில் தங்கி இருக்கும். படையினரும் போர்க்கலன் தரித்திருப்பர். படைச் சேவைக்களிக்கப்பட்ட விலக்குகளெல்லாம் இக் காலத்தில் நீக்கப்பட்டன. ஒரு துக்க நிலை அல்லது முடக்கநிலை அறிவிக்கப்பட்டபொழுது பொதுக் காரியங்கள் தள்ளி வைக்கப்பட்டன. அப்போதைய நிலைக்குத் தேவையற்ற செயல்களெனக் கருதப்பட்டவைகளெல்லாம் கிராக்கஸ்கின் காலத்திற்குப் பின் இவ்விரண்டு நடவடிக்கைகளும் செனெட் சபையின் இறுதிக் கட்டளைக்குத் துணையாகக் கொள்ளப்பட்டன (Senatus Cansultum altimum). ஒரு குடிமகன் ஒரு படைத் தலைமையை ஏற்றபொழுதும், பொதுமக்களின் பகைவன் என அறிவிக்கப்பட்டபொழுதுமே இக் கட்டளை பிறப்பிக்கப்படடது.

உரோமானிய காமன்வெல்த் வெளியிலிருந்து அச்சுறுத்தப்பட்டபொழுதும் அல்லது அரசின் எல்லைக்குள் குழப்பம் ஏற்பட்டபொழுதும் செனெட் சபையின் வேண்டுகோளின் பெயரில் கான்சல் சர்வாதிகாரி ஒருவரை அமர்த்தினர். கடைசியாக கி. மு. 202-ல் ஒரு சர்வாதிகாரி அமர்த்தப்பெற்றார். மூன்று காரணங்கள் இப் பதவியின் மறைவை விளக்கின. பிளெபியருக்கெதிரான போராட்டத்தில் பெட்ரிசியர்கள் இதை ஒரு கருவி

யாகப் பயன்படுத்தினர்கள். ஆனல், கி. மு. 217-ல் மக்கள் போராட்டம் நடத்துவதற்கு உரிமைதரும் சட்டமொன்றை நிறை வேற்றியபொழுது இப் பதவி இவர்களிடமிருந்து நீக்கப்பட்ட தோடு இவர்களுக்குப் பயனற்றும் போய்விட்டது. கான்சல்களி லிருந்து இப் பதவியை வேறுபடுத்திக் காட்டிய இயல்புமீறிய சிறப்பதிகாரங்களெல்லாம் படிப்படியாக இவரிடமிருந்து நீக்கப்பட்டது இரண்டாவது காரணமாகும். மேலும், இரண்டாம் நூற்றுண்டின் முதல் எழுபதாண்டில், இத்தாலியில் நெருக்கடி யான நிலை ஏற்படாததாலும் செனெட் சபையின் ஆதிக்கம் தடை செய்யப்படாததாலும் இயல்புமீறிய நடவடிக்கைகளை நிறைவேற் றத் தேவை இல்லையென செனெட் சபை கருதியது. ஆனல், கிராக்கையின் (Giacchi) போராட்டங்கள், மக்களாட்சியையும் செல்வர்களையும் மோதச் செய்தன. எதிர்ப்பைத் தடுத்து நிறுத்த செனெட் சபை வழிமுறைகளை ஆராய்ந்தது. இப்பொழுது சர்வாதிகாரியை அமர்த்துவதென்பது இயல்புமீறிய சிறப்பதிகா ரங்களைப் பொதுநிலை மீறிய ஒரு நிருவாகிக்கு அளிப்பதாகப் பொருள்பெற்றது. ஆனல், இத்தகைய பதவியொன்றைப் படைப்பது இப்பொழுது செனெட் சபையின் தனிப்பட்ட சிறப் புரிமையாக இருக்கவில்லை. கி.மு. 132-ல் இந் நடவடிக்கை எடுக் கப்பட்டது. இதனல், டைபிரியஸ் கிராக்கசின் புரட்சி நட வடிக்கைளில் பங்குபற்றிய குற்றத்திற்காக ஒருவரை விசாரித்து மரணதண்டனை அளிக்கும் அதிகாரம் அந்த ஆண்டில் கான்சலாக பணியாற்றியவருக்கு அளிக்கப்பட்டது.[1] செம்புரோனியன் சட்ட (Sempronian Act) நிறைவேற்றத்திற்கு இது வழிகோலியது. மக்களால் விசாரிக்கப்படும்வரை எந்தக் குடிமகனும் மரண தண்டனைக்குள்ளாகலாதென இச் சட்டம் தடை விதித்தது. இரண் டாண்டிற்குப் பின் செனெட் சபை பொதுமக்களைப் பாதுகாக்கும் உரிமையைக் கான்சலுக்களித்தது. இவ்வுரிமையால் பெற்ற அதிகாரத்தோடு கான்சல் அவன்டையின் குன்றைக் கைப்பற்றி கிராக்கசையும் அவரைப் பின்பற்றுபவர்களில் பலரையும் கொன்ற கிராக்கன் கட்சியை கான்சல் தாக்கினர். கி.மு. 100-ல், டிரிபியூன் சாட்டுர்னினஸின் (Saturninus) ஆர்ப்பாட்டத்தின் போது டிபியூன்கள் பிரீட்டர்கள் ஆகியோரின் உதவியோடு கான் சல்கள், உரோமானிய நிருவாகியின் இறைமை பேணப்படுவதைப் பார்த்துக்கொள்ளுமாறு கட்டளையிடப் பெற்றனர். ஏழத்தாழ இதையொத்த நடவடிக்கைகள் கி.மு. 88, 83, 77, 63, 62, 52, 49, 48, 47, 43 ஆகிய ஆண்டுகளில் எடுக்கப்பட்டன. செனெட் சபையின் கட்டளைப்படி நிருவாகிகள் இச் சிறப்பு அதிகாரத்தைப் பயன்

[1] Plat. Ti.Gr. 20, Val. Max. iv. 7, 1.

படுத்தி மக்களிடம் முறையிடும் சிறப்புரிமையை மறுத்துக்குடிமக்களுக்கு மரணதண்டனை விதித்தனர்.[1] இந்த நடவடிக்கைகள் 123ஆம் ஆண்டின் செம்ப்ரோனியச் சட்டத்திற்கு முரண்பட்டவைகளாகும். இவைகளின் அரசியலமைப்புத் தன்மையை மக்கள் கட்சி ஏற்கவே இல்லை. சிசரோ புகுத்திய மாறுபாடுகளும் முந்திய நடவடிக்கைகளைப் போலவே இருந்தன. ஏனெனில், செனெட் சபை இறுதி நீதிமன்றமாகச் செயற்பட்டு, குடிமக்கள் மீது மரணதண்டனை விதிக்கும் அதிகாரம் பெற்றிருந்ததால் சபையின் கட்டளை வாயிலாகக் கான்சல்களுக்கு அதிகாரமளிக்கவும் மரணதண்டனை விதிக்கவும் செயல்திறம் பெற்றிருந்தது. எனவே, திட்டமான நடவடிக்கை தேவைப்படவில்லை. முதல் நிகழ்வில் இது தகுதி பெற்றிருந்தால் இது தண்டனையை விதித்திருக்காது. செனெட் சபையின் இறுதிக் கட்டளையின் அரசியலமைப்பிற்குட்பட்ட தன்மையே பெரும் தகராறுக்குரிய பொருளாகும். மெய்யாகவே, அரசாங்கத்தின் இரு பொருத்தமற்ற கோட்பாடுகளை இப்பிரச்சினை மோதச் செய்தது. ஒன்று மற்றொன்றைவிடச் சிறிய அல்லது பெரிய அளவில் பல்வேறு காலங்களில் மேலோங்கிச் செயற்பட்டது. மேலும், அரசின் பாதுகாப்பிற்கென அரசியலமைப்பிற்கு அப்பாற்பட்ட தலையாய அதிகாரத்தை எப்பொழுது ஏற்பதென்பதை முடிவுசெய்யும் உரிமை செனெட் சபைக்கே உரியதெனக் கூறியது. தலையாய அதிகாரத்தின் இருப்பிடம் செனெட் சபையென உரிமை கொண்டாடியது. இவைகளில் முதலில் குறிப்பிட்ட கருத்து மறுக்கப்படவில்லை. மற்றக் கருத்துகள் பற்றிய செனெட் சபையின் நிலையைப் பல்வேறு வரலாற்று ஆய்வுகள் ஆதரிக்கின்றன. இறப்பாலோ வேறு காரணங்களாலோ தலைமை நிருவாகப் பதவி காலியானால் இறைமை முதறிஞரைச் (Patres) சென்றடையும். மேலும், கி. மு. 217 வரையிலும், பொதுப் பாதுகாப்பிற்காகக் குடிமக்களின் உரிமைகளை எப்பொழுது விலக்கி வைக்கலாமென்பதை முடிவு செய்யும் உரிமையை செனெட் சபை அடிக்கடி செயலாற்றியது. இதன் முடிவிற்கேற்பச் சர்வாதிகாரி ஒருவரை அமர்த்துமாறு கான்சலை அறிவுறுத்தியது. இந்த அதிகாரத்தை இஃது இழந்துவிட்டதெனப் பொருள்படாது. செனெட் சபை நிலைப்படுத்திய இக்கோரிக்கைக்கெதிராக மக்களின் விருப்பே நாட்டின் சட்டமெனும் மக்களாட்சிக் கோட்பாடு வலியுறுத்தப்பட்டது. மக்கள் கட்சியின் இடையறாச் சாதனைகள் காலப்போக்கில் இக்கோட்பாட்டை ஏற்க வற்புறுத்தின. "மக்கள்" என்ற சொல்லிற்குக் குறுகிய பொருள் விளக்கத்தோடு கி. மு. 287-ல் இதன் முழுமையான

[1] **Abbab. Rom. Pol. Inst. x. p. 241.**

ஏற்புப் பெறப்பட்டது. மக்களின் அதிகாரத்தை முழுமையாகப் பயன்படுத்திக்கொள்ளத் தவறியதிலிருந்து இக் கருத்து கைவிடப் பட்டுவிட்டதெனக் கருதலாகாது. மக்கள் அவையின் நடவடிக்கைக் கெதிராக செனெட் சபையின் கட்டளை நிற்கமுடியாதெனும் உண்மை தாராளமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆகவே, மேல் முறையீட்டு நடவடிக்கையை செனெட் சபையின் கட்டளை விலக்கி வைக்க முடியாதென நிலைநாட்டப்பெற்றபொழுது மக்கள் கட்சி யின் நிலை வலிமைபெற்றது. குறிப்பிட்ட தனி மனிதர்கள் அரசின் எதிரிகளானதால் குடிமக்களுக்குரிய உரிமைகளை இழந்து விடுவார்கள் என செனெட் சபையின் சிறப்புரிமைகளை எடுத் துரைத்தவர்களின் வாதம் ஒரு குதர்க்கமாகும். ஏனெனில், அரசாங்கத்திற்கெதிராக வெளிப்படையாகப் போர் தொடுக்காத வர்களையும் பொதுமக்களின் விரோதிகள் என அறிவிக்கும் உரிமையை செனெட் சபைக்கு அளித்தால் மறைமுகமாகச் சட்டத்தின் செயற்பாட்டைத் தள்ளிவைக்கும் அதிகாரத்தை அதற்களித்தது போலாகும். ஆகையால், பிரச்சினையென்பது பழைய சுயேச்சையான விருப்பம், தேவை போன்ற பிரச்சினை களாகவே இருந்தன. இது பல்வேறு அரசியல் கோட்பாடுகளால் முடிவு செய்யப்படலாம். குறிப்பிட்டவர்கள் ஒரு நிகழ்வில் செயற்பட்டனர் அல்லது செயற்படுவர் என அறிவிக்கும் செனெட் சபையின் செயலானது மக்களுக்கெதிரான செயலென நாம் இங்குக் குறிப்பிடவேண்டும். இத்தகைய பிரேரணைகளை வழக்க மாகச் செனெட் சபை நிருவாகிகளுக்கெதிராகச் செயற்படுத் தியது. இவை செனெட் சபையின் இறுதியான கட்டளைக்கு முன்னிருந்தன. குறிப்பிட்ட நிருவாகியின் வலியுறுத்தலின் பேரில் இவை இயற்றப்பெற்றனவெனினும் செனெட் சபையின் விருப்பத்தைக் குறிப்பிட்டன.

# 9. மக்களவைகள்

## (Popular Assemblies)

உரோமானியர்கள் மூன்று வகையான மக்களவைகளைப் பெற்றிருந்தனர். இவை கொமிசியா, கொன்சிலியா, கோன்டியோனிஸ் ஆகும். எல்லாக் குடிமக்களின் அவை கொமிசியா ஆகும். அதாவது இவைகளனைத்தும் உரோமானியர்களின் அவைகளாகும். இவைகளின் பார்வைக்கு வைக்கப்படுகின்றவைகளையொட்டி நடவடிக்கைகள் எடுப்பதற்காக இச் சபைகள் முறையாக அதிகாரம்பெற்ற அலுவலர்களால் கூட்டப்படும். கொமிசியா அவைகளில் குயூரியேட்டா, செஞ்சுரியேட்டா டிரிபியூட்டா என மூன்று அவைகள் இருந்தன.

மக்களில் ஒரு பகுதியினரின் அவைகளாகக் கொன்சிலியம் இருந்தது. ஆகவே, கொன்சிலியம் பிளெபில் என்னும் அவை சட்ட ஆக்க மன்றமாகவும் தேர்தல் சபையாகவும் செயற்பட்டது.

கொமிசியாவினின்றும் கொன்சிலியாவிலிருந்தும் கோன்டியோனிஸ் வேறுபட்டிருந்தது. இந்த அவைக்கு மக்கள் தனிப்பட்ட முறையில் வந்தனர். குயுரியா, செஞ்சுரி இனம் போன்ற அரசியல் பிரிவுகளின் உறுப்பினர் என்ற முறையில் இவர்கள் இச் சபைக்கு வரவில்லை. எனவே, குடிமையின் அடிப்படையில் இவர்கள் அழைக்கப்படவில்லை. சில செய்திகளைப் பெற்றுக் கொள்வதற்கு மட்டுமே இவர்கள் அழைக்கப்பெற்றார்களேயன்றி இவர்களால் வேறு எந்த நடவடிக்கையும் எடுக்க இயலாது. தலைமை தாங்கும் அலுவலர்களின் இசைவோடு தனிப்பட்ட குடிமக்கள் இச் சபையில் உரை நிகழ்த்தலாம். இச் சபைகளை நிருவாகி கூட்டலாமென்பதில் இவை கொமிசியா, கொன்சியியாவை ஒத்திருந்தன. கொன்சிலியம் அல்லது கொமிசியா கூடுவதற்கு முன் கொன்டியோ (Contio) அழைக்கப்படும். இதன் அறிக்கையையும் விவாதத்தையும் செயற்படுத்துவதற்கெனப் பின் முறையானதொரு நிறுவனத்தின் முன் வைக்கப்படும். இவை

அரசின் நிறுவனங்களின் ஒரு பாகமாக இருக்கவில்லை. ஆனால், அரசியல் கூட்டங்களைத் தனிப்பட்டவர்கள் கூட்டமுடியாதிருந்த பொழுது இவை குறிப்பாகச் செல்வாக்குப் பெற்றிருந்தன.

**கோமிசியா குயுரியேட்டா** (Comitia Curiata)

முடியாட்சிக் காலத்தில் அரசர் அல்லது இடைக்கால அரசர் மக்களை ஒன்றாகத் திரட்டி அவர்கள் முன் கருத்தாய்விற்குச் சில பொருள்களை வைக்கும் உரிமை பெற்றிருந்தனர். கொமிட்டம் என்ற இடத்தில் கூட்டம் வழக்கமாக நடைபெற்றது. இக் கூட்டத்தில் மக்கள் ஏற்பையும் மறுப்பையும் சமிக்கை வாயிலாகத் தெரிவித்தார்கள். முதலிலிருந்த குறிப்பிட்ட சில விவகாரங்களில் திட்டமாக வாக்கெடுப்பு முறை இருந்திருக்க வேண்டுமென்பதற்குச் சான்ருக இவை முறைப்படி பிரிக்கப்பட்டிருந்ததைக் குறிப்பிடலாம். தனிப்பட்ட குயுரியாக்களில் முடிவைத் தெரிவித்திருக்க வேண்டும். குயுரியாக்களின் பெரும்பான்மை வாக்களிப்பு சபை முழுவதின் முடிவை நிருணயித்தது. குறிப்பிட்ட காலங்களில் அறிவிப்புகளைக் கேட்க இச் சபை கூடும். தேவை ஏற்படும் பொழுது இச் சபை கூடும். அரசரைத் தேர்ந்தெடுக்க மேல் முறையீட்டைக் கேட்க, அறிவிப்புகளைக் கேட்க அல்லது பிரேரணைகளின் மீது வாக்களிக்க இச் சபை கூட்டப்படலாம். இச் சபை சட்டஆக்கத்தில் அக் காலத்தில் ஈடுபடவில்லையெனினும், பெரும் முக்கியத்துவம் வாய்ந்தவைகளைப்பற்றி அரசர் இச் சபையின் இசைவைப் பெறவும், இறைமை அதிகாரத்தைப் பெற்றபோதும், போர்வினையை அறிவித்தபோதும் மக்களின் இசைவைப் பெறவேண்டியதும் அரசரின் கடமையாக இருந்தது. குலங்கள் பற்றிய விவகாரங்கள் அடிக்கடி இச் சபையின் ஆய்விற்குக் கொண்டுவரப்பட்டன. புதிய குலங்களை குயுரியாவில் சேர்த்தல், குடிமை உரிமையை மீண்டும் அளித்தல், குடும்பத் தலைவரை மற்றொரு குடும்பத்தில் சார்புநிலைக்குத் தாழ்த்திவிடல் போன்றவை இவைகளில் சிலவாகும். குலங்களைப் பாதித்தவைகளை இச் சபை குடியரசுக் காலத்தில் ஆராய்ந்தது. இச் சபையில் பிளெபியர்கள் சேர்த்துக்கொள்ளப் பெற்றூர்களாவென்பது ஐயப்பாட்டிற்குரியதாகும். குயுரியோ மாக்சிமஸ் பதவிக்கு இவர்கள் தகுதி பெற்றிருந்ததையும் சில சமயச் சடங்குகளில் இவர்கள் பங்கையும் கருத்தில்கொண்டு இவர்கள் இச் சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கலாமெனத் தெரிகிறது. இருப்பினும், குடியாட்சியின் இடைக்காலம் வரை இவர்கள் வாக்களிக்கும் உரிமையைப் பெறவில்லையெனலாம்.[1]

[1] Herz. 1. 1014.

சபை கூடும் நாளைப் பதினேழு நாள்களுக்குமுன் அறிவிக்க வேண்டும். இறைமை அளிக்கும் சட்டத்தை நிறைவேற்றும் பொழுது இச் சபையின் தலைவராக ஒரு நிருவாகி இருந்தார். மற்றச் சமயங்களில் சமய முதன்மைக்குழுத் தலைவர் சபைக்குத் தலைமை தாங்கினர். சபையின் நடவடிக்கைகள் பெட்ரிசிய அதிகாரத்தைப் பெற்றாலன்றிச் செல்லா. குடியரசின் பிற்காலத்தில் இச் சபையின் சிறப்புக் குன்றியது. முப்பது லிக்டர்ளும் மூன்று புட்குறி பார்ப்பவர்களும் இச் சபையைப் பிரதிபலித்தனர். முடியாட்சிக் காலத்தில் இச் சபை நிறைவேற்றிய அரை குறையான அரசியல் பணிகளைக் கொமிசியா செஞ்சுரியேட்டா ஏற்றுச் செயற்படுத்தியது. குயுரியேட்டா குல விவகாரங்களைத் தொடர்ந்து கவனித்து வந்தது.

**கொமிசியா செஞ்சுரியேட்டா** (Comitia Centuriata)

இச் சபையின் அமைப்பைப்பற்றிய சில செய்திகளை முன்னர் பார்த்தோம். கி. மு. 88-ல் சல்லா பழைய செர்வியன் அமைப்பை உயிர்ப்பித்தார். ஆனால், திருத்தியமைக்கப்பட்ட சபை மீண்டும் நிலைப்படுத்தப்பட்டது.

தோற்றத்தால் இச் சபை படையோடு தொடர்புகொண்டதாகும். ஆகையால், இறைமையதிகாரம் பெற்றிருந்த நிருவாகிகளால் அல்லது அதிகாரம்பெற்ற கீழ்நிலை அலுவலர்களால் அல்லது உயர் நிருவாகியால் அழைக்கும் அதிகாரம் பெற்றவர்களால் இச் சபை கூட்டப்பட்டது. மக்களை நூற்றுவர் பிரிவுகளில் கூடுமாறு அழைக்கும் சென்சாரின் அதிகாரம் ஒரு விதி விலக்கேயாம். சென்சார் கூட்டப்பட்ட கூட்டம் முறையாகக் கூட்டப்படாததாகையால் வாக்கெடுப்பு நடைபெறவில்லை. கான்சல்கள், சென்சார்கள் அல்லது பிரீட்டர்கள் போன்ற நிருவாகிகளைத் தேர்ந்தெடுக்கக் கூடும் இந்தச் சபைக் கூட்டத்திற்கு கான்சல் தலைமை வகித்தார்.

இச் சபை ஆண்டிற்கு 190 நாள்கள் கூடியதாகச் சான்றுகள் உள்ளன. விடுமுறை நாள்களிலும் நீதிமன்றக் கூட்டங்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்த நாள்களிலும் இச் சபை கூடாது. வழக்கமாக இச் சபை காம்பஸ் மார்டிரியஸ் என்ற இடத்தில் கூடும்.[1]

சபை கூடும் நாளிற்குப் பதினேழு நாள்களுக்கு முன்னரே சபைக் கூட்டங்கள்பற்றிய அறிவிப்புக் கொடுக்கப்படவேண்டும். சபை கூடும் நாளையும் கூடும் நேரத்தையும் ஓர் ஆணையால்

[1] Gell. xv. 27, 5.

நிருவாகி வெளியிடுவார். சபை, சட்டஆக்க மன்றமாகக் கூடு மானால் மசோதாவின் வாசகத்தையும், தேர்தல் நடத்தும் பொருட்டுக் கூடினால் வேட்பாளர்களின் பெயர்ப் பட்டியலையும், நீதிமன்றமாகக் கூடுமானால் குற்றஞ்சாட்டப்பட்டவர்களின் பெயர்களையும், குற்றங்களையும் அந்த ஆணையில் குறிப்பிட வேண்டும்.

சபைக் கூட்டத்திற்காக முடிவு செய்யப்பெற்ற நாளின் நள்ளிரவில் சபையின் தலைவர் புட்குறி பார்ப்பவருடன் சென்று சகுனம் பார்ப்பார். புட்குறியின் விளக்கம் பாதகமாக இருந்தால் கூட்டம் தள்ளிவைக்கப்படும். அப்படியே, சகுனம் சாதகமாக உள்ளதென்று முடிவுசெய்தாலும் மற்றொரு நிருவாகி பாதகமான சகுனங்களைப் பார்த்ததாகக் கூறிச் சபைக் கூட்டத்தை ஒத்தி வைத்துவிடலாம்; அல்லது தீய விளைவுகளைக் குறிப்பிடும் சகுனங் களைக் கண்டாலும் கூட்டம் தள்ளிவைக்கப்படும். இத்தகைய நிகழ்வுகளைச் சமாளிக்க உரோமானியர் கையாண்ட முறைகளை யும் தலைமைதாங்கிய நிருவாகியின் பொறுப்புகள்பற்றியும் நாம் முன் பார்த்தோம்.

கூட்டம் நடத்துவதற்குத் தடையொன்றுமில்லை என்றால் நிருவாகி, உதவியாளர் வழியாகக் குடிமக்களைக் கூட்டத்திற்கு வருமாறு அழைப்பாணை விடுத்தார். பறையறைந்து கூட்டம் பற்றிய அறிவிப்புச் செய்யப்படும். கூட்டம் நடக்கும் இடத்தில் சிவப்புக்கொடி ஒன்று பறக்கவிடப்பட்டது. கொமிசியாவின் கூட்டத்திற்கு முன் கொன்டியோ (Contio)வின் கூட்டம் ஒன்று கூட்டப்பெறும். இக் கூட்டத்திற்குக் கொமிசியாவைக் கூடுமாறு அழைத்த நிருவாகி தலைமை வகிப்பார். பலியிட்டு வழிபாடு நடத்திய பின் சபை முன் விவாதத்திற்குவர இருந்த அலுவல்பற்றி அறிவிக்கப்பட்டது. பின் அது விவாதிக்கப்பட்டது. கொன்டியோ வின் கூட்டத்திற்குப் பின், மக்கள் செஞ்சுரியாகக் கூடுமாறு நிருவாகி அறிவித்தார். இதற்குப் பின் வாக்களிக்கும் உரிமையற்ற வர்கள் சபையிலிருந்து விலகிக்கொண்டனர். குடிமக்கள் செஞ்சுரி வரிசை முறையில் அதற்குரிய தலைவர்களின்கீழ் அமர்வர்.

கி.மு. 241-க்கு முன் பதினெட்டு செஞ்சுரியின் வீரர்கள் முதலில் வாக்களித்தனர். எல்லா செஞ்சுரிகளுமே ஒரேசமயத்தில் வாக்களித்தனர். வாக்களிப்பின் முடிவும் அறிவிக்கப்பெற்றது. பின் முதல் இரண்டாம் செஞ்சுரிகள் வாக்களித்தன. இதேபோல் ஒரு குறிப்பிட்ட பிரேரணைக்கு ஆதரவாகப் பெரும்பான்மை கிட்டும்வரை வாக்களிப்பு நடைபெற்றது. மெய்யாக, இதேபோல் முதல் வகுப்பு வீரர்களும் அவர்களுடைய பணியாள்களும் வாக்

களித்தனர். அப்படியானல், வாக்கெடுப்பைத் தொடரவேண்டியதில்லை. ஏனெனில் முதலாம் வகுப்பைச் சேர்ந்த 80 செஞ்சுரிகளும் குதிரைப்படையைச் சேர்ந்த 18 செஞ்சுரிகளும் சபையில் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றிருந்தன. ஆனல், 241ஆம் ஆண்டுச் சீர்திருத்தத்தின்படி வீரர்கள் முதலில் வாக்களிக்கும் உரிமையை இழந்துவிட்டனர். இருந்தபோதிலும் வகுப்புகளின் வரிசை முறைகள் தொடர்ந்து பின்பற்றப்பட்டன. சீட்டுக் குலுக்கி முதல் வகுப்பில் செஞ்சுரி தெரிவு செய்யப்பெற்று வாக்களிக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டது. மற்ற வகுப்புகளின் வாக்களிப்பிற்கு முன் இச் செஞ்சுரியின் வாக்களிப்பு அறிவிக்கப்பெறும் சிறப்புரிமை பெற்றிருந்தது. வாக்களிப்பிற்கென ஒரு தனி இடம் ஒதுக்கப்பெற்றிருந்தது. அங்கிருந்து வாக்காளர்கள் ஒரு குறுகிய வழியாகச்செல்லும்பொழுது வாக்களித்தனர். குடியரசின் தொடக்க காலத்தில் குடிமக்கள் தங்கள் வாக்கை வாய்மொழியால் தெரிவித்தனர். ஆனல், இரண்டாம் நூற்றண்டின் இறுதியில் வாக்களிப்பு மறைவாக இருந்தது. சட்டமியற்றப்படும் கூட்டங்களில் உறுப்பினருக்குத் "தீர்மானத்தை ஆதரித்து" (தீ.ஆ.) என்ற எழுத்துகளிட்ட ஒரு வாக்குச் சீட்டும், தீர்மானத்தை எதிர்த்து (தீ.எ.) என்ற எழுத்துகளிட்ட வாக்குச் சீட்டும் அளிக்கப்படும். வாக்கெடுப்பின்போது தீர்மானத்தை ஆதரிப்பவர்களும், தீர்மானத்தை எதிர்ப்பவர்களும் இவைகளைப் பயன்படுத்துவர். நிருவாகிகளைத் தேர்ந்தெடுக்கும் கூட்டங்களில் ஒவ்வொரு வாக்காளருக்கும் ஒரு வெற்றுச்சீட்டு அளிக்கப்பட்டது. இதில் தம் விருப்பிற்குரிய வேட்பாளரின் பெயரை எழுதித் தெரிவித்தனர். சபை நீதிமன்றமாக அமர்ந்தபொழுது, உறுப்பினர் இரண்டு சீட்டுகளைப் பெற்றனர்; ஒன்றில் 'வி' (விடுதலை செய்க) என்ற எழுத்தும் மற்றென்றில் 'த'(தண்டனை செய்க) என்ற எழுத்தும் குறிப்பிடப்பட்டிருக்கும். வாக்காளர் தக்க சீட்டைப் பயன்படுத்துவர். செஞ்சுரியின் பெரும்பான்மை அந்தச் சபையின் வாக்கை முடிவுசெய்தது. சபையின் முடிவுகளைச் சபைத்தலைவர் அறிவித்தார். தேர்தலைப் பொறுத்தவரை இவர் சில உசித அதிகாரங்களைப் பெற்றிருந்தார். சூரிய மறைவிற்கு முன் சபைக் கூட்டம் கலைக்கப்படவேண்டும்.

மூன்று வேறுபட்ட நோக்கங்களுக்காகக் கொமிசியா செஞ்சுரியேட்டா கூடியது. உயர் நிருவாகிகளைத் தேர்ந்தெடுக்க, சட்டமியற்ற, மரணதண்டனை விதிக்கப்பட்ட வழக்குகளில் மேல் முறையீடுகளை விசாரிக்க ஆகிய மூன்று காரியங்களுக்காகச் சபை கூடியது. கான்சல், சென்சார், பிரீட்டர் போன்ற முறையான நிருவாகிகளையும், சட்டத் தொகுப்புநர்கள், கான்சலர், டிரிபியூன்

கள் ஆகிய சிறப்பு நிலை நிருவாகிகளையும் இச்சபை தேர்ந்தெடுக்கும். தொடக்கத்தில், சபைத் தலைவரால் நியமனம் செய்யப்பட்டவர்களைச் சபை ஏற்கவும் மறுக்கவும் உரிமைபெற்றிருந்தது. ஆனால், சிறிது காலத்திற்குப் பின், வேட்பாளர்களின் தகுதிபற்றி தலைமைதாங்கும் நிருவாகி சிறிது உசித அதிகாரம் பெற்றிருந்த போதிலும் பல வேட்பாளர்களில் தேவையானவர்களைத் தெரிவு செய்யும் அதிகாரத்தைச் சபை பெற்றிருந்தது. கி.மு. 287-க்கு முன் தேர்தல் பெட்ரிசிய செனெட்டர்களின் ஒப்புதலைப் பெற வேண்டும். ஆனால், இந்த ஆண்டிற்குப் பின் செனெட் சபையின் ஒப்புதல் வெறும் சடங்காகிவிட்டது.

சட்டஆக்கத் துறையில், தொடக்கத்தில், இச்சபை போருக்கு வலிந்து செல்லும் அறிவிப்புச் செய்யும் அதிகாரத்தைச் செயற்படுத்தியது. இந்த உரிமை இச் சபைக்குக் குயுரியேட்டா சபையிலிருந்து மாற்றப்பட்டதாகும். இருப்பினும், குடியரசு நிறுவப்பெற்ற பின், குறிப்பிட்ட நிலையில், எப்பொருள்பற்றியேனும் சட்டமியற்றும் அதிகாரத்தை இச் சபை பெற்றது. கி.மு. 449-க்குப் பின் இந்தச் சிறப்புரிமையை இச் சபை கொன்சிலியம் பிளெபிசுடன் பகிர்ந்து கொண்டது; கி.மு. 447-க்குப் பின் பெட்ரிசியோ—பிளெபிய இன அவையுடன் இச் சிறப்புரிமையைப் பகிர்ந்துகொண்டது. ஆனால், கி. மு. 287-வரை, இவ்விரு சபைகளின்மீதும் விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளின் காரணமாக இச் சபை இத் துறையில் தம் உயர்நிலையைத் தக்க வைத்துக்கொண்டது. இதற்குப் பின், இவ்விரு சபைகளும் செஞ்சுரியேட் சபையைக் காட்டிலும் தாராளமாக இயங்க முடிந்ததாலும், இவைகளின் நடைமுறை விதிகளும் முறைகளும் எளிதாக இருந்தமையாலும், சபை கூடும் இடம் மிக வசதியாக இருந்ததாலும், சபைகளின் அமைப்பு சனநாயக முறையில் இருந்ததாலும் செஞ்சுரியேட் சபையின் முக்கியத்துவம் விரைந்து நலிவுற்றது. கொமிசியா செஞ்சுரியேட்டா நிறைவேற்றிய சட்டங்களுக்கும் இன அவைகள் நிறைவேற்றிய சட்டங்களுக்குமிடையில் தெளிவான பாகுபாடு இருக்கவில்லை. ஆயினும், போர் தொடக்க அறிவிப்பு அதிகாரமும் சென்சாருக்கு முன்னேற்பாட்டதிகாரமளிக்கும் உரிமையும் செஞ்சுயேட் கொமிசியாவின் தனிச் சிறப்பு அதிகாரங்களாகத் தொடர்ந்திருந்து வந்தன. கொமிசியாவின் சட்டஆக்க நடைமுறை பின்வருமாறு இருந்தது: கான்சல் செனெட் சபையின் கருத்தாருய்விற்கு ஒரு பொருளை வைத்தார். இதன் நடவடிக்கை தடையாணைக்குட்படாதிருந்தால் செனெட் சபையின் கட்டளையெனப் பெயர்பெற்றது; இது சபையின் அறிவுரையாகக் கருதப்பட்டது; அல்லது வேண்டுகோளாக

நிருவாகி மக்கள் அவையின் ஆதரவான கருத்தாய்விற்கு ஒரு பிரேரணை உருவில் வைக்கவேண்டும். ஒரு மசோதாபற்றிய அறிவிப்பை நிருவாகி, சபை வாக்களிப்பதற்குப் பதினேழு நாள் களுக்கு முன் தெரிவிக்கவேண்டும். இப் பதினேழு நாள் இடைக் காலத்தில் இதற்கான பெட்ரிசிய இசைவைப் பெற்றிருக்கலாம். குறிப்பிட்ட நாளில் மசோதா கொண்டியோவில் வாசிக்கப்பெற்று விவாதிக்கப்பட்டுப் பின் உடனடியாக கொமிசியா சபையில் மக்களால் வாக்களிக்கப்பட்டது. கான்சல் இது பற்றி செனெட் சபையை முன்கூட்டியே கலந்தாராய வேண்டியதில்லை. அல்லது செனெட் சபையால் பரிந்துரைக்கப்பட்ட பிரேரணையை கொமிசியா முன் கொண்டுவர இவர் கடமைப்பட்டிருக்கவுமில்லை. ஒரு மசோதாவை இவர் கொணர்ந்தால் இதன் நிறை வேற்றத்தை எதிர்க்கலாம். ஆனால், நிருவாகிகள் இத்தகைய உரிமைகளைச் செயற்படுத்தியதில்லை.

இறைமை அதிகாரம் பெற்றிருந்த நிருவாகிகள் மரண தண்டனை விதிக்கும் உரிமை பெற்றிருந்தார்கள். ஆனால், தொடக்க காலத்திலிருந்து நகரில் வசித்த குடிமக்கள் மரண தண்டனைக்குள்ளானால் மக்களிடம் மேல்முறையீடு செய்ய அனு மதிக்கப்பெற்றூர்கள். வலிரியா, வலிரியா ஹோர்டென்சியா, போர்சியே (Porciae), செம்புரோனியா போன்ற சட்டங்களால் இச் சிறப்புரிமை நீட்டிக்கப்பட்டதோடு உறுதிசெய்யப்பெற்றது.[1] மேல்முறையீட்டை செஞ்சிரியேட் கொமிசியா விசாரித்து குவெஸ்டார் அல்லது அப் பொருள்பற்றிய பொறுப்பேற்றுக் கொண்டிருந்த டிரிபியூன், முதல் விசாரணைக்கு ஒரு நாள் குறிப் பிட்டார். இக் கூட்டத்தில் குற்றச்சாட்டும் அதன் எதிர்ப்பும் விசாரிக்கப்பட்டன. இரண்டாவது விசாரணைக்கு ஏற்பாடு கள் செய்யப்பட்டன. இக் கூட்டத்தில் புலனாய்வுச் சான்றுகளைச் சேகரித்தல் தொடர்ந்தது. மூன்றாவது விசாரணைக்குப் பின் நிருவாகி முடிவையும் தண்டனையையும் அறிவித்தார். இந்த முடிவையொட்டி குற்றவாளி, விரும்பினால் செஞ்சுரியேட் அவையிடம் முறையிடலாம். குற்றவாளியா அல்லது நிரபராதியா என்பதைச் சபை முடிவுசெய்தது. தீர்ப்பை இது மாற்றியமைக்க முடியாது. ஒரு குறிப்பிட்ட நாளுக்குப் பின், கொமிசியாவில் வாக்கெடுப்பு[2] நடைபெறுவதற்கு முன் குற்றம்சாட்டப்பட்டவர் விருப்பில் நகரைவிட்டு வெளியேற அனுமதிக்கப்பட்டார். கொலை வழக்குகளும் நாட்டுத்துரோக வழக்குகளும் இச் சபையின் ஆய்விற்கு வந்தன. அரசியல் அல்லாத நடைமுறைகளை குவெஸ்

[1] Liv. x. 9, Herz. I. 1081.
[2] Abbot. xi. 259.

டார் நடத்தினர். அரசியல் வழக்குகளைப் பிரீட்டரின் தலைமையில் டிரிபியூன் நடத்தினர். குற்றத்தண்டனை நீதிமன்றங்கள் நிறுவப்பட்டதும் குவெஸ்டரிடமும் செஞ்சுரியேட் கொமிசியாவிடமும் வழக்குகள் செல்வது குறைந்தன. கி. மு. 123-ல் இயற்றப்பட்ட செம்புரோனியச் சட்டம் இந் நடைமுறையைச் சீர்படுத்தி ஓரளவிற்கு செஞ்சுரியேட் கொமிசியா மேல்முறையீட்டு நீதிமன்றமாகச் செயற்பட்டதன் சிறப்பை மீண்டும் நிலைநிறுத்தியது. இருப்பினும் சல்லா, நிரந்தர நீதிமன்றங்களை நிறுவியபொழுது இச் சபை இதன் நீதிவழங்கும் பணியை முழுமையாக இழந்துவிட்டது. இந் நீதிமன்றங்களில் குற்ற விசாரணைகள் எளிதாகவும் திருப்தியாகவும் நடைபெற்றதாலும், இவைகளின் மிகக் கடுமையான தண்டனை நாடுகடத்துவதாக இருந்ததாலும் செஞ்சுரியேட் கொமிசியாவிற்கு மேல்முறையீடுகள் கொண்டு செல்லப்படவில்லை.

### கொமிசியா டிரிபியூட்டா (Comitia Tributa)

பழங்கால வரலாற்றாசிரியர்கள் இன அவை பெட்ரிசியர்களுக்கோ பிளெபியர்களுக்கோ நிறுவப்பெற்றதாகக் கூறவில்லை; மேலும், கொமிசியா டிரிபியூட்டாவிற்கும் கொன்சிலியம் பிளெபிசுக்குமிடையேயான வேறுபாடுகள்பற்றியும் குறிப்பிடவில்லை. ஒரு நிகழ்வில், பிளெபிய இனக் கூட்டத்தைக் கொமிசியா டிரிபியூட்டாவெனக் குறிப்பிட்டுள்ளதாகத் தெரிகிறது. இன அவை ஒன்றிருந்ததாகவும் இதன் கூட்டங்களிலிருந்து பெட்ரிசியர்கள் விலக்கப்பட்டிருந்ததாகவும் சில வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர். எனவே, இரண்டுங்கெட்ட நிலையில் இவ்வவை கொமிசியா டிரிபியூட்டாவெனவும் கொன்சிலியம் பிளெபிஸ் எனவும் வழங்கப்பட்டது. இருந்தபோதிலும், கொமிசியா டிரிபியூட்டாவில் கலந்துகொண்ட மக்கள், பொதுமக்கள் (Populus) என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டனர். குடியரசுக் காலத்தில் இச் சொல், குடிமக்களையும் பெட்ரிசியர்களையும் பிளெபியர்களையும் குறிப்பிட்டது. மேலும் நிருவாகிகள் தலைமைதாங்கிய இன அவையில் நிருவாகிகள் சிலர் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். இவர்களின் தேர்தலும், இச் சபையின் தலைவராக நிருவாகியொருவர் இருந்ததும் இச் சபையில் பெட்ரிசியரும் பிளெபியரும் இருந்திருக்கவேண்டுமென்பதை மெய்ப்பிக்கின்றன. ஆகவே, பெட்ரிசிய-பிளெபிய இன அவை ஒன்று இருந்திருக்க வேண்டுமென்பது உறுதியாகிறது. பிளெபிய இன அவை அமைப்பிற்குப்பின் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்குப் பின் இச் சபை தோன்றியிருக்க வேண்டும்.

இச் சபையின் அமைப்புப்பற்றிய நேர்முகச் சான்றுகள் எதுவுமில்லை. எனினும், முப்பத்தைந்து இனங்களின் பெட்ரிசியர்களும் பிளெபியர்களும் இச் சபையில் வாக்களித்திருக்கலாமெனத் தெரிகிறது.

இச் சபையின் தலைவராக ஒரு நிருவாகிச் செயலாற்றினர். கூட்டம் கூட்டப்படுவதற்கு முன் புட்குறி பார்த்தல் அவசியமாகும். உரோம் நகரில் அங்காடியில் இக் கூட்டம் நடைபெற்றது. கொமிசியா செஞ்சுரியேட்டாவில் இருந்த வாக்களிப்பு முறை இச் சபையில் பின்பற்றப்பட்டது. ஹோர்டென்சியா சட்டத்திற்குப் பின் இச் சபையின் நடவடிக்கைக்குப் பெட்ரிசியர்களின் ஒப்பிசைவு தேவைப்படவில்லை.

குவெஸ்டர் பதவி தேர்தலுக்குரிய பதவியானபோது இப் பதவிக்கானவர்களை இச் சபை தேர்ந்தெடுத்தது. இவர்களைத் தேர்ந்தெடுக்க இதுவே ஒரு முறையாயிற்று. பிற்காலத்தில் குயுருல் ஈடில்கள் இச் சபையால் தெரிவு செய்யப்பட்டனர். கீழ்நிலை நிருவாகிகளையும் சில ஆணைக்குழு உறுப்பினர்களையும் இச் சபையே தெரிவு செய்தது. இவ்வின அவை எப்பொருள் பற்றியும் சட்டமியற்றலாம். ஆயினும், இம் மூன்று பொது மக்கள் சபைகளும் எடுத்துக்கொண்ட பொருள்களின் இயல்பை வேறுபடுத்திக் காண்பது இயலாததாகும். குயுருல் ஈடில்கள் நடத்திய சில வழக்குகள் இச் சபையில் விசாரிக்கப்பட்டன.

சமயத் தலைமை முதல்வரைத் தெரிவு செய்வதற்காகக் கொமிசியா டிரிபியூட்டா மாற்றியமைக்கப்பட்டது. இது மாற்றியமைக்கப்பட்ட காலம் தெளிவாகத் தெரியவில்லை. முப்பத்தைந்து இனங்களில் பதினேழு, குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு இந்த அலுவலரைத் தேர்ந்தெடுக்க அழைக்கப்பட்டன. இந்த ஏற்பாடு ஓர் உடன்பாட்டின் விளைவாகும். சமயத்தலைமை முதல்வரின் தெரிவிற்கு இது பொதுமக்கள் சார்பை அளித்தது. இதே சபையில் இதே முறையில் குருமார் குழுவினர்களும் புட்குறி பார்ப்பவர்களும் தெரிவு செய்யப்பெற்றனர்.

**கொன்சிலியம் பிளெபிஸ் (Concilium Plebis)**

தொடக்க காலத்திய பிளெபியர்களின் அவை, பெட்ரிசியர்களின் அவையைப்போல் குயுரியா அடிப்படையில் அமைந்திருந்ததைப் பார்த்தோம். இந்த அவையின்மீது பெட்ரிசியர்கள் தம் சார்பாளர்களின் வழியாகச் சிலர் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இத்தகைய அவையொன்று உருவாவதற்கு வழி வகுத்திருக்கலாம் (471-ல்). இந்த அவையில் பிளெபியர்கள் மட்டுமே வாக்களிக்க

லாம். இந்த முறையில் மாறுதல் செய்யப்படவில்லை. கி. மு. 312 வரையில் பிளெபிய நிலக்கிழார்கள் மட்டும் இந்த சிறப் புரிமையைப் பெற்றிருந்தனர். இந்த உரிமை நிலமற்றவர்களுக் கும் 312-க்குப் பின் அளிக்கப்பட்டது. ஆனால், 304-க்குப் பின் இவர்களும் விடுதலை பெற்றவர்களும் நான்கு நகர இனங்களுக்குட் படுத்தப்பட்டனர். குலுக்கலால் நிருணயிக்கப்பட்ட இனம் ஒன்றில் லாட்டின்களும் வாக்களிக்கும் உரிமை பெற்றிருந்தனர். இச் சபையின் கூட்டம் கொன்சிலியம் எனப் பெயர் பெற்றது. இது பிளெபியர்களின் அவையாக இருந்ததால் இதன் தலைமை தாங்கும் அலுவலர்கள் டிரிபியூன்கள் அல்லது ஈடில்களாக இருந்தனர்.

டிரிபியூனின் அதிகாரம் நகருக்கு வெளியே செல்லாததால் கொன்சிலியம் பிளெபிஸ் நகருக்குள் கூடியது. வழக்கமாகக் கொமிசியத்திலும் சில சமயங்களில் காப்பிடோலிலும் இச் சபை கூடும். சபை கூடுவதற்கான குறிப்பிட்ட நாள்கள் கிடையா. பெருமளவிலான மக்கள் நகருக்கு வரும்நேரமாகிய அங்காடி நாள்களில் வழக்கமாகக் கூட்டங்கள் நடைபெறும். கூட்டங்கள் நடைபெறும் நாளுக்கு முன்னே இடம், காலம், அலுவல் ஆகியவை பற்றி அறிவிக்கப்படும்; பழங்காலந் தொட்டே அங்காடி நாளன்று கூட்டம் அறிவிக்கப்படும் பழக்கம் ஏற்பட்டது; அல்லது அதிலிருந்து பதினேழு நாள்களுக்குப் பின் கூட்டம் நடத்தப்பட் டது. முதல், இரண்டாவது அங்காடி நாள்களிலும் வாக்கெடுப்பு நடைபெறும் அங்காடி நாள்களிலும் வழக்கமாக கோன்டியோனிஸ் கூட்டங்களும் நடைபெறும்.

155ஆம் ஆண்டின் சட்டமொன்று கொமிசியாவைப்போல் கொன்சிலியத்திற்கும் அதே சமயச் சடங்குமுறைகளைப் பின்பற்று மாறு பணித்தது. இச் சட்டத்திற்குப் பிறகு கூட்டங்களை அழைப் பதற்கு முன் டிரிபியூன்கள் சகுனம் பார்க்க வேண்டும். மற்றப் பொதுமக்களின் சபைகளைப்போல் இச் சபையும் சில சமயச் சார்புடைய தடைபாடுகளுக்குட்பட வேண்டியதாயிற்று.

கொன்சிலியம் கூடுமுன் கொன்டினியோனின் கூட்டமொன்று நடைபெறும். சபைத்தலைவர் உரை நிகழ்த்துவார்; அல்லது பேசுமாறு இவரால் அழைக்கப்பட்டவர்கள் பேசுவர்.

கொன்டியோ கூட்டத்தின் முடிவில், பல இனங்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களில் இனவாரியாக வாக்களிப்பதற்காக மக்கள் கூடுவர். எந்த இனத்தோடு லாட்டினர்கள் வாக்களிக்க வேண்டுமென்பதை முடிவுசெய்யக் குலுக்கல் நடத்தப்பட்டது.

பின் குலுக்கல் முறையில் முப்பத்தைந்து இனங்களில் ஒன்றை வாக்களிக்கத் தெரிவு செய்தது. இதன் வாக்களிப்பு அறிவிக்கப் பட்டவுடன் மற்ற இனங்கள் ஒரே சமயத்தில் வாக்களிப்பில் ஈடுபடும். வாக்களிப்புமுறை செஞ்சுரியேட் அவையில் இருந்த தைப் போலவே இருந்தது. இச் சபை சனநாயக முறையில் அமைந்திருந்தது. இருப்பினும், சில கருத்துகள் தனிப்பட்ட வாக்கின் மதிப்பை உயர்த்த அல்லது தாழ்த்த முற்பட்டன. ஒரு குடிமகன் ஒரு பெரிய இனத்தில் உறுப்பினராக இருந்தால் அவனுடைய வாக்கின் மதிப்புக் குறைவாக இருந்தது. கி. மு. 387-ல் படைக்கப்பட்ட நாட்டுப்புற இனங்களைவிட நகரத்தின் நான்கு இனங்கள் மிகப் பெரியதாக இருந்தன. ஏனெனில், குடியுரிமை புதிதாக அளிக்கப்பட்டதாலும் புதிய வெற்றிகளா லும் குடிமக்களின் பட்டியலில் புதிய சேர்க்கைகள் செய்யப் பட்டன. பழைய நாட்டுப்புற இன உறுப்பினர்களோடு புதிய கிராமப்புற இன உறுப்பினர்களையும் ஒப்பிடும்பொழுது கிராமப் புறத்தினர் நன்மை பெறாத நிலையில் இருந்தனர். நாட்டுப்புற வாக்கின் மதிப்பைக் குறைக்கவும் நகர வாக்கின் மதிப்பை அதிகரிக்கவும் ஓர் இயல்பு முற்பட்டது. நகரில் இருந்தவர்கள் கூட்டத்திற்கு எளிதில் வர இயலவில்லை.

டிரிபியூன்களைத் தேர்ந்தெடுப்பதற்கு முதன்மையாக இச் சபை நிறுவப்பட்டது. இவர்களை எப்பொழுதுமே கொன்சி லியம் தேர்ந்தெடுத்தது. இதே சபை பிளெபிய ஈடில்களையும் தேர்ந்தெடுத்தது. கிராக்கஸ் சகோதரர்களின் காலத்தில் நில ஆணையர்கள் கொன்சிலியம் அவையால் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தி சுவையானதொன்றாகும். இந்த ஆணையர்கள் அரசு நிலப் பகிர்வுக்காக அமர்த்தப்பெற்றனர். இது பிற்காலத்தில் பெரும் சிறப்புப் பெற்றது. பாம்பேக்கு இயல்பு மீறிய அதிகாரங்களை அளித்த காபினியன் (Gabinian) மானிலியன் (Manilian) சட்டங் கள் இச் சபையால் நிறைவேற்றப்பட்டது இச் சிறப்பிற்குக் காரணமாகும்.

கி. மு. 449ஆம் ஆண்டின் வலிரியோ ஹோரேசியன் சட்டம், 339ஆம் ஆண்டின் பியுபிலியன் சட்டம், 287ஆம் ஆண்டின் ஹோர் டென்சியன் சட்டம் ஆகியவைகளின் பயனாகக் கொன்சிலியம் பிளெபிஸ் ஒரு சுயேச்சையான சட்டஆக்க மன்றமாகியது. கி. மு. 287-க்குப் பின் இச் சபையின் சட்டங்களுக்குப் பெட்ரிசியர் களின் ஒப்பிசைவு தேவையற்றுப் போயிற்று. ஆயினும், பெருமள விற்கு செனெட்சபை சட்டஆக்கப் பணியில் இதன்மீது தொடர்ந்து கட்டுப்பாடு செலுத்தியது. போர் தொடங்குவதுபற்றிய அறி

விப்பைத் தவிர இச் சபை சிசரோவின் காலத்தில் எப்பொருள் பற்றியும் சட்டமியற்றும் தகுதித்திறன் படைத்திருந்தது. தனிப் பட்டவர்களுக்கு நிலம் ஒதுக்கியளித்தல், ஆணைக்குழுவினரை அமர்த்தல், பதவிக்கால நீட்டிப்புப் போன்ற ஆட்சி இயற் பிரச்சினைகள் இன அவைகளில் கொண்டுவரப்பெற்றன. அதிலும் இவைகள் கொன்சிலியத்திற்கேயன்றி கொமிசியாவிற்குக் கொண்டுவரப்படவில்லை. பிற்காலத்தில் சென்சார்கள் செய்து கொண்டிருந்த ஒப்பந்தங்களைப் பிளெபியரவை தள்ளுபடி செய் தது. இவ் வழியில் நிருவாகிகளின் உரிமைகளையும் செனெட் சபையின் அதிகாரத்தையும் இச் சபை கவர்ந்துகொண்டது. இதன் சட்டங்கள் பிளெபிசிட்டா என்று பெயர் பெற்றன. நாம் குறிப்பிட்ட மூன்று சட்டங்களும் இதன் நடவடிக்கைகளுக்குச் சட்டத்தின் திறனை அளித்தன. எனவே இச் சபையின் நடவடிக்கைகள் சட்டங்களாக மதிக்கப்பட்டன.

குற்ற விசாரணை அதிகார வளர்ச்சி எச்சூழ்நிலைகளில் வளர்ச்சியடைந்ததென்பதை முன் பார்த்தோம். இருப்பினும் ஒருவகை வழக்குகள் இங்குக் குறிப்பிட வேண்டியவைகளாகும். கி. மு. 454ஆம் ஆண்டின் சட்டம், இரண்டு ஆடுகளுக்கும், முப்பது எருதுகளுக்கும் மிகாமல் தண்டம் விதிக்கும் அதிகாரத்தை எல்லா நிருவாகிகளுக்கும் அளித்தது. பிற்காலத்தில் இத் தண்டத் தொகை பணமதிப்பில் 3020 அசெஸ் என நிருணயிக்கப்பட்டது. நிருவாகியின் முடிவையொட்டிய மேல்முறையீட்டை மக்கள் கொமிசியா டிரிபியூட்டாவிற்குக் கொண்டு சென்றனர். ஆனல் டிரிபியூன் அல்லது பிளெபிய ஈடிலால் விதிக்கப்பட்ட தண்டத் தொகைபற்றிய மேல்முறையீட்டைக் கொன்சிலியம் பிளெபிஸ் கேட்டு முடிவுசெய்தது. இருந்தபோதிலும், பிற்காலத்தில் நிறுவப்பெற்ற குற்றவழக்கு விசாரணை மன்றங்கள் இச் சபையின் நீதிப் பணிகளைக் கவர்ந்துகொண்டன.

# 10. மாநிலங்களின் அமைப்பும் அரசும்

பியூனிக் போர்களின் முடிவின்போது சிசிலியின் பெரும்பகுதி உரோமின் மேலாட்சிக்குட்பட்டது. இதனுல் சில ஆட்சிப் பிரச்சினைகள் எழுந்தன. புதிய சார்பு நாடுகள் கடல் கடந்திருந்ததாலும் அரசியல் குழப்பநிலைக்குட்பட்டிருந்ததாலும், கார்த்தேஜோடு நட்புறவு கொண்டிருந்ததாலும் இவைகளை இத்தாலிய படைத்துறை அமைப்போடு சேர்த்துக்கொள்ள உரோம் விரும்பவில்லை. ஆகவே, படைச் சேவைக்குப் பதிலாக இந் நாடுகளிலிருந்து திறை வசூலிக்கப்பட்டது. மாவட்ட நகரங்கள் தனிமுறை இறைமை அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. இதற்கென மாநில ஆட்சித்துறைகள் நிறுவப்பெற்றன. ஹெலனிக் நகரங்களுக்கான ஆட்சிமுறை ஸ்பெயினுக்கும் பொருத்தமானதாக இருந்தது. மேற்கில் உரோமானிப் பேரரசு விரைவாகவும் எளிதாகவும் நிலைபெற்றது. இத்தாலியின் பயனுடைய அரசாங்கத்திற்கு உரோம் டிரனியன் கடலின்மீது செயலாட்சி செலுத்த வேண்டிய அவசியமேற்பட்டது. இதே போன்றதொரு ஏடிரியாட்டிக் கொள்கையை உருவாக்க உரோம் தயங்கியது. கிழக்கத்திய ஐரோப்பாவில் உரோமிற்கிருந்த நிரந்தர நலன்களையும் செனெட் சபை ஏற்க மறுத்தது. இச் சிறிய நலன்கள் பின் உரோமானியப் பேரரசாக மலர்ந்தன. தொடர்ந்து நடந்த போர்களின் விளைவாக கிரீசும், மாசிடோனியாவும் உரோம் வசமாயின. ஆயினும், உரோம் இவைகளைப் பேரரசோடு இணைத்துக்கொள்ள விரும்பவில்லை. கி. மு. **146** வரையில் காப்பாட்சியிலிருந்த இடர்களையும் பெரும் செலவையும் உரோம் பொருட்படுத்தவில்லை. பின், மாசிடோனியா ஒரு மாநிலமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. கார்த்தேஜ் நாடோடான தொல்லை மிகுந்த தொடர்புகள் இறுதியில் போரில்போய்முடிந்தன; இதன் விளைவாக கார்த்தேஜ் இணைத்துக்கொள்ளப்பட்டது. இது

காறும் தொலைவுப் பிரச்சினைகளாக இருந்த ஆசிய ஆளுநர்கள், காலப்போக்கில் உரோமானியர்களின் வணிகத் தொடர்பு கிழக்கே நிலைபெற்றபொழுது, இவர்கள் தனி முதன்மை பெற்றுர் கள். ஆசியாவில் ஏற்கெனவே உரோம் அனடோலியாவில் சிறிது ஆதிக்கம் பெற்றிருந்தது. பேரரசின் ஆதிக்கம் இதன்வழி ஆசியாவில் பரவத் தொடங்கியது. பின் அனடோலியாவின் வழியாக பெர்காமஸ் முடியரசை உரோம் ஏற்றுக்கொண்டதும், மித்திராடட்டசுடனை போர்களுக்குப் பின் (கி. மு. 65-63), பாம் பியஸ் கிழக்குப் பகுதியை ஒருங்கமைத்ததும் காப்பாட்சி முறைக்குச் சாவுமணியாக அமைந்தன. மிலேச்சர்களின் தாக்குதல் களிலிருந்து உரோமானியப் பேரரசைப் பாதுகாக்கும்பொருட்டு மேற்கே ஸ்பெயின் பகுதியிலும் வடக்கே கால் (Gaul)பகுதியிலும் நிலையான எல்லையை வரையறை செய்யவேண்டிய பொறுப்பு தனிப்பட்ட தலைவர்களிடம் விடப்பட்டது. குடியரசு முடிவிற்கு வந்தபொழுது உரோமானிய மாநிலங்களின் எண்ணிக்கை பதினைந்தாக இருந்தது.*

அரசுகளின் கூட்டம் மாநிலமாகவும், கிரேக்க, பொனிசிய நாகரிகங்கள் நுழைந்த இடங்களில் இவைகள் நகரங்களாகவும், ஆனல் ஸ்பெயினிலும் காலிலும் இவை கான்டன்களாகவும் இனங் களாவுமிருந்தன. இயற்கையான அரசியல் ஒருங்கிருப்புகள் வழக்கமாக அரசுப் பிரிவுகளாக அமைந்தன. ஆயினும், வலிமைமிக்க அரசியல் கூட்டுகள் தகர்க்கப்பட்டன. மாநில அரசு மையங்களின் எண்ணிக்கைக் கட்டுப்பாடுகளும் அமைப் பில் முக்கிய இடம்பெற்றன. ஆகவே, சிசிலியில் இன ஒன்றி யங்களின் எண்ணிக்கை 68[1] ஆகவும், ஆசியாவில் 44 ஆகவும், டிரான்ஸ் ஆல்பையின் காலில் 64 ஆகவும் இருந்தன. இக் கூட்டங்களில் சுயேச்சையான, கூட்டரசுகளும் இடம்பெற்றிருந் தன. இந்த இன அமைப்புகள் ஒரு மாநிலத்திண் ஆட்சி எல்லைக் குள் இருக்கவேண்டுமென்பதில்லை. சுயேச்சையான நகரங்களும் சுயேச்சையான நகரக் கூட்டமைப்புகளும் இவைகளின் உரிமை களைப் பொறுத்தவரையில் சிறிதளவு வேறுபட்டிருந்தன. சுயேச்சையான நகரக் கூட்டமைவுகளின் உரிமைகள் ஓர் உடன் படிக்கையில் இடம்பெற்றிருந்தன. இந்த உடன்படிக்கைகள் குடியரசின் தொடக்க காலத்தில் செனெட் சபையாலும் மக்களா லும் செய்யப்பட்டவைகளாகும். குடியரசின் பிற்பட்ட காலத்தில்

* சிசிலி, சார்டினியா,அருகிலும் தொலைவிலுமான ஸ்பெயின், இல்லிரிக்கம், அக்கியாவோடு கூடிய மாசிடோனியா, ஆஃபிரிக்கா, ஆசியா, காலியா. நர்போனி சஸ், காலியசிஸ் அல்பினு, பித்தினியா, கிரீச்சோடு சேர்ந்த கிரீனி, சிலிசியா, சிரியா,

[1] Pliny. H. N. iii. 88.

இவ்வுடன்படிக்கைகள் செனெட் சபையால் அல்லது மக்களால் செய்யப்பெற்றன; இவ்வுடன்படிக்கை அளித்த காப்புறுதி நிலையானதாகும். இதை மீறிய செயல் போருக்கு ஒப்பாகும். மாறாக, ஒரு சாசனம் எந்த நேரத்திலும் நீக்கப்படலாம். இந்த இருவகை நகரங்களின் உரிமைகள் இத்தாலிய நகரங்களின் உரிமைகளை ஒத்திருந்தன. அதாவது, இவைகளின் நிதிகளை இவைகளே கட்டுப்படுத்திக்கொள்ளவும், இவைகளின் நிலங்களைத் தாராளமாகப் பயன்படுத்திக்கொள்ளவும், இந்த நிலங்களுக்கு வரி செலுத்தாதிருக்கவும், இவற்றிற்கெல்லாம் மேலாக இவைகளின் சட்டங்களைப் பயன்படுத்திக்கொள்ளவும், இந் நகரங்கள் உரிமை பெற்றிருந்தன. இந்த இருவகை நகரங்களும் முற்றிலும் ஆளுநரின் ஆட்சி எல்லைக்கு வெளியே இருந்தன. இச் சிறப்புரிமைகளைப் பெற்றிருந்த நகருக்குள் ஆளுநர் ஒரு விருந்தினராகச் செல்லலாம். சிரியாவில் ஆன்டியோக், மாசிடோனியாவில் தெசலோனிகா போன்ற மத்திய நகரங்கள் ஆளுநர்களின் வசதிக்காகத் தங்கி வசிக்குமிடங்களாக இருந்தபோதிலும், இவர் இந் நகரங்களின் மீது ஆட்சி செலுத்தினும் இந் நகரங்களின் குடிமக்கள்மீது ஆட்சி செலுத்தவில்லை. மாநில ஆட்சியிலிருந்து தொலைவில் எல்லைப்புறங்களில் நட்பு அரசர்கள் இருந்தனர். சுயேச்சையான நகரங்களையும், நட்பு நகரங்களையும் விட இவர்கள் சுதந்திரமாக இருந்தனர். ஏனெனில், தேவைப்பட்டபோது இவர்கள் உரோமிற்கு மிகக் குறைவாகவே உதவினர்; மேலும் இவர்களுடைய நடவடிக்கைகள் முற்றிலும் அழிக்கப்படவில்லை. ஆனல், உரோமின் நட்பரசர்களின் பட்டியலில் இவர்கள் தனி வகையினராகக் காட்டப்பட்டுருப்பதற்கு இவர்கள் அரசரோடு செய்துகொண்ட உடன்படிக்கையைப் போலன்றிக் குடியரசோடு செய்துகொண்ட உடன்பாடு என்றென்றும் நிலையானதென்பதே இதற்கு முதன்மையான காரணமாகும்.[1] ஆனல், அரசரோடு செய்துகொண்ட உடன்பாடு சொந்த முறையிலானது; அரசப் பதவிக்கு அடுத்தடுத்து வருவோர் புதிப்பித்தாலன்றி இஃது என்றென்றும் செல்லும் தகுதி பெறாது.

இவ்விரு வகைகளிலும் இடம்பெறாத அரசுகள் உரோமிற்கு உட்பட்ட அரசுகளேயாகும். இவைகளைத் திறை செலுத்திய அரசுகளென வழங்கினர். மேல்நிலையாளருக்குத் திறை செலுத்துதல் பண்டைக்காலத்தில் கீழ்ப்படிதலுக்கு ஒரு சோதனையாகக் கருதப்பட்டது. ஆயினும், இவைகள் சாசனங்களையும் சில உரிமைகளையும் பெற்றிருந்தன. இருந்தபோதிலும், இக் காப்

[1] Festus. p- 218.

புறுதிகள் பொதுவானவைகளன்றித் தனிப்பட்டவைகள் அல்ல; மாநிலச் சட்டங்களில் மாநிலத்தை வென்ற படைத் தலைவரே வழக்கமாக இச் சட்டத்தை வரைவார்; இவருக்கு உதவியாக செனெட் சபையால் அமர்த்தப்பெற்ற பத்து செனெட் சபை உறுப்பினரான ஆணையர்கள் இருந்தனர். இக் குழுவின் தலைவரின் பெயரில் இச் சட்டங்கள் இருந்தன. வென்று கைப்பற்றப் பட்ட மாவட்டங்களை இச் சட்டம் மறுபடியும் அரசுகளாக நிறுவியது. என்றாலும் இவைகளுக்குச் சில இறுதியான உரிமைகளையும் இது கொடுத்தது; திறையின் பளுவை இது வரையறை செய்தது; பல்வேறு நகரங்களின் குடிமக்கள் எந்தக் குறிப்பிட்ட சுற்றிவரும் நீதிமன்றத்தோடு தொடர்புகொள்ள வேண்டுமென்பதையும், ஆளுநர்கள் பின்பற்றவேண்டிய ஒழுங்குமுறைகளையும் தேசிய, சர்வதேசிய ஆட்சி எல்லைகளையும் இச் சட்டம் வரைந்தளித்தது. இப் பொதுவான ஒழுங்குமுறைகளை வைத்துக் கொண்டு இவைகளின் ஆட்சித் துறையிலிருந்த சுயஆட்சி முறை பற்றியெதுவும் குறிப்பிடுவதற்கில்லை. இவைகள் பெற்றிருந்த சுதந்திரம் இவைகளின் ஆளுநரின் விருப்பையொட்டியே இருந்தது. எல்லா ஆட்சிப் பொறுப்புகளையும் ஏற்று நடத்துவதற்கு உரோம் அரசாங்கம் ஆளுநருக்குத் தேவையான உதவியாளர்களை அளிக்காததால் எந்த ஆளுநரும் நடைமுறையில் இவைகளுக்கு ஓரளவு சுதந்திரமளிக்க மறுக்கவியலாது. இவர் உணர்வொளி மிக்கவராக இருந்தால் அரசு சுதந்திரமாக இருந்ததெனக் கற்பனைசெய்து கொள்வார். அப்படியில்லையென்றால், தன்னாட்சியளிப்பதால் தம்மைக் காப்பாற்றிக் கொள்வதாகக் கருதிக்கொள்வார். கிழக்கத்திய நகரங்களைப் பொறுத்தவரை ஆளுநர்களின் புறக்கணிப்புப் பெரும் தீமையாக இருந்துள்ளது. இது வரிக் கொடுமையைவிடக் கொடியதாக இருந்தது. சிசிலியாவின் நிருவாகியின் நடவடிக்கைகளிலிருந்து நாம் இதைக் காண்கிறோம் என்று சிசரோ குறிப்பிடுகிறார்.

போரில் தோற்றவர்களிடமிருந்து பெற்ற இழப்பீட்டுத் தண்டத்தொகை பற்றிய கோட்பாட்டிலிருந்து பெற்ற கருத்தே உரோமானிய வரிவிதிப்பு முறை. சுதந்திர அரசுகளென அறிவிக்கப்பட்டவைகளிடமிருந்தும், படைச் செலவிற்கென மாநில ஆளுநர்கள் நேர்முக வரிகளை மாநில மக்களிடமிருந்தும், வென்று கைப்பற்றிய அரசுகளில் வசித்த மக்களிடமிருந்தும் வரி விதித்ததை உரோமானியர்களின் தொடக்க காலத்திய வரலாறுகள் குறிப்பிடுகின்றன.[1] படைப்பற்றாட்சிச் செலவிற்காகவும், மாநில ஆட்சிச் செலவிற்காகவும் வரி திரட்டப்பட்டதெனலாம். உரோ

[1] Tac. Hist. iv. 74.

மானியர்களே மாநில ஆட்சியை நிறுவியபோதும் இத்தகைய செலவினங்களை ஈடுகட்ட வரிவிதிப்பில் இறங்கினர். மாசிடோனியர்கள் அவர்களுடைய அரசுக்குச் செலுத்திய தொகையில் பாதியளவை மாநில ஆளுநருக்குச் செலுத்துமாறு வற்புறுத்தப் பட்டார்கள். ஆனால், ஸ்பானிய மாநிலங்களிலிருந்து பெற்ற தொகையைவிட ஆளுநர்கள் அதிகமாகச் செலவிட்டனர். ஆனால், சிசரோவின் காலத்தில் ஆசிய மாநிலங்களின்மீது மாறுபட்ட அடிப்படையில் வரிகள் விதிக்கப்பட்டன; செலவுபோகக் கையிருப்பில் பணம் அதிகமாக இருந்தது. இத்தகைய வரி விதிப்பு முறை சிசிலி, சார்டினியா, ஆகியா போன்ற இடங்களில் இருந்ததை உரோமானியர் கண்டதும் அதையே தொடர்ந்து பயன்படுத்திப் பெரும் பொருள் திரட்டினர். விளைச்சலில் பத்தில் ஒரு பகுதியை உழவர் வரியாகச் செலுத்தவேண்டுமென்பது விதியாகும். இந்த வரியோடு அரசு நிலத்திலிருந்தவர்கள் செலுத்திய வரியையும் உரோமானிய வழக்கறிஞர்கள் சேர்த்துப் பார்த்தது இயல்பேயாம். இவ்வொப்பு நோக்கிலிருந்து மாநிலங்களில் நிலக்கிழார்கள் நிலத்தை உடைமையாகக் கொள்ளவில்லையென்றும் "உரிமை"யாகக் கொண்டிருந்தார்களென்றும் விநோதமான கோட்பாட்டை வெளியிட்டனர். இந்தப் பத்தில் ஒரு பகுதி வரி விதிப்பு முறையினால் மிகையாகப் பணம் சேர்ந்தது. இம் முறை இடையிலிருந்தவர்கள் வலுக்கட்டாயமாக வரியைத் திரட்ட வழி வகுத்தது.

நிலத்தின்மீது அல்லது மனிதரின்மீது விதிக்கப்பட்ட வரி நேர்முக வரியாகத் திரட்டப்பெற்றது. ஒரு மாநிலத்தில் இருந்த நிலம் அல்லது ஒருவரின் செல்வம் ஆகியவைபற்றிய சரிநுட்பமான மதிப்பீடுகளை உரோமானியர் செய்ய முற்படவில்லை. சில மாநிலங்களில் முன்னிருந்த வரிவிதிப்பு முறை தொடர்ந்திருந்து வந்தது. விளைச்சலில் ஒரு பகுதியின் மதிப்பீட்டின் மீதான ஒரு வரி விதிப்பு முறையை உரோமானியர் ஸ்பெயினில் பின்பற்றினர்: மாசிடோனியா போன்ற இடங்களில் ஏற்கெனவே இருந்த அடிப்படையில் வரி விதிக்கப்பட்டது. நேர்முக வரிகளை வழக்கமாகக் கம்யூன்களே வசூலித்து ஆளுநரின் குவெஸ்டரிடம் கொடுத்தன.

ஒப்பந்த முறையில் இப் பதின்மைப் பண்டவரி வசூலிக்கப் பட்டது. வசூலிக்கும் முறையில் இருந்த வேறுபாடு, ஏலம் விடப் பட்ட இடம் குறிப்பிட்ட மாநிலத்திற்குள் இருந்ததா? அல்லது மாநிலம் முழுவதற்கான பதின்மைப் பண்ட வரியை உரோமில் ஏலம்விட வேண்டுமா? அப்படியானால் தலக் கம்பெனிகள் அல்லது சமூகங்கள் வசூலிப்பிற்குப் போட்டியிடலாமா? அல்லது ஒரே கம்பெனி மாநிலம் முழுவதிலும் வரி திரட்டப் போட்டியிட

லாமா? என்பவைகளையொட்டி இருந்தது. சிசிலியில் முதலில் குறிப்பிட்ட முறை செயலில் இருந்தது. இரண்டாவது முறையை ஆசியாவிற்காக கேயஸ் கிராக்கஸ் உருவாக்கினர். பிற்காலத்தில் நிறுவப்பெற்ற சிசிலியா போன்ற மாநிலங்களுக்கு இம் முறை நீட்டிக்கப்பட்டது. ஆசிய நகரங்கள் வரியை வசூலிக்கும் திறமையற்றிருந்ததே இம் முறை மேற்கொள்ளப்பட்டதற்குக் காரணமாகும். நலிந்த மாநிலங்கள் இம் முறையை வரவேற்றன. ஏனெனில் உரோம் முதலாளிகள் அருகில் இருந்தால் நெருக்கடி நேரத்தில் இவர்களிடமிருந்து கடன் கொள்ளலாம். ஆனல், இம் முறை மாநில ஆட்சிக்கும் முதலாளிகளுக்குமிடையே பெரும் கேடு பயக்கத்தக்கதொரு தொடர்பை உண்டாக்கியது. இத் தொடர்பினல் ஆசிய சார்பு நாடுகளின் அரசுகள் உரோமானியரின் ஆட்சிக் காலத்தில் அவலத் தோற்றமளித்தன. ஆசியாவிலும் மற்ற இடங்களிலும் நிலவிய இப் பதின் கூற்றுப் பண்ட வரியை கி. மு. 48-ல் சீசர் ஒழித்தார்.[1] இந் நேர்முக வரிக்கு அடுத்தபடியாகத் துறைமுக வரிகளும், எல்லை வரிகளுமிருந்தன; இவ் வரிகளைத் தனியார் கம்பெனிகள் உரோமானியப் பேரரசு முழுவதிலும் மிகப் பழங்காலத்திலிருந்து வசூலித்து வந்தன. மாநிலத் துறைமுக வரியின் விற்பனை நிபந்தனைகளைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. ஆசிய மாநிலத் துறைமுக வரிகளின் விற்பனை உரோமில் நடந்ததா? இல்லையா? என்பதும் தெளிவாகத் தெரியவில்லை. மாநிலங்களிலிருந்து திரட்டவேண்டிய மற்ற வரிகளுக்காக உரோம் அரசு பணம் செலுத்தியது. பிரீட்டருக்கும் இவருடைய பரிவாரங்களுக்கும் அளித்த தானியங்களுக்காக, சில சமயங்களில் செனெட் சபையாலும் மக்களாலும் கோரப்பட்ட இரண்டாவது பதின்மைப் பண்ட வரி போன்றவைகளுக்காகவும் உரோம் அரசு பணம் செலுத்தியது. இந்த இரண்டு நிகழ்வுகளிலும் ஏற்கத் தக்கதொரு விலையை உரோமானிய அரசு நிருணயித்தது.

அடுத்து, மாநில ஆளுநரைப்பற்றியும் இவருடைய ஊழியர்களைப்பற்றியும் நாம் பார்க்கலாம். மாநில அரசாங்கத்திற்காகத் தொடக்க காலத்தில் பிரீட்டர் பதவி நிறுவப்பெற்றதையும் பின்னர் புற நிருவாகிகள் பயன்படுத்தப்பட்டதையும் முன்னரே பார்த்துள்ளோம். மாநில ஆட்சியிலிருந்து கான்சல் பதவியையும் சல்லாகூட அகற்ற முற்படவில்லையென்பதையும் பார்த்தோம். இவைகள் தொடர்ந்து செயற்பட்டு வந்தது சில விநோதமான விளைவுகளை உண்டாக்கின. கான்சல்களுக்கு மாநிலங்களை ஒதுக்கும் செனெட் சபையின் சிறப்பதிகாரத்தை கேயஸ் கிராக்கஸ்

[1] Dio. Cass. xiii. 6.

ஒரு சட்டத்தால் நீக்கினர். கான்சலின் பணிக்கான எல்லைகளைக் குறிப்பாகப் படைத் தலைமைப் பதவிக்கு வரவிருக்கும் கான்சலுக்கு ஒவ்வொரு ஆண்டும் இச் சட்டம் முறைப்படுத்தியது. கான்சல்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பின் கான்சல்களுக்குரிய மாநிலங்களை ஒதுக்குவது செனெட் சபையின் வழக்கமாக இருந்தது. இதனால் திறமைமிக்க கான்சலுக்கு மாநிலத்தை ஒதுக்கித்தர செனெட் சபை விரும்பலாம். சபையின் நண்பர்களுக்கு நல்ல மாநிலத்தை ஒதுக்கிச் சபையின் எதிரிகளுக்கு இடர் நிறைந்த மாநிலங்களை ஒதுக்கியளித்துப் பழிவாங்கும் மனப்பான்மையும் இதற்கிருந்தது. கான்சல்களின் தேர்தலுக்கு முன் இரண்டு கான்சுலர் மாநிலங்களைப் பெயர் குறிப்பிட்டுத் தெரிவிக்கவேண்டியது சட்டப்படி செனெட் சபையின் கடமையாயிற்று. இம் முறை, பிற கான்சுலர் மாநிலங்களுக்கும் பொருந்தியது. அதாவது உரோமில் பதவிக்காலம் முடிந்ததும் கான்சல் மாநிலங்களுக்குப் புறக் கான்சுலர் ஆளுநர்களாக அமர்த்தப்பெற்றனர். கான்சுலர் மாநிலங்களுக்குரிய கான்சல்கள் பதவி ஆண்டில் மார்ச்சு மாதம் 1ஆம் நாள் பதவியேற்றனர். மாநில, படைத்துறை ஆண்டு மார்ச்சு மாதம் 1ஆம் நாள் தொடங்கியது. கி. மு. 152-க்குப் பின் பொதுப் பதவியாண்டு சனவரித் திங்கள் 1ஆம் நாள் தொடங்கியது. ஆகவே, கான்சல்கள் சனவரி 1ஆம் நாள் பதவியேற்று டிசம்பர் திங்கள் 29ஆம் நாள் பதவி விலகினர். டிசம்பர் 29ஆம் நாள் பதவி விலகி மார்ச்சு 1ஆம் நாள் மாநிலப் பொறுப்பையேற்பதெனில் இடைப்பட்ட காலத்தில் இறைமை அதிகாரம் அற்றிருக்க வேண்டிய நிலையேற்பட்டது. இம் முறைகேட்டினால் மாநில ஆளுநர் ஒருவர் தம் சொந்த உரிமையால் இரண்டு மாதங்களுக்கு மட்டும் தலைமைபெற்று அடுத்துப் பதவிக்கு வருபவரை எதிர்நோக்கி எஞ்சிய பத்து மாதங்களுக்குத் தலைமையேற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஆளுநர் ஒருவர் உரோம் திரும்பும்வரை தம்முடைய இறைமையைத் தக்க வைத்துக்கொள்ளவேண்டுமென்றும் அடுத்துப் பதவிக்குரியவர் மாநிலத்துக்கு வந்த ஒரு மாதத்திற்குப் பின்னரே பதவியிலிருந்த ஆளுநர் பதவி விலக வேண்டுமெனச் சல்லாவின் சட்டமொன்று விதித்ததால் நடைமுறையில் தொல்லைகள் ஏற்படவில்லை.[1] ஆனால், தற்செயலாக, இம் முறை சீசருக்கும் செனெட்டிற்கும் மோதலை ஏற்படுத்தியதோடு பின் உரோமானியக் குடியரசின் வீழ்ச்சிக்கும் இது காரணமாயிற்று. புற நிருவாகப் பதவியை பாம்பேயின் சட்டமொன்று கி. மு. 52-ல் தனிப்பட்ட பதவியாக உயர்த்தியதோடு உரோமில் பதவியில் இருந்தபின் ஐந்தாண்டு கழிந்த பின்னரே ஆளுநர்கள் அவர்களுடைய

[1] Cic. ad Fam. i. 9, 25; xii. 4, 2.

மாநிலப் பதவிகளையேற்க வேண்டுமெனவும் விதித்தது. உரோமில் கான்சல், பிரீட்டர் பதவிகளின் மீதான தகாப் பேரார்வத்தைக் குறைத்ததோடு மேலே குறிப்பிட்ட பதவிகளி லிருந்து விலகிக்கொண்டவுடனே மாநில ஆளுநர் பதவியை எட்ட வேண்டுமெனும் ஆவலையும் இச் சட்டம் தடுத்தது. ஆகையால், மாநில மக்களுக்கு இது சில நன்மைகளை மறைமுகமாகச் செய் திருக்கலாம். ஆனல், குடியரசின் வீழ்ச்சியால் இந் நன்மைகள் மதிப்பிட முடியாமல் போய்விட்டன. மாநில ஆளுநரின் பதவிக் காலம் ஓராண்டாகும். ஆனல், பிரீட்டர்களின் எண்ணிக்கையை சல்லர் எட்டாக உயர்த்திய பின்னும் பதினைந்து மாநிலங்களுக் குப் பத்து நிருவாகப் பதவிகளே இருந்தன. மூன்று புற பிரீட்டர் கள் மாநிலத் தலைமையைத் தனித்தனியே அடுத்தடுத்து மூன்று ஆண்டுகள் வகித்தனர்.

ஆளுநரின் முதன்மையான பணியாள்களில் கீழ்நிலை நிருவாகி யாகிய குவெஸ்டரும் குறிப்பிட்ட செனெட் சபை ஆணையர்களு மிருந்தனர். இவர்களில் ஒரு பிரீட்டர் மாநிலத்திலும் மூன்று பேர் கான்சுலர் மாநிலத்திலும் பணியாற்றினர். குவெஸ்டரின் நிருவாகப் பதவி இவருக்கு சுயேச்சையான கடமைகளை அளிக்க வில்லை. முதன்மையாக இவர் நிதி அலுவலராக இருந்தார். இவருடைய மாநில நிருவாகச் செலவிற்காக செனெட் சபை இவருக்குப் பணப் பொறுப்பளித்திருந்தது. பணமாகப் பெற்ற வரிப் பணத்தை இவர் ஏற்றுக்கொண்டார். ஆண்டின் இறுதியில் இவருடைய பெயரிலும் மேல்நிலை அலுவலர் பெயரிலும் வரவு செலவுக் கணக்குக் கொடுக்கவேண்டும். சீசரின் சட்டப்படி இவர் கணக்குகளைக் கருவூலத்தில் வைக்கவேண்டும். இக் கணக்கின் இரண்டு படிகளை இரண்டு மாநில நகரங்களில் வைக்க வேண்டும்.[1] ஆனல், உண்மைப் பொறுப்பு இங்கும் ஆளுநருடை யதேயாகும். இவருடைய கட்டளைகளை மீறமுடியாது. எல்லா வகையிலும் குவெஸ்டர் இவருடைய பேராளராகச் செயற்பட் டார். தலைமை அதிகாரத்திற்குப் பணிந்து இவர் ஆட்சிப் பணி களையேற்றுச் செயற்படுத்தினர். பதவிக்காலம் முடியுமுன்னரே தகாத ஆட்சிக்காகவும், திறமையின்மைக்காகவும், ஒரு பேரா ளைப்போல், இவரைப் பதவி நீக்கலாம். தொடக்க முதலில் பேராளர் உரோம் அரசாங்கப் பிரதிநிதியாகச் செயற்பட்டார். ஆனல், மோதலைத் தவிர்க்கும்பொருட்டு, இப் பதவிக்கான ஒருவரை ஆளுநர் குறிப்பிடலாமெனும் வழக்கமேற்பட்டது. ஆயினும், குடியரசின் கடைசிக் காலம் வரை இவர்களுடைய பெயர்கள் செனெட் சபையின் ஆய்விற்கு வைக்கப்பெற்றன.

[1] Cic. ad Fam. V. 20. 2. Plut. Cato. Min. 38.

இவர்கள் அரசின் கீழ்நிலை அலுவலர்களாகக் கருதப்பெற்றனர். இருப்பினும், இவர்களுக்கெனத் தனிப்பட்ட துறைகள் ஒதுக்கப் படவில்லை. இவர்கள் செயற்படுத்திய அதிகாரங்கள் ஆளுநரால் கொடுக்கப்பட்டவைகளாகும். இந்த அதிகாரம் படைத்தலைமையின் ஆணையாகவும் அல்லது நீதிமன்றத் தலைவரின் கட்டளையாகவும் இருக்கலாம். அலுவல் சார்பில்லா ஊழியர்களை ஆளுநர் சுதந்திரமாகத் தெரிவு செய்துகொண்டர். ஆளுநரின் "தோழர்கள்" இளைஞர்களாக இருந்தனர். அலுவல் சார்புடைய வாழ்க்கையிலும் அரசியல் செயல்திறமுறை வாழ்க்கையிலும் இவர்களைப் புகுத்தியவர் ஆளுநரேயாவார். பொருத்தமாகத் தோன்றிய பணிகளில் இவர்களை ஆளுநர் பயன்படுத்திக்கொண்டார். ஆயினும், எத்தனை கருவிகளை ஆளுநர் பயன்படுத்தினுலும், மாநிலத்தின் ஆட்சியைப் பொறுத்தவரையில், ஆளுநரே முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார்.

படை, ஆட்சி, நீதி ஆகிய துறைகளில் முதன்மையாக இவருடைய அதிகாரங்கள் செயற்படுத்தப்பட்டன. போரில் ஆழ்ந்திருந்த மாநிலத்தில் கோடைகாலம் படை வீடுகளிலும், குளிர் காலம் பெருமளவும் அமைதிப் பணிகளிலும் செலவிடப்பட்டன. ஆனல், ஒரு நிலைபெற்ற மாவட்டத்தில் ஆளுநர் விருப்பம்போல் சுற்றுலாக்களை வகுத்துக்கொள்ளலாம். இவருடைய நேரத்தில் சிறிதளவை இவருடைய கட்டுப்பாட்டிலிருந்த நகராட்சி விவகாரங்களை ஆராயும் நல்லிசைவற்ற பணியை இவர் மேற்கொள்ளலாம். அடுத்திருந்த ஆளுநர்கள் அல்லது பாதுகாக்கப்பெற்ற தலைவர்கள் ஆகியவரோடு கொண்டிருந்த அரசியல் செயல்திற முறைத் தொடர்புகளைத் தவிர ஆளுநர் மேற்கொண்ட ஆட்சிப் பணிகள் இவர் விருப்பத்தையொட்டியே அமைந்திருந்தன. இவர் ஏற்றுக்கொண்டிருந்த ஆட்சிப்பளு, தன்னாட்சிபற்றிய இவர் கொண்டிருந்த கருத்தை ஒட்டியதாகவே இருந்தது: ஆயினும், ஆட்சிக்குட்பட்ட அரசுகளின் நிதிநிலை அவலநிலையில் இருந்ததை சிசரோவின் ஆய்வு வெளிப்படுத்தியது. சிசிலியாவின் கிரேக்க நிருவாகிகள் அவர்களுடைய கருவூலங்களைக் கொள்ளையடித்து வந்த செய்தியையும் இவருடைய ஆய்வு வெளிப்படுத்தியது. குடியரசின் மாநில ஆட்சியின் சிறப்பியல்பின் சான்ருகவும் இவருடைய ஆய்வு இருந்தது. மக்களை மக்களே ஆளும் திறமையில் இருந்த நம்பிக்கையையும் இந்தச் சிறந்த ஆய்வு வெளிப் படுத்தியது.

அமைதிக் காலத்தில் உரிமை, குற்றவழக்கு விசாரணைத்துறையில் ஆளுநரின் ஆற்றல்களெல்லாம் பயன்படுத்தப்பட்டன. விசாரணை அதிகாரம்பற்றிய ஒழுங்குமுறைகள் மாநிலச் சாசனங்

களில் குறிப்பிடப்பட்டிருந்தன. முறைமன்ற நிறுவனங்கள் நாட்டுக்கு நாடு வேறுபட்டிருந்தமையால் இவைகள் எல்லா நாடுகளுக்கும் ஒரே மாதிரியானதாக இருந்திருக்கமுடியாது. சிசிலியின் சட்டம்பற்றிய எல்லா விபரங்களும் தெரிந்திருந்ததால் அந்நாட்டின் முறைமன்றம் விருப்போடு ஏற்றுக்கொள்ளப்பட்டது. உரோம் அளித்த சிறப்புரிமைகளில் இந்நாடு பெற்றிருந்தவைகளை மிகச் சிறந்தனவாகக் கருதலாம். ஒரே அரசில் வசித்த இரு குடிமக்களுக்கு இடையிலான வழக்கை அதே அரசில் அதன் சட்டங்களுக்கிணங்க விசாரிக்கப்பட வேண்டுமென விதிக்கப்பட்டது. இந்த ஒழுங்குமுறை தலநீதிக்கும் தல சட்டத்தொகுப்பிற்கும் உறுதியளித்தது. ஆனால், இஃது ஆளுநரிடம் மேல்முறையீடு செய்வதைத் தடுக்கவுமில்லை; சட்டங்களுக்கு விளக்கம்தரும் ஆளுநரின் உரிமையை நீக்கவுமில்லை. அரசியலுக்கு இடைப்பட்ட வழக்குகள் விசாரணைக்குச் சாசனங்கள் வழிசெய்துள்ளன. ஓர் அரசில் வசித்த சிசிலியன் இன்னொரு நாட்டில் வசித்த சிசிலியனோடு வழக்குத் தொடர்ந்தால் குலுக்கல் முறையைப் பயன்படுத்தி நீதிபதிகளை ஆளுநர்கள் தந்துதவ வேண்டும். இவர்கள் இத்தகைய வழக்குகளில் உரோமானியக் குடிமக்களாக இருந்திருக்கவேண்டும். ஒரு தனிப்பட்டவருக்கும் வேறொரு சமுதாயத்திற்கும் இடையே வழக்கெழும்பொழுது மூன்றாவது அரசு ஒன்றின் செனெட் சபை நீதிபதியாகச் செயற்பட வேண்டும். உரோமானியக் குடிமக்களுக்கும் சிசிலியன்களுக்குமிடையே எழும் வழக்குகளுக்குப் பிரதிவாதியின் நாட்டவர் நீதிபதியாக இருக்கவேண்டும். மற்றெல்லா விவகாரங்களிலும் நிருவாகிகளால் தெரிவு செய்யப்பட்ட நீதிபதிகள் உரோமானியக் குடிமக்களிலிருந்து அமர்த்தப்பட வேண்டும்.

வெளிநாட்டவருக்கான நீதிபதி சிசிலியில் ஒரு நிலையான நிறுவனமாக இருந்தார். மற்ற இடங்களில் ஆளுநரின் விருப்பத்தின்பேரில் இவர் இருந்தார். சிசிலியாவில் தலச் சட்டங்களுக்கும் நீதிபதிகளுக்கும் நீதிமன்றங்களுக்கும் சிசரோ பெருமளவில் சுதந்திரம் அளித்திருந்தார். தல சட்டங்களுக்குப் பதிலாகத் தம் சட்டங்களைப் புகுத்தும் முயற்சி உரோமானியர்களின் அரசியல் உணர்வுக்கு அருவருக்கத்தக்கதாக இருந்தது. பேரார்வமிக்க உரோமானிய ஆளுநர்கள்கூட ஆணைகளைச் சட்டமாக்க முற்படவில்லை. தனிப்பட்ட சர்வதேசச் சட்டம், ஆட்சிமுறை செயலாட்சி, நடைமுறை விதி ஆகியவைகளில் ஆணைகளின் முக்கியத்துவம் முதன்மையாக உணரப்பட்டது. பல்வேறு அரசுகளுக்கு இடையேயான மக்களுக்கு இடையிலான உறவுகளை ஒழுங்குபடுத்தும் கருத்துகளை இந்த ஆணைகள் குறிப்பிட்டன.

மாநில மக்களுக்கும் உரோமானியர்களுக்குமிடையிலான உறவு களையும் இவை வரையறை செய்தன. ஒப்பந்தக்காரர்களின் கோரிக்கைகளை முடிவு செய்வதற்கான விதிகளை இவை பிறப் பித்தன; தனிப்பட்ட வழக்குகளை நடத்துவதற்கு ஒழுங்குமுறை விதிகளை வரைந்து மாநில நீதிமன்றங்களுக்கு உதவின. ஒவ் வொரு மாநிலத்தின் ஆணையும் தனித்து நின்றது. இஃது எந்த நாட்டிற்கெனப் பிறப்பிக்கப்பட்டதோ அந்த நாட்டின் பெயரைக் கொண்டிருந்தது. தனிப்பட்ட ஆளுநர்களின் விருப்பையொட் டியே இதன் தொடர்ச்சி இருந்ததெனினும் இஃது ஒரு தொடர்ச்சி யாகச் செயல்பெற்று வந்தது. இந்த ஆணைகள் உரோமில் வரையப் பெற்றிருக்கலாம். இவற்றை வரைந்தவர் பல நூல் களைப் பார்த்துப் பின் வரைந்திருக்கவேண்டும். முன்னிருந்த ஆளுநரின் தீர்ப்புகள் ஒருவருக்கு நன்ருகத் தெரிந்திருந்தன; மற்ற மாநிலங்களின் ஆணைகளும் இருந்தன; எல்லா மாநிலங் களின் முழுமையான ஆணைகளும் பொதுவான நடைமுறை விதி களுக்குப் பயனுள்ள ஆதாரங்களாக இருந்துதவின. சிசரோ வின் ஆணைகள், வணிக உறவுகளையும் தொழில் ஒழுங்குமுறை விதிகளையும் தெளிவாகவும் சுருக்கமாகவும் எடுத்துரைக்கின்றன. பரம்பரை உடைமை, நொடிப்பு போன்றவைகள்பற்றிய பொது விதிகளின் மீது பெரும் கவனம் செலுத்தப்பட்டது. பல சமுதா யங்களின் பழக்கவழக்கங்களை ஒதுக்கும் நோக்கத்தோடு இவ் விதிகள் வகுக்கப்படவில்லையெனினும் மாநிலம் முழுமைக்கான ஒரு பொதுச் சட்டத்தை அளிப்பது ஆளுநர்களின் நோக்கமாக இருந்தது. ஆனல், முறைப்படுத்த வேண்டியவை இன்னும் பல இருந்தன. எனவே எழுதப்பெருத ஆணைகளும் மதிக்கப்பட்டன. நகர பிரீட்டருக்கான விதிகள் சமயம் ஏற்படும்போது வரைந்து கொள்ளப்பட்டன. ஆளுநரின் உரிமை வழக்கு விசாரணை அதிகாரம் ஆணையில் அடிப்படையில் எழுந்ததாகும். இந்த அதிகாரம் சொந்தமாக அல்லது கொடுக்கப்பெற்றதாக இருந் தது. இந்த இரண்டு நிகழ்வுகளிலும் ஆளுநர் வட்டங்களில் அமைந்து செயற்படும் நீதிமன்றங்களைச் சென்று பார்வையிட வேண்டும். இந் நீதிமன்றங்களின் நிகழ்ச்சித் திட்டம் வரையப் பட்டிருந்தது. மாநில (நீதி) வட்டங்களில் ஆளுநரின் தங்கல் நிருணயிக்கப்பட்டிருந்தது. இவைகளில் ஆளுநர் நீதிமன்றமாக இருந்து முறை செய்தார்.[1]

குவெஸ்டரும் பேராளர்களும் கொடுக்கப்பட்ட விசாரணை அதிகாரத்தை வழக்கமாக நிறைவேற்றினர். இவ்விரண்டு நிகழ்வுகளிலும் ஆளுநரின் ஆணையின்பேரில் இவர்கள் செயலாற்

[1] Cic. ad aH. v. 20, 1.

றினர். இவர்களுக்கு ஆளுநர் விக்டர்களை ஒதுக்கியளிக்கலாம்; இவர்களின் தீர்ப்புகளை, விரும்பினால் ஆளுநர் வரம்பற்ற குற்ற விசாரணை அதிகாரம் பெற்றிருந்தார். இதை இவர் அடிக்கடி செயற்படுத்தியதாகக் கருதமுடியாது. இவர் எந்த வழக்கையும் தம்முடைய நீதிமன்றத்திற்கு எடுத்துக்கொள்ளலாம். ஆனால் சாதாரண வழக்குகளை மாநில நீதிமன்றங்களின் விசாரணைக்கு விட்டுவைத்தார். சில வகையான குற்ற விசாரணைகள் சட்டத்தால் நகரங்களுக்கு ஒதுக்கப்பட்டன. ஆளுநரின் விசாரணைத் தகுதித் திறனுக்கப்பாற்பட்டதாகச் சில குற்றங்கள் எழலாம். இவைகளையும் விசாரிக்கும் அதிகாரம் சட்டத்தால் ஆளுநருக்கு மறுக்கப்படவில்லையெனினும், பெரும் அரசியல் விளைவுகளை உண்டாக்கக் கூடிய, ஆட்சி எதிர்ப்புக் கிளர்ச்சி, மக்கள் கிளர்ச்சிகள் ஆகிய குற்றங்களை உரோமில் விசாரிக்குமாறு இவர் அனுப்பிவைக்க வேண்டும். அறிவுரையாளர் குழுவைக் கலந்தாராய வேண்டுமெனும் வழக்கத்தால் ஆளுநரின் விசாரணை அதிகாரம் கட்டுப்படுத்தப்பட்டது. இருப்பினும், இத்தகைய குழு சட்டத்தால் வலியுறுத்தப்பெறவில்லை. அப்படியே ஒரு குழு இருந்திருந்தாலும் அது முற்றிலும் உரோமானியர்களையே கொண்டிருந்தது. குறிப்பிட்ட இடத்தில் வசித்த உரோமானியர்களையும் ஆளுநரின் பரிவாரங்களையும் வழக்கமாக இக் குழு கொண்டிருந்தது. முற்றிலும் இப்படிப்பட்டவர்களை உறுப்பினராகக்கொண்ட குழு தவிர்க்கப்பட்டதெனினும் இதற்கான சட்டத் தடைபாடுகள் எதுவுமில்லை.

மாநிலத்தில் வசித்த உரோமானியக் குடிமக்களின்மீது ஆளுநர் இதேபோன்ற தனி வகுப்பிலான அதிகாரம் பெற்றிருந்தார். இவருடைய விசாரணை அதிகாரவரம்பு, இவர்களைப் பொறுத்தவரையில், படைவீட்டு வரம்புகளுக்குச் சமமாக இருந்தது. இங்கிருந்து இவர் அளித்த தீர்ப்புகளையொட்டி மேல்முறையீடு செய்யமுடியாது. கொலைக் குற்றத்திற்குள்ளான உரோமானியர்பற்றிய வழக்குகளையெல்லாம் உரோமிற்கு அனுப்பவேண்டுமெனும் வழக்காற்றுச் சட்டமொன்று வற்புறுத்தியது. இதை எவரும் மீறிச் செயற்பட்டதில்லை. அப்படியே ஆளுநர் தீர்ப்பு வழங்கினாலும் தரக்குறைவான தண்டனைகளை இவர்கள்மீது விதிக்கக்கூடாது.

நாம் இதுவரை பார்த்த மாநில அமைப்பு ஒவ்வொன்றிலும் தளர்வு எங்குள்ளதென்பதை எளிதில் காணலாம். ஆளுநரின் கட்டுமீறிய அதிகாரத்தில் இஃது இருந்தது. இத் தளர்வு, நடைமுறையில் வெளிப்படையாகத் தோன்றியது. செயற்பாட்டி

லிருந்த கட்டுப்படுத்தும் ஆற்றல்கள் பயனுடையதாக இருக்குமென ஆளுநரும் அமைப்பாளரும் கருதினர். மாநிலங்களுக்கும் நகரங்களுக்கும் சாசனங்கள் இருந்தன. செனெட் சபையால் உருவாக்கப்பட்ட நிலையான குழுவொன்றிருந்தது. முக்கியமான நடவடிக்கை எதுவும் எடுக்குமுன் ஆளுநர் இக் குழுவைக் கலந்து செயற்படவேண்டும். மாநில மக்களின் பாதுகாப்பிற்கெனப் பெருமளவில் சட்டங்கள் இருந்தன. மாநிலங்களின் கட்டளை முறைகள்பற்றிய சட்டங்களும், நிருவாகிகளின் உரிமைகள்பற்றிய சட்டங்களும், வரிவிதிப்புபற்றியவைகளும், சட்டங்களைச் செயற் படுத்திய நீதிமன்றங்களின் குற்றத் தண்டனைப் பொறுப்பு பற்றியவைகளும் இச் சட்டங்களில் அடங்கின. சாசனங்கள், செனெட் சபையின் உறுப்பினரைக்கொண்ட குழுக்கள் போன்றவை மெய்யான தடைகளாக இருந்தன. ஆனல், மாநில ஆட்சி முறையைப் பாதிக்கும் அளவிற்குப் பரந்த செயல்வினையுடையனவாக இருக்கவில்லை. குறிப்பிட்ட பயன் கருதி அரசு சட்டங்களை இயற்றி இருந்தபோதிலும் இவைகளைச் செயற் படுத்திய நிருவாகிகள் நேர்மை உணர்வுடையவர்களாக இருக்க வில்லை. சட்டங்களைச் செயற்படுத்தும் பொறுப்புடைய நீதி மன்றங்களும் கட்சிப் பூசல்களுக்குப் பலியாகி, வெறியர்களின் கருவியாகச் செயற்பட்டன. ஆனல், பாதுகாப்பிற்கான சட் டத்தையும் குற்றத் தண்டனைப் பொறுப்பைச் செயற்படுத்து வதையும் சார்ந்திருந்த அரசு இடர்நிலைக்குட்பட்டிருந்தது. குறைபாடுகள் அரசின் செயற்பாட்டில் காணப்படவில்லையெனினும் ஆட்சிக் கோட்பாட்டில் காணப்பட்டது. மாநில ஆட்சியின் குடியாட்சிக் கோட்பாடு மெய்யாகவே அடிப்படையான கருத்து முரண்பாட்டைக் குறிப்பிட்டது. இக் கோட்பாடு தல சுயேச்சையைப் படைமுறை ஆட்சியோடு இணைக்கும் பொருத்தமற்ற செயலை நோக்கமாகக் கொண்டிருந்தது. எல்லா அரசுகளுக்கும் தக்க பாதுகாப்புகள் அளிக்கப்பட்டிருந்தால், இவைகளின் தன்னுட்சி மெய்யானதாக இருந்திருக்கும். ஆளுநரின் தனியாட்சியும் ஓரளவிற்குத் தடையாகச் செய்யப்பட்டிருக்கலாம். ஆனல், இப் பாதுகாப்புகள் வரம்பற்ற இறைமை அதிகாரத் திற்கு ஊறு செய்திருக்கும். இவ்விறைமைக் கருத்தை உரோமானியர், வரலாற்று மரபெச்சமாசப் பெற்றிருந்தனர். ஒரு விதமான காப்பாட்சி முறையிலிருந்து உரோமானியப் பேரரசு வளர்ச்சியடைந்தது. இதன் தோற்றத்தின் அடையாளச் சின்னங்களைக் குடியரசின் இறுதிக்காலம் வரையில் இது பெற்றிருந்தது. பேரரசின் அமைப்பற்ற தன்மை இதன் தற்காலிக முறை அரசையே குறிப்பிட்டது. இத்தகைய முறையின் நிறைகளைப் புறக்கணிக்கலாகாது. வரம்பில்லா இறைமை போர்க் காலத்தில்

தேவைப்பட்டது. ஒரு நல்லாட்சி வல்லரசில் அமைதிக் காலத்திலும் இது பயனுள்ளதாக இருக்கும். அரசுகளின் ஒருங்கிருப்பே மாநிலமெனும் உயர்ந்த கருத்தை அமைப்பின்மைக் காட்டிக் கொடுத்துவிட்டதெனினும், மாநிலம் பேரரசின் ஓர் இணைந்த அங்கம் என்பதைவிட ஒன்றுசேர்ந்த ஒரு மேலரசு எனலாம். ஆனல், இதனுடைய குறைபாடு வெளிப்படையாகத் தெரிந்தது. தாய்நாட்டில் மத்திய அதிகாரம் ஒன்றில்லாதபொழுதும், மாநிலக் கொடுங்கோலாட்சியில் அக்கறையற்றிருந்தபொழுதும் இக் குறைபாடுகள் தெற்றெனத் தெரிந்தன. மேலும், ஆண்டுக்கொரு தலைமை, வரம்புகடந்த வாலாயம், ஒருங்கமையப்பெருத பொதுச் சேவைத் தொகுதி போன்றவைகளும் குறிப்பிடத்தக்க சில குறை பாடுகளாகும். பொதுப்பணியாளர்களின் வழக்கமான வாலாய முறைகளும் தாமே வகுத்துக்கொண்ட விதிகளும் தனியாட்சியைத் தடைசெய்யக்கூடிய உறுதியான தடைபாடுகளாகும்.

# 11. புரட்சியும் பேரரசர் ஆட்சியாக நிலைதிரிதலும்

குடியரசின் நெகிழ்ச்சியான அரயசிலமைப்பிற்குச் சீர்திருத்த இயக்கம் ஒரு புதிய வளர்ச்சியை அளித்தது. இக்காலத்தில் நிருவாக அங்கம் படிப்படியாக வலிமை பெற்றது. இச் சீர்திருத்த இயக்கம் இரு சிறப்பியல்புகளைப் பெற்றிருந்தது. செனெட்டின் அரசைச் சில சமயங்களில் நேர்மையாகவும் சில வேளைகளில் கண்மூடித்தனமாகவும் எதிர்த்தது ஒன்றுரும். மற்றொன்று எல்லோரும் அறிந்திருந்த தீமைகளை ஒழிப்பதற்கு ஆக்கமுறையிலான செயல்திட்டத்தை வெளியிட்டது. தாக்குதல் பலதரப்பட்டதாக இருந்தது. உள்நாட்டுக்குரிய சீர்திருத்தத்தில் செனெட் சபை அக்கறையற்றிருந்ததும், பொருளாதாரக் குறைபாடுகளுக்கு உடனடியாகப் பரிகாரம் தேடத் தவறியதும் முதலில் தாக்குதலுக்குள்ளாயின. கிராக்கஸ் சகோதரர்களின் இயக்கத்தில் இது சிறப்பியல்பாக இருந்தது. ஆனல், முதல் புரட்சியின் உடனடியான விளைவுகள் நிலையுறுதியற்றதாக இருந்தன. இத் தாக்குதலினுல் செனெட் சபை ஆட்டங்கண்டதென்ருலும் வெற்றிகண்டது. உலகமே உயர் குடும்பத்தினரடங்கிய அரசின் உயர் ஆட்சிக்குழுவாகிய செனெட் சபையின் காலடியில் கிடந்தபொழுது இத்தாலியைப்பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. செனெட் சபையே பேரரசின் உண்மையான அரசாகவும் அப்பொழுது தோற்றமளித்தது. ஆனல், உண்மை நிலை வேறுவிதமாக இருந்தது. பாதுகாப்பிற்குட்பட்ட அரசின் துயர் மிகுந்த போரில் விருப்பின்றிச் சிக்கிக்கொண்ட அரசின் நிலை பேரரசைக் கட்டியாண்ட செனெட் சபையின் நிலையை வெளிப்படுத்தப் போதுமானதாக இருந்தது. இக் காலத்திய வரலாற்றில் ஜுகுர்த்தியன் போர் ஒரு திருப்புமுனையாக இருந்தது. பேரரசு கொள்கையோடு கூடிய ஒரு சீர்திருத்தக் கட்சி படை வலிமையோடு தொடர்புகொண்டிருக்க வேண்டும். ஒரு மாற்றம் விரைந்தேற்பட்டது. டிரிபியூன்களும் பொதுமக்களின்

சபைகளும் தொடர்ந்து பெயரளவிலான இறைமையை வெளிப் படுத்திக்கொண்டிருந்தன. ஆனால், இவர்களுடைய கருவிகளாகிய படைத்தலைமை, படை, படைவீடு ஆகியவை இவர்கள் பயன் படுத்தமுடியாத அளவிற்கு வலிமையுடையனவாக இருந்தன. எனவே, படைமுறையும் மக்களாட்சியும் என்றென்றும் தொடர்பு கொண்டிருந்ததை நாம் கண்டோம். இத் தொடர்பு படைவலி யில் நிலைபெற்ற முடியாட்சியாக நிலைத்திருந்தது.

ஆனால், அக் காலத்திய சீர்திருத்தக்காரர்களுக்கு அரசிய லமைப்புப் பிரச்சினைக்கு இறுதியான தீர்வு காணல் முதன்மை யாகத் தெரியவில்லை. இதைக்காட்டிலும் கேயஸ் கிராக்களின் அறிவாற்றலால் உருவானதும் சிறிதும் மாற்றமில்லாமல் ஒரு தலைவரிடமிருந்து மற்றொரு தலைவருக்கு மாறி மாறி வந்துகொண் டிருந்த சீர்திருத்தத் திட்டம் முக்கியமானதாகத் தோன்றியது. வேளாண்மைபற்றிய சட்டங்களும், தானிய விநியோகம்பற்றிய நடவடிக்கைகளும், சமூகத் துயர்களை அகற்றும் வழிகளும், தலைநகரின் ஏராளமான பிரச்சினைகளும், கடன் கொண்டானுக் கும் கொடுத்தானுக்குமிடையில் சட்டம் அனுமதித்த மிகக் கொடுமையான தொடர்புகளை அகற்றுவதற்கான திட்டங்களும் இதில் அடங்கியிருந்தன. சீர்திருத்தக் கட்சியின் நடவடிக்கை களுக்கு, இத்தாலியர்களுக்கு வாக்குரிமை அளிக்கும் செயல் திட்டம் ஒரு புதிய, எதிர்பாராத முன்னேற்றமளித்தது. மற்றப் பொதுமக்கள் சார்புடைய திட்டங்களைப்போல் இத் திட்டமும் மக்கள் சார்பாளரின் (தலைவரின்) படைப்பேயாகும். இதை மக்கள் கட்சி ஏற்றுக்கொண்டது முற்றிலும் தற்செயலானதே. எதிர்க்கட்சியினராகிய செல்வர்கள் பயன்படுத்திய வலிமைமிக்க கருவியை முறிக்கும் நோக்கத்தோடு இஃது ஏற்றுக்கொள்ளப் பட்டது. அதாவது சிபியோ எமிலியானுஸ் (Scipio Aemilianus) போன்றவர்கள் நகர மக்களின் உரிமைகளுக்கெதிராக இத்தாலி யர்களின் உரிமைகளைப் பயன்படுத்திக்கொள்ளும் ஆபத்தான கொள்கையைப் பின்பற்றினார்கள். ஆனாலும், மக்கள் சார்புடைய செயல்திட்டத்தில் வாக்குரிமைப் பிரச்சினையை ஒன்றாக ஏற்றுக் கொள்வது நேர்மையாகும். உணவுப்பொருள், வணிகம், பேரரசு ஆகியவைகளைப் பெற ஒரே கருவியாகச் செயல்திறமிக்க மத்திய இராணுவ நிறுவனமொன்றைப் படைப்பது அதிருப்தியாளர் களின் பல்வேறு முயற்சிகளில் ஒன்றாக இருந்தது.

இச் செயல்திட்டத்தை உருவாக்கிய இக் கட்சி ஒரே சீரான அமைப்பைப் பெற்றிருக்கவில்லை. திறமையற்றதாகக் கருதிய அரசை மாற்றியமைக்க இது முயன்றது. இதனுடைய தீவிர மான உறுப்பினர்களைக்கூட ஒரு பெயரில் குறிப்பிடமுடிய

வில்லை; இம் மக்கள் கட்சியினரில் பல தாராள நோக்குடையவர்கள் இருந்தனர். புரட்சியால் இவர்கள் எப்பயனையும் அடையவில்லை. உள்ளத்தாலும் தேவையாலும் மக்களாட்சிக் கோட்பாட்டாளர் பலர் இக் கட்சியிலிருந்தனர்; அரசியலமைப்புச் சீர்திருத்தக்காரர்களுக்கு இடையூறாகச் சில புரட்சியாளர்களுமிருந்தனர். இவர்களெல்லாரும் இவ்வியக்கத்தை மெய்யாகவே மக்களாட்சி இயக்கமாக்கினர். மக்களாட்சிக் கட்சியினருக்கும் செனெட் சபையினருக்கும் இடையில் தெளிவானதொரு வரையறை இருந்ததாகக் கருதலாகாது. செனெட் சபை அதன் உறுப்பினரின் கடுமையான தாக்குதலுக்குள்ளாகியது. கடும் முனைப்பான கட்சித் தலைவர்கள் நிருவாகப் பதவிகளைச் சபையில் பெற்றிருந்தனர். இதனால் இவர்கள் குயுரியாவில் ஓர் இடத்திற்குரிய உரிமை பெற்றனர். குடும்பச் செல்வாக்கின் அடிப்படையிலோ இலஞ்சத்தின் அடிப்படையிலோ நடைபெறாத தேர்தல் இப்பொழுது கட்சியடிப்படையில் நடைபெற்றது. அரசியலமைப்புச் சார்பாளர்களுக்குள் மிதமான சீர்திருத்தக்காரர்களும் இருந்தனர். செனெட் சபையின் உயர் நிலையைப் பேண நினைத்தவர்களும் இதன் குறைபாடுகளைக் கருத்தில் கொண்டிருந்தனர். புதியன புகுத்தப்படவேண்டுமெனும் கருத்து வலுப்பட்டபொழுது, தீவிரமான திட்டங்களைக் கொண்ட கட்சி ஒன்று அமைக்கப்பட்டது. இத்தாலிக்குச் சில சலுகைகளை அளித்து சிறப்புரிமைகளைக் காப்பாற்றிக்கொள்ள இக் கட்சியினர் விரும்பினர். பேராட்சியில் தூய்மைக்கும் உரோமில் வசித்த ஏழை மக்களின் நலத்திற்கும் பாடுபடப் போவதாக அறிவித்தது. இந்த முயற்சியும் தோல்வியடைந்தபொழுது சீர்திருத்தத்திற்கான செனெட் சபைக் கட்சி எதுவும் தோன்றவில்லை. அக் காலத்திய தீமைகளை நன்கறிந்த சிசரோகூட, சொத்தும் பற்றுறுதியும் கொண்டிருந்த வகுப்புகளின் ஒற்றுமையைப் பயன்படுத்தி அரசியலமைப்பை நிலைநிறுத்தவே விரும்பினர். இந்த அரசியலறிஞரும் உரோமானிய அரசையன்றி ஓர் இத்தாலிய அரசையும் பார்க்க விரும்பினர். உரோமில் இத்தாலியர்கள் பிரதிநிதித்துவம் பெறுவதற்கான திட்டமெதையும் இவர் வகுக்கவில்லை. இறக்குமுன் தனியாட்சி தவிக்கமுடியாததென்பதையும் இவர் ஏற்றுக்கொண்டார். மக்களில் முதல்வரும் மேலாளரும் என ஒருவர் இருக்கவேண்டும். ஆனால், இந்த ஒருவரின் ஆட்சி அரசியலமைப்பை அழிக்கலாகாது. சிசரோவின் கருத்தில் இடம் பெற்றிருந்த அரசர் செனெட் சபையின் துணைவராக இருக்க வேண்டுமேயன்றிப் படைத்துறை வல்லாட்சியின் விளக்குநரல்லர்.

மக்கள் கட்சியினரும் செல்வர்களும் சமச்சீரான கட்சிகளாகப் பிரிந்திருந்ததாலும், தெளிவான தேவைகளோடும் குறைந்த குறிக்

கோளுடனும் கூடிய ஒரே சீரான மனிதர்களடங்கிய நிறுவன மொன்றிருந்ததாலும் தெளிவான எந்த முடிவையும் பெருதிருந் திருக்கலாம். பெரிய, மிதமான முதலாளிகளைக் கொண்ட உயர், நடுத்தர வகுப்பினர் தற்செயலாக மேல்வகுப்பினரெனத் தவறு கப் பெயர் பெற்றிருந்தவர்களே இந் நிறுவனத்தினர். தொழி லோடு தொடர்பில்லாத அரசியலில் முழுமையாக அக்கறை யின்மையையும் வணிகரின் குறுகிய நேர்மையுமுடையவர்களைக் கொண்டதுதான் இந்த வகுப்பு. மற்ற வகுப்பினரைப்போல், இவர்களும் அரசின் அலுவலர்களைப்போல் மாநிலங்களைக் கொள்ளையடிக்க விரும்பினர். ஆனால், கொள்ளைப்பொருளைவிட இவர்கள் வலிமையான அரசுவொன்றை விரும்பினர். வென்று கைப்பற்றிய நாடுகளில் இவர்களுக்குப் போதிய பாதுகாப்பைத் தேடித் தரக்கூடிய ஆட்சியொன்றிற்காக அவாவுற்றனர். இதே ஆட்சி, புரட்சியற்ற தாய்நாட்டை உருவாக்க வேண்டுமெனவும் இவர்கள் விரும்பினார்கள். ஆகவே, இவர்களுடைய மனப்போக்கு தயக்கமாக இருந்தாலும் என்றும் உறுதியாகவே இருந்தது. முதல் நோக்கத்தை அடைய இவர்கள் தாக்குகின்ற கட்சியோடு சேர்ந்துகொண்டனர்; இரண்டாவது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள அரசுடன் சேர்ந்து கொண்டார்கள். மேரியசைப் பதவி யில் அமர்த்த மக்களாட்சிக் கட்சியினருக்கு உதவியவர்கள் செல் வர்களே. மேரியசின் உதவியோடு இவர்கள், மேரியசின் கூட்டாளியும் தீவிரப் புரட்சியாளருமாகிய, சாட்டர்னினஸ் (Saturninus) என்பவரைக் கைவிடும்படி செய்தனர். இவர் இளைய துருசு (Drusus)சின் திட்டத்தைப் பாழ்படுத்திய வாரியன் (Varian) ஆணைக்குழுவையும் தம்மவர்களின் போக்கில் செயற் படச் செய்தார். இவர்களுடைய பகைமைதான் சல்லா, காட்டி லின் (Catiline) ஆகியவர்களின் திட்டங்களுக்குச் சாவுமணியடித் தது. இவர்களுடைய வணிக உணர்வு பாம்பியசைப் பதவி உயர்த்தி, கி.மு. 60-ல் செனெட் சபையைக் கைவிட்டுவிட்டு சீசருக் குத் தம் முழு ஆதரவையும் அளித்தது. உயர் குடியினரின் இரக்கமற்ற படுகொலையில் சிறிது துயர உணர்வு இருந்தது. இப் படுகொலை அகஸ்டஸின் முடியாட்சிக்கு வழிகோலியதெனலாம். முடியாட்சி நிலைபெற இவ் வகுப்பினர் பெரிதும் உழைத்துப் பெரும் பயனடைந்தனர்.

எல்லாக் கட்சிகளும் கலந்துகொண்ட இப் போராட்டத்தின் விளைபயனை மதிப்பிடுவதற்குச் சமூக, அரசியல் புதுப்பிப்பிற்கான போராட்டமாக இதன் இரு இயல்புகளையும் நாம் ஏற்கவேண்டும். சீர்திருத்தத்தின் விரிவாகச் செயற்திட்டத்தின் முடிவையும் செனெட் சபையின் மீதான தாக்குதலுக்கு வழிசெய்த அரசிய லமைப்பிலான மாற்றத்தையும் நாம் தனியாக ஆராயவேண்டும்.

முதல் நோக்கு நிலையில், மக்களாட்சிக் கட்சியின் முயற்சிகள் மட்டற்ற வெற்றி பெற்றன. சீசராலும், பேரரசர் ஆட்சியாலும் தக்க மாறுதல்களோடு இதன் செயல்திட்டத்தின் ஒவ்வொரு இனமும் நிறைவேற்றப்பட்டது. நிலச் சார்புடைய பிரச்சினை தீர்வை எட்டியது. குறிப்பாக நிலப்பிரச்சினை கடல்கடந்த குடியேற்றங்களோடு கலந்துவிட்டபொழுது இது மேலும் சிறப்படைந்தது. வறிய குடிமக்களுக்கும் ஓய்வுபெற்ற படைவீரர்களுக்கும் இக் குடியேற்றங்கள் நிறுவப்பட்டன. ஆல்ப்ஸ் மலைத்தொடர்களுக்குத் தெற்கிலிருந்த மக்களுக்கு வாக்குரிமை தாராளமாக சீசராலும் அகஸ்டஸாலும் அளிக்கப்பட்டது. பேரரசர் ஆட்சியில் இலத்தீன் மக்களுக்கிருந்த உரிமைகள் மாநிலங்களுக்கு அளிக்கப்பட்டன. மாநில மக்களுக்கும் படிப்படியாக முழுமையான குடியுரிமை அளிக்கப்பட்டது. சீசர், அகஸ்டஸ் ஆகியோரின் நேர்மையான பணநொடிப்புச் சட்டங்களால் கடன்பற்றிய சட்டங்களும் திருத்தப்பட்டன. இரவலர் இடர் உதவித் திட்டத்தை உண்மையான தாக்கத் தானிய வணிகச் சட்டங்களில் சில மாறுதல்களைச் செய்யவேண்டியிருந்தது. தானிய உதவி பெற்றவர்களின் தொகையை சீசர் 320,000-ல் இருந்து 150,000ஆகக் குறைத்தார். பேரரசர் ஆட்சியில் இந்த எண்ணிக்கை 200,000ஆக இருந்தது. கேயஸ் கிராக்களின் அதிகார முறையிலான ஏற்பினைப்பெற்ற உயர்குடியினர் தொடர்ந்து ஒரு வகுப்பினராக ஏற்றுக்கொள்ளப் பெற்றனர். ஆட்சித்துறையில் இவர்கள் பயனுள்ளவர்களாக இருந்தனர்.

ஆர்ப்பாட்டத்தால் அரசில் ஏற்பட்ட தீவிர மாற்றம் சீர்திருத்தக்காரர்களுக்கு மெய்யாகவே வெற்றியாக இருந்ததாவென்பதை முடிவு செய்வது கடினமாகும். குடியரசு நிறுவனங்களோடு பேரரசாட்சியை இணைப்பதன் குறைபாட்டை இராணுவ முடியாட்சியை ஆதரித்தவர்கள் கூட ஒத்துக்கொண்டனர். ஆனால், சீர்திருத்தக்காரர்களின் கருத்தில், செனெட் சபையின் அரசுக்குப் பதிலாக கொமிசியாவின் அரசை உருவாக்க நினைத்த சீர்திருத்தக்காரர்களுக்கு இஃது ஓர் ஏமாற்றமாகும். சீர்திருத்த இயக்கத்தின்போது கொமிசியாவை உண்மையிலேயே செயற்படக் கூடியதொரு மக்களாட்சி நிறுவனமாக்க எவ்வித முயற்சியும் எடுக்கப்படவில்லை. இவ்வியக்கத்தின் தொடக்கத்தின்போது, தனியாட்சி மக்களாட்சியின் குரலாகவே ஒலித்தது. இது பெரிக்கிளிஸின் ஆட்சிமுறையிலமைந்த கேயஸ் கிராக்களின் ஆட்சியைப் போல இருக்கவேண்டுமா அல்லது சீசரின் ஆட்சியைப்போல் இருக்கவேண்டுமா என்பதுதான் பிரச்சினையாக இருந்தது. மெய்யாக, கிராக்கஸ், மேரியன் காலத்திய படிப்பினைகளை அடிப்படையாகக் கொண்டு பிளெபிய அதிகாரங்களையும் புற கான்சல்களுக்குரிய

இறைமையையும் கூட்டு அடிப்படையாகக்கொண்டு பேரரசர் ஆட்சி நிறுவப்பெற்றது.

இப் பிரச்சினைக்கான சாத்தியமான தீர்வுகளை நாம் ஆய்ந்து பார்த்தால் முன் குறித்துக் காட்டப்பட்ட இரண்டு தீர்வுகளைக் கண்டோம். இவை இரண்டும் பயனற்றுப் போயின. சல்லா செய்ததுபோல் செயற்கையாக மேம்படுத்தப்பெற்ற பழைய செனெட் சபை முதலாவதாகும். ஆனால், தாராளமாகப் புதிய மக்களைச் சேர்த்துக்கொண்டதால், ஒரு நிறுவனம் மெய்யாக இத்தாலியின் பிரதிநிதியாகச் செய்யப்பட்டது. சிசரோ இக் கருத்தைக் கொண்டிருந்தாரெனினும் எத்தகைய திட்டமும் இது பற்றி உருவாக்கப்படவில்லை. இத்தகைய குறிக்கோளை அடைய, செனெட் சபையை உருவாக்கிய நிருவாகப் பதவிகளுக்கான தேர்தல்களை உரோமானிய கொமிசியா சபையிடமிருந்து அகற்ற வேண்டும். ஆனால், நமக்குத் தெரிந்தவரையில் அகஸ்டசைத் தவிர எவரும் நகராட்சியில் தேர்ந்தெடுக்கக்கூடிய முறையைப் பற்றிச் சிந்திக்கவில்லை. அனைத்து இத்தாலிய மக்களின் பிரதிநிதியாக இருந்த சீர்திருத்தம் பெற்ற அவையிடமிருந்து உதவி எதிர்பார்க்கப்பட்டிருக்கலாம். நேச நாடுகள் கடைத்தேற்றத் திற்கான வழியைத் தாமே வகுத்துக்கொண்டன. ஆனால், கூட்டரசு முறையில் ஒரு தீர்வு காண்பதற்கு உரோமின் உச்ச உயர்நிலை ஒரு தடைப்பாடாக இருந்தது. தேசிய அடிப்படையிலான ஒரு பிரதிநிதி சபைபற்றிச் சிந்தனையாளர்கள் நினைக்கவில்லையென அவர்களை நாம் குறைகூற இயலாது. நகரங்களின் பிரதிநிதித்துவம்பற்றி அறிந்திருந்தபோதிலும், தேர்வாண்மை மாவட்டங்களின் வழியாகத் தனிப்பட்டவர்கள் தேர்ந்தெடுக்கப் படலாமெனும் அளவிற்கு இத்தாலியர்கள் கருத்து வளர்ச்சி யடையவில்லை.

இத்தாலிய செனெட் சபை அல்லது இத்தாலிய அவையின் படைப்பு ஏன் முடியாட்சியைத் தடுத்து விலக்கி இருக்கவேண்டு மென்பதற்கு இத்தகைய சபை, மாநிலப் படைகளிலிருந்தும் மரியாதையைப் பெற்றுக்கொள்ளலாமென்பதே காரணமாகும். இந்த ஒருமித்த கருத்து, படை முதன்மையாக இத்தாலிய இயல் பினதாக இருக்கவேண்டுமென்பதை வலியுறுத்தியது உண்மையாகும். பேரரசர் ஒருவரைத் தெரிவுசெய்ய முடிவு செய்யப்பட வேண்டிய நிலையில், மாநிலத்தவர்களைக்கொண்ட படைக்கும் இத்தாலிய மக்களுக்கும் மோதல் ஏற்படும் என்னும் அச்சத்தால் இத்தாலிக்கு ஓரளவு பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டுமெனும் அகஸ்டசின் முயற்சி கைவிடப்பட்டது. ஆயினும், பேரரசர் ஆட்சி இத்தாலியராட்சியாக இருக்கக்கூடாதென்னும் கருத்திற்கும்,

இத்தாலியையும் மாநிலங்களையும் இணைப்பதற்கும் சூழ்நிலைகள் எதிராக இருந்தபோதிலும், மக்கள் சார்புடைய இயல்பை இது பெற்றிருந்ததென்பதை மறக்கலாகாது. பேரரசர்களை உருவாக்கிய உரோமானியக் குடிமக்களாகிய படைவீரர்கள் உரோம் நகரப் பொதுமக்களைவிடச் சிறந்தவர்களே. ஏனெனில், 'விடுதலை பெற்ற மனிதன்' படையிலிருந்து அகற்றப்பட்டதுமன்றி, ஒழுக்கச் சிதைவிற்குப் பதிலாகக் கட்டுப்பாடு, படையில் இடம்பெற்றிருந்தது. மேலும் நல்ல சூழலில் இவர்கள் வாழ்ந்தனர். குழு மதிப்புணர்ச்சியடிப்படையில் இவர்களின் தெரிவுகள் இருந்தபோதிலும் மிகத் திறமையுள்ள ஒருவரை அரியணையில் அமர்த்துவதில் இவர்கள் பொதுவாக வெற்றிகண்டனர்.

உரோமின் தனி முதல் ஆளுநராக சீசர் இருந்தார். இவர் பெற்றிருந்த அதிகாரங்கள், தற்கால அரசின் அதிகாரங்களைப்போல், விரும்பியேற்றுக்கொண்ட அதிகாரங்களாகும். இந்த அதிகாரங்களோடு இவர் மனநிறைவு எய்தவில்லையென்பதற்கான அறிகுறிகள் இவர் வாழ்நாளின் இறுதியில் காணப்பட்டன. கி.மு. 49-48ஆம் ஆண்டுகளில் இவருடைய சர்வாதிகார ஆட்சியின் பதவிக்காலம் ஓராண்டேயாகும். ஒரு நெருக்கடி நிலையைச் சமாளிக்கவே இந்தச் சர்வாதிகார ஆட்சி ஏற்பட்டது. கி.மு. 46-ல் இவருக்களிக்கப்பட்ட சர்வாதிகாரப் பதவியும் இதே காரணங்களுக்காகப் பத்தாண்டிற்களிக்கப்பெற்றது. அரசியலமைப்புக் காரணங்களுக்காக இப் பதவி அளிக்கப்பெற்றதாகக் கூறப்பட்டது. ஆனால், வாழ்வின் கடைசியாண்டில் இவர் நிரந்தரமாகச் சர்வாதிகாரப் பதவியேற்றார். உரோமானிய முடியாட்சி உண்மையாகவே முன்னிலை மீட்சிபெற்றது. அரசர் (rex) என்ற பட்டம் ஏற்கப்படவில்லை என்பது உண்மையே. இப் பட்டத்தில் கிழக்கத்திய வல்லாட்சியை மக்கள் கற்பனை செய்துகொண்டதால் அவர்களுடைய உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்கும் வகையில் பட்டத்தையும் இதே காரணங்களுக்காக மகுடத்தையும் ஏற்க இவர் மறுத்துவிட்டார்.[1] ஆனால், வரையறையற்ற இறைமையே உரோமானிய முடியாட்சியென்பதை அறிவுடைய ஒவ்வொருவரும் அறிந்திருந்தனர். சர்வாதிகாரி அல்லது 'மக்கள் தலைவர்' என்னும் பட்டங்கள் முடியாட்சியின் குறிப்பிடத்தக்க பட்டங்கள் என்பதைப் பலர் நம்பினர். ஆகையால், இப்பொழுது அரசருடைய ஆட்சியில் உரோம் இருந்தது. இதன் படைமுறை இயல்பு மறைக்கப்படவுமில்லை. நகருக்குள் இப்பொழுது படைத்தலைவர் (Inperator)என்ற பட்டத்தைப் பகர ஆளுநர் பெற்றியங்கினர். இப் பட்டத்தை சீசர் தம் பெயருக்குப் பின் பயன்படுத்திக்கொண்டார்.

[1] Plut. Caes. 61.

இஃது இவருடைய குடிப்பெயராகிவிட்டது. இதே பட்டத்தை அகஸ்டசும் மரபுரிமையாகப் பெற்றுக்கொண்டார். ஆனால், இவருடைய பெயர்களின் வரிசை முறையில் இப் பட்டம் இட மாற்றம் பெற்றது.[1] படைத் தலைமையின் முழுமையான அதிகார வரம்பின் அடையாளமாக இப் பட்டமிருந்தது. இயல்பான அல்லது வருங்காலத்தில் சீசரின் அதிகாரம் நிலைபெறுவதற்கான அடிப்படையாக இவ் விளக்கத்தைக் கருதலாகாது. ஏனெனில், வரம்பில்லா இறைமையென்பது உரோமானியரின் கருத்தில் இடம் பெறவில்லை. வரம்பற்றிருந்திருந்தால் இது முடியாட்சியா கவோ சர்வாதிகார ஆட்சியாகவோ இருந்திருக்க வேண்டும்.

சீசர் ஏற்றுக்கொண்ட மற்ற அதிகாரங்களைப் பொறுத்த வரை கி.மு. 45-ல் மேற்பார்வை அதிகாரத்தை மூன்றாண்டிற் குப் பெற்றார். இதை ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகப் பெற்றுக்கொண்ட தோற்றமளிக்கப்பட்டது. ஆனால், கி.மு. 48-ல் கொடுக்கப்பட்ட டிரிபியூனிசிய அதிகாரம் இவருடைய ஆயுட் காலம் முழுவதற்குமளிக்கப்பெற்றது. நிரந்தர இறைமைக்கு இது துணையாகக் கருதப்பெற்றது. இதைப் பெற்றிருந்தவருக்குப் பதவிப் பாதுகாப்பையும் மக்கள் சார்புடையதோர் இயல்பை யும் இது வழங்கியது. சீசருடைய அதிகாரத்தின் அடிப்படை களை ஆராய்வதற்கும் அவருடைய அதிகாரத்தின் தன்மையை உணர்ந்துகொள்ளவும் ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். ஆனால், அரச ரின் புறத் தோற்றங்களாகிய வெற்றி அணிவகுப்பு உடைகள், உருவம் தாங்கிய நாணயங்கள், காப்பிடோலில் ஏழு அரசர் களோடு இவருடைய உருவச்சிலையை வைத்தல் ஆகியவைகளை எவரும் காணத் தவறவில்லை. பிற்காலத்திய முடியாட்சி எப்படி இருக்கவேண்டுமென்பதற்கு இவை அடையாளமாக இருந்தன. மிதவாதிகளையும் கடினமான அரசியலமைப்பு ஆய்வாளர்களையும் இவை மனக்கசப்படையச் செய்தன. சீசரின் அரசுமுறைக் கோட்பாட்டில் அகஸ்டஸ் சில மாற்றங்களைப் புகுத்தியிருந் தாலும் வருங்காலப் பேரரசர் ஆட்சியின் அடிப்படைகளாக டிரிபியூனிசிய அதிகாரமும் இராணுவ இறைமையும் இருக்க வேண்டுமென்பதைக் குறிப்பிட்டவர் சீசரேயாவார்.

சீசர், கொலை அரசரை அகற்றினரேயன்றி அரசாட்சியை அன்று. போட்டியாளருக்கிடையேயான பகைமையை கி.மு. 43-ல் நிறுவப்பெற்ற மூவராட்சி சிறிது காலத்திற்குத் தள்ளிவைத்தது. அமைப்பால் இது, முற்காலத்தில் அரசியலமைப்புச் சீர்திருத்தத்

1 Dio. Cass. xiii, 44.

திற்காக அமர்த்தப்பெற்ற பதின்மர் குழுவை ஒத்திருந்தது. இது மக்களின் இசைவைப் பெற்றது. பொருதிக்கொண்டவர்களுக்கிடையே இஃது ஓர் உடன்பாடாக இருந்தது. மறுபடியும் கி.மு. 38-ல் கொமிசியாவைக் கலந்துகொள்ளாமல் இது புதுப்பிக்கப்பட்டது. பத்தாண்டிற்கு (கி.மு. 38-28) சீசரின் நிலையைவிட அக்டோவியசின் நிலை முறையற்றதாக இருந்தது. அன்டோனியசின் தோல்விக்கும் இறப்பிற்குப் பின்னரும் இவருடைய அதிகாரத்திற்கு ஒரே கோரிக்கை இவருக்கு அளிக்கப்படாதிருந்த, இறைமையேயாகும். இதுவரை இவர் பெற்றிருந்த இறைமை மூவராட்சியிலிருந்து முறைகேடாகக் கவர்ந்துகொண்ட இறைமையாகும். அரசியலமைப்பு முறைகள் மீண்டும் நிலைநிறுத்தப்படுவதற்குமுன், 'அனைத்து மக்களின்' இசைவில் நிலைபெற்ற வரம்பற்ற அதிகாரங்கள் எடுத்துக்கொண்ட பணிகளைச் செய்து முடிக்கத் தேவைப்பட்டன. இவர் பெற்றிருந்த கான்சல் பதவி தேவையான அதிகாரத்தை இவருக்களிக்கவில்லை. கி.மு. 36-ல் இருந்து இவர் பெற்றிருந்த டிரிபியூனிசிய அதிகாரமும் செயல் திறமற்றிருந்தது. இவர் ஆறுவது முறையாக (கி.மு. 28) கான்சல் பதவியை ஏற்றுக்கொண்டிருந்த காலம்தான் இறுதியான ஏற்பாடு ஒன்றைச் செய்வதற்குத் தக்கதெனக் கருதினர். மூவராட்சியின் முறையற்ற சட்டங்களை விலக்கி இவர் ஒரு கட்டளை பிறப்பித்தார். இவருடைய இயல்புமீறிய சிறப்பதிகாரங்களைத் துறக்க கி.மு. 27ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 1ஆம் நாளைக் குறிப்பிட்டார். குறிப்பிட்ட நாளில், "உரோமானியக் காமன்வெல்த்தை மக்களின், செனெட் சபையின் உசித அதிகாரத்திற்குத் திருப்பியளித்தார்". கைம்மாறு எதிர்பார்க்கப்பட்டது. இதற்கான ஏற்பாடும் செய்யப்பட்டது. ஆனால், செனெட் சபையின் கொடை பெற்றுக்கொண்டதைவிடக் குறைவானதாகக் கருதப்பட்டது. இருப்பினும், பதவி துறக்கும் அரசருக்கு, அரசின் நிருவாகப் பிரிவின் வலிமைமிக்க தலைமைப்பதவியை அளிப்பது போதுமானதாகக் கருதப்பெற்றது. முதன் முறையாக இவர் இப்பொழுது அகஸ்டஸ் என்று வழங்கப்பெற்றார். குறிப்பிட்ட மாநிலங்களின் ஆட்சிப் பொறுப்போடு இவருக்குப் பத்தாண்டிற்கு இறைமை அதிகாரம் அளிக்கப்பட்டது. இதேசமயத்தில் அரசின் எல்லாப் படைகளுக்கும் இவர் படைத்தலைவராக அமர்த்தப்பெற்றார்; படைத் திரட்டவும், போர் தொடங்கவும், அமைதி உடன்படிக்கை செய்துகொள்ளவும் அதிகாரம் பெற்றார். ஆண்டுதோறும் கான்சல் பதவிகளை வகித்தல் இவர் உயர்நிலையின் முதன்மையான அடிப்படையாக இருந்தது. டிரிபியூனிசிய அதிகாரத்தை இவர் தொடர்ந்து பெற்றிருந்தாலும் இதை மிகக் குறைந்த அளவிலேயே பயன்படுத்தினர்.

இந்த ஏற்பாடு, குடியரசின் முன்னிலை மீட்சியென, வாழ்த்தப் பெற்றது. ஆனால், பிற்காலத்திய எழுத்தாளர்கள் இந்த ஏற்பாட்டை முறையான முடியாட்சியின் தொடக்கமெனக் கருதினர். தலைநகருக்குள் அரசரின் வலிமை குறைந்தநிலை இந்த ஏற்பாட்டின் ஒரு குறைபாடாகும். கான்சல் பதவிக்குப் பாராட்டுக்குரிய குடியாட்சிப் பண்புகள் இருந்தபோதிலும் பொருத்தமற்ற வரையறைகளுக்குட்பட்டுச் செயற்பட்டது. இதன் சட்டச் செயலாட்சி பெருமளவு மறைந்துவிட்டது; எடுத்துரைக்கும் உரிமையும் கூட்டாளி முறையால் தடைப்பட்டது; முறைப்படி இஃது அரசின் மிக உயர்ந்த பதவியாக இருக்கவில்லை. இவ்விரு உயர் பதவிகளில் ஒன்றினை முதல்வர்கள் அடிக்கடி கவர்ந்துகொண்டது உயர் பதவிக்காகப் போட்டியிட்டவர்களின் பேரார்வத்திற்குத் தடையானது. எனவே, ஒரு புதிய ஏற்பாடு தேவைப்பட்டது. இந்த ஏற்பாடும் கி.மு. 23-ல் செய்யப்பெற்றது. பேரரசர் ஆட்சிக்கு இறுதிவடிவம் கொடுத்த இம் மாற்றம்பற்றிய விவரங்கள் மற்றோர் இடத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. கான்சல் பதவியை அடிக்கடி பேரரசருக்களித்தல் கைவிடப்பட்டது. இத்தாலியிலும் உரோமிலும் டிரிபியூனிசிய அதிகாரம் முதல்வர்களின் அதிகாரச் சின்னமாக விளங்கிற்று. இறைமை அதிகாரமும் புதுப்பிக்கப்பட்டதோடு அதிகரிக்கப்பட்டது. பல்வேறான முரண்கூறுகளைக் கொண்ட அதிகாரங்களின் சேர்க்கையில் காணப்பட்ட குறைபாடுகளை நீக்க அவ்வப்போது இவருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. குடியரசின் புதிய இயல்பு மீறிய நிருவாகப் பதவியை அரசின் இயல்பான அலுவலர்களுக்குமேல் தேவையான உயர்நிலைக்கு உயர்த்துவதும் இந்த ஏற்பாட்டின் முதன்மையான இயல்புகளுள் ஒன்றாகும்.

# 12. பேரரசர்

## 1. பதவியேற்பு, பட்டங்கள், விருதுகள்

குடியரசின் உயர்நிருவாகப் பதவிகளுக்கு விதிக்கப்பட்டிருந்ததுபோல் பேரரசர் பதவிக்கு எத்தகைய தகுதிகளும் குறிப்பிடப் படவில்லை. ஆனால், பேரரசராக இருப்பவர் பெட்ரிசியராகவும் செனெட்டராகவும் இருக்கவேண்டுமென்னும் கருத்து நிலவியது. எனவே, இப் பதவிக்கான வேட்பாளர் ஒருவர் மரபுவழித் தேவைகளை நிறைவு செய்யவில்லையெனில் நிலைக்கேற்றவாறு முதலில் பெட்ரிசியராக அல்லது செனெட்டராக ஆக்கப்பெற்ற பின் தேர்ந்தெடுக்கப்பட்டார். கோட்பாட்டளவில் அரசின் இறுதியான அதிகாரத்தின் நிலைக்கலனைச் செனெட் சபை தொடர்ந்திருந்து வந்தது. எனவே, பேரரசர் இறந்தவுடன் அவருக்கு அடுத்துப் பதவிக்கு வரவேண்டிய ஒருவரைத் தெரிவு செய்து அவர்களுக்குரிய புறக் கான்சுலர் இறைமையையும் டிரிபியூனிசிய அதிகாரத்தையும் வழங்கி நியமனம் செய்யப்பெற்றவர்களை ஏற்று செனெட் சபை சட்ட ஒப்புதளித்தது. பிற்காலத்தில் பேரரசால் நியமனம்பெற்றவர் சீசர் பட்டத்தைப் பெற்றார்.

செனெட் சபையும், பொதுமக்கள் அவையும் சட்டத்தால் புறச் கான்சுலர் இறைமையையும் டிரிபியூனிச அதிகாரத்தையும் பேரரசருக்களித்தன. இருப்பினும், தொடக்கத்திலிருந்தே பொதுமக்கள் அவையின் ஒத்துழைப்பு ஒரு சடங்காகவே இருந்து வந்தது.

பேரரசர் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பெற்றதும் பல்வேறு பட்டங்கள் அவருக்களிக்கப்பட்டன. இவைகளில் சில மதிப் பார்ந்தவைகளாகவும், சில புதிய அதிகாரமளிப்பின் அடையாளச் சின்னங்களாகவுமிருந்தன. அலுவல் பட்டியலில் இல்லாத, ஆனால், நடப்பு வழக்கில் இருந்த, சில பட்டங்களைப்பற்றி முதலில் பார்க்கலாம். ஏனெனில், இவை பெரும் சிறப்பிற்குரியனவாக

இருந்தன. பிரின்செப் (Princep) என்ற சொல், பதவியையோ தனிப்பட்ட அதிகாரத்தையோ விவரிக்கவில்லையெனினும் இஃது அரைகுறையான பதவிப் பெயராகவுமிருந்தது. குடியரசின் பிற்காலத்தில், இச் சொல், மற்றக் குடிமக்களின் மீதான அரசியல் தனி முதன்மையைக் குறிப்பிட்டது.[1] இப்பொழுது 'முதன்மைக் குடிமகன்' என்பதைக் காட்டிலும் 'தலைவன்' அல்லது 'முதல்வர்' என்ற பொருள்பட இச் சொல் வழங்கப்பெற்றது. குடியரசின் நெறியாளராகவும், அதன் வெற்றி, தோல்விகளுக்குப் பொறுப்புள்ளவராகவுமிருந்த தலைவர்களிடத்தில் இப்பொழுது பேரரசர் இருந்தார். புதிய ஆட்சியில் பேரரசர் படைத்தலைவர் (imperator) என்ற பட்டத்தைப் பெற்று அனைத்துப் படைகளின் தலைவராக இருந்தார். படைத்தலைவர் என்ற பட்டம் பதவிப் பெயரா அல்லது கௌரவப் பட்டமா என்பதில் ஐயப்பாடு காணப்படுகிறது. இது பதவியைக் குறிப்பிடவில்லையெனினும் செயற்றிறமுள்ள வரம்பற்ற இறைமையைக் குறிப்பிடுகிறது. பட்டங்களின் பட்டியலில் இஃது இரண்டிடங்களில் இடம்பெற்றுள்ளது. இப் பட்டத்தை அகஸ்டஸ் தம் பெயருக்கு முன் பெற்றிருந்தார். சீசரிடமிருந்து மரபுரிமையாக இப் பட்டத்தைத் தாம் பெற்றதற்கு அடையாளமாக இவர் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம். அகஸ்டசின் வாழ்நாளின் பிற்பகுதியில் இதை இவர் பட்டப் பெயராகப் பயன்படுத்திக் கொண்டார். பிற்காலத்தியப் பேரரசர்கள் பெயருக்கு முன் இதைப் பட்டப் பெயராகப் பயன்படுத்திக்கொண்டனர். ஆனால், ஒரு பெரும் வெற்றிக்குப் பின் இப் பட்டத்தை ஒரு பேரரசர் ஏற்றுக்கொண்ட செய்தியும் உள்ளது.

புறக் கான்சல் என்ற பட்டம் பதவியைக் குறிப்பிடும் பட்டமாகும். புறக் கான்சுலர் இறைமையை இது குறிப்பிடுவதாயினும் தொடக்கத்தில் இப் பட்டம் பேரரசர்களால் தவிர்க்கப்பட்டது. செனெட் சபை புறக் கான்சல்கள் வாயிலாகப் பல மாநிலங்களை ஆட்சி செய்ததால் அதற்கு மதிப்பளிக்கும் வகையில் முதலில் இப் பட்டம் தவிர்க்கப்பட்டது. ஆனால், பிற்காலத்தில் இதன் பயன்பாடு மாநிலங்களின் மீதான இரட்டைக் கட்டுப்பாட்டின் மறைவைக் குறிப்பிட்டது. மேலும், பேரரசரின் இறைமையின் தனி முதன்மையையும் இது குறிப்பிட்டதெனலாம்.

பேரரசரின் சிறப்புப் பெயர்களுள், சீசர், அகஸ்டஸ் போன்ற பட்டங்கள் முதன்மை பெற்றன. பின் குறிப்பிட்ட பட்டம் பேரரசரின் பெயரோடு ஒரு குடிப் பெயரைப்போல் பயன்படுத்

[1] Cic. ad AH. viii. 9, 4.

தப்பெற்றது. ஆனல், இது குடிப்பெயராகக் கொள்ளப்பட வில்லே. சொந்தப் பட்டங்களில் இது மிக உயர்ந்த பட்டமாகும். இளவரசரின் தூய்மையான மேதகு நிலேயை இது வெளிப்படுத் தியது. பேரரசருக்கு ஆட்சித்துறையில் துணையாக இருந்த கீழ் நிலேயாளர் இப் பட்டத்தைப் பெறமுடியாது.

மாருக, சீசர் என்ற பட்டப் பெயர் தொடக்கத்திலிருந்தே முற்றிலும் குலப்பெயராக இருந்து வந்துள்ளது ; மரபு வழிவந்த குடிப் பெயராகையால் இதை ஜூலியன் வமிசத்தினர் எவரும் முறைப்படி பெறும் உரிமை பெற்றிருந்தனர். மறைந்துபோன சீசரின் குடும்பத்தோடு தொடர்புடைய கிளாடியசும், நீரோவும் கூடக் குடும்ப உரிமையைக் காட்டிக்கொள்ள இப் பட்டத்தைப் பயன்படுத்திக்கொண்டனர்.

ஹேடிரியனின் (Hadrian) ஆட்சிக் காலத்தோடு இப் பட்டத் தின் பயன்பாடு குறைந்தது. சீசர் என்ற பெயர் இப்பொழுது அரியணைக்கு ஏற்பிற்குரிய வாரிசு என்பதைக் காட்டியது. தேர் விற்குரிய முடியாட்சி இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதாவது நியமனத்தின் வழியாக அடுத்தவருக்கு மாற்றப்படுதற் குரியதாக இப் பதவி இருந்தது. இப் பெயரைப் பெற்றிருப்ப வரை செனெட் சபையின் அறிவுரையோடு ஆட்சி செய்யும் பேரரசர் எனக் குறிப்பிடலாம். மூன்ருவது நூற்ருண்டின் தொடக்கத்திற்குப் பின் புகழ்மிக்க சீசர் என்னும் பட்டப்பெயர் தோன்றியது. இப் பட்டத்தை முதலில் பெற்ற இளவரசர் கெட்டா (Geta) என்பவராவார். இரட்டை முடியாட்சி ஏற்றுக் கொள்ளப்பட்டதால் அரியணைக்கு இரண்டு சீசர்கள் ஒரே சமயத் தில் நியமிக்கப்படுவது தவிர்க்க முடியாததாயிற்று.

மற்றச் சிறப்புப் பட்டப் பெயர்களாகிய ஜெர்மானிக்கஸ், பையஸ் (Pius), பெலிக்ஸ் போன்றவைகள் இப்பொழுது பேரரச ருக்கென ஒதுக்கப்பட்டன. எனவே, இத்தகைய பட்டங்களே அரசின் மற்ற உயர்குடியினர் பெறவில்லே. பேரரசரின் அரசியல் நிலேயைக் குறிப்பிடும் தனிப்பட்ட பட்டமாக நாட்டின் தந்தை (Patre Patriae) இருந்தது. ஒரு காலத்தில் இப் பட்டம் சிசரோ விற்கு மக்களால் அளிக்கப்பட்டது. இப் பட்டப் பெயரை அளிக் கும் உரிமையை செனெட் சபையால் பிரதிபலிக்கப்பட்ட மக்கள் பெற்றிருந்தனர். இப் பட்டத்தால் அரசர் எத்தகைய அதிகாரத் தையும் பெறவில்லேயென்ருலும், இது திறமைக்கொரு பரிசாக அளிக்கப்பட்டது.

பேரரசுப் பட்டங்களின் வரிசைமுறை மாறுபாடுகளே ஏற்றுக் கொண்டது. ஆனல், போன்டிபெக்ஸ் மாக்சிமஸ், டிரிபியூனிசியா

பொட்டெஸ்டே (Tribunicia potestate), படைத்தலைவர் (imperator II, III ete), கான்சல் (Consul II, III ete), சென்சார், புறக் கான்சல் போன்ற வரிசை முறை இறுதியாக நிருணயிக்கப்பட்டது.[1]

பேரரசரின் வழக்கமான விருதுகள் குடியரசின் நிருவாகிகளின் விருதுகளை ஒத்திருந்தன. நகருக்குள் இவர் கோடிட்ட கருஞ்சிவப்பு அங்கி அணிந்திருந்தார். நகருக்கு வெளியே கருஞ்சிவப்பு நிறத்தில் படைத் தலைவருக்குரிய உடைகளை அணிந்திருந்தார். ஆனால், புன்னை மகுடத்தை இவர் எப்பொழுதும் எந்த இடத்திலும் அணிந்துகொள்ளலாம். புன்னை வளையத்தால் மூடப்பட்ட சலாகைக்கட்டு இவரது தனிச் சிறப்புச் சின்னமாகும். விழாக்களிலும், விளையாட்டுகளிலும் வெற்றியணிவகுப்புக்குரிய ஆடைகளை அணிந்திருந்தார். மற்ற நிருவாகிகளைப்போல் இவருக்கு லிக்டர்கள், ஊழியர்கள் போன்ற பரிவாரங்களுண்டு. பிரிடோரியப் போர்வீரர்களைத் தவிர தனி முறையிலான மெய்க்காப்பாளர்களை இவர் பெற்றிருந்தார். வெளிநாட்டுக் குதிரை வீரர்கள், வழக்கமாக ஜெர்மானியக் குதிரை வீரர்கள் இவருக்கு மெய்க்காப்பாளர்களாக இருந்தனர்.

மற்றத் தனிப்பட்ட மரியாதைக்குரிய பட்டங்கள் இவரை மற்ற நிருவாகிகளின் நிலையிலிருந்து உயர்த்திக் காட்டுவதாக இருந்தன. தவறாமல் இவருக்காகச் சூளுறுதி அளிக்கப்பட்டது; அரசுக்காகக் கான்சல்களும் குருமார்குழுவும் சூளுறுதியளித்தனர். இவருடைய பிறந்தநாளும், வெற்றிநாளும் பொது விழாக்களாகக் கொண்டாடப்பட்டன. இவரது சிலையும் உருவமும் புனிதமானவைகளாகக் கருதப்பெற்றன. இவைகளை மாசுபடுத்தலாகாது. இவருடைய காப்புத் தெய்வத்தின் பெயரால் ஒருவர் பிரமாணம் எடுத்துக்கொள்ளலாம். பேரரசர் பெயரால் பொய்ப் பிரமாணம் செய்வோர் அரசத்துரோகக் குற்றத்திற்காக இவ்வுலகில் தண்டிக்கப்படுவர். செனெட் சபையால் அல்லது பேரரசரால் அச்சிடப்பட்ட நாணயங்களில் இவருடைய தலை அல்லது இவருடைய குடும்பத்தினரின் தலைகள் காணப்பட்டன.

அரசின் மற்றெல்லாச் செல்வந்தர்களின் குடும்பங்களுக்கு மேலே சீசரின் குடும்பம் உயர்த்தப்பெற்றது. இந்த வமிசத்தைத் தோற்றுவித்தவரின் ஆண்வழி உறவினரே இம் மரியாதைக்குள்ளாயினர். உரோமானியக் குடும்ப ஒற்றுமைக் கருத்து படைவீரர்களின் பற்றுறுதிப் பிரமாணத்தில் சீசருடைய

[1] Momn. Stratsr. ii. 782—786.

உறவினர்களின் பெயர்களைச் சேர்த்துக்கொள்ளத் தூண்டியது. இவர்களுடைய உருவங்கள் நாணயங்களில் தோற்றமளித்தன. முதலில் இந்த உரிமை அரசுத் தொடர்புடைய பேரரசரின் குடும்பத்தினருக்கு மட்டுமே அளிக்கப்பெற்றது. பிற்காலத்தில் பேரரசரின் குடும்பத்தினரனைவருக்கும் இவ்வுரிமை வழங்கப் பட்டது. மெய்யாக, பேரரசரின் மேதகு நிலையை முழுமையாகக் குறிப்பிடும் பட்டமொன்றிருந்தது. இப் பட்டம் அகுஸ்டா (Augusta)வாகும். ஆளும் குடும்பத்தின் குறிப்பிட்ட சில உறுப் பினர் இப் பட்டப் பெயரைப் பெற்றிருந்தனர். முதலில் இஃது ஆளும் பேரரசரின் தாயார், பாட்டியார், அல்லது மனைவி போன் ேறாருக்கு மட்டுமே ஒதுக்கப்பெற்றிருந்தது. இது முதலில் அரச பதவியில் சிறியதொரு பங்கினைக் குறிப்பிட்டிருக்கலாம். பேரரசர் பதவி, முறையான நிருவாகப் பதவியன்று. பெண்களை அரியணையி லிருந்து விலக்கி வைப்பதற்குத் தக்க அரசியலமைப்புக் காரண மெதுவுமில்லை. ஆளும் அரசரின் தாய்மார்களாக இருந்த லிவியா, அக்ரிபினா (Agrippina) போன்றவர்களின் செல்வாக்கு எவ்வளவு வலிமையுடையதாக இருந்தபோதிலும், இது முறை யணையாச் செல்வாக்காகவே இருந்தது. இருந்தபோதிலும், இப் பட்டம் ஒரு சிறப்புப் பெயராகவே இருந்துவந்தது. இரண் டாவது, மூன்றாவது நூற்றாண்டின் பேரார்வமிக்கப் பெண்களால் விநோதமானதொரு பட்டம் உருவாக்கப்பட்டது. மார்க்ஸ் அருலியசின் மனைவி ஃபாஸ்டினாவும் (Faustina), செப்டிமியஸ் செவெரஸின் (Septimius Severus) மனைவி ஜுலியாடோனாவும் 'பாசறைத் தாய்கள்' என்ற பட்டத்தைப் பெற்றனர். பேரரச ரின் குடும்பத்தை இந்த நிலைக்கு உயர்த்தியதன் ஒரு முக்கிய மான தீய விளைவு இக் குடும்பத் தலைவரைப்போல் இதனுடைய உறுப்பினருக்கும் எல்லாவிதமான தாக்குதல்களிலிருந்தும் பாது காப்புக் கொடுக்கப்பட்டதாகும். பேரரசரின் குடும்பத்தினருக்கு மறைமுகமாகச் செய்யப்படும் தீங்கு அரசத்துரோகக் குற்றமாகக் கருதப்பட்டது. ஏனெனில் இவர்கள் பேரரசரின் குடும்பத்தின ராகக் கருதப்பெற்றனர்.

பேரரசர், அரசரல்லர் என்பதால் இவருக்கு அரசவை இல்லை. ஆயினும், தொடக்க காலத்தில் பேரரசர்களின் பரிவா ரங்கள் எளிமையின் சின்னமாக விளங்கினும், குடியரசு காலத்திய செல்வர்களின் ஆடம்பர வாழ்க்கை, பேரரசைக் காண விரும்பு வோரைத் தரம் பிரிக்கும் முன்னிகழ்வை அளித்தது. ஆதரவாளர் களைக் கேயஸ் கிராக்கஸும், லிவியஸ் தருசுசும் (Livius Drusus), அன்றாடம் வணக்கம் தெரிவிக்கையில், வேறுபடுத்தினர். காலைத் தரிசனத்தில் சிலர் தனிப்பட்ட முறையில் வரவேற்கப்பெற்றனர்;

மற்றவர்களைப் பெரிய அல்லது சிறிய பகுதியாக வரவேற்றனர். பேரரசரின் அரண்மனையில் பேரரசரைக் காணவந்த பெரும் திரளானவர்களை வேறுபடுத்தும் முறை கையாளப்பட்டதில் வியப் பொன்றுமில்லை. பேரரசரின் நண்பர்கள் அரசவையில் வரவேற்கப் பட்டு முதலாவது இரண்டாவது தரிசனத்துக்குரிய நண்பர் களெனப் பிரிக்கப்பட்டனர். ஆட்சி, நீதித் துறைகளுக்கான அறிவுரையாளர்கள் இவர்களிலிருந்தே தெரிவு செய்யப்பெற் றனர். அரச காரியங்களுக்காகப் பேரரசர் இத்தாலியைவிட்டு வெளியேசெல்லும்பொழுது தோழர்களையும் இவர்களிலிருந்தே தெரிவுசெய்து, பின் குறிப்பிட்டவர்களிலிருந்து தனிப்பட்ட பயணத்திற்கு ஒரு குழுவினரைப் பேரரசர் தெரிவு செய் தார். இவர்களில் செனெட் சபையினரும், வீரர்களுமிருந்தனர். ஆட்சி, நீதி, படைத்துறை போன்ற காரியங்களில் இவர்களைப் பேரரசர் பேராளர்களாக அமர்த்தினர்.

## 2. பேரரசரின் அதிகாரங்கள்

பேரரசரின் அதிகாரங்கள் இறைமையிலும், டிரிபியூனிசிய அதிகாரங்களிலும் நிலைபெற்றிருந்தன. கி.மு. 23-க்குப் பின் அகஸ்டஸ் ஒழுங்காகக் கான்சல் பதவியைப் பெற்றிருக்கவில்லை. இவர் செயற்படுத்திய இறைமை புறக் கான்சலுக்குரிய இறைமை யாக இருந்தது. இருப்பினும், பல சிறப்புச் சட்டங்களால் நகருக் குள் இறைமை பெற்று இயங்க இவர் அனுமதிக்கப்பெற்றார். இவர் கான்சல் நிலையிலிருந்துகொண்டு அதிகாரங்களைச் செயற் படுத்தி வந்தார். இவருடைய இறைமை தடையின்றிச் செயற் படுவதற்கெனச் சில சட்டங்கள் பதவியேற்பின்போது மீண்டும் இயற்றப்பட்டன. அரசியல், சமய இயல்புடைய காரியங்களை மேற்பார்வையிடல், தனிப்பட்டோர் அல்லது சமுதாயங்களோ டான காரியங்களில் அரசின் பிரதிநிதியாக இருந்து செயற்படல், தரைப் படைக்கும், கப்பற் படைக்கும் தலைமையேற்றல், தண்டித் தல், உரிமை வழங்குகளையும் குற்ற வழக்குகளையும் விசாரித்தல், ஆணைகள் அல்லது பேரறிக்கைகளைப் பிறப்பித்தல், செனெட் சபையையும் மக்கள் அவைகளையும் கூட்டித் தலைமைதாங்குதல், குறிப்பிட்ட ஆட்சிச் செயல்களைக் கண்காணித்தல் ஆகியவை பேரரசரின் இறைமைக்குள் அடங்கின.

அரசியல் தொடர்புடைய சமய காரியங்களை மேற்பார்வை யிடும் பேரரசரின் நிருவாக அதிகாரம், நான்கு பெரிய சமயக் குழுக்களுக்கு இவரைத் தேர்ந்தெடுக்கும் அளவிற்கு வலிமை பெற்றது. சமய முதன்மைக் குழுவின் தலைவராகவும் பேரரசர் உயர்த்தப்பெற்றார். இந்த அதிகாரத்தின் பயனால் குறிப்பிட்ட

சில குருமார்களை நியமிக்கவும் கோயில்களைக் கட்டுப்படுத்தவும், சமயக் காரியங்களின்மீது பொது மேற்பார்வையிடவும் பேரரசர் உரிமைபெற்ருர்.

வெளி விவகார மேலாண்மையில் பேரரசர் தனி முதன்மை பெற்றிருந்தார். குடியரசின் காலத்தில் இவ் விவகாரங்களில் மேலாண்மை செலுத்திய செனெட் சபை இக் காலத்தில் பேரரசருக்கு அறிவுரையளிக்கும் சபையாக மாறியது. மக்களோ மக்களின் பிரதிநிதியோ வெளியரசுகளோடு பேச்சுவார்த்தை நடத்தலாமெனும் பழைய கருத்தையே பேரரசரின் நிலை வலியுறுத்தியது. குடியரசுக் காலத்தில் செனெட் சபை இந்த அதிகாரத்தை மக்களிடமிருந்து கவர்ந்து செயலாற்றியது. நிருவாகியின் இத் துறை சார்ந்த அதிகாரத்தை மக்கள் அவை வரையறை செய்தது ; ஆனால் பேரரசரின் அதிகாரம் இத் துறையில் வரம்பற்றிருந்தது. இவருடைய இறைமையின் நீட்டிப்பும் சட்டத்தால் குறிப்பிட்டளிக்கப் பெற்றது. அதிகாரப் பொறுப்பில் இவர் போர் தொடங்கலாம்; அமைதி உடன்படிக்கை செய்து கொள்ளலாம்; வெளிநாடுகளோடு பேச்சுவார்த்தை நடத்தலாம்.

படைகளுக்கும் கப்பற்படைக்கும் தலைமையேற்கும் அதிகாரத்தையும் இவர் பெற்றிருந்தார். படை திரட்டவும், அமைக்கவும் தனிச் சிறப்பதிகாரம் பெற்றிருந்தார். பேரரசு மாநிலங்களில் படை நடமாட்டத்தை இவர் இயக்கினர். ஒழுங்கமைவற்ற மாநிலங்களும் பேரரசரின் பொறுப்பில் இருந்ததால் அரசின் அனைத்துப் படைகளும் இவருடைய கட்டுப்பாட்டின்கீழ் இருந்தன. அலுவலர்கள் இவரால் அமர்த்தப்பட்டனர். படைவீரர்கள் இவருக்குப் பற்றுறுதி தெரிவிக்கும் சூளுரை எடுத்துக் கொண்டனர். இவர்களுக்குப் பேரரசர் ஊதியமளித்தார். வெற்றி ஊர்வல அணிவகுப்பு நடத்த அனுமதியளிக்கும் அதிகாரம் தொடர்ந்து செனெட் சபையிடமிருந்தது. செனெட் சபையின் பொறுப்பில் இருந்த மாநிலங்களில்கூட பேரரசர் புறக் கான்சல்களின்மீது மேலாதிக்கம் செலுத்தினர். இவர்களும் செனெட் சபையிடமிருந்து கட்டளை பெருமல் பேரரசரிடமிருந்தே கட்டளை பெற்றனர். இத் துறையின் முன் அரசரும் நிருவாகிகளும் பெற்றிருந்த அதிகாரமனைத்தையும் இப்பொழுது பேரரசர் ஏற்றுக்கொண்டார். ஆனல், செனெட் சபையின் ஆதிக்கம் பெற்றிருந்தபொழுது இந்த அதிகாரத்தைத் தகாத வழியில் ஏற்றுச் செயற்படுத்தியது.

நீதிமன்றப் பணிகளில் மேல்முறையீட்டுக் கருத்தைப் புகுத்தியது நிருவாகியின் நீதிவழங்கும் அதிகாரங்களில் பெரும் மாற்

றத்தை ஏற்படுத்தியது. இது பேரரசு காலத்தில் எடுக்கப் பட்ட முக்கியமானதொரு நடவடிக்கையாகும். குடியாட்சிக் காலத்தில் இந்த உரிமை மக்களுக்குக் கிடைக்கவில்லை. நீதித் தொடர்புடையவைகளில் டிரிபியூன் எப்பொழுதாவது அரிதாகத் தடையாணையைப் பயன்படுத்தி மேல்முறையீட்டிற்கு வழிசெய் திருக்கலாம். சட்ட அதிகாரத்தையும் செயற்படுத்திய பேரரசர் மேல்முறையீடுகளை விசாரிக்கும் அதிகாரத்தைத் தடையின்றிப் பயன்படுத்திக்கொண்டார்.

இதேபோல், மாநில ஆளுநர்கள், உரோமானிய நிருவாகி கள், இத்தாலிய நிருவாகிகள் ஆகியவர்களிடமிருந்து வந்த உரிமை வழக்குகள் பற்றிய மேல்முறையீடுகளைப் பேரரசரே நேரில் இருந்து விசாரித்துள்ளார். சில சமயங்களில், இதற்காக அமர்த்தப்பட்ட பேராளர்கள் இவ் வழக்குகளை விசாரித்தனர். சில வழக்குகளை உரோமில் கான்சல் அல்லது பிரீட்டர் விசாரித் தார். மாநில ஆளுநர்களும் இத்தகைய வழக்குகளைப் பேரரசரின் சார்பில் விசாரித்தனர். வழக்கமாக உரோமில், நிருவாகிகளின் முடிவையொட்டிய மேல்முறையீடுகள் நகரப் பிரீட்டருக்கு அனுப் பப்பட்டன. மாநிலங்களிலிருந்து வந்த முறையீடுகளை விசாரிப் பதற்கென அமர்த்தப்பெற்ற முன்னாள் கான்சல்கள் விசாரித் தனர். ஆனால், பிற்காலத்தில் இவ் வழக்குகள் தலைமைப் பிரீட்ட ரின் விசாரணைக்கு வந்தன. பேரரசரின் பிரதிநிதியின் முடிவை யொட்டிய வழக்குகள் இறுதியான முடிவைப்பெறப் பேரரசரிடம் செல்வது தடை செய்யப்படவில்லை. எனினும், இவை அரிதே. கையூட்டுப் பற்றிய சான்று இருந்தபொழுதும், அல்லது நீதிமன்ற அமைப்பில் அடிப்படையான குறைபாடு இருந்தபொழுதும், அல்லது வழக்கு நடத்தப்பட்ட முறையில் குறைகண்டபொழுதும் மேல்முறையீடு அனுமதிக்கப்பட்டதேயன்றி அறங்கூறுயம் விசாரித்த வழக்குகளில் இயல்பாகவே மேல்முறையீடுகள் அனு மதிக்கப்படுவதில்லை. பேரரசர் முதல் நிலையிலும் ஒரு வழக்கை விசாரிக்கலாம். உயர்குடியினரிலிருந்தும் செனெட் சபையிலிருந் தும் தெரிவு செய்யப்பெற்றவர்களைக் கொண்ட ஒரு சட்ட அறிஞர் குழு பேரரசருக்கு உதவியது. இக் குழுவின் உறுப்பினர் 60,000-ல் இருந்து 100,000 செஸ்டர்கள் வரையிலான ஊதியத்தைப் பெற் றுக்கொண்டனர். வழக்கு விசாரணையின்போது பேரரசர் தலைமை தாங்கினர்; குழு உறுப்பினர் கருத்துகளை எழுத்துருவில் தெரிவித்தனர். பேரரசர் முடிவை அறிவித்தார்.

மேல்முறையீட்டுரிமையின் ஏற்பு, அறங்கூறுய முறையின் படிப்படியான மறைவு, செனெட் சபைக்கும், பேரரசருக்கும்

அல்லது பேரரசு அலுவலர்களுக்கும் நீதிவழங்கும் அதிகாரங்கள் அளிப்பு ஆகியவை குற்றத்தண்டனை வழக்கு நீதிமன்றங்களின் அமைப்பு முறையில் மிகச் சுவையான முன்னேற்றங்களைக் குறிப்பிட்டன. கொலைக்குற்றம் சாட்டப்பட்ட செனெட் உறுப்பினர் பற்றிய வழக்குகளில் முதலில் செனெட் சபை நீதிப் பணிகளைப் பெற்றது. இவ் வளர்ச்சி இயல்பானதே. உயர்குடியினர் உயர்குடியினராலேயே விசாரிக்கப்படவேண்டுமெனச் செல்வர்கள் ஒரு விளக்கம் செய்தனர். இருப்பினும், இக் கருத்தின் ஏற்புப் பேரரசருக்கும், செனெட் சபைக்குமிடையே ஒரு சர்ச்சைக்குரிய பொருளாகவே இருந்தது. குற்ற வழக்கு விசாரணைகளில் அறங்கூறுயத்தினர் தலைமைதாங்கும் நீதிபதியோடு எத்தகைய தொடர்பு கொண்டிருந்தனரோ அதே தொடர்பைக் கருத்தளவில் செனெட் சபை தலைமைதாங்கும் கான்சலுடன் கொண்டிருந்தது. கான்சல் விசாரணை நடத்தி மேல்முறையீட்டிற்குட்படாமல் மரணதண்டனை விதித்தாரென்றால் இவர் மீண்டும் பழங்கால அரசர்களின் சிறப்பதிகாரங்களை நடைமுறைக்குக் கொண்டுவந்தார் என்பதாகும். எனவே, செனெட் சபையும், கான்சல்களும் குற்ற வழக்கு விசாரணை அதிகாரம் பெற்றது, அரசியலமைப்பின் முன்னிருந்த நிலைக்கு இவர்கள் திரும்பியதைக் குறிப்பிடும். ஆதலால், செனெட்டர்களைப் பொறுத்த வழக்குகளில் மற்ற வழக்குகளைச் சேர்ந்தவர்களும், குறிப்பிட்ட வழக்கு அரசியல் தொடர்புடையதாக இருந்திருந்தால், உட்பட்டிருப்பார்கள். இத்தகைய வழக்குகளில் செனெட் சபையின் குற்றவழக்கு விசாரணை அதிகாரம் பெருமளவிலான மக்கள்மீது செயற்பட்டது. கான்சல், வழக்குகளை விசாரித்தார் என்றாலும் பேரரசர் இவைகளின்மீது கட்டுப்படுத்தும் செல்வாக்கைப் பயன்படுத்திக் கொண்டார். மூன்றாவது அல்லது நான்காவது நூற்றாண்டில் செனெட் சபை அதனுடைய நீதி வழங்கும் அதிகாரத்தை இழந்துவிட்டது. இக் காலத்திற்குப் பின், செனெட் சபையினருக்கெதிரான குற்றச்சாட்டுகளை நகர முதல்வர், முதன்மை பிரீட்டர் அல்லது மாநில ஆளுநர் விசாரித்தார்.

வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் தலைசிறந்தவர்களாக இருந்தாலும் அல்லது ஆய்விற்கு எடுத்துக்கொண்ட பொருள் முக்கியமானதாக இருந்தாலும் பேரரசரே அத்தகைய வழக்குகளை விசாரித்தார். அறிவுரைக் குழுவினரைக் கலந்தாராய்ந்தாலும் முடிவு இவருடையதாகவே இருந்தது. பேரரசரின் இவ் விசாரணை அதிகாரம் படிப்படியாகப் பேரரசின் அலுவலர்களுக்கு அளிக்கப்படும் நடைமுறையாக வளர்ந்தது. இதன்படி, நகரிலும், நகருக்கருகிலும் செய்த குற்றங்களுக்காக இவர்கள் நகர

முதல்வர் முன் குற்றம் சாட்டப்பட்டனர். சிறிய குற்றங்கள் அல்லது தனிப்பட்ட குற்றங்களைச் செய்தவர்களின் மீது காவல் கண்காணிப்பாளர் அல்லது தானிய மேற்பார்வையாளர் முன் குற்றம் சாட்டப்பட்டது. இத்தாலியிலிருந்து வந்த இத்தகைய வழக்குகளை முதன்மைப் பிரீட்டர் விசாரித்தார். மாநில ஆளுநர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளிலிருந்து வந்த இத்தகைய வழக்குகளை விசாரிக்க இவர்கள் அதிகாரம் பெற்றனர். மரணதண்டனை விதிக்கப்பட்ட வழக்குகளை மேல்முறையீடாகப் பேரரசரிடம் கொண்டு போகலாம். ஆனால், இவர் சார்பில் செயற்பட வழக்கமாக முதன்மைப் பிரீட்டர் அமர்த்தப் பெற்றார். இவருடைய முடிவை எதிர்த்துப் பேரரசரிடம் மேல்முறையீடு செய்யலாம். ஆனால், இவ்வாறு பேரரசரிடம் முறையிடுவது அரிதாயிற்று. எனவே, முதன்மைப் பிரீட்டரின் நீதிமன்றம் இறுதி நீதிமன்றமாயிற்று. இப்படியே, நிரந்தர குற்றநீதிமன்றமும் சிறிது சிறிதாக, இரண்டாம் நூற்றாண்டின் முடிவில் மறைந்தது. பேரரசரும் பேரரசின் அலுவலர்களும் அறங்கூறுநரின்றியே முடிவுகளைச் செய்தனர். பழைய முறைக்குப் பதிலாகப் புதிய முறையைக் கொண்டுவந்தபொழுது அறங்கூறாயமும் மறைந்தது.

செனெட் சபையில் அலுவல்களை நிறைவேற்றுவதில் மற்ற நிருவாகிகளிலிருந்து பேரரசரைச் சில தனிச் சிறப்புரிமைகள் வேறுபடுத்தின. சபையில் இவர் இருந்தபோது ஒரு பிரேரணையைச் சபை முன் வைப்பதோடு, செனெட் சபை மற்றொரு நிருவாகியின் தலைமையில் கூடியிருந்தபொழுதும் பரிந்துரையை எழுதியனுப்பலாம். இத்தகைய கூட்டத்தில் முறைப்படி ஒரு பொருளுக்கு ஓர் அமர்வில் முன்னுரிமை கேட்கலாம். எனவே, ஒரு தனிச் சிறப்புரிமையாக மூன்று, நான்கு அல்லது ஐந்து தடவைகள் முன்னுரிமை பேரரசருக்களிக்கப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். இருவருடைய பிரேரணையின் பேரில் சபையை வாக்களிப்பிற்குட்படுத்தும் இவரது அதிகாரம் புதிதன்று. ஆனால், இதே அதிகாரத்தைக் குடியாட்சியின் பிற்பட்ட காலத்தில் கான்சல் செயற்படுத்தினர். ஏற்கெனவே சபை முன்னிருந்த இவருடைய பிரேரணையை விலக்கிக்கொள்ளும் அதிகாரத்தைப் பேரரசர் பெற்றிருந்தார். மற்றொரு நிருவாகியின் தலைமையில் கூடுமாறு செனெட் சபைக்கு ஆணையிடும் அதிகாரம் பேரரசரின் சிறப்புரிமையாக இருந்தது.

நிருவாகிகளின் தேர்தல்களின்மீது எந்த அளவிற்குப் பேரரசர் கட்டுப்பாடு செலுத்த முடியும் என்பதைப் பார்க்கலாம். இதையொட்டி இவருக்கு இரண்டு பணிகளைக் குறிப்பிடுகின்றனர். ஒன்று, நிருவாகிகளை இவர் நியமித்தல்; இரண்டாவது, ஒருவரின்

தகுதி கருதிப் பரிந்துரைத்தல். இவ்விரண்டு முறைகளின் விளைகள் பெரிதும் வேறுபட்டன. பெயர்களைப் பெற்றுத் தகுதியற்றவர்களை வேட்பாளர் பட்டியலிலிருந்து நீக்கிவிடும் அதிகாரத்தை குடியாட்சியிலிருந்த நிருவாகிகள் பெற்றிருந்தனர். பல பதவிகளைப் பொறுத்தவரையில் பேரரசரும் கான்சலும் கூட்டாக இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தினர். பேரரசாட்சியின் தொடக்கத்தில் பேரரசர் நியமித்த வேட்பாளர்களின் எண்ணிக்கை குறைவானதே. அரசரின் நியமனத்தால் தேர்தலில் ஏற்படும் நடைமுறை விளைவுகள் பெரிதாக இருக்கலாம். ஆனால், இதன் சட்டப்படியிலான விளைவுகள் ஒன்றுமில்லை. மறுபுறம். பரிந்துரைத்தல் என்பது குடியாட்சி நடைமுறையின் வளர்ச்சியேயாகும். இதன்படி தேர்தலுக்காக வேட்பாளர்கள் சிறந்தவர்களால் பரிந்துரைக்கப் பெற்றூர்கள். இது சட்டத்தால் அளிக்கப்பட்ட உரிமையாகும். பரிந்துரைக்கப் பெற்றவரைத் தேர்வாளர்கள் உறுதியாகத் தேர்ந்தெடுத்து விடுவர். எந்த அளவிற்கு இது பயன்படுத்தப்படலாமென்பது பல்வேறு நிருவாகப் பதவிகளுக்கேற்ப மாறுபட்டது. டைபிரியசின் ஆட்சிக் காலத்தில், பிரீட்டரின் பதவிக்கான பன்னிரண்டு வேட்பாளர்களில் பேரரசர் நால்வரை மட்டுமே பரிந்துரைத்தார். பேரரசரின் ஆதரவில் பதவிக்கு வந்த நிருவாகிகளைப் பேரரசரின் வேட்பாளர்கள் எனப் பெயரிட்டனர். மிக உயர்ந்த பதவியாகிய கான்சல் பதவி, பேரரசின் தொடக்க காலத்தில், பேரரசின் பரிந்துரையையொட்டி எவருக்கும் அளிக்கப்பெறவில்லை. விருப்பம்போல் டைபிரியஸ் இந்தப் பதவிக்கு ஒருவரை அமர்த்தினர். இந் நோக்கத்தை நிறைவேற்ற டைபீரியஸ் தம் நியமன உரிமையைப் பக்குவமாகப் பயன்படுத்திக் கொண்டார். இது நடைமுறையின் மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடாகும். ஏனெனில், சட்டப்படி எந்த நிருவாகப் பதவியும் பேரரசரின் கட்டுப்பாட்டிலிருந்து விலக்குப் பெறவில்லை. வெஸ்பேசியனின் ஆட்சிக் காலத்திலிருந்து கான்சல் பதவியும் பரிந்துரைக்குட்பட்டது. நீரோவின் காலத்திலிருந்தே இம் மாற்றம் வந்துவிட்டதெனவும் கருதப்படுகிறது.[1]

சட்ட ஆக்கத்தில் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ பேரரசரின் செல்வாக்குப் பயன்படுத்தப்படலாம். எடுத்துக்காட்டாக, சொந்த அதிகாரத்தின்படி உரோமானிய அல்லது இலத்தீன் குடியுரிமையைத் தனிப்பட்டவர்களுக்கோ ஒரு சமுதாயத்திற்கோ அளிக்கும் அதிகாரத்தைப் பேரரசர் பெற்றிருந்ததைக் குறிப்பிடலாம். ஆனால், சட்டத்தின் மீதான இவருடைய செல்வாக்கு, ஆணைகளையும் கட்டளைகளையும் அல்லது மறு

[1] Momn. Stratsr. ii. p, 925

மொழிகளையும் பிறப்பித்துச் சட்டங்களுக்குப் பொருள் விளங்கச் செய்யவும் பொருள் விரிவு செய்யவும் பெரிதும் பயன்பட்டது. இவ் விளக்கங்கள் வழக்குகளுக்கு உடனடியாகப் பயன்படுவதோடன்றி வருங்காலத்திய வழக்குகளுக்கு முன்னிகழ்வுகளாகவும் பயன்பட்டன. குடிமக்களுக்காகவும் வெளியார்களுக்காகவும் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. இவை பேரரசின் பேரறிக்கைகளாகும். படை, கருவூலம் அல்லது உணவுப்பொருள் அளிப்பு ஆகியவைகளைப் பாதிக்கின்றவைகளைப்பற்றியதாக இப் பேரறிக்கைகள் இருந்தன. கட்டளைகள் என்பவை பேரரசரின் தீர்ப்புகளாக இருந்தன. பேரரசு அலுவலர்களால் அல்லது தனிப்பட்டவர்களால் பேரரசரின் முடிவிற்காக விடப்பட்ட முக்கியமான பிரச்சினைகளுக்கான பதில்களே மறுமொழிகளாக இருந்தன. அதிகார பூர்வமாக நிலைபெற்றிருந்த சட்டங்களுக்கு விளக்கமளிப்பதாலும் தேவையானபோது இவைகளுக்கு வளமூட்டுவதாலும் பேரரசர்கள் சட்டத்தின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்துமளவிற்குத் தம் செல்வாக்கை வலியுறுத்தினர். நேர்முகமாகச் சட்டமியற்றுவதற்கான பொது அதிகாரம் இவர்களுக்கில்லையென்பதும் குறிப்பிடத் தக்கது.

குடியாட்சியில் பயனுள்ளமுறையில் நிதிச் செயலாட்சியைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் செனெட் சபையிடமிருந்தது. தொடக்கத்தில் இச் சபை குடிமக்கள்மீது வரி அல்லது சிறப்பு வரிகளை விதிக்கும் அதிகாரம் பெற்றிருந்தது. மாநிலங்கள் அளிக்கவேண்டிய தொகையை இச் சபை நிருணயித்தது. செனெட் சபைக்கும் மக்கள் சபைகளுக்கும் இடையே அரசின் நிதிக் கட்டுப்பாடு அடிக்கடி சர்ச்சைக்குரிய பொருளாக இருந்து வந்தது. செனெட் சபை ஆதிக்கம் செலுத்திய காலத்தில் இதனுடைய விற்பனை அல்லது குத்தகை போன்றவைகளைப் பற்றிச் சட்டமியற்றியது. செலவினங்களைப் பொறுத்தவரையில் இச் சபை ஒரு வரவு-செலவுத் திட்டத்தை ஐந்தாண்டுக் காலத்திற்குத் தயாரித்தது. பொதுப் பணிகளுக்காக சென்சார்கள் செலவிடவேண்டிய தொகைபற்றியும், மாநிலங்களுக்காக ஆண்டுதோறும் பணம் ஒதுக்கலையும் இத் திட்டம் கொண்டிருந்தது.

இரட்டை ஆட்சியில் இப் பணிகளைப் பேரரசரும் (முதல்வரும்) செனெட் சபையைப் பகிர்ந்து கொண்டனர். மூன்று தனிப்பட்ட கருவூலங்கள் அமைக்கப்பட்டன. சனிக் கடவுளர் கோயிலில் இருந்த கருவூலம், பொதுக் கருவூலம் (Fiscus Caesaris) இராணுவக் கருவூலம் என இவைகள் பெயர் பெற்றிருந்தன,

சனிக் கருவூல நிதிகளின் கட்டுப்பாடு செனெட் சபையிட மிருந்தது. ஆனால், கி.பி. 44-ல் கிளாடியஸ் இச் சபையிடமிருந்து இக் கருவூல அலுவலர்களை அமர்த்தும் பொறுப்பை எடுத்துக் கொண்டார். எனவே, இதுபற்றிய செனெட்டின் அதிகாரம் வெற்றுச் சடங்காக இருந்தது. பணத்தை வெளியே கொடுப்ப தற்கு முன்னர் பண ஒதுக்கல் (மசோதா) நடவடிக்கை தேவையா யிற்று. ஆனால், இத்தகைய மசோதா ஒன்றை நிறைவேற்றல் வெறும் முறையாக இருந்தது. சிறிதுசிறிதாக இக் கருவூலத்தில் செலுத்தப்படவேண்டிய வருவாய் பொதுக் கருவூலத்திற்குத் திருப்பப்பட்டது. இவ்விரு கருவூலங்களுக்கிடையேயான வேறு பாடு டயோகிலிடியனின் ((Diocletian) ஆட்சிக்காலம் வரை இருந்தது. சனிக் கருவூல நிதிக் குறைந்துகொண்டு வந்து மூன்றும் நூற்றாண்டில் இக் கருவூலம் நகராட்சிக் கருவூலமாயிற்று. கி.பி. 44-க்குப் பின் இதன் ஆட்சி அலுவலர்கள் ஒழுங்காகப் பேரரசரால் அமர்த்தப் பெற்றனர்.

மாநில அரசு நில விற்பனை அல்லது குத்தகை, சுரங்கங்கள், பணமாகவும் பண்டமாகவும், பேரரசு மாநிலங்களிலிருந்தும் செனெட் மாநிலங்களிலிருந்தும் திரட்டிய வரிகள், தங்க முடிப்பு கள், சுங்க வரிகள், மற்ற மறைமுக வரிகள் போன்றவைகளி லிருந்து கிடைத்த வருவாய் பொதுக் கருவூல நிதியாக அமைந் தன. படைக்கும் கப்பற் படைக்கும் மாநில ஆட்சிச் செலவிற்கும் இதன் நிதி பயன்படுத்தப் பெற்றது. சாலைகள் அமைக்கவும் அஞ்சல் முறையைப் பேணவும், பேரரசரின் அறக்கட்டளைகளை ஏற்கவும் உரோம் நகருக்குக் குடிநீரையும் உணவுப் பொருள் களையும் அளிக்கவும் இந் நிதியிலிருந்து பணம் செலவிடப்பெற்றது.

அரசரின் சொந்த வருமானத்திலிருந்து சொந்த செலவுகளுக் கும் பேரரசரின் அரண்மனைக்கான செலவுகளுக்கும் பணம் செல விடப்பெற்றது. பேரரசரின் சொந்த வருமானத்திற்கும் பொது வருமானத்திற்கும் நுட்பமான வேறுபாடு இருந்ததாகத் தெரிய வில்லை.

கி.பி. 6-ல் அகஸ்டஸ் இராணுவக் கருவூலத்தை நிறுவினார். மூன்றும் நூற்றாண்டுவரை இது தொடர்ந்திருந்து வந்தது. சொந்த வருமானத்திலிருந்து ஒரு பெரும் தொகையை அகஸ்டஸ் இக் கருவூலத்திற்களித்தார்; ஏல விற்பனை, மரபுரிமைச் சொத்து வரி ஆகியவைகளிலிருந்து கிடைத்த வருமானத்தை இதற்கொரு நிரந்தரமான வருவாயாகக் கொடுத்தார். இதன் நிதி இராணு வச் செலவிற்காக ஒதுக்கப்படவில்லை. ஆனால், இதன் நிதி படை

யிலிருந்து ஓய்வுபெற்ற போர்வீரர்களுக்காகப் பெரிதும் செல விடப்பட்டது.

பேரரசர்கள் வரி விதிக்கும் அதிகாரம் பெற்றிருந்தார்களா என்பது ஐயப்பாட்டிற்குரியதாக இருந்தது. இருப்பினும், குடி மக்களின் உடைமைகளை இவர் மதிப்பிட்டார். பிற்காலத்தில் வரிவீதத்தை இவரால் உயர்த்த அல்லது தாழ்த்த முடிந்தது. வரி திரட்டலில் இருந்துவந்த ஒப்பந்தமுறை சிறிதுசிறிதாகக் கைவிடப்பட்டது. சில நிகழ்வுகளில், மாநிலக் கருவூல அதிகாரி யின் அலுவலகத்தைச் சேர்ந்த கீழ்நிலை அதிகாரிகள் வரி திரட்டி னர். மற்ற நிகழ்வுகளில், சமுதாயம் குறிப்பிட்ட தொகையைச் செலுத்தவேண்டிய இடங்களில் தல அலுவலர்கள் கருவூலத்தில் நேரே பணம் செலுத்தினர். இதேபோல், பொதுப் பணிகளை மேற்கொள்ளும் பொறுப்பு தனியார் ஒப்பந்தத்திற்கு விடப்பட வில்லை. சனிக் கடவுளர் கருவூலத்திற்கும் குடிமக்களுக்குமிடையே எழும் பிரச்சினைகளைக் கருவூலப் பொறுப்பில் இருந்த அலுவலர் கள் விசாரித்தனர். இவர்களின் முடிவையொட்டிய மேல்முறை யீடுகளை செனெட் சபை விசாரித்து முடிவுசெய்யும் அதிகாரம் பெற்றிருந்தது. பொதுக் கருவூலத்திற்கும் தனிப்பட்டவர்களுக்கு மிடையே எழுந்த விவகாரங்களைக் கருவூல அலுவலர்களே தீர்த்து வைத்தனர்.

பணத்தை நாணயமாக அச்சிடுதல்பற்றிய முழுமையான கட்டுப்பாடு குடியாட்சியில் செனெட் சபையிடமிருந்தது. இருந்த போதிலும், கி மு. 5-ல் தங்க, வெள்ளி நாணயங்களை அச்சடித்தல் சட்டத்தோடு பேரரசருக்கு மாற்றப்பட்டது. ஆனால், செப்பு நாணயங்களை அச்சிடுதல் செனெட் சபையிடமே இருந்தது.

வரிகளைத் திரட்டுதல், பொதுக் கட்டடப் பணிகள் ஆகியவை முற்காலத்தில் சென்சார்களால் செய்யப்பட்டு வந்தன. இவை களைப் பேரரசர் இப்பொழுது மேற்கொண்டார். செனெட் சபை யினரின் பட்டியலை வரையும் சென்சாரின் மற்றொரு பணியையும் பல பேரரசர்கள் ஏற்றுச் செயற்படுத்தினர். முதல் நூற்றாண்டில் அகஸ்டஸ், கிளாடியஸ், வெஸ்பேசியன், டாமிடியன் ஆகியோர் சென்சார் பதவிகளை வகித்தனர். இறுதியாகக் குறிப்பிட்ட பேரரசர் இப் பதவியை ஆயுட்கால முழுவதும் வகித்தார். இப் பதவியால் செனெட் சபையினரின் பெயர்ப்பட்டியலை இவர்கள் தயாரித்ததோடு நிருவாகப் பதவி வகிக்காதவர்களைக்கூட பேரரசர்கள் மறைமுகமாக இப் பட்டியலில் நுழைத்தனர்; இத்தகைய செயற்பாட்டால் குவெஸ்டர் தரத்தில் இருந்த சில செனெட் உறுப்பினரை டிரிபியூன்களோடு பதவி உயர்த்தினர்.

தொடக்கத்தில் சென்சார் பதவியை ஏற்றுக்கொண்ட பேரரசர் களும் டாமிடியனுக்குப் பின் எல்லாப் பேரரசர்களும் செனெட் சபையின் உறுப்பினர்களைப் பட்டியலிலிருந்து விலக்கும் உரிமை யைச் செயற்படுத்தினர். அகஸ்டஸ் செனெட் சபையினரின் பட்டியலை கி.மு. 29-லும் 18-லும் திருத்தியமைத்தார். செனெட் சபைப் பட்டியலையும் உயர்குடியினர் பட்டியலையும் திருத்தும் உரிமை மக்களின் இசைவால் நிலைபெற்றது. இதைப் பேரரசரின் உரிமையாக இப்பொழுது மக்கள் ஏற்றுக்கொண்டனர். இப் பதவிக்குரிய அதிகாரமெனவும் இது கருதப்பட்டது. சட்டத்தால் இந்த அதிகாரம் சீசருக்கும் அகஸ்டஸிற்கும் அளிக்கப்பட்டது. சென்சார்கள் என்ற முறையில் கிளாடியசும் வெஸ்பிசியனும் இந்த அதிகாரத்தைச் செயற்படுத்தினர். குடியரசுக் காலத்தி லிருந்து மறைந்துபோன, உயர்குடியினரைப் படைக்கும் உரிமை இப்பொழுது உயிர்பெற்றுப் பேரரசர்களின் சிறப்பதிகாரமாகச் செயற்பட்டது. பேரரசராதற்குரிய ஒருவர் பிளெபியராக இருந் தால் தெரிவு செய்யப்படுவதற்கு முன் அவரை உயர்குடியினராக உயர்த்தும் அதிகாரத்தை செனெட் சபை பெற்றிருந்தது. இந்த அதிகாரத்தைப் பின் பேரரசர்கள் செனெட் சபையினரிடமிருந்து ஏற்றுச் செயற்படுத்தினர்.

நகரின் ஆட்சி தொடக்கத்திலிருந்தே பேரரசரிடமிருந்தது. காவல்துறை, தீ அணைப்புத்துறை, தானியத்துறை, கால்வாய்ப் பிரிவு, கட்டடப் பிரிவு, டைபர் ஆற்றங்கரைப் பிரிவு, நகரக் கழிவு நீர்ப் பிரிவு ஆகியவை நகராட்சியின் முதன்மையான பிரிவுகளா கும். பொது அமைதியைப் பேணும் உரிமையை ஆட்சிக்காலத் தொடக்கத்திலேயே அகஸ்டஸ் ஏற்றுக்கொண்டார். நகர்ப் பாதுகாப்பு அதிகாரத்தை இவருடைய பிரதிநிதியாகிய நகர மேற்பார்வையாளருக்கு அளித்தார். பேரரசர் ஊரில் இல்லாத போது இவர் இவ்வதிகாரத்தைச் செயற்படுத்தினார். தீயணைக்க வும் இரவில் நகரைப் பாதுகாக்கவும் ஒரு கண்காணிப்புத் துறையை நிறுவினார். கி.மு.22-ல் ஏற்பட்ட பஞ்சத்தால், உரோம் நகருக்கு எப்பொழுதும் உணவுப் பொருள்கள் கிடைக்கச் சிறப்பு ஏற்பாடுகளை இவர் செய்தார். ஆனால், இருவருடைய ஆட்சிக் காலத்தின் பிற்பகுதிவரை உணவுப் பொருள்களை வழங்குவதற் காகப் பேரரசுத்துறையை நிறுவவில்லை. கி.மு. 11-ல் அகஸ்டஸ் கால்வாய் பாதுகாப்பைத் தம் பொறுப்பில் எடுத்துக்கொண்டார்; இதே ஆண்டில் வெள்ளத்தடுப்பு ஏற்பாட்டையும் மேற்கொண் டார். தம்முடைய ஆட்சிக்கால முதலாண்டில் டைபிரியஸ் நகரை வெள்ளப் பெருக்கிலிருந்து பாதுகாக்கும் பொறுப்பை ஆணையர் களுக்களித்தார். பேரரசர் டிராஜனுக்குப் பின் நகரின் கழிவு

நீர்ப் பொறுப்பையும் இவர்கள் ஏற்றுக்கொண்டனர். இப் பிரிவு களின் அமைப்பு விவரங்களைப் பின் ஒரு பகுதியில் பார்க்கலாம். கிளாடியசின் காலத்திலிருந்து நகரின் எல்லைகளை விரிவாக்கும் அதிகாரத்தைப் பேரரசர்கள் பெற்றனர்.

இத்தாலியை மற்ற மாநிலங்களின் நிலைக்குத் தாழ்த்தவும், பேரரசின் மற்றப் பகுதிகளைப்போல் பேரரசரின் விருப்பிற்குட் படுத்தவும் மேற்கொண்ட நடைமுறை மூன்றும் நூற்றுண்டில், ஒரு சீர்திருத்துநர் அமர்த்தப்பெற்றபொழுது முற்றுப்பெற்றது. ஆயினும், இதுபற்றிய இயக்கம் தொடர்ந்தது. தாம் அமர்த்திய அலுவலர்களின்கீழ் அகஸ்டஸ் ராவென்னுவில் (Ravenna) ஒரு கப்பற் படையையும் மிசின (Misenum)த்தில் மற்றொன்றையும் நிறுத்திவைத்தார். பொது அமைதியைப் பேண பல்வேறு வசதி யான இடங்களில் படைகளும் நிறுத்தி வைக்கப்பட்டன. பொதுச் சாலைகளைப் பேணும் பொறுப்பை இவருடைய ஆணையர்கள் ஏற்றனர். டிராஜன் (Trajan), ஹேடிரியன் (Hadrian) ஆகியவர் களின் ஆட்சிக் காலங்களில் பேரரசரின் ஆட்சி மேற்பார்வை வலுவடைந்தது. காப்புதவிக் கண்காணிப்பாளரின் நியமனத்தால் இத்தாலியின்மீது பேரரசருக்கிருந்த கண்காணிப்பு மேலும் வலிமைபெற்றது. இத்தாலிய நகராட்சிகளின் நிதிகளின் மீதும் பேரரசர் கட்டுப்பாடு செலுத்தும் உரிமையைப் பெற்றுக்கொண் டார். இந்த நகரங்களில் அலுவலர்கள் செயற்படுத்திய சட்ட அதிகாரம் ஹேடிரியனுல் குறைக்கப்பெற்றது. மூன்றும் நூற்றுண் டில், குற்ற வழக்கு விசாரணை அதிகாரம் நகர முதல்வருக் கும் முதன்மைப் பிரீட்டருக்குமிடையில் பிரித்துக்கொள்ளப் பெற்றது.

பேரரசரின் புறக் கான்சலர் அதிகாரம் பேரரசு மாநிலங் களுக்கு இவரைத் தலைவராக்கியது. இவருடைய இறைமையால் செனெட் சபைக்குரிய மாநிலங்களின் மீதும் இவர் கட்டுப்பாடு செலுத்தினுர். பேரரசு மாநில ஆளுநர் மட்டுமன்றிப் படைத் தலைவர்களையும் பேரரசரே அமர்த்தினுர். பேரரசர் பொறுப்பி லிருந்த மாநிலங்களின் ஆட்சி முறைகளை இவர் கூர்ந்து கவனித் தார். செனெட் பொறுப்பிலிருந்த மாநில ஆளுநர்களும் இவரு டைய முடிவுகளையும் விருப்பங்களையும் முன்னிகழ்வுகளாக எடுத் துக்கொள்ள விரும்பினர். உரோமானியக் குடிமக்கள் குற்றத் தண்டனை வழக்குகளில் மாநில ஆளுநரின் தீர்ப்பை எதிர்த்துப் பேரரசருக்கோ அவருடைய பிரதிநிதிக்கோ மேல்முறையீடு செய்யலாம். செனெட் சபைக்குரிய மாநிலங்களிலிருந்து வந்த மேல்முறையீடுகளைப் பேரரசர் அல்லது செனெட்சபையினர் விசாரித்தனர். இத்தகைய வழக்குகளில் பேரரசரின் முடிவு

அல்லது அவருடைய அறிவுரையாளர்களின் முடிவு இறுதியான தாக இருந்தது.

டிரிபியூனிசிய அதிகாரத்தைப் பேரரசர் பெற்றிருந்தது அவருடைய மென்னய உணர்ச்சிகளைத் தூண்டுவதாக இருந்ததே யன்றிச் சட்டமுறையில் சிறப்பளிக்கவில்லை. செனெட் சபையைக் கூட்டும் உரிமை போன்ற பல அரசியலமைப்பு உரிமைகள் பேரரசருக்கு வேறு வழியாக வந்தன. ஆனல், இது பேரரசரின் உடலுக்கும் உயிருக்கும் புனிதத் தன்மையை அளித்தது. பொது மக்களின் உரிமைகளின் காவலராக இவரை ஏற்றுக்கொண்டது. டிரிபியூனின் உடலுக்கும் உயிருக்கும் அச்சுறுத்தும் சொற்களால் அல்லது வன்செயல்களால் ஊறுவிளைக்க முடியுமாகையால் பேரரசின்கீழ் உயர் பதவியின் மாண்பிற்கெதிரான குற்றச்சாட்டு களை எப்படிக் கொண்டு வரலாமென்பதைப் பார்ப்பது எளி தாகும். நிருவாக அல்லது சட்டஆக்கத் துறைகளில் நேர்முக மாக உதவும் உரிமையை அல்லது தலையிடும் அதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் பேரரசருக்கு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. பதவியால் இவர் பெற்றிருந்த செல்வாக்கை மீறி செனெட் சபையோ, நிருவாகிகளோ இவருடைய விருப்பு களை நிறைவேற்ற மறுத்திருக்க முடியாது. இருந்தபோதிலும், பேரரசின் குறிப்பிட்ட சில நீதிப் பணிகள் இவருடைய தலையிடும் அதிகாரத்தைச் சார்ந்திருந்தன. பேரரசரின் அரசிய லமைப்பின்படி டிரிபியூன் பதவியை வகிப்பதற்கும் டிரிபியூனிசிய அதிகாரத்தைப் பெற்றிருப்பதற்கும் ஒரு நுட்பமான வேறுபாடு காணப்பட்டது. டிரிபியூனிசிய அதிகாரத்தைப் பெற்றிருந்த காரணத்தினல் பேரரசர் டிரிபியூனின் நடவடிக்கை மீது தடை யாணையைப் பயன்படுத்தலாம். ஆனல், இவர் டிரிபியூனக இல்லாதிருந்தபோதிலும் இவருடைய செயலை டிரிபியூன் தடை செய்ய முடியாது. இந்த வேறுபாடு முக்கியமானதன்று. ஏனெ னில், டிரிபியூன் எவரும் பேரரசரை எதிர்க்கத் துணியமாட்டார். பேரரசருக்கு டிரிபியூனிய அதிகாரம் ஆயுட்காலம் முழுவதற்கும் அளிக்கப்பட்டது. அகஸ்டஸ் இந்த அதிகாரத்தை கி.மு. 36-லும், டைபீரியஸ் கி.மு. 6-லும், மற்றவர்கள் அரசோடு தொடர்பு கொண்ட காலத்திலிருந்தும் அல்லது அதற்குச் சிறிது காலத்திற்குப் பின்னும் இந்த அதிகாரத்தைப் பெற்றார்கள்.

டிரிபியூனிசிய அதிகாரத்தோடு குறிப்பிட்ட சட்டங்களி லிருந்து பேரரசர் விலக்குப் பெற்றிருந்தார் என்ற உண்மையும் குறிப்பிடப்படவேண்டும். விலக்களிக்கப்பட்ட சட்டங்கள்பற்றி குறிப்பிடப்படவில்லையெனினும், கருத்துத் தெளிவாகக் கூறப் பட்டுள்ளது.

# 13. பேரரசு அலுவலர்கள்

## 1. அரண்மனை அலுவலர்கள்

பேரரசில் ஆட்சித் துறையின் பல்வேறு பணிமனைகளின் அமைப்புச் சிறிதுசிறிதாக எடுத்துக்கொள்ளப்பெற்றது. பல அலுவலர்களின் பணிகளும் அடிக்கடி மாறின. எனவே, பேரரசு அலுவலர் ஒருவரின் அதிகாரங்களும் கடமைகளும் ஒரு பேரரசரின் ஆட்சிக்காலத்திற்கும் இன்னொரு பேரரசரின் ஆட்சிக் காலத்தித்கும் வேறுபடலாம். சில அலுவலர்கள் படைத்துறையிலிருந்து பொது ஆட்சித்துறைக்கு மாறினர். இதற்கு எடுத்துக்காட்டாக முதன்மைப் பிரீட்டரின் பதவியைக் குறிப்பிடலாம். மாருக, ஒருவர் பொதுத்துறை ஆட்சியிலிருந்து படைத்துறைக்கும் சென்றிருக்கலாம். இத்தகைய மாற்றங்களை யும் வளர்ச்சியையும் கருத்திற்கொண்டு, பேரரசர் ஹேடிரியன் காலத்திற்குப் பிற்பட்ட ஆட்சிமுறையைப் பேரரசு ஆட்சி முறை யாக ஆராய்வது வசதியாக இருக்கலாம். ஏனெனில் பல ஆட்சிப் பணிமனைகள் அமைப்பதில் இவர் அரும்பாடுபட்டார். எனவே, பேரரசு அலுவலர்களின் வகைப்பாடு எல்லா வகை யிலும் திருப்தியாக அமையவில்லை. ஆயினும் இவர்களை வகைப் படுத்துவது நமது ஆய்விற்குப் பயனுள்ளதாக இருக்கும். வகைப் பாடு பின்வருமாறு ; (அ) அரண்மனை அலுவலர்கள், (ஆ) நீதி பதிகள், (இ) நிதி அலுவலர்கள், (ஈ) அரசு அலுவலர்கள் (உ) உரோம் நகரின் அலுவலர்கள், (ஊ) இத்தாலியின் அலுவலர்கள், (எ) மாநில அலுவலர்கள்.

பேரரசரோடு மிக நெருங்கியவர்கள் இவரது குடும்பத் தினர். பேரரசர் பதவி மரபுவழிப் பதவி இல்லையாதலால், இவர்களுக்கு இயல்பு மீறிய அதிகாரங்கள் அளிக்கப்பெற வில்லை. பேரரசரின் ஒப்புதலின்பேரில் அல்லது செனெட் சபையின் வேண்டுகோளின்பேரில் அளிக்கப்பட்ட பட்டங்கள், விருதுகள் ஆகியவைகளைத் தவிர வேறு சிறப்புப் பட்டங்களை

இவர்கள் பெற்றிருக்கவில்லை. ஹேடிரியனின் காலம் வரை பேரரசிகள் அகஸ்தா என்ற பட்டப் பெயரையும் பேரரசரின் குடும்பத்தைச் சேர்ந்த இளவரசர்கள் சீசர் என்ற பட்டப் பெயரையும் பெற்றிருந்தனர். ஆனால், பேரரசருக்குப் பின் பதவிக்கு வர இருந்தவருக்கு மட்டுமே இச் சிறப்புப் பட்டங்கள் வழங்கப்படவேண்டுமென ஹேடிரியன் இதை வரையறை செய்தார். பதவியேற்க வேண்டியவரைத் தெரிவு செய்த பின் அவருக்குப் புற கான்சுலர் இறைமையும் டிரிபியூனிசிய அதிகாரமும் வழங்கப்பட்டன. இவர் பேரரசரின் கூட்டாளியாகச் செயற்பட்டார். இருப்பினும். இவ்வுறவுமுறை தெளிவற்றதாகவே இருந்தது. தெரிவு செய்யப்பெற்ற சீசர் இறைமை பெற்றவர் என்ற முறையில் எல்லா நிருவாகிகள்மீதும் பேரரசு அலுவலர்கள்மீதும் அதிகாரம் செலுத்தினரெனினும் இவர் பேரரசருக்குக் கீழ்பட்டே இயங்கினர்; சீசர் என்ற பட்டத்தின் தனிமுறைச் சிறப்பும் இவருக்கு அதிகாரம் வழங்கப்பெற்ற முறையும் இவரை அடுத்துப் பதவிக்கு வர இருப்பதைத் தெளிவுபடுத்தின. சீசர் என்ற பட்டத்தைப் பெற்றவர்களுக்கு இயல்பாகவே படைத் தலைவர் என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்புச் செய்தனர். வெற்றி அணிவகுப்பில் பங்கேற்றும் உரிமையும் இவருடைய உருவம் நாணயங்களில் பொறிக்கப்பட்டதும் இவருக்குச் செய்யப்பெற்ற சிறப்புகளே. பேரரசரோடு இவர் வழக்கமாக நிருவாகப் பதவிகளையும் வகித்தார். மார்க்கஸ் அருலியசிற்கும் லூசியஸ் ஏலியசிற்கும் இடையில் இருந்த உறவை வைத்துக் கூட்டாளிக் கருத்து அப்படியே ஏற்கப்பெற்றது சமய முதன்மைக் குழுத்தலைவர் என்ற பட்டத்தை மட்டுமே தமக்கென மார்க்கஸ் அருலியஸ் ஒதுக்கிக்கொண்டார்.

முதன்மைப் பிரீட்டருக்குப் பேரரசரின் பாதுகாப்புப் பொறுப்பு அளிக்கப்பெற்றது. இவருடைய அதிகாரம் நீதிமன்ற எல்லைகளுக்கப்பாலும் நீடிக்கப்பட்டது. ஆகவே, இவரைப் பேரரசரின் குடும்பத்தினரில் ஒருவராகக் கருதுவது முறையாகும். முதலில் உரோமின் மூன்று பிரிடோரியப் படைப்பிரிவுகளின் பொறுப்பு இவருக்கு அளிக்கப்பெற்றது. நகரப்படைப் பிரிவையும் நகருக்கு வெளியே ஒரு படைப் பிரிவையும் தவிர, காலப்போக்கில் இவர் இத்தாலியில் நிறுத்திவைக்கப்பட்டிருந்த எல்லாப் படைகளுக்கும் தலைமை தாங்கினர். உரோமிலும் அதற்கு அருகிலுமிருந்த படைகளின்மீதும் இவர் செலுத்திய கட்டுப்பாடும் பேரரசரின் வாரிசைத் தெரிவு செய்வதில் இவருக்கிருந்த செல்வாக்கும் இவரைப் பேரரசருக்கடுத்தபடி முக்கியமானவராகச் செய்தது. ஆகையால், பேரரசுக் கட்டளைகளைச்

செயற்படுத்தம் அதிகாரத்தையும் பேரரசு அலுவலர்களை மேற் பார்வையிடும் உரிமையையும் பேரரசர் இவருக்கு அளித்தார்.

குற்ற வழக்குகளிலும் உரிமை வழக்குகளிலும் இவருக் கிருந்த விசாரணை அதிகாரம் பற்றி முன் சில செய்திகளைப் பார்த்தோம். இப் பதவியின் மூல முதல் அதிகாரங்களின் இயல்பான வளர்ச்சியே இப் பணிகள். இத்தாலியில் இவர் படைகளின் தலைவராக இருந்த நிலை, இவருக்குக் கீழிருந்த படைகளின்மீது படைத்துறை விசாரணை உரிமையை இவருக் களித்தது. இக் கடமையை நிறைவேற்ற இவர் நடுவுநிலைப் பண்புகளைப் பெற்றிருக்கவேண்டும். மேல்முறையீட்டுரிமை ஏற்கப்பட்ட பின் இவர் மேல்முறையீட்டு மன்றப் பொறுப்பை யேற்பது இயல்பாயிற்று. இதனால், இப் படையாட்சியாளர் பதவி பிற்காலப் பேரரசில் படைத்துறைப் பதவியென்பதைவிட ஒரு நீதித் தொடர்புடைய பதவியாக மாறிற்று. இதுபற்றியே இப் பதவியில் அக் காலத்திய தலைசிறந்த சட்ட அறிஞர்கள் அமர்த்தப்பட்டார்கள். படையாட்சியாளரின் இச் சட்டஞானமே பேரரசரின் நீதிக்குழுவில் இவருக்கு முதன்மை உறுப்பினரிடத் தைத் தேடிக் கொடுத்தது. பேரரசின் தொடக்கத்தில் இப் பதவி வீரர்களுக்கே அளிக்கப்பட்டது.

பேரரசரின் தனிப்பட்ட ஆதரவைப் பெற்றிருந்தவர்கள் பல்வேறு ஆட்சிப் பொறுப்புகளில் அமர்த்தப்பெற்றனர். இவர் களிலிருந்தே பெருமளவிற்குப் பேரரசர் தம் அவையை உரு வாக்கினர். இவர்களிலிருந்து தெரிவு செய்யப் பெற்றவர்களே பேரரசரோடு மாநிலங்களுக்குப் பயணம் செயதார்கள். பேரரசரின் தோழர்கள் (Comes) படிப்படியாகப் பல்வேறு பேரரசு அலுவல்களில் ஈடுபடுத்தப்பெற்றனர். செனெட் சபை யினர் மட்டுமே அரசவை உறுப்பினராயினர்.

பேரரச குடும்பத்தோடிருந்த முதன்மையான பணிமனைகள் பேரரசர் நிதி, பேரரசரின் அலுவல் தொடர்புடைய கடிதங்கள் பேரரசருக்கு அனுப்பபடும் விண்ணப்பங்கள், தகவல் தொகுப்பு, பேரரசர் தீர்ப்புகள் ஆகியவைகளைக் கவனித்தன. பேரரசரின் நிதிகளை முதலில் சுயேச்சை பெற்றவர் செயலாட்சி செய்தார். ஆனல், ஹேடிரியனின் ஆட்சிக்காலத்திற்குப் பின் உயர்குடியினரிலிருந்து தெரிவு செய்யப்பட்ட புரோகுயுரேட்டர் ஒருவர் நிதி விவகாரங்களைக் கவனித்து வந்தார்.

ஒரு பணிமனை பேரரசரின் கடிதப் போக்குவரத்துப் பொறுப்பை ஏற்றிருந்தது. பேரரசரின் தனிமுறைச் செயலர்கள்

மாநில ஆளுநர்கள், படைத் தலைவர்கள், நகரங்கள், தூதரகங்கள் ஆகியவர்களிடமிருந்து கடிதங்களை ஏற்றுக்கொண்டது. பேரரசரின் மறுமொழிகளுக்கு இவர்கள் இறுதி வடிவம் கொடுத்தனர். கிரேக்க மொழி பேசுபவர்களுக்கான ஆவணங்கள் கிரேக்க மொழியில் வரையப்பெற்றன. ஆகவே இப் பணிமனை கிரேக்க மொழியினருக்காகவும் இலத்தீன் மொழியினருக்காகவும் இரு பிரிவுகளாகப் பிரிந்து செயற்பட்டது.

பேரரசருக்குத் தனிப்பட்டவர்கள் அனுப்பிய வேண்டுகோள்களையும் விண்ணப்பங்களையும் ஒரு பணிமனை கவனித்தது. பேரரசரின் ஏற்பிற்கென இப் பணிமனையினர் சில முடிவுகளையும் மறுமொழிகளையும் வரைந்தனர்.

தகவல் சேகரிக்க ஒரு பணிமனை நிறுவப்பட்டிருந்தது. நீதித் தொடர்புடையவைகளில் செய்திகளையும் கருத்துகளையும் பேரரசருக்காக இப் பணிமனை அலுவலர்கள் தயாரித்தனர். இப் பொறுப்பேற்றுக் கொண்டவர்களுக்குச் சட்ட அறிவும் பயிற்சியும் தேவைப்பட்டன. முதலில் இப் பதவிகளில் இருந்தவர்கள் சுயேச்சை பெற்றவர்கள். பிற்காலத்தில் உயர்குடியினர் இப் பதவிகளுக்குப் பேரரசரால் அமர்த்தப்பெற்றனர்.

பேரரசரின் சொற்பொழிவிற்காகச் செய்திகளைத் திரட்டுவதில் ஒரு பணிமனை ஈடுபட்டிருந்தது. இப் பணிமனை இரண்டாம் நூற்றாண்டில் நிறுவப்பட்டது. பேரரசரின் முடிவுகளை வெளியிடும் பொருட்டு இவைகளைத் தக்க முறையில் வரைவது இப் பணிமனையின் அலுவலாகும்.

## 2. பேரரசு நீதித்துறை அலுவலர்கள்

குடியாட்சியின் இறுதிக் காலத்தில் நீதிப்பணிகளை நிறைவேற்றுவதற்காகப் பொதுமக்களின் சபைகள் கூட்டப்படவில்லை. எனவே, எல்லாக் குற்ற வழக்குகளும் நிரந்தர நீதிமன்றத்தின் விசாரணைக்கு அனுப்பப்பட்டன. கி.மு. 70-ல் இருந்து 40-வரை இந் நீதிமன்றங்களின் அறங்கூறுநர்களாக செனெட் சபையினரும், வீரர்களும், கருவூல டிரிபியூன்களும் பணியாற்றினர். கி. மு. 46-க்குப் பின் கருவூல டிரிபியூன்கள் இந் நீதிமன்றங்களில் அமரவில்லை. செனெட் சபையினரையும் இந் நீதிமன்றங்களிலிருந்து விலகிக் கொள்ள அகஸ்டஸ் அனுமதித்தார். ஆனால், 200,000 செஸ்டர்கள் மதிப்புள்ள சொத்துடையவர்களுக்குக் குறிப்பிட்ட அளவு இதில் இடமளித்தார். இருந்தபோதிலும் இவர்கள் சிறு உரிமை வழக்குகளில் அறங்கூறுநராகச் சேவை புரிந்தனர். குற்ற வழக்குப் பற்றிய நிரந்தர

நீதிமன்றம் மூன்றும் நூற்றுண்டில் மறைந்தது. பேரரசோடு வளர்ச்சியடைந்த செனெட் சபையின் குற்ற வழக்கு விசாரணை அதிகாரம் இடரார்ந்த அரசியல் குற்றவழக்குகள்மீது பயன் படுத்தப்பட்டது. குறிப்பாக இவ் வழக்குகளில் செனெட் சபை யினர் தொடர்பு கொண்டிருந்ததால் இந்த அதிகாரம் பயன் படுத்தப்பட்டது. நாடு கடத்தல், வெளியேற்றல், மரணம் ஆகிய தண்டனைகள் விதிக்கப்படலாம். பேரரசரிடம் மேல் முறையீடுகளைக் கொண்டு செல்ல முடியாது. ஆனால், பேரரசர் விரும்பினல் தடையாணையைப் பயன்படுத்தித் தடை செய் யலாம். மூன்றும் அல்லது நான்காம் நூற்றுண்டில் செனெட் சபை நீதி வழங்கும் அதிகாரங்களை இழந்துவிட்டது.

பேரரசர் குற்ற வழக்கு விசாரணையைத் தாமே நேரில் செய்தார்; அல்லது மற்றவர்களிடம் இப் பணியை ஒப்படைத் தார். இவரே விசாரணை செய்தபோது குற்றவழக்குச் சட்ட நடைமுறை விதிகளைப் பின்பற்றினர். குற்றப் புலனாய்வு அலு வலக உறுப்பினர்களும் குறிப்பிட்ட வழக்கு விசாரணைக் காகத் தெரிவு செய்யப்பட்டு அறிவுரைக் குழுவினர் சிலரும் பேரரசருக்கு இதில் உதவினர். தனிப்பட்ட வழக்குகளை விசா ரிக்கும் பொறுப்பை இவர் தனி நீதிமன்றங்களிடம் விட்டார். ஆனல் குறிப்பிட்ட சில வகையான வழக்குகளைப் பேரரசரின் அனுமதி அதிகாரமின்றி விசாரிக்கும் உரிமையைப் படையாட்சி யாளரும், நகர முதல்வரும், காவற்கண்காணிப்பாளரும், தானிய மேற்பார்வையாளரும் பெற்றிருந்தனர். முதன்மைப் பிரீட்டர் (படையாட்சியாளர்), இத்தாலிக்குள் படைவீரர்களின் மீதும், உரோம் நகருக்கு வெளியே நூறு மைல்களுக்கப்பால் இத்தாலியில் பொதுமக்களின் மீதான கொலைக் குற்றவழக்கு களின்மீதும் பிற்காலத்தில் மாநில ஆளுநர்களிடமிருந்துவந்த மேல்முறையீடுகளின் மீதும் குற்றவழக்கு விசாரணை அதிகாரம் பெற்றிருந்தார். இதேபோல் நகர முதல்வரும், உரோமில் கொலைக் குற்றம் செய்தவர்களை, நகரிலிருந்து 100 மைல்களுக் குட்பட்ட வழக்குகளை, விசாரிக்கும் அதிகாரம் பெற்றிருந்தார். நீதி வழங்கும் பணிகளை இவர் மற்றவர்களிடம் ஒப்படைக் கலாம். சிறிய குற்றங்களைக் காவல் கண்காணிப்பாளர் விசாரித் தார். இவருடைய முடிவை எதிர்த்துப் பேரரசரிடம் அல்லது முதன்மைப் பிரீட்டரிடம் மேல்முறையீடுகளை எடுத்துச் செல்ல லாம். தானியங்களை முடக்குவது போன்ற தனிப்பட்ட குற்றங் களைத் தானிய மேற்பார்வையாளர் விசாரித்தார். செனெட் சபையினர், குறிப்பிட்ட நிலை அலுவலர்கள், ஆகியவர்களைத் தவிர, மாநிலத்தில் உள்ள உரோமானியர்மீது கொலைக் குற்ற

வழக்குகளிலும் மாநிலங்களின் ஆளுநர்கள் குற்ற விசாரணை அதிகாரம் பெற்றிருந்தனர். தல ஆட்சி மன்ற உறுப்பினர்கள் உரோமில் விசாரிக்கப்படுவதற்கான உரிமை பெற்றிருந்தனர்.

உரிமை வழக்கு விசாரணைக்குப் பேரரசு, குடியாட்சிக் காலத்திலிருந்த பிரீட்டர், குயுருல், ஈடில், நீதிமன்றங்களை மரபுரிமையாகப் பெற்றது. குற்ற ஆய்வுநர்களும், 105 பேர்களைக் கொண்ட ஒரு பொதுநேர்மை நீதிமன்றமும் வழக்குவிசாரணையில் பேரரசிற்கு உதவியது. இப்பொழுது நேர்மை நீதிமன்ற உறுப்பினர் எண்ணிக்கை 105-ல் இருந்து பேரரசு காலத்தில் 180 ஆக உயர்ந்தது சில சமயங்களில் இஃது ஒரு நீதிமன்றமாக அமர்ந்தது. ஆனல், பொதுவாக இது அடிக்கடி நான்கு பிரிவுகளாக அமர்ந்து செயலாற்றியது. பேரரசு காலத்தில் இதன் உறுப்பினர்கள் முறையான நீதிபதிகளிலிருந்து தெரிவு செய்யப்பட்டிருக்கலாம். அகஸ்டஸ் காலத்திலிருந்து குற்றஆய்வுநர்கள் பொதுநேர்மை மன்றத்தின் பல பிரிவுகளுக்கும் தலைமை தாங்கினர். உயில்கள், மரபுரிமைகள்பற்றிய வழக்குகளைப் பெரும்பாலும் இந் நீதிமன்றம் விசாரித்தது. குறிப்பாக நீதித்துறைக்கும் தனியார்களுக்குமான வழக்குகளை விசாரிக்கும் பொறுப்பு புதிதாகப் பிரீட்டர்களுக்கு அளிக்கப்பட்டபொழுது இவர்களின் சட்ட விசாரணை அதிகாரம் விரிவடைந்தது. இந் நீதிமன்றங்களோடு பேரரசர் நீதிமன்றத்தையும், பேரரசரின் அதிகாரத்தைப் பெற்றவர் ஒருவரின் தலைமையில் நடைபெற்ற நீதிமன்றத்தையும் இங்குச் சேர்த்துக்கொள்ள வேண்டும். வழக்குகளை முதல் நிலையில் அல்லது மேல்முறையீட்டு நிலையில் பேரரசரே வழக்குகளை விசாரிப்பதுமுண்டு. தனிப்பட்ட வழக்குகளைத் தனி நீதிமன்றங்கள் விசாரித்தன. சில குறிப்பிட்ட வகையிலான வழக்குகளைப் பேரரசரின் பெயரில் பிரீட்டர்களும், கான்சல்களும், அல்லது மாநில ஆளுநர்களும் விசாரித்தனர். ஆனல், சில மேல்முறையீட்டு வழக்குகளை நகர முதல்வரும், முதன்மைப் பிரீட்டரும் அதாவது படையாட்சியாளரும் விசாரித்தனர்.

### 3. பேரரசு நிதித் துறை அலுவலர்கள்

மக்கள்தொகைக் கணக்கெடுப்பு நூலை அடிப்படையாகக் கொண்டு சொத்து மதிப்பீடும், வரி விதிப்பும் இருந்தன. சென்சிடோரிகளின் மேற்பார்வையில் இக் கணக்கெடுக்கப்பட்டது. ஒவ்வொரு மாநிலத்திற்கும் அல்லது அதனினும் சிறிய பிரிவிற்கும் சென்சார்களைப் பேரரசர் அமர்த்தினர். இவர்கள் குடியாட்சிக் காலத்திய சென்சார்கள் பின்பற்றிய நடைமுறை விதிகளையே பின்பற்றினர்.

பேரரசின் தொடக்க காலத்தில் சனிக் கடவுளரின் கோயிலில் இருந்த கருவூலம் நகர குவெஸ்டர் பொறுப்பில் இருந்தது. ஆனால் பிரிடோரியன் செனெட்டர்களின் பட்டியலிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்ற இரு கருவூல மேற்பார்வையாளர்களின் பொறுப்பிற்கு அகஸ்டஸ் மாற்றினார். பின்னர் இது பிரீட்டர் களின் பொறுப்பில் இருந்தது. சிறிது காலத்திற்குப் பின் மறு படியும் குவெஸ்டர்களின் பொறுப்பில் வந்தது. ஆனால், 56-ல் நீரோ நிறுவிய முறைப்படி இது பேரரசரால் அமர்த்தப்பெற்ற மேற்பார்வையாளரின் பொறுப்பிற்குட்பட்டது. டையோகிலிடி யன் காலம் வரை இம் முறை தொடர்ந்தது.[1]

நிதிச் செயலாட்சி, ஒரு புரவலர், நிதி மேலாளர், கணக்கு வைப்புநர் எனப் பெயர் பெற்ற அலுவலர்களிடம் அடுத் தடுத்து ஒப்படைக்கப் பெற்றது. ஹேடிரியனின் காலத்திலி ருந்து இந்தப் பதவியை ஒரு வீரர் வகித்துவந்தார். கீழ்நிலை அலுவலர், புரோகுயூரேட்டர் என்ற பெயரில் அமர்த்தப் பெற்றார். ஒவ்வொரு மாநிலத்திலும் இவர் வரி திரட்டினார்; அல்லது ஒரு குறிப்பிட்ட வகை வரிப் பொறுப்பை ஏற்றிருந் தார். அரசிற்கும் தனியார்களுக்கும் இடையே எழுந்த வழக்கு களை புரோகுயூரேட்டர் விசாரித்து முடிவு கூறினார்.

படைத்துறைக் கருவூலம் மூன்று கருவூல மேற்பார்வையா ளர்களின் பொறுப்பில் இருந்தது. பிரிட்டோரியர் நிலையில் இருந்த செனெட்டர்கள் மூன்றாண்டிற்கு இப் பதவியில் அமர்த் தப் பெற்றனர். அகஸ்டஸின் காலத்தில் இவர்கள் குலுக்கல் முறையில் தெரிவு செய்யப்பெற்றனர். பிற்காலத்தில் பேரரசர் இவர்களை அமர்த்தினார். நிதி விவகாரங்களில் வழக்கமாக இருந்துவந்த செனெட் சபையின் உரிமைகளைப் பேரரசர் தாம் மேற்கொண்டதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும்.

பேரரசரின் குடும்பத்தினரின் தனியுடைமைகளுடன் அவ் வப்போது பரிசுகளாகவும், பறிமுதல்களாகவும், மரபுரிமை களாகவும் வந்தடைந்த உடைமைகளும் சேர்ந்தன. பேரரசரால் அமர்த்தப்பெற்ற அலுவலர்களின் பொறுப்பில் இவ்வுடைமைகள் இருந்தன. பேரரசர் மேய்ச்சல் நில மேலாளர் ஒருவர் அமர்த் தப்பட்டிருந்தார். செப்டிமியஸ் செவ்ரஸ் காலம் வரையில் பொது நிதிக்கும் பேரரசரின் தனியுடைமைக்கும் நுட்பமாக வேறுபாடு செய்யப்படவில்லை. தனியுடைமை மேலாளர் என்ற பதவி பேரரசின் பல்வேறு பகுதிகளிலும் காணப்பட்டது.

[1] Tac. Ann. 13, 29

## 4. உரோம் நகர ஆட்சிப் பொறுப்பேற்றிருந்த பேரரசு அலுவலர்கள்

பேரரசர் அகஸ்டஸ் ஊரில் இல்லாதபொழுது நகராட்சிப் பொறுப்பேற்க நகர முதல்வர் இவரால் அமர்த்தப் பெற்ருர். அகஸ்டஸ் அரசுத் தலைவராக இருந்த நிலையை இப் பதவியின் படைப்புத் தெளிவாக்கியது. ஏனெனில், குடியாட்சி அரசிய லமைப்பில் இரண்டு கான்சல்களும் நகரில் இல்லாதபொழுது தான் இப் பதவி உருவாக்கப்பட்டது. ஆனல் பேரரசர் ஊரில் இருந்தாலும் இல்லையென்ருலும் நகரின் ஆட்சிப் பொறுப்பை ஏற்க டைபிரியஸ் நகர முதல்வரை அமர்த்தினர். இப் பதவிக்குரியவரைப் பேரரசர் அமர்த்தினர். இவருடைய பதவிக் காலம் வரையறை செய்யப்பெறவில்லை. கான்சல் நிலை யைப் பெற்றிருந்த செனெட்டர்களைப் பேரரசர் இப் பதவியில் அமர்த்தினர். நகரின் அமைதியைப் பேணும் பொறுப்பு இவ ருக்களிக்கப்பெற்றது. குறிப்பாக, மக்கள் கூடும் இடங்களாகிய அங்காடி, அரங்குகள், விளையாட்டு வேடிக்கைக்கான வட்டரங் குகள் ஆகியவைகளின் பொறுப்பு இவருடைய கடமைகளாகும். இதற்கென இவருடைய தலைமையின்கீழ் முதலில் மூன்றும் பின் ஆறு நகரப் படைப் பிரிவுகளும் இருந்தன. இவைகள் ஒவ்வொன் றிலும் 1000-ல் இருந்து 1500 பேர்கள் இருந்தனர். அமைதி பேணும் இவரது காவற் பணிகளோடு முதலில் இயல்பாகவே, கீழ்நிலை மக்கள் தொடர்புடைய வழக்குகளில் குற்ற விசாரணை அதிகாரத்தையும் பெற்ருர். ஆனல், காலப் போக்கில் உரோமில் மிக முக்கியமான குற்ற விசாரணை நீதிமன்றமாகுமள விற்கு இவரது நீதிப் பணிகள் வளர்ச்சியடைந்தன. இவருடைய குற்ற விசாரணையின் அதிகார வரம்பு நகரின் எல்லைகளுக்கப் பாலும் சென்று நிலவியது.

குடியாட்சிக் காலத்தில் தீ அணைப்பிற்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகள் முற்றிலும் தேவைக்குக் குறைந்ததாகக் காணப்பட் டது. கி.பி. 6-ல் அகஸ்டஸ் ஏழு படைப் பிரிவுகளை அமைத்து இப் பொறுப்பை அவைகளுக்களித்தார். இப் படைப் பிரிவு ஒவ் வொன்றிலும் 1000-ல் இருந்து 1200 பேர்கள் இருந்தார்கள். இப் படைப் பிரிவுகள் இரவில் நகர் பாதுகாப்புப் பணிக்குப் பயன் படுத்தப்பெற்றன. நகரப் படைப் பிரிவுகளோடு இவைகளும் அமைதியைப் பேணும் பணியில் ஒத்துழைத்தன. இப் பிரிவுகள் காவற் கண்காணிப்பாளரின் (Praefectus Vigilum) பொறுப்பில் இயங்கின. நகர முதல்வரைப்போல் இவரும் குற்ற வழக்கு விசாரணை அதிகாரம் பெற்றிருந்தார். ஆனல், நீதி விசாரணை யைப் பொறுத்தவரையில் இவர் நகர முதல்வருக்குக் கீழ்ப்பட்டுச்

செயலாற்றினர். வழக்கமாக இக் காவற்பணியாளர் 'விடுதலைப் பெற்றவர்களாக' இருந்ததால் உயர்நிலைத்தரம் பெற்றிருந்த ஒருவர் இவர்களுக்குத் தலைமையேற்றிருந்தார். இவர்கள் பிரிட்டோரியன் படைப் பிரிவுகள் அல்லது நகரப் படைப் பிரிவுகளைப்போல் பெருமளவு அரசியல் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை.

நகருக்குத் தங்குதடையின்றி உணவுப் பொருள்களை அளிப்பது பெரும் அரசியல், பொருளாதாரச் சிறப்புப் பெற்றிருந்ததால் இதற்கென அரசுத்துறையொன்று நிறுவப்பட்டது. இதில் எண்ணற்ற அலுவலர்கள் பணியாற்றினர். இத் துறைப் பொறுப்பைத் தானிய மேற்பார்வையாளர் (Praefectus annonae) ஏற்றிருந்தார். மாநிலங்களின் உணவு தானிய உற்பத்தி நிலைகளின் பொது மேற்பார்வையும், உரோம் நகருக்கு உணவுப் பொருள்களை ஏற்றி அனுப்புவதும், தேவைப்படும் மக்களுக்கு உணவுப் பொருள்களைப் பகிர்ந்தளிப்பதும் இவருடைய தலையாய பொறுப்பாக இருந்தது. இப் பணிகளோடு, பொருள்கள் வந்திறங்கும் துறைமுகங்களைப் பேணுதலும் உரோமில் இருந்த உணவு தானிய அங்காடிகளைக் கட்டுப்படுத்துவதும் இவருடைய கடமைப் பொறுப்பாக இருந்தது.

கால்வாய்கள், பொதுக் கட்டடங்கள், பொதுச் சாக்கடை ஆகியவைகளையும் மேற்பார்வையிட மூன்று கழகங்கள் நிறுவப்பட்டன. சாலைகளைப் பேணவும் அமைக்கவும் ஓர் ஆணைக்குழு அமைக்கப் பெற்றது. செனெட் சபையினரின் தகுதி பெற்றிருந்தவர்களை இதன் உறுப்பினர்களாக, காலவரையின்றிப் பணியாற்றப் பேரரசர் அமர்த்தினர். மூன்று கால்வாய் மேற்பார்வையாளர்கள் அக்ரிப்பா (Agrippa) இறந்தபொழுது விட்டுச் சென்ற கால்வாய் அமைப்புப் பணியைப் பேணும் பொறுப்பையும் மேற்கொண்டனர். கிளாடியஸின் காலத்திலிருந்து பேரரசரால் அமர்த்தப்பெற்ற வீரர் அல்லது விடுதலைப்பெற்றவர் கால்வாய் மேலாளர் (Procurator aquarum) என்ற பெயரில் செயற்பட்டவருக்கு இவர்கள் உதவினர். புதிய கட்டடங்களைக் கட்டும் பணியைப் பேரரசரே ஏற்றுக்கொண்டார். போரில் கிடைத்த கொள்ளைப் பொருள்களிலிருந்து கிடைத்த பணம், தனியார் அன்பளிப்பு, இதற்காகச் செனெட் சபை ஒதுக்கி வழங்கிய தொகை ஆகியவைகளைக் கொண்டு கட்டடப் பணிக்கான செலவைப் பேரரசர் ஈடுசெய்தார். மேலே குறிப்பிட்ட ஆணைக் குழுவினர், முன்னர் ஈடில்கள் பொதுக் கட்டடங்களைப் பேணியதனைத், தாமே ஏற்றுச் செயற்படுத்தினர்.

## 5. இத்தாலியில் பேரரசு அலுவலர்கள்

அகஸ்டஸ் இத்தாலியைப் (உரோம் நீங்கலாக) பதினொரு மண்டலங்களாகப் பிரித்தார். ஆனால், இப் பிரிவுகள் ஆட்சி நோக்கங்களுக்காகச் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. அலுவல்களில் முக்கியமானவைகளான சாலைகளின் செயலாட்சிப் பேண செலவுக் கட்டுப்பாடு, தல நிதிகள், உரிமை நீதிமன்றங்கள், குற்ற வழக்கு நீதிமன்றங்கள் போன்றவைகளை முழுதாகவோ அரை குறையாகவோ மத்திய அரசு பொறுப்பேற்றுக் கொண்டிருந்தது.

நெடுஞ்சாலைப் பாதுகாப்பு கி.மு. 20-ல் பேரரசு அலுவலர்களின் பொறுப்பில் வந்தது. பேரரசால் தெரிவு செய்யப்பெற்ற மேலாளரின் பொறுப்பில் காலவரையின்றி ஒவ்வொரு சாலையும் விடப்பட்டது. சாலைகளை நல்லமுறையில் பேண வேண்டியது இவருடைய பொறுப்பாகும். மேலும் தனியார் ஊடுருவலிலிருந்து பொதுச் சொத்தைப் பாதுகாப்பதும் இவருடைய கடமையாயிற்று. உயர்குடியினரின் தரமுடைய புரோகுயூரேட்டர் ஒருவரின் பொறுப்பில் கிளைச் சாலைகள் இருந்தன.

காப்புதவிக் (Cura Alimentorum) கழகமொன்றை டோமிடியன் (Domitian) நிறுவி இருக்கலாம். ஆனால், இது நெர்வா (Nerva) டிராஜன் (Trajan) ஆகியோர் காலத்திலிருந்தே செயற்பட்டு வந்தது. காப்புதவிக்கென இவர்கள் ஓர் அறக்கட்டளையை நிறுவினர். தெரிவு செய்யப்பட்ட அநாதைக் குழந்தைகளுக்கு ஒவ்வொரு மாதமும் இவ்வறக்கட்டளையிலிருந்து பெற்ற வட்டியைப் பொருளுதவியாகக் கொடுத்தனர். இதற்காக ஒதுக்கப்பட்ட நிதியின் செயலாட்சியும் மாதந்தோறுப் பகிர்ந்தளித்த பண உதவியும் தல அலுவலர்களின் பொறுப்பில் இருந்தன. ஆனால் இதுபற்றிய பொதுவான மேற்பார்வையை ஒவ்வொரு மாவட்டப் புரோகுயூரேட்டர் அல்லது கண்காணிப்பாளர் ஏற்றுக்கொண்டிருந்தார். அரசு இதற்கென ஒதுக்கீடு செய்த பணத்தோடு பொது மக்கள் உவந்தளித்த கொடைகளும் சேர்ந்தன.

நகராட்சி நிதிகளை டிராஜன், பேரரசின் மேற்பார்வைக்குட்படுத்தினார். இவரும் இவருக்குப் பின்வந்தவர்களும் செனெட் உறுப்பினர் தகுதி நிலை அல்லது உயர்குடித் தரம் உடையவர்களைப் பேரரசர் நகராட்சிகளுக்கு மேலாளர்களாக (Curators) அமர்த்தினார்கள். நகரக் கணக்குகளைத் தணிக்கை செய்வது இவர்களுடைய கடமையாகும். புதிய கடன் கொள்வதற்கு முன் அல்லது பொது உடைமைகளை விற்குமுன் நகரங்கள் இவர்களுடைய இசைவைப் பெற வேண்டும். ஒவ்வொரு நகரத்திற்கும் இவர்களில் ஒருவர் அமர்த்தப் பெற்றாரா அல்லது கண்காணிப்பு

தேவைப்பட்டபோது மட்டும் அமர்த்தப்பெற்றார்களா என்பது தெளிவாகவில்லை.

ஹேடிரியனின் காலத்திலிருந்து மாவட்ட நீதிமன்றங்கள் நிறுவப்பட்டதாகத் தெரிகிறது. இந்த நிறுவனத்தை அன்டோனியஸ்பியஸ் வைத்துக்கொள்ளவில்லை. ஆனால், மார்க்கஸ் அருலியஸ் இதைத் திரும்பவும் நிறுவினார். இதன் நீதிபதிகள் செனெட் உறுப்பினரின் தரமுடையவர்களாக இருந்தனர். இறுதியில் இத்தாலி அதன் தனிச் சிறப்பு நிலையிலிருந்து வீழ்ச்சியுற்று மாநில நிலைக்குத் தாழ்ந்தது.

## 6. மாநிலங்களில் பேரரசு அலுவலர்கள்

பேரரசு, மாநிலங்களின்மீது பேரரசர் செலுத்திய கட்டுப்பாடு தலையாயதாகும். செனெட்டிற்குரிய மாநிலங்களைப் பெயரளவில் செனெட் சபை மேற்பார்வை செய்தது. பேரரசரின் உயர் இறைமையும் உயர்நிலையும் செனெட்டிற்குரிய மாநில ஆளுநர்களைப் பேரரசரின் அறிவுரைகளையும் கட்டளைகளையும் பெறத் தூண்டின. மேலும், பொதுச்சாலைகள், அஞ்சல், நிதி முறையில் சில பிரிவுகள் போன்ற செனெட் மாநில ஆட்சித் துறைகளும் பேரரசரின் பெயரிலேயே செயலாட்சி செயற்பட்டு வந்தன. இருப்பினும், செனெட் ஆட்சிக்குட்பட்ட மாநிலங்களின் நிதித் துறைகளில், புரோகுயூரேட்டர் என்ற பெயரில் பேரரசர் பிரதிநிதிகளை அமர்த்தியிருந்தார்.[1]

மாநிலங்களின் பொதுவான ஆட்சிமுறை பற்றியும், ஆளுநர்களின் உரிமை, குற்ற வழக்குகள் மீதான விசாரணை அதிகார வரம்புகளையும் பிறிதோர் இடத்தில் குறிப்பிட்டுள்ளோம். எனவே, பேரரசரின் அதிகாரத்தைக் குறைக்க அல்லது அதிகரிக்கத் தூண்டிய அம்சங்களை இப்பொழுது பார்த்தாலே போதும். காலப்போக்கில் தல சுய ஆட்சி உரிமைகளை இழந்தன. ஆனால், இதேசமயத்தில் மாநிலங்களின் உரிமைகள் பெருகின என்பதைப் பொதுவாகக் குறிப்பிடலாம். நகர்களும், மாநகர்களும் சுயேச்சையை இழந்தன. ஏனெனில், இத்தாலிய நகராட்சிகளைப் போல், நிதி பற்றியவைகளில் முதலிலிருந்தே பேரரசரின் மேலாளர்களின் மேற்பார்வைக்குட்பட வேண்டியதாயிற்று. மறுசார்பில் பேரரசர் பெருமளவில் நேர்முகக் கட்டுப்பாட்டை மேற்கொண்டதாலும், மாநில அவைகளின் வளர்ச்சியாலும் ஆளுநரின் தனியாட்சி அதிகாரம் குறைந்தது. ஆளுநர்கள் தளர்வின்றிப் பதில் சொல்லும் பொறுப்பிற்கு உட்படுத்தப்பட்டிருந்ததால் முக்கிய

[1] Dio. 53, 15.

மானவைகளில் பொறுப்பேற்கத் தயங்கினர். பிரச்சினைகளைப் பேரரசரின் கருத்தறிய விடும் பழக்கம் விரைந்து வளர்ச்சியடைந்தது. இதனுல், முக்கியமான பிரச்சினைகளில் துணிந்து செயற்படும் உரிமையை ஆளுநர்கள் இழந்தனர். மாநில அவைகளின் வளர்ச்சி இவர்களுடைய அதிகாரத்தை மேலும் கட்டுப்படுத்தியது. பெரும்பாலும் எல்லா மாநிலங்களும் ஆலோசனைக்குழுக்களைப் பெற்றிருந்தன. ஆளுநரைக் கலந்துகொள்ளாமல் விண்ணப்பங்களையோ பிரதிநிதிகளையோ அனுப்பும் உரிமையை இவைகள் பெற்றிருந்தன. இந்த முறையும் தாராளமாகப் பயன்படுத்தப்பட்டது. மாநில அவைகளுக்குப் பேரரசர் மறுமொழிகளை நேரே அனுப்பியதும் இவைகளின் சுதந்திர நிலையை ஏற்பதாக அமைந்தது. ஆளுநரின் பதவிக்காலம் முடியும்பொழுது அவருடைய நடத்தையை விமரிசித்து எழுதி அனுப்பப்படும் ஆவணத்தை ஒவ்வொரு ஆளுநரும் எதிர்நோக்க வேண்டிய நிலை அவர்களுடைய ஆட்சியில் நலந்தரும் செயல்விளைவை உண்டாக்கியது.

### நிருவாகப்பதவி

குடியாட்சிக் காலத்திய நிருவாகப்பதவி சில மாறுதல்களுக்குட்பட்டதாயினும் பேரரசு காலத்திய இத்தாலிய, உரோமானிய ஆட்சித்துறையில் ஒரு முக்கியமான அங்கமாகவே தொடர்ந்திருந்து வந்தது. நிருவாகப் பதவிகளுக்கான தகுதிகளில் சில தீவிர மாற்றங்கள் புகுத்தப்பட்டன. புதிய மாறுதல்கள் பதவிக்கான வயதை மட்டுமே பாதித்தன. குவெஸ்டர் பதவிக்கு இப்பொழுது குறைந்த அளவு வயதுத் தகுதி இருபத்தைந்தாகவும், பிரீட்டர் பதவிக்கு முப்பதாகவும் இருந்தது. செனெட் சபையில் இடம்பெற ஒருவர் இருபத்தைந்து வயது நிரம்பப் பெற்றிருக்க வேண்டும். பேரரச குடும்பத்தினருக்கு இவ் விதிகளிலிருந்து விலக்களிக்கப்பட்டது. குவெஸ்டர் பதவியைப் பெறுவதற்குமுன் இரண்டு புதிய தகுதிகள் தேவைப்பட்டன. இருபது பேர் அடங்கிய ஆணைக்குழுவில் இவர் உறுப்பினராய் இருந்திருக்க வேண்டும். மற்ருென்று, இவர் படைத்துறை டிரிபியூன் பதவியில் இருந்திருக்கவேண்டும். இம் மாற்றம் ஒரு புறத்தோற்றமாக இருந்தாலும் உயர்குடியினர்த் தொகுதியில் அடிப்படையான மாற்றத்தை உண்டாக்கியது. நல்ல பண்பாடுகளைப் பெற்றிருக்க வேண்டுமென்ற தகுதிப்பாடுகள் இப்பொழுது மறைந்துவிட்டன. அரசில் உயர் பதவிகளை அடைய விரும்புவோர் எல்லைப்புறங்களில் அரசரின் படைகளில் பணிபுரிய வேண்டும். பேரரசரின் நல்லாதரவால் ஒருவர் இப்பொழுது படையில் ஓர் உயர்நிலையை அடைந்தார். இத் தகுதி நடைமுறையில் நிருவாகப் பதவிக்குரிய

தகுதியாகும். இருபத்தைந்து வயதில் படைவீரர் ஒருவர் உயர் பதவிக்கான போட்டியில் இறங்கினர். முன்னாள் பிரீட்டராயின், சில வேளைகளில் முன்னாள் குவெஸ்டராயினும் இவர் ஒரு படை அணிப் பகுதிக்குத் தலைவராக்கப்படலாம். பின், இதிலிருந்து இவர் ஓர் இராணுவ மாநிலத்திற்கோ மாநில பொதுத்துறை ஆட்சிக்கோ செல்லலாம். பேரரசில் பொதுநிலைப் பதவிகளில் கூட படை வீரர்கள் செயலாற்றியிருப்பது புதிய முடியாட்சியின் படைத்துறைப் பண்புகளைத் தெளிவாக வெளிப்படுத்தின. அடக்க ஒடுக்கமாகத் தலைவருக்குக் கீழ்ப்படிந்து மரியாதை செலுத்தப் பயிற்சிபெற்ற முன்னாள் அலுவலர்களை உறுப்பினராகக் கொண்டிருந்த செனெட் சபையின் அடிவருடிப் பண்பை விளக்க வேறு சான்றுகள் தேவையில்லை. பிற பதவிகளுக்கு குவெஸ்டர் பதவி முதற்படியாகும். பெட்ரிசியர் ஒருவர் உடனடியாக குவெஸ்டர் பதவியிலிருந்து பிரீட்டர் பதவிக்குச் செல்லலாமென் கையில், ஒரு பிளெபியர் இரண்டு ஈடில் பதவிகளில் ஒன்றை அல்லது டிரிபியூன் பதவியை வகித்திருக்க வேண்டுமென விதிக் கப்பட்டது. இருப்பினும் இவ் விதிமுறைகளிலிருந்து பேரரசர், தம் உரிமையால் இவருக்கு விலக்களிக்கலாம். போலியான நிரு வாகப் பதவி நிலையை அளித்து இதை நிறைவேற்றலாம். தோற் றத்தில் இது செனெட் சபையின் பட்டியலைத் திருத்தியமைக்கும் அதிகாரமாகும். அதாவது, செனெட் சபையினருக்குள் ஒருவரைக் கீழ்நிலையிலிருந்து உயர்நிலைக்குப் பேரரசர் தம் அதிகாரத்தால் உயர்த்தலாம். குவெஸ்டர்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பட்டவர் டிரிபியூன் பதவிக்குத் தகுதி பெற்றார்; டிரிபியூன்களுக்குள் தேர்ந் தெடுக்கப்பெற்றவர் பிரீட்டர் பதவிக்கும், பிரீட்டர்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பெற்றவர் கான்சல் பதவிக்கும் தகுதிபெற்றார். பொதுநிலையான (Civic) நிருவாகப் பதவிகளுக்குள் கான்சல் பதவி மிக உயர்ந்த பதவியாகும்.

பேரரசரின் குறிப்புரையின் பேரில், நிருவாகப் பதவி வகிக்காத ஒருவருக்கென நிருவாகப் பதவியை செனெட் சபை அளிக்கலாம். குவெஸ்டர், பிரீட்டர், கான்சல் பதவிகளைக் கௌரவப் பதவிகளாக அளிப்பது பேரரசரின் சிறப்புரிமை யாகும். ஆனால், இக் கௌரவப் பதவியால் செனெட்சபையில் இடம் பெற முடியாது. தேர்ந்தெடுக்கப்பெற்றவர்கள் பெற்ற உரிமைகளை இவர்கள் பெற முடியாது. திருவிழாக்களிலும் மற்றப் பொது நிகழ்ச்சிகளிலும் கௌரவப் பதவிக்குரிய விருதுச் சின்னங்களை இவர் அணிந்து கொள்ளலாம்.[1] இப்படிக் கௌர விக்கப்பெற்றவர்களுக்கு ஏற்கனவே செனெட் சபையில் இட

[1] Dio. Cass. 58. 12.

மளிக்கப்பட்டிருந்தால் எந்த கௌரவம் பெற்றார்களோ அந்த செனெட் சபை உறுப்பினரோடு வாக்களிக்கும் உரிமையை இவர்களுக்குக் கௌரவம் அளித்தது. சட்டப்படி நிருவாகப் பதவிக்குத் தகுதி பெற்றவர்களுக்கே இக் கௌரவமளிக்கப் பட்டது. பேரரசரின் படைச் சேவையில் உயர்நிலையில் இருந்த வீரத்திருத்தகைகளுக்கு இது அளிக்கப் பெறலாம். நீரோவின் ஆட்சிக் காலத்தில் படையாட்சியாளர்களாகிய நிம்பிடியஸ் (Nymphidius) என்பவருக்கும் கிரிஸ்பினஸ் (Crispinus) என்பவருக்கும் கான்சலுக்குரிய கௌரவம் அளிக்கப்பெற்றது. காவற் கண்காணிப்பாளராகிய லாகோ (Laco) என்பவருக்கு டைபிரியனின் காலத்தில் கௌரவ குவெஸ்டர் பதவி அளிக்கப்பெற்றது. பேரரசில் விடுதலை பெற்றவர்களுக்கு கிளாடியஸ் இத்தகைய கௌரவமளித்தார். பல்லாஸ் (Pallas) என்பவரும் நார்சிசஸ் (Narcissus) என்பவரும் குவெஸ்டர்களாகக் கௌரவிக்கப் பெற்றனர்.[1]

மெய்யான வெற்றி அணிவகுப்பு உரிமைகள் குறைக்கப் பட்டதன் விளைவாக, வெற்றி அணிவகுப்பு உரிமையைக் கௌரவமாகப் பெற்றவர்கள் அதைப் பயன்படுத்திக்கொள்ள அனுமதி பெற்றார்கள். கீழ்நிலையிலான இறைமை பெற்றவர்கள் இவ்வுரிமை பெறுவது முரணானதாகையால் சட்டப்படி பேரரசர்கள் மட்டுமே இக் கௌரவத்திற்குத் தகுதி பெற்றனர். ஏனெனில், இவருடைய மாநில ஆளுநர்கள் இவரது பேரரசர்களே; செனெட்டிற்குரிய மாநில ஆளுநர்கள் பெயரளவில் சுயேச்சையானவர்கள் எனினும் இவர்களுடைய தலைமையில் படைகள் இல்லை. இருந்தபோதிலும், பேரரசரின் குறிப்புரையின்பேரில் இவ்வெற்றி அணிவகுப்புக் கௌரவம் செனெட் சபையினால் அளிக்கப்படலாம்.

நிருவாகப் பதவிகளுக்கான தேர்தல்களைப் பற்றி கொமிசியா செனெட் சபைகளைப் பற்றிப் பார்க்கும்போது தெளிவாகப் பார்க்கலாம். பதவிக்குரிய கடமைப் பொறுப்புகள் குடியாட்சியில் நிருவாகிகள் பெற்றிருந்த பொறுப்புகளை ஒத்தே இருந்தன. ஆனால், இவர்கள் உயிரோடிருக்கும் அல்லது முந்தைய பேரரசர்களின் சட்டங்களின் செய்திறனையேற்றுப் பிரமாணம் செய்யவேண்டும்.

தனிப்பட்ட பதவிகளை எடுத்துக்கொண்டால், கான்சல்கள் இக் காலத்திலும் குடியரசின் தலைவர்களாகவும் செனெட்

[1] Tac. Ann. xii. 58, xi. 38.

சபையின் தலைவர்களாகவும் அலுவல் முறைப்படி ஏற்றுக் கொள்ளப்பெற்றனர். பேரரசர் (முதல்வர்) நீக்கப்படுகிற பொழுது இவர்கள் அரசின் பிரதிநிதிகளாக இருந்தனர். இந்த முறையில் இவர்கள் செயற்பட்டத்தை நாம் அறிவோம். நீரோவின் பதவி இறக்கத்தையொட்டி, கால்பா (Galba) தேர்வு செய்யப்பெற்ற செய்தியை அனுப்பியவர்கள் கான்சல்களே ஆவர். உடைவாளை கான்சல்களிடம் ஒப்படைத்ததால் விட்டெலியஸின் (Vitellius) பதவித் துறப்பு நிறைவேறியது.[1] பேரரசரைக் கூட்டாளியாகக் கொண்டிருந்த பதவி இதுவொன்றே என்பதிலிருந்து இதன் மாண்பும் மாட்சியும் தெளிவாகத் தெரிகின்றன. இத்துடன் பேரரசர் கான்சலாகச் செயற்படும்பொழுது பேரரசின் மிக உயர்ந்த நிலை ஒரு கணம் கான்சல் பதவியின் மாண்பில் மறைந்துவிடுகிறது. செனெட் சபையின் தலைவர்கள் என்ற முறையில் இச் சபையின் பெயரளவிலான இறைமையில் பங்கேற்றனர். உரிமை வழக்குகளிலும் குற்ற வழக்குகளிலும் சபையின் விசாரணையில் இவர்கள் துணை நின்றனர். உரிமை வழக்குகளில் சபையின் ஆணையர்களாகவும் செயலாற்றினர். தம் உரிமைகளின் அடிப்படையில் இவர்கள் உயர்நீதிப் பணிகளையும் செயற்படுத்தினர். பொறுப்பாட்சி பற்றியவைகளைத் தொடக்க முதலில் பேரரசர் இவர்களிடம் ஒப்படைத்தார். இதுபற்றிப் பின்னர் பார்க்கலாம்.

கான்சல் பதவியின் மீதுயர் மாண்பும், இப் பதவியில் இருந்தவர்களுக்குப் பல உயர் பதவிகள் கிட்டியதும் இதன் பதவிக் காலத்தைக் குறைக்கத் தூண்டின. இதன் விளைவாக இப் பதவியின் சிறப்புரிமைகளைப் பயன்படுத்திக்கொண்டு மற்றப் பொறுப்புகளுக்குத் தகுதி பெற்றவர்களின் எண்ணிக்கை பெருகிற்று. இப் பதவியின் பெரும் செலவு பிடிக்கும் தன்மை இதை இந்த முடிவிற்குக் கொண்டுவந்திருக்கலாம். இப் பதவியில் இருந்தவர்களின் எண்ணிக்கையை அதிகரித்தால், விளையாட்டுக் கொண்டாட்டங்களுக்காகும் பணச்சுமை குறையலாம். எப்படியெனில் விளையாட்டுகளுக்கும் விழாக்களுக்கும் ஆகும் செலவு கான்சல்கள் மீது சுமத்தப்பெற்றது.[2] அரையாண்டுக் கான்சல் பதவிகள் காலப்போக்கில் பேரரசின் தொடக்க காலத்தில் அடிக்கடி மேற்கொள்ளப்பட்டன. பின் நான்கு மாத, இரண்டு மாதப் பதவிக் காலத்தையும் நாம் காண்கிறோம். கம்மோடஸின் (Commodus) ஆட்சிக் காலத்தில் (கி. பி, 189-ல்) ஒரே ஆண்டில் இருபத்தைந்து கான்சல்கள் அமர்த்தப்பெற்ற உச்சகட்டத்

[1] Tra. His. iii. 68.
[2] Dio. Cass. 56. 46, 59. 20.

தைக் கண்டோம். ஜனவரி முதல் நாளில் அமர்த்தப்பெற்றவர்கள் வழக்கமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். மற்றவர்கள் 'கான்சலால் அமர்த்தப்பட்டவர்கள்' என வழங்கப்பெற்றனர். பதவிக் காலத்தில் இறந்த கான்சலுக்குப் பதிலாக அமர்த்தப் பட்ட கான்சல், வைஸ்கான்சல் என வழங்கப்பெற்றுர். ஆண்டின் பெயர், முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஜனவரி 1ஆம் நாள் பதவியேற்றவரின் பெயராக இருக்கும்.

அகஸ்டஸின் காலத்திலும் அவருக்குப் பின் வந்தவர்களின் காலத்திலும் பிரீட்டர்களின் எண்ணிக்கை பத்திலிருந்து பதினெட்டாக உயர்ந்தது. பல்வேறு காலங்களில் இதன் எண்ணிக்கை 12, 14, 15, 16 என்றிருந்தது. ஹேடிரியனின் காலத்தில் 18 என்ற இறுதியான நிலை அப்படியே இருந்தது.[1] இக்காலத்தில் விசாரணை எல்லை விரிவடைந்ததால் பெருமளவில் இவர்களைப் பயன்படுத்தவேண்டியிருந்ததே பிரீட்டர்களின் எண்ணிக்கை விரிவடைந்ததற்குக் காரணமாகும். குடியாட்சிக் காலத்திய நகர பிரீட்டரின் பணிகளும் தொடர்ந்திருந்து வந்தன. உரோமானியப் பேரரசில் இருந்தவர்களுக்கெல்லாம் காரகாலா (Caracalla) குடியுரிமை வழங்கியபொழுது (கி.பி.212) இப் பதவி மறைந்திருக்கலாம் குற்ற விசாரணை ஆணைக் குழுக்கள் (Questiones perpetuae) மறையும் வரை மற்றப் பிரீட்டர்கள் இவைகளுக்கு அறிவுரையாளர்களாக இருந்தனர். அதனுல் இயல்புமீறிய விசாரணை அதிகாரத்தின் புதிய செயல் எல்லை மற்றவர்களின் கவனத்தை ஈர்த்தது. கொடைப் பொருள்கள் பற்றிய தீர்ப்பு வழங்குவதற்குக் கிளாடியஸ் இரு பிரீட்டர்களை அமர்த்தினர்.[2] நிதித்துறைக்கும், தனிப்பட்டவர்களுக்குமிடையே எழுந்த வழக்குகளை முடிவு செய்ய நெர்வா (Nerva) ஒன்றையும், பொறுப்பளிக்கவும் பொறுப்பேற்கும் பாதுகாவலர்களைக் கட்டுப்படுத்தவும் மார்க்கஸ் அருலியல் மற்றென்றையும் நிறுவினர். சிறிது காலத்திற்குக் கருவூல நிருவாகமும் பிரீட்டர்களிடமிருந்தது.

ஈடில்கள் செயற்படுத்திவந்த குறிப்பிடத்தக்க பணிகளில் பல இப்பொழுது மற்றவர்கள் கைக்கு மாறின; அல்லது சிறப்புக் குன்றிப்போயின. குடியாட்சியில் போதிய அளவு அங்காடிகளைச் செயலாட்சி செய்ய முடியாத இவர்களின் திறமையின்மையைப் பார்த்தோம். தானிய மேற்பார்வையும் பேரரசரின் கைக்கு மாறியது. பின் இவரால் நிறுவப்பட்ட மேற்பார்வையாளரிடம் சென்றது. இவர்களுடைய காவற்பணிகளை நகர முதல்வர்

[1] Pompon. in Dig. 1, 2, 2, 32.
[2] Pompon in Dig. 1, 2, 2, 32,

18

எடுத்துக் கொண்டார். அதனால் செனெட் சபையால் தீயதென அறிவிக்கப்பட்ட நூல்களை இக் காலத்திலும் இவர்களே அழித்தார்கள். செலவினைக் கட்டுப்படுத்துகிற சட்டங்களைச் செயற்படுத்த இவர்கள் முயன்றனர். உரோம் நகர வீதிகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ளும் கடமையும், பொதுமக்கள் கூடும் இடங்களின் மேற்பார்வையும் இவர்களுடைய நகரப் பாதுகாப்புப் பொறுப்புகளில் அடங்கின.[1] கொமிசியாவின் விசாரணை அதிகாரம் மறைந்த பின் இவர்களுடைய குற்ற விசாரணை அதிகாரமும் பெருமளவில் மறைந்தது. அதனால், இக் காலத்திலும் பிணையப் பொருள்களைக் கைப்பற்றவும், தண்டம் விதிக்கவும் இவர்கள் தொடர்ந்து அதிகாரம் பெற்றிருந்தனர். நீரோவின் ஆட்சிக் காலத்தில் வரையறுக்கப்பட்டு இஃது ஒழுங்குப்படுத்தப் பெற்றது. குயுருல் ஈடில்களின் தனிச் சிறப்பு விசாரணை அதிகாரம் இக் காலத்திலும் தொடர்ந்தது. ஹேடிரியனின் காலத்தில் இவர்களின் ஆணைகள் தொகுக்கப்பட்டன.

குவெஸ்டர்கள் இக் காலத்திலும் அவர்களுடைய நிதிப் பணிகளைத் தொடர்ந்து நிறைவேற்றியதோடு நிருவாகிகளுக்குப் பொது உதவியாளர்களாக இருந்தனர். இவர்களின் எண்ணிக்கையைச் சீசர் நாற்பதாக உயர்த்தினர். ஆனால், இதைப் பின் அகஸ்டஸ் இருபதாகக் குறைத்தார். நகரங்களுக்கு இருவரும் கான்சல்களுக்கு நால்வரும், மாநிலங்களுக்குப் பன்னிருவரும், பேரரசருக்கு இருவருமாக இவர்கள் பகிர்ந்தளிக்கப்பட்டார்கள். ஒரு சமயத்தில் இரண்டு குவெஸ்டர்கள் கருவூலப் பாதுகாப்புப் பொறுப்பேற்றிருந்தனர். மற்றவர்கள் மாநிலப் புறக் கான்சல்களுக்கு நிதி, நீதி உதவியாளர்களாகப் பணியாற்றினர். கான்சலுக்கு இருவராக நால்வர் மேலதிகாரமாக அமர்த்தப்பெற்றனர். இவர்கள் கான்சல்களின் உதவியாளர்களாகவும், பதிலாள்களாகவும் செயலாற்றினர். இந்த வழக்கம் முதலில் கி.மு. 38-ல் தொடங்கியது.[2] செனெட் சபைக்கு வந்த அரசியல் நடவடிக்கைத் தாள்களைப் பேரரசருக்குப் படித்துக் காட்ட இரண்டு குவெஸ்டர்கள் அமர்த்தப்பெற்றனர். கிளாடியசின் ஆட்சிக் காலத்தில் "குவெஸ்டர் பதவிகளை விற்பனைக்குவிடும்" நடவடிக்கையொன்று எடுக்கப்பட்டது.[3] இத்துடன் இதற்கொரு பணியும் ஒதுக்கப்பட்டது. இப் பணியை இது நெடுங்காலத்திற்குத் தொடர்ந்து பெற்றிருந்தது. வாட்போர் வீரர்களின் சண்டை விளையாட்டுக் காட்சிகளை ஏற்பாடு செய்தவர்களின் செலவில் காட்டுவது இவர்களுடைய புதிய பணியாயிற்று.

[1] Tac. Ann. ii. 85.
[2] Dio. Cass. x/iii. 43. Tac. Ann. xvi.
[3] Tac. Ann. xi. 22. (A.D. 47)

இதற்குப் பெரும் செலவு பிடித்தது. இதற்குப் பின் உயர் பதவியை நாடுபவர்கள் இக் காட்சிக்கான ஏற்பாடுகளைச் செய்வதோடு அதன் செலவையும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. 47-ல் புகுத்தப்பட்ட இக் கடமைப் பொறுப்பு 54-ல் மாற்றியமைக்கப்பெற்றது. ஆனால், டோமிடியனின் காலத்தில் இது மறுபடியும் கொண்டுவரப்பட்டது.[1] குவெஸ்டர் பதவிக்குப் போட்டியிடுபவர்களே இக் காட்சிக்கான செலவினங்களை ஏற்கவேண்டுமென செவ்ரெஸ் அலக்சாந்தார் விதித்தார். மற்றவர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட விளையாட்டுக் காட்சிகளுக்கான செலவுகளைப் பொது நிதித்துறை ஏற்றுக்கொள்ளுமென இவர் விதி செய்தார்.

பிளெபியர்களின் டிரிபியூன்கள் பேரரசரின் கூட்டாளிகளல்லர். ஏனெனில், பேரரசர் பெற்றிருந்த டிரிபியூனிச அதிகாரம் டிரிபியூனேட்டாகக் கருதப்படவில்லை. இவ்வதிகாரச் செயற்பாட்டையொட்டிய பேரரசரின் நடவடிக்கைகள் டிரிபியூனின் தடை ஆணைக்குட்படா. ஆயினும், பேரரசின் முதல் நூற்றுண்டில் சில சமயங்களில் அரசின் சில துறைகளில் இத் தடையான அதிகாரம் செயற்படுத்தப்பட்டது. ஆனால், இக் காலத்தில் இவர்களுடைய அதிகாரம் குடியாட்சிக் காலத்தில் பயன்பட்டது போல் பயன் படவில்லை. அற்பமான பொருள்கள் பற்றி செனெட் சபை விவாதிக்க முயன்றபோது சபையின் கட்டளைகளுக்கெதிராகத் தலையீட்டதிகாரம் பயன்படுத்தப்பட்டது. எடுத்துக் கொண்ட பொருளைப்பற்றி செனெட் சபை பேரரசரைக் கலந்து கொள்ள வேண்டுமென்பதை வலியுறுத்தவும் டிரிபியூன்கள் இவ்வதிகாரத்தைப் பயன்படுத்தலாம். கருவூலப் பிரீட்டர்கள் பற்றுக் குறையை அறிவித்தபோது அவர்கள் இத் தலையிடும் ஆணையைச் செயற்படுத்தினார்கள். தலையீட்டாணை பயன்படுத்தப் பட்ட கடைசி நிகழ்ச்சி இதுவாகும்[2] (கி.பி. 69).

உயர் அரசு அலுவல்களில் இந்த அதிகாரத்தின் செயற்பாடு டிரிபியூன்களின் உயிருக்கே ஆபத்தாக முடியும். பேரரசரின் சினத்திற்கு இவ்வதிகாரச் செயற்பாட்டால் ஆளாகும் டிரிபியூன்களும் பேரிடருக்குட்படவேண்டியதாயிற்று. பிரீட்டரின் நடவடிக்கைக்கெதிராக, உதவியளிக்கும் அதிகாரம் (auxilium) கி.பி. 56-ல் டிரிபியூனினால் பயன்படுத்தப்பட்டது. பின் 69-ல் ஒரு பேரரசர் கேட்டுக்கொண்டதன் பேரில் இவ்வதிகாரம் பயன்படுத்தப்பட்டது. அதாவது செனெட் சபை விவா

[1] Tac. Ann xi, 22
[2] Tac. His. iv. 9.

தத்தின்போது ஹெல்விடியஸ் பிரிஸ்கஸ் (Helvidius Priscus) பேரரசர் விடெலியஸ் (Vitelius) என்பவரைத் தாக்கியபொழுது இவ்வுதவி கோரப்பட்டது[1]. ஆனால், இதுவும் விரைவில் மறைந் தொழிந்தது. பேரரசின் தொடக்க காலத்தில் இத்தாலிய நக ரங்களிலிருந்து உரோம் நகருக்கு உரிமை வழக்குகளைக் கொண்டுவரும் உரிமையை டிரிபியூன்கள் பெற்றிருந்தார்கள் எனத் தெரிகிறது. ஆனால், கி.பி. 56-ல் டிரிபியூனின் இந் நட வடிக்கைகள் தடை செய்யப்பட்டன. இவர்களுடைய குற்ற விசாரணை அதிகாரமும் கொமிசியாவின் மறைவோடு மறைந்த தெனினும் தண்டம் விதிக்கும் அதிகாரத்தை இவர்கள் தக்க வைத்துக் கொண்டிருந்தனர். இதுவும் நீரோவின் காலத்தில் கட்டுப்படுத்தப்பட்டது. உரிமை வழக்கு விசாரணையில் தடை யாணை விதிக்கும் உரிமையை இவர்கள் இக் காலத்திலும் பெற் றிருந்தார்கள், இத்தகைய வழக்குகளில் குடியாட்சிக் காலத்திய டிரிபியூன்கள்கூட உள்ளார்ந்த நலக் கேடுகளைக் கருத்திற் கொண்டு மேல்முறையீட்டை அனுமதித்துள்ளனர். எனவே, உரிமை வழக்குகளில் இவர்கள் இப்பொழுது சிறப்பு விசாரணை அதிகாரம் பெற்றார்கள் என்ற விளக்கம் தேவையற்றதாகும்.

டிரிபியூன் பதவி பெரும் சிறப்புகளைப் பதவியிலிருந்தவர் களுக்கு அளிக்கவில்லையாதலால் இது பேரார்வத்திற்குரிய பதவி யாகவில்லை. பத்து இடங்களை நிரப்புவதற்கான இடர்ப்பாடு, புகழ் ஏணியின் உச்சநிலையை அடைய இந் நிருவாகப் பதவி யும் ஒரு தேவையான படியாகக் கருதப்பட்டது. அகஸ்டஸ் காலத்தில் முன்னாள் குவெஸ்டர்களைக் குலுக்கல் முறையில் டிரிபி யூனைத் தெரிவு செய்யும் தீவிர நடவடிக்கையும் மேற்கொள் ளப்பட்டது. மேலும், கிளாடியஸின் காலத்தில் உயர்குடி வீரத் திருத்தகைகள் இப் பதவிக்கு வரவேற்கப் பெற்றனர்[2]. ஆயினும் இதனுடைய எல்லாக் குறைபாடுகளோடு இப் பதவி பேரரசு ஆட்சியையும் கடந்து நிலைபெற்றது. நான்காம் நூற்றாண்டில் பேரரசு அரசியல் நடவடிக்கைத் தாள்களில் டிரிபியூன்கள் குறிப்பிடப் பெற்றுள்ளனர்.

## கொமிசியா (Comitia)

குடியரசின் முன்னிலை மீட்சியின் ஓர் அம்சமாக அகஸ்டஸ் மக்கள் அவைகளை உயிர்ப்பித்தார். ஆனால், பேரரசு நலன் களோடு இவைகளின் தல இயல்புகளை இணக்குவிக்க அல்லது

[1] Tac- His. ii. 91.
[2] Dio. Cass. ix. 11.

பேரரசின் ஆட்சியை இவைகளுடைய மக்களாட்சிப் பண்பு களோடு ஒருங்கிருக்கச் செய்வது இயலாததாயிற்று. இஃது ஓர் அளவிற்கு உண்மை நிலையாகத்தான் இருந்தது. பேரரசர்களின் ஆட்சிக்காலம் முழுவதிலும் தொடர்ந்து நிலவிவந்த மக்கள் இறைமைக் கோட்பாட்டை வெளிப்படுத்தப் போதுமான போலி அதிகாரத்தை இவை செயற்படுத்தின.

தொடக்கத்திலிருந்தே கொமிசியா அதிகாரத்தின் பெரு மளவு பேரரசருக்கு முழுமையாக மாற்றப்பட்டது. போரை அறிவிக்கும் உரிமை, அமைதி உடன்பாடு செய்யும் உரிமை, நேச உடன்படிக்கைகளைச் செய்து கொள்ளும் உரிமை ஆகியவை இப்பொழுது பேரரசரின் அதிகாரங்களாயின. மேலும், குடியாட்சியின் இறுதியில் மக்கள் செயற்படுத்திய குற்ற வழக்கு விசாரணை அதிகாரம் இப்பொழுது இதற்குத் தேவையில்லை. ஏனெனில், இந்த வழக்குகளில் பெருமளவி லானவை குற்ற வழக்கு முறைமன்றங்களுக்கு மாற்றப்பட்டு விட்டன. தெளிவற்ற ஒரு சில வழக்குகள் செனெட்சபையின் முன் வந்தன. சட்ட ஆக்க அதிகாரமும் அதிக அளவில் பேரரசரிடமும் செனெட் சபையிடமும் மையம் கொண்டது. முதலாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சட்டங்களே அவைகளின் உண்மையான உருவில் வரையப்பட்டிருந்தன. ஜூலியன் சட்டங்களை அகஸ்டஸ், கொன்சிலியம் பிளெபிஸ் அவையில் நிறைவேற்றினர். ஜூனியா (Junia) சட்டத்தையும் கிளா டியஸ் பிளெபி சட்டத்தையும் இதே அவையில் நிறை வேற்றினர். பொதுமக்கள் அவைகளின் நிலையான சிறப்பதி காரங்களில் தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தைக் குறிப்பிடலாம். தெரிவுகள் பேரரசின் செல்வாக்கிற்குட்பட்டிருந்தனவென்றாலும் அகஸ்டஸின் காலத்தில் மக்களே நிருவாகிகளைத் தேர்ந்தெடுத் தனர். டைபிரியசின் ஆட்சிக்காலத்தின் முதல் ஆண்டில். அறிவிப்பு, நியமனம், வாக்களிப்பு ஆகிய தேர்தல் நடைமுறை கள் அனைத்தும் செனெட்சபைக்கு மாற்றப்பட்டன. ஆனால், தேர்தலின் முக்கிய நிலையாகிய முடிவுகள் அறிவிப்பு, மூன்றாம் நூற்றாண்டின் இறுதிவரையில், தொடர்ந்து மக்களின் உரிமை யாகவே இருந்துவந்தது. அகஸ்டஸின் கட்டளையையொட்டி இம் மாற்றம் செய்யப்பட்டது.[1] கான்சல் பதவியைப் பொறுத்த வரையில் மட்டுமே ஐயப்பாடுள்ளது. முதல் நூற்றாண்டில், வெறும் முடிவை அறிவித்ததைத் தவிர கொமிசியா வேறு எதையும் செய்யவில்லை. சான்றுகள் சர்ச்சைக்குரியனவாக இருந்தாலும், இந்தப் பதவிகளுக்கான மக்களின் கட்டுப்பாடு,

[1] Tac. Ann. i. 15.

பேரரசரின் நியமன அதிகாரத்தாலும், செனெட்சபையின் தேர்தல் உரிமையாலும், தளர்ச்சியடைந்தது. எனினும், பேரரசின் பிற்காலத்தில் மற்றத் தேர்தல்கள் போலவே கான்சல்களின் தேர்தலும் செனெட்சபையில் நிலை பெற்றதென்பதில் சிறிதும் ஐயமில்லை. முடிவுகளை அறிவிக்கவோ, பேரரசரின் அதிகாரங்களுக்கு ஒப்புதல் அளிக்கவோ மூன்றும் நூற்றுண்டு வரையிலும் கொமிசியா அவை தொடர்ந்து நிலவியதெனலாம். குடியாட்சியின் பகட்டாரவாரமான தோற்றங்கள் பேணப்பெற்றன. செஞ்சுரிகள் கூடியபொழுது இக் காலத்திலும் ஜானிகுலத்தில் (Janiculum) செங்கொடி பறந்தது.

## செனெட் (Senate)

மூன்று சமயங்களில் அகஸ்டஸ், செனெட்சபை உறுப்பினர் பட்டியலைத் திருத்தியமைத்தார். இதன் விளைவாகச் சபையின் உறுப்பினர்கள் 900-ல் இருந்து 600-ஆகக் குறைந்தனர். இந்த எண்ணிக்கை இயல்பானதாகத் தெரிந்தது. பட்டியலைத் திருத்தியமைத்த பொழுது, ஜூலியஸ்சீசர் சேர்த்த கீழ்நிலை வகுப்பினர் சிலரை அகஸ்டஸ் நீக்கினுர். இதனுல் செனெட்சபையின் உயர் குடிப்பண்பு நிலைபெற்றது. பேரரசின் செனெட்சபையின் வாயிலாகவே மக்களின் இறைமை வெளிப்படுத்தப்பெற்றது. பேரரசரும், குடியரசின் மிக உயர்ந்த சிறப்புநிலை நிருவாகியாகவே தம்மைக் கருதிக்கொண்டார். ஆகவே, இச் சபையின் மாண்பையும், செல்வாக்கையும், நிலைப்பேற்றையும் காப்பாற்றப் பேரரசர் அரும்பாடுபட்டார். பேரரசர்களின் காலத்தில் செனெட்டர்களையும் இவர்கள் மரபு வழியினரையும் கொண்ட ஒரு புதிய செனெட்டோரியல் வகுப்பு உருவாக்கப்பெற்றது. இவ்வகுப்பினரிலிருந்தே செனெட்சபைக்கு உறுப்பினர் தெரிவு செய்யப்பெற்றனர். இச் சபைக்கு உறுப்பினர்களைத் தெரிவு செய்வதில் பேரரசரின் விருப்பமே இறுதியானதாக இருந்தது. நிருவாகப் பதவியில் இருந்தவர்கள்தாம் இச் சபை உறுப்பினராதல் முடியும். குவெஸ்டர் பதவியுடைமை செனெட் உறுப்பினர் பதவிக்குத் தகுதியாக இருந்தது. செனெட்சபை தேர்ந்தெடுக்கும் சபையான பொழுது, ஒருமித்துத் தேர்ந்தெடுக்கும் கருத்து சபை நுழைவிற்கு அடிப்படையாக இருந்தது. குவெஸ்டர்களைத் தெரிவு செய்வதில் பேரரசர் செல்வாக்கைப் பயன்படுத்தவில்லை. குவெஸ்டர் பதவிக்கு டிரிபியூன் பதவி ஒரு தகுதியாக இருந்ததால் இப்பொழுது பேரரசரின் கவனம் டிரிபியூன் பதவிகளை நாடியது. இப் பதவிக்குரிய நியமனத்தில் இவர் தம் செல்வாக்கைப் பயன்படுத்தினுர். நிருவாகிகளாக இல்லாதிருந்தவர்

களைத் தாம் தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தை (adlectro)ப் பயன்படுத்திப் பேரரசர் சிலரைச் செனெட் சபையில் அமர்த்தினர். இந்த அதிகாரம் மெய்யாகவே, இவருக்குச் செனெட்டர் களைப் படைக்கும் உரிமையை அளித்தது.

செனெட்சபைக்குத் தகுதி பெற ஒருவரின் வயது, செல்வம், பிறப்பு ஆகியவை கருத்திற்கொள்ளப்பட்டன. குவெஸ்டர் பதவிக்குக் குறைந்த வயதுத் தகுதி இருபத்தைந்தாக இருந்தது. எனவே, ஒருவர் தம் இருபத்தாறுவது வயதில் செனெட்டில் இடம் பெறமுடியும்.[1] 1,000,000 செஸ்டெர்சர்களுக்குச் சொத்துடையவர் இச் சபை உறுப்பினராகத் தகுதி பெறுவர். ஆனால் இச் சொத்துடைமைத் தகுதி காலத்திற்குக் காலம் மாறினாலும் அகஸ்டஸ் காலத்தில் இதை மேற்குறிப்பிட்ட அளவில் உறுதிப்படுத்தப்பட்டது. சுயேச்சைநிலை பெற்றோர்களின் வழியாகப் பிறந்திருக்க வேண்டுமெனப் பிறப்புத் தகுதி வலியுறுத்தியது; மூன்று தலைமுறைச் சுயேச்சைப் பிறப்பைக் கிளாடியஸ் வலியுறுத்தினர். செனெட்சபையில் "விடுதலை பெற்றவர்" களைப் பேரரசர் அமர்த்தியபொழுது இப் பிறப்புத்தகுதி பின்பற்றப் படாதது இவர்களின் முறைகேடான ஆட்சிமுறையை வெளிப் படுத்தியது. சிறிது காலத்திற்கு, சபை அதன் முதன்மையான உரோமானிய இயல்பைப் பேணிக்கொள்ள முற்பட்டது. ஆனால் "மாநிலங்களிலிருந்தும், இத்தாலியிலிருந்தும் புதியவர்கள்" சபைக்குள் நுழைந்தனர். கிளாடியசும், வெஸ்பாசியனும் (vespasian) சென்சார்களாக செயலாற்றியபொழுது "புதியவர்களின்" எண்ணிக்கை அதிகரித்தது. மாநில மக்களும் சபையில் இடம் பெறத் தொடங்கியபொழுது, இவர்களுடைய சொத்தில் மூன்றில் ஒரு பாகம் இத்தாலியில் முதலீடு செய்யப் பட்டிருந்தால்தான் உறுப்பினர் தகுதி பெறமுடியுமென டிராஜன் விதி செய்தார். இந்த அளவை மார்க்கஸ்அருலியஸ் நான்கில் ஒரு பங்காக மாற்றினர்.

கி.மு. 9-ல் இருந்து அதிகார முறையிலான செனெட்டர்களின் பட்டியல் ஒவ்வோர் ஆண்டும் திருத்தியமைக்கப்பட்டது. கடைசி திருத்தத்திற்குப் பின் நிருவாகிகளானவர்களின் பெயர்களும், தேர்தல் முறையினால் பேரரசால் அமர்த்தப்பெற்றவர்களின் பெயர்களும் பழைய பட்டியலில் சேர்க்கப்படும். குறிப்பிட்ட குறைந்த அளவு சொத்துடைமைக் குறைவால் பாதிக்கப்பட்டவர் களும், சட்டங்களுக்கெதிராகக் குற்றமிழைத்தற்காகத் தண்டிக் கப்பட்டவர்களும் செனெட் சபையிலிருந்து விலக்கப்பட்டனர்.

[1] Tac. Ann. xv. 28. His. iv. 42,

பட்டியலில் பெயர்கள் அலுவல்படி நிலையையொட்டி வரிசைப் படுத்தப்பட்டிருந்தன. பேரரசரின் பெயருக்குப் பின்னுல் கான்சல் களின் பெயரும் அடுத்துப் பிரீட்டர்களின் பெயரும் இப்படியே பட்டியல் தொடர்ந்தது. ஒரு நிருவாகப் பதவியை ஒரு தடவைக்கு மேல் பெற்றிருந்தவர்களின் பெயர்கள் ஒரே தடவை நிருவாகப் பதவியை வகித்தவர்களின் பெயர்களுக்கு மேலே இருந்தன. முறையாகக் கான்சல் பதவியைப் பெற்றிருந்தவருக்கும் தேர்தல் முறையில் அதே பதவியைக் கௌரவமாகப் பெற்றிருந்தவர் களுக்குமிடையில் பெர்டிளுக்ஸின் (Perinax) காலம்வரையில் வேறுபாடு கற்பிக்கப்படவில்லை. நீதிப் பணிகளைச் சபை செயற் படுத்தியதில் தண்டனைக்குள்ளானவர் செனெட் சபையினராக இருந்தால் தண்டனையோடு சபையிலிருந்து விலக்கப்படுவதையும் ஒரு தண்டனையாக்கி விடலாம். பொய்க் குற்றச்சாட்டிற்கு உறுப் பினர் பதவி நீக்கத்தைச் சபை ஒரு தண்டனை ஆக்கலாம்.

**சபையின் கூட்டங்கள்**

சபை உறுப்பினரின் எண்ணிக்கையை அகஸ்டஸ் 600ஆக முடிவு செய்தார். சபையின் கூட்டத்திற்கான நாள்களை அகஸ்டஸ் முடிவு செய்தார். மாதத்தில் இரண்டு தடவைகள் முறையான கூட்டங்கள் நடைபெற்றன. அதாவது உரோமன் மாதங்களின் முதல் நாளும், பதினைந்தாம் நாளும் சபை கூடியது. செப்டெம்பர், அக்டோபர் மாதங்கள் இந்த நடைமுறையிலிருந்து விலக்குப் பெற்றன. கூட்டத்திற்கு வருகை கட்டாயப்படுத்தப்பட்டது. எவ் வாருயினும் இக் கூட்டங்களுக்குக்கூட அழைப்பாணை அனுப்பப் பட்டது. தேவையெனக் கருதும்பொழுது சிறப்புக் கூட்டங்களை நிருவாகி கூட்டலாம். குடியாட்சியில் இருந்ததுபோல், சபையைக் கூட்டுவதும், தலைமை தாங்குவதும் முன்னர் கான்சலின் உரிமையாக இருந்தது. ஆனல், பின்னர் பிரீட்டர்களும் டிரிபியூன் களும் இவ்வுரிமையைப் பெற்றிருந்தனர். செனெட் சபை கூட்டப்பட்டபோது நிருவாகி என்ற முறையில் பேரரசர் சபைத் தலைமையைப் பகிர்ந்து கொண்டார். செனெட்டர் என்ற முறை யில் இவர் எப்பொழுதாவது சபைக்கு வந்திருப்பாரா என்பது ஐயப்பாட்டிற்குரியதாகும். நிருவாகியென்ற முறையில் பேரரசர் எந்த நேரத்திலும் சபையில் உரை நிகழ்த்தலாம். பேரரசின் தொடக்கத்தில், விவாதத்தின் பின்னும் முடிவிற்கு முன்னும் பேச்சிடை ஓய்வொன்று இருக்க வேண்டுமென வழக்காறுகள் விதித்தன. பேரரசர் விரும்பினுல் இப் பேச்சிடை ஓய்வைப் பயன்படுத்தித் தம் கருத்தை வெளியிடலாம். சபைமுன் அலுவல் களைக் கொண்டு வருவதற்குப் பேரரசர் பெற்றிருந்த தனிச் சிறப் புரிமைகளை நாம் முன்னர் பார்த்தோம்.

பேரரசரை நியமிப்பதும், பதவியிலிருந்து நீக்குவதும் செனெட் சபையின் அதிகாரங்களில் தலைசிறந்தனவாகும். நடைமுறையில் இந்த உரிமை எப்படி வரம்பிற்குட்படுத்தப்பட்டதென்பதைப் பார்த்தோம். ஆனால், மக்களின் இறைமையைச் செனெட் சபை வெளிப்படுத்தலாமெனும் கருத்தை இதன் பெயரளவிலான செயற்பாடு தெளிவுபடுத்தியது. பேரரசருக்காதரவாகவும் இவருடைய குடும்பத்தினருக்காகவும் அல்லது சங்கம் அமைக்கும் உரிமை போன்ற ஆட்சித் தொடர்புடைய காரியங்களுக்காகவும் சட்டவிலக்கம் அளிக்கும் செனெட் சபையின் அதிகாரத்தால் இக் கருத்து வெளியிடப்பட்டது. டைபீரியசின் ஆட்சிக் காலத் தொடக்கத்திலிருந்தே செனெட் சபை பெற்றிருந்த தேர்தல் நடத்தும் அதிகாரம், மக்களின் அதிகாரங்களை இது தொடர்ந்து செயற்படுத்தி வருவதற்கு ஓர் அடையாளமாகும்.

செனெட் சபை அதிகாரங்களுக்கு ஒரு காலத்தில் காப்பரணாக இருந்த வெளிநாட்டு ஆட்சித்துறைமீது இப்பொழுது இச் சபை மிகக் குறைவிலான கட்டுப்பாடு செலுத்தியது. தொடர்ந்து இது பேரரசின் வெற்றிச் செய்திகளைப் பெற்றுக்கொண்டதெனினும், இவருக்கு வெற்றி அணிவகுப்பு மரியாதை அளிக்கப்பட்டதெனினும் சுயேச்சையான உரிமைகளாகிய போர், அமைதி, நேச உடன்பாடு போன்றவைகளையெல்லாம் இச் சபை இழந்துவிட்டது. ஆனால், இதனுடைய கட்டுப்பாட்டின் கீழிருந்த மாநிலங்களிலிருந்தும், இத்தாலிய நகரங்களிலிருந்தும் தூதர்களை செனெட் சபை ஏற்றுக்கொண்டது. பேரரசின் முதல் நூற்றாண்டிலாவது பேரரசருக்கேயுரிய செயல் எல்லைகளில் அவருக்கு அறிவுரை அளிக்கும் சபையாக இது செயற்பட்டிருக்கலாம். படைத்துறைத் தொடர்புடைய பிரச்சினைகளை டைபீரியஸ், செனெட் சபையோடு கலந்து முடிவு செய்தார். செனெட்சபைக்கு ஒரு தூதுக் குழுவை அனுப்புமாறு வற்புறுத்தி பார்த்தியர்கள் அளிக்க முன்வந்த இக் கட்டான உதவியை வெஸ்பாசியன் தட்டிக் கழித்துவிட்டார். ஆனால், இச் சலுகை பேரரசரின் நல்லிணக்கச் செயலேயாகும். ஆயினும், இஃதோர் ஓர் அரசியலமைப்புத் தத்துவத்தை வெளிப்படுத்தியது. அதாவது, அரசின் மிகச் சிறந்த நலன்கள்பற்றிய பிரச்சினைகளை மக்களின் பிரதிநிதிகளோடு பேரரசர் கலந்தாராய வேண்டுமென்பதே இத் தத்துவம். இதுவும் இறுதியில் மறைந்தது.

செனெட் சபையின் இறைமையை அல்லது ஆட்சியில் பேரரசரோடு இது கொண்டிருந்த கூட்டுப் பங்காண்மையை வெளிப்படுத்திய மற்ற அதிகாரங்களைப் பின்னர் பார்க்கலாம்.

# 14. பேரரசர்-செனெட் சபையின் இரட்டை ஆட்சி

இறைமையின் முதன்மையான இயல்பாகப் பேரரசாட்சி யின் படைப்பைக் கூறலாம். மக்களும், செனெட் சபையும் இந்த இறைமையைப் பெற்றிருந்ததாகக் குறிப்பிடலாம். அதிலும் மக்களின் பிரதிநிதித்துவம் பெற்றிருந்ததாகச் சொல்லிக் கொண்ட செனெட் சபை கருத்தளவில் தலையாய அதிகாரத்தைப் பெற்றிருந்ததெனலாம், இச் சபையின் சட்டமியற்றும் உரி மையை இது பெற்றிருந்த இறைமையின் ஓர் உயர்பண்பென லாம். ஓர் அரசியல் சமுதாயத்தில் மற்றப் பணிகளை எல்லாம் ஓர் உயர் நிறுவனத்திடம் விட்டுவிடலாம். பொது ஆட்சி, சட்ட அதிகாரம், நிதி, சமய வழிபாடு, நாணயம் அச்சிடல் ஆகிய பணிகளை மிக எளிதாக மற்றவர்களிடம் ஒப்படைத்துவிடலாம். இந்த அதிகார ஒப்படைப்பு, தற்காலிகமாக இருந்தால் இறைமை அதிகாரத்தைப் பங்கிடத் தேவையில்லை. இது நிரந்தரமானதாக இருப்பின் இறைமையைப் பங்கிடவேண்டும். அல்லது ஒப்படைத்த அதிகாரத்தைத் திரும்பப் பெற வழிமுறைகள் வகுக்கப்பட வேண்டும். எவ்வளவு பெருமளவிற்கு மக்கள் தங்கள் அதி காரத்தைப் பேரரசருக்கு ஒப்படைத்தார்களென்பதை முன்னர் பார்த்தோம். இந்த அதிகார ஒப்படைப்பு நடைமுறையில் நிலையானதாக இருந்தது. ஆனால், நாம் இப்பொழுது ஆராயப் புகும் அதிகாரச் செயற்பாடுகளில் இறைமை அதிகாரம் முழுமை யாக வைத்துக்கொள்ளப்படவுமில்லை; அல்லது முற்றிலும் ஒப் படைக்கப்படவுமில்லை. பேரரசர் ஓர் அளவு அதிகாரத்தைத் தக்க வைத்துக்கொண்டு, முன் குறிப்பிட்ட அரசாங்கப் பணிகள் அனைத்தையும் நிலையாக மற்றவர்களிடம் ஒப்படைத்துவிட்டார். இந்த இரட்டை நிலை (இருமை) அரசின் ஆட்சிஇயலை மட்டுமின் றிச் சட்ட ஆக்கத்தையும் பாதித்தது.

**சட்ட ஆக்கம்**

கொமிசியா, மக்களின் விருப்பத்தை நீரோவின் ஆட்சிக் காலம்வரை தெரிவித்துவந்துள்ளதென்பதை நாம் முன்னர் பார்த்துள்ளோம். ஆனால், சட்டம் மக்களின் சட்ட ஆக்க அதிகாரம் மறைவதற்கு முன்னரே, இந்த அதிகாரம் செனெட் சபைக்குச் சென்றது. அரசியலமைப்புக் கோட்பாட்டின்படி, மக்களின் பிரதிநிதித்துவம் பெற்றிருந்த இச் செனெட் சபையில் சட்டமியற்றும் அதிகாரம் இறுதியாக நிலை பெற்றிருந்ததைக் காணலாம்.

குடியாட்சிக் காலத்தில் நிருவாகிகளுக்குச் சட்டப் பிரச்சினைகளில் செனெட் சபை அறிவுரை அளித்ததிலும், வழக்கமான சட்டங்களில் பொருள் விளக்கம் செய்ததிலும் இதன் சட்டமியற்றும் அதிகாரத்தின் தோற்றத்தைக் காணலாம். குடியாட்சிக் காலத்தில் சட்ட ஆக்கத்திற்குத் தகுதி பெற்றிருந்த பொருள் பேரரசின் காலத்தில் செனெட்டின் கட்டளைகளாக வெளிவந்தன. செனெட் சபையின் கட்டளை சட்டத்தின் முறையான அமைப்பைப் பெற்றதில்லை. கட்டளைகள் அறிவுரைகளின் வடிவத்தில் வெளியிடப்பட்டன. மேலும் இவை அதிகார முறையிலான கூற்றுகளாகவும் அமையவில்லை. இக் காரணங்களுக்காகவே இவைகள் சட்டமாக(leges)க் குறிப்பிடப்படவில்லை. இவைகளைச் சட்டத்தின் கட்டுப்படுத்தும் ஆற்றலைப் பெற்றிருந்த அளவிற்குச் சட்ட வல்லுநர்கள் செல்லத்தக்கனவாக ஏற்றுக்கொண்டனர். ஆனால், இவைகளின் இந்த ஆற்றல் இவைகளைப் பொதுவாழ்வுக்குரிய (Juscivite) சட்டங்களாக ஏற்றுக்கொள்வதற்குப் போதுமானதாக இருந்தது. மூன்றும் நூற்றுண்டு வரைக்கும் இத்தகைய கட்டளைகள் உரோமானியக் குடிமக்களின் அடிப்படையான சட்ட உறவு முறைகளை மாற்ற முற்பட்டன.

சட்டமியற்றும் எந்த அதிகாரத்தையும் பேரரசருக்கு நேரடியாகக் கொடுக்கவில்லை. ஆனால், ஒவ்வொரு உரோமானிய, நிருவாகியின் இறைமையிலும் இந்த உரிமை பொதிந்திருந்தது. பிரீட்டரின் இறைமை அதிகாரத்தில் இச் சட்டமியற்றும் அதிகாரம் வெளிப்படையாகவே தெரிந்தது. இந்த உரிமை பேரரசரிடம் இணையற்றுக் காணப்பட்டது. இவர் தம்முடைய கருத்துகளை ஆணைகள், கட்டளைகள் எழுத்துருவிலான பதங்களின் வாயிலாக வெளியிட்டார். ஆணைகளைச் சட்டங்களுக்கு விளக்கங்களாக இவர் வெளியிட்டார். விளக்கங்கள் வழியாகச் சட்டங்களை உருவாக்கும் அதிகாரத்தைப் பேரரசர் தம்முடைய இறைமையின் வாயிலாகப் பெற்றிருந்தார். சில வரம்புகளுக்குட்பட்டுப் பேரரசரின் ஆணைகள் சட்டத்தின் செயல் திறம்

பெற்று விளங்கின. முறையாகப் பிறப்பிக்கப்பட்ட ஆணைகளே சட்டங்களின் தகுதியைப் பெற்றன. ஆணைகள் பல பேரரசர்களால் ஏற்றுக்கொள்ளப் பெற்று, பின் சிலரால் கைவிடப்படுமாயின், இதற்கான முறையான நடவடிக்கைகள் தேவைப்பட்டன.

பேரரசர் நீதிமன்றத்திலிருந்து வழங்கும் தீர்ப்பே கட்டளையாகும். இது நீதிமன்ற முடிவு என்ற முறையில் கட்டுப்படுத்தும் ஆற்றலை முழுமையாகப் பெற்றிருந்தது. எனவே நீதிமன்றத்தின் இறுதி முடிவை இது தெரிவித்தது. எனவே, வழக்கையொட்டிய எல்லா மேல்நடவடிக்கைகளையும் பேரரசரின் இத் தீர்ப்பு தடை செய்தது. இத் தீர்ப்புகள் முன்னிகழ்வுகளாகப் பயன்பட்டன. இத் தீர்ப்புகளைக் கொண்ட பேரரசரின் கட்டளைகள் சட்டத்தின் திறம் பெற்றுச் செயற்பட்டன.

ஆட்சித் தொடர்புடைய அல்லது நீதித்தொடர்புடையவைகளைப் பற்றிய அறிவுறுத்தல்களே பேரரசரின் எழுத்துருவில் அமைந்த மறுமொழிகள். இவை பேரரசரின் கீழ்நிலை அலுவலர்களை நோக்கியே பிறப்பிக்கப்பெற்றன. இவைகளின் பயன்பாட்டுப் பரப்பெல்லையானது பேரரசரின் விருப்பத்தையொட்டியும் இவைகள் பிறப்பிக்கப்பட்ட நேரத்தையும் பொறுத்திருந்தது. நீதி விவகாரங்களைப் பற்றியவைகளில் இவருடைய எழுத்துருவில் அமைந்த மறுமொழி, நீதிபதிக்கு அல்லது வழக்காடுநர்களுக்கு அனுப்பப்பட்டதாயினும் இது சட்டத்தின் ஐயப்பாடுகளை முடிவு செய்யலாம்; அல்லது புதிய வழக்குகளுக்கு ஒரு கருத்தை அளிக்கலாம். சட்டத்திற்கு விளக்கமளிக்கும் அதிகாரம் பேரரசரின் மறுமொழியில் பெருமளவு காணப்பட்டது. எனவே, இது சட்ட ஆக்கத்தில் ஒரு வலிமையான கருவியாக இருந்தது. பேரரசர்கள் மாநிலங்களோடு தொடர்ந்து தொடர்புகொள்ளவும் இஃது உதவியது, இவைகளின் சட்டங்களையும், ஆட்சியையும் ஒரே சீராக உருவாக்கவும் இது சிறந்த முறையாக இருந்தது. எழுத்துருவிலிருந்த இம் மறுமொழிகளின் சரி நுட்பத்தாலும் நிலைப்பேற்றினாலும் ஆணைகளையும், கட்டளைகளையும்விட நிலையான சட்டங்களுக்குரிய செல்திறனைப் பெற்றிருந்தன. பேரரசர்களின் சட்டங்களென இவைகளே பெரிதும் குறிப்பிடப்பட்டன. இவை அரசுகளின் சாசனங்கள், சிறப்புரிமைகள் ஆகியவற்றிற்குச் சமமானவைகளாகக் கருதப்பட்டன. ஐயப்பாட்டிற்குள்ளான அலுவலர் அல்லது ஆட்சியாளர் அல்லது நீதிபதி ஆகியவர்கள் தம் ஐயப்பாட்டிற்குப் பேரரசரின் விளக்கத்தை எழுத்துருவில் கேட்கலாம். வழக்குத் தொடர்ந்தவர்

களின் விண்ணப்பங்களுக்கு மறுமொழியாகவும் பேரரசர் தம் விளக்கத்தை அளிக்கலாம். பேரரசரின் நீதிமன்றத்திற்கு முன் நேரில் வருவதற்கு மாருக இம் முறை பயன்படுத்தப்பெற்றது.

ஆணைகள், கட்டளைகள், மறுமொழிகள் ஆகியவை காலப் போக்கில் பேரரசு சட்டங்களாயின. இவை அனைத்தும் இரண்டாம் நூற்ருண்டில் சட்டத்தின் ஆற்றலைப் பெற்றன என்று ஒரு சட்ட அறிஞர் குறிப்பிட்டுள்ளார். இவைகளிலிருந்து ஒரு வகையான பேரரசுக் கட்டளைகள் விலக்குப் பெற்றன. கீழ்நிலை அலுவலர்களுக்குப் பேரரசர் பொதுவாகப் பிறப்பித்த அறிவுறுத் தல்கள் இந்த வகையில் அடங்கின. பேரரசின் தொடக்கத்தில் இவை பேரரசு மாநில ஆளுநர்களுக்காகப் பிறப்பிக்கப் பட்டன. ஆனல், சிறிதுசிறிதாகப் புரோகான்சல்களுக்கும் இவை நீடிக்கப்பெற்றன. பேரரசர்களின் இத்தகைய கட்டளை களை அடுத்துவந்த பேரரசர்களும் பின்பற்றினல் இவை சட்டத் தின் ஆற்றலைப் பெற்றுவிடும். பெரும்பாலும் கீழ்நிலையாளர் களின் ஆட்சிப்பணிகளை நெறிமுறைப்படுத்துவதாக இவை அமைந்திருந்தன. எனவே, இத்தகைய கட்டளைகள் நிலையாகச் செல்லத்தக்க விதிகளை வகுக்கவில்லையெனலாம். ஆயினும் இக் கட்டளைகள் (mandates) பேரரசரின் மறுமொழிகளைவிடச் சிறந்து நின்றன. ஏனெனில், இது பொதுவானதாக இருந்தது. மேலும் ஒரு கட்டளையென்பது ஒரே பொருளை ஒட்டிய மறு மொழிகளின் விளைவாகவும் இருந்தது. மற்ருெரு பொருளில் இது, மறுமொழிகளைக் காட்டிலும் சற்றுத் தாழ்ந்த நிலையிலிருந் தது. எப்படியெனில், இக் கட்டளையைப் பிறப்பித்த பேரரசர் இதைத் திருப்பிப் பெற்றுக் கொள்ளலாம். அடுத்து வரும் பேரரசர்களும் இதைப் பின்பற்ருதிருந்து விடலாம்.

பேரரசர் செயற்படுத்திய சட்டங்களையும் (constitutions), கட்டளைகளையும் (mandates) மறு ஆய்வு செய்தால், பேரரசர் சட்டமியற்றுநராகக் கருதப்படவில்லையென்பது தெளிவாகும். இவருடைய கட்டளைகளின் கட்டுப்படுத்துமாற்றலின் தரம் செனெட்சபையின் கட்டளையின் தரத்தைவிடக் குறைவு என்பதைக் காணலாம். ஆனல், சட்ட ஆக்கம் பற்றிய கோட் பாடு உரோமில் நடைமுறை முக்கியத்துவம் பெறவில்லை. பல நூற்ருண்டுகள் உரோமானிய நீதிபதிகள் உருவாக்கிய சட்டத்தின்கீழும், பேரரசர் விளக்கம் செய்த சட்டத்தின்கீழும் வாழ்ந்தனர். சட்டங்களை இயற்றித்தர இவர்கள் மறைந்து கொண்டிருந்த கொமிசியாவை அல்லது மாநில ஆட்சியிலிருந்து சிறிதுசிறிதாக நழுவிக்கொண்டிருந்த செனெட்சபையை எதிர் நோக்கியிருக்கவில்லை. ஒவ்வொரு நீதிபதிக்கும் வழக்காடுநர்

களும் நன்ருகத்தெரிந்த பேரரசரை மக்கள் இப்பொழுது எதிர் நோக்கினர். சூழ்நிலைகள் பேரரசரை மிக உயர்ந்த சட்ட ஆக்க நிறுவனமாக்கின. ஏனெனில், சட்ட விளக்கமளித்த நிறுவனங்களில் பேரரசரே மிக உயர்ந்த நிறுவனமாக இருந்தார்.

**விசாரணை அதிகாரம்.**

சட்ட ஆக்கத் துறையிலிருந்து நீதித்துறைக்குச் சென்ருலும் அதே இரட்டைக் கட்டுப்பாடு வலியுறுத்தப்பெறுவதை நாம் காணலாம். ஆட்சிஇயலைப் பொறுத்தவரை செனெட் சபை மக்களின் பிரதிநிதித்துவத்தைப் பெற்றிருக்கவில்லையெனும் உண்மை இதைச் சிக்கலாக்கியது. அரசு தன் அதிகாரத்தைப் பழைய நிறுவனங்களாகிய பிரீட்டர், நீதிபதிகள் ஆகியவர்களின் வழியாக வலியுறுத்துகையில் செனெட், கான்சல்கள் ஆகியவர்களின் கூட்டுச் செயற்பாட்டில் ஒரு புதிய அமைப்பைப் பெற்றது. இத் துறையில் பேரரசர் சில சமயங்களில் தம் சொந்த விசாரணை அதிகாரத்தைச் செயற்படுத்தியும், சில சமயங்களில் தம் அதிகார வரம்பிற்கப்பாற்பட்டும் சில அதிகாரங்களைச் செயற்படுத்தியும் வந்தார். ஆனல், மாநில மக்களின் மனதில் இவர் ஓர் உயர்ந்த நீதிமன்றமாகவே எப்பொழுதும் இருந்து வந்தார். எனவே, பல்வேறு நீதிமன்றங்களின் விசாரணை அதிகாரத்தை உரிமை, குற்ற வழக்குகளையொட்டியும், முதல் நிலை மேல்முறையீட்டு நிலை வழக்குகளையொட்டியும் தனித்தனியே ஆராய்தல் வேண்டும். தீர்ப்புகளை மாற்றும் அதிகாரத்தையும், மன்னிக்கும் உரிமையையும் ஆராய்தல் வேண்டும்.

உரிமை வழக்கு விசாரணை அதிகாரம் குடியாட்சியில் இருந்தது போலவே பேரரசிலும் தொடர்ந்தது. பிரீட்டர் இக் காலத்திலும் தீர்ப்பு வழங்கிவந்தார். ஆனல், சாதாரண நீதிமன்றங்கள் இருந்த இடத்தில் நீதிபதியின் சொந்த செயலாட்சி எல்லைக்குட்பட்ட நீதிமன்றங்கள் நிலைபெற்றன. இவை செயற்படுத்திவந்த விசாரணை அதிகாரத்தைப் பேரரசு தோன்றிய காலத்திலிருந்தே பேரரசர்கள் செயற்படுத்தி வந்தனர். விரைவில் பேரரசரின் இவ் விசாரணை அதிகாரம் மாநில ஆளுநர்களுக்கும், பேரரசரின் உயர் பேராளர்களுக்கும், நகர முதல்வர்களுக்கும் நீட்டிக்கப்பட்டது. இஃது இயல்பு மீறிய விசாரணை அதிகாரமென விவரிக்கப்பட்டது. ஒரு நீதிபதிக்கும் நிருவாகிக்குமுள்ள வேறுபாட்டை இஃது ஏற்றுக்கொண்டது. சட்டத்திற்கும் விசாரணைக்கும் இடையேயான வேறுபாட்டைப் புதிய நடைமுறை விதி ஏற்கவில்லை. நீதிபதி மெய்யானதொரு பேராளராக இருந்தார். அடிப்படை விதி எதுவுமின்றி இவர்

அமர்த்தப்பெற்றார். சட்டத்தையொட்டியும், வழக்கின் விவரங்களையொட்டியும் இவர் முடிவெடுத்தார். பேரரசரின் செயலாட்சியெல்லைக் கோட்பாட்டின்படி வரம்பற்றதாக இருந்திருக்கலாம். முதல் பேரரசருக்கு இவ்வதிகாரம் சட்டத்தால் அளிக்கப்பட்டிருக்கலாம். சொந்த விருப்பில் எவரும் இந்த விசாரணை அதிகாரம் கோரலாம். பேரரசரும் இதை மறுக்கலாம். மறுக்கப்பட்டபொழுது வழக்கைப் பிரீட்டர் விசாரித்தார். பொதுச்சட்ட விசாரணை வரம்பில் தலையிட முற்காலத்திய பேரரசர்கள் விருப்பம் காட்டவில்லை. பொது நேர்மை வழக்குகளையும், பொறுப்பாட்சி பற்றியவைகளிலிருந்து எழும் வழக்குகளையும், பாதுகாவலர் பதவி பற்றிய வழக்குகளையும் பேரரசர் விசாரணைக்கு எடுத்துக்கொண்டார். ஆனால், இத்தகைய வழக்குகளின் எண்ணிக்கை பெருகவே பேரரசரும் அவருடைய பேராளர்களும் இவைகளனைத்தும் செயலாட்சிக்குள் கொண்டுவர இயலவில்லை. எனவே, இப் பணியைப் பகிர்ந்து கொள்ள அடுத்தடுத்துத் தனிப் பிரீட்டர்கள் அமர்த்தப்பட்டனர்.

குடியாட்சிக் காலத்தில் தடையாணையைப் பெற்றிருந்த நிருவாகி ஒருவருக்கு மேல்முறையீடு செய்துகொள்ளும் உரிமை மக்களுக்கு இருந்ததையொட்டி பேரரசு காலத்திலும் உரிமை வழக்குபற்றிய மேல்முறையீடு நீதிமன்றங்கள் தொடர்ந்திருந்தன. மேலும் கீழ் நீதிமன்றங்களின் முடிவுகளை முற்றிலும் மாற்றியமைக்கக்கூடிய மேல்முறையீட்டுக் கருத்தும் உருவாகிச் செயற்பட்டு வந்தது. மாநில உயர்நீதிமன்ற விசாரணை அதிகாரத்தை உரோம் நகரில் மையப்படுத்தும் நோக்கத்தை நிறைவேற்றும் எண்ணத்தில் இந் நீதிமன்றங்களின் தோற்றம் அடங்கியிருந்தது. இக் காலத்தில் சாதாரண நீதிமன்றத்தின் தீர்ப்பை எதிர்த்து மேல்முறையீடு செய்யும் உரிமை இல்லை, ஆனால், குறிப்பிட்ட நிலைகளில் இத்தகைய தீர்ப்புகளைப் பிரீட்டர் அல்லது பேரரசர் மாற்றியமைக்கும் அதிகாரமிருந்தது. பிரீட்டரின் முடிவை எதிர்த்து உயர்நீதிமன்றத்திற்கு மேல்முறையீடு செய்யலாம். உயர் அதிகாரத்தையும், இறைமையையும் பெற்றிருந்த பேரரசர் தடைவிதிக்கும் அதிகாரத்தையும் பெற்றிருந்தார். நிருவாகியின் முடிவுகளைப் பேரரசர் ஒதுக்கித் தள்ளிவிடும் அதிகாரம் பெற்றிருந்தார். பிரீட்டரின் முடிவுகளை எதிர்த்து உதவி நாடியவர்களுக்கு உதவியளிக்கும் உரிமையையும் பேரரசர் பெற்றிருந்தார். இதற்கு எடுத்துக்காட்டாக, டைபீரியஸ், பிரீட்டரின் நீதிமன்றத்திற்கு வருகை தந்ததைக் குறிப்பிடலாம். பேரரசர் பெற்றிருந்த இறைமையின் அடிப்படையிலா அல்லது டிரிபியூனிசிய அதிகாரத்தின் அடிப்படையிலா தடையாணை

பயன்படுத்தப்பட்டதென்பது முக்கியமானதன்று. ஆனால், இஃது எப்படிப் பயன்படுத்தப்பட்டதென்பதுதான் குறிப்பிடத்தக்கதாகும். இத் தடையாணை உரிமை முறைமன்றத் தீர்ப்புகளை நீக்கம் செய்வதைப் பேரரசின் தொடக்க காலத்தில் நோக்கமாகக் கொண்டிருந்தது. கோட்பாட்டளவில் பேரரசர் உரிமை வழக்குகளில் வரம்பிலா விசாரணை அதிகாரம் பெற்றிருந்தார். இத்தாலிய நகரங்களின் விசாரணை அதிகாரம் இதுவரையில் சாதாரணமாகவே இருந்து வந்தது. நீரோவின் காலம் வரை இது கான்சல்கள், பிரீட்டர்கள், டிரிபியூன்கள் ஆகியோரின் கட்டுப்பாட்டின்கீழ் இருந்து வந்தது. நகரப் பிரீட்டரின் நீதிமன்றங்களே நகராட்சி நீதிமன்றங்கள். உரோம் நகரப் பிரீட்டரின் தீர்ப்புகளைக் கட்டுப்படுத்தும் வழியாகப் பேரரசர் இவைகளில் தலையிட்டிருக்கலாம். பேரரசரின் தனிச் சிறப்புப் பேராளரின் விசாரணை அதிகாரம் உரோம் நகர நீதி மன்றங்களின் இயல்பான விசாரணை அதிகாரத்தை மீறத் தொடங்கியது.

ஒப்படைக்கப்பெற்ற விசாரணை அதிகாரத்தையொட்டி மேல் முறையீடுகள் எழுவது மற்றொரு முறையாகும். உரிமை வழக்கு விசாரணை அதிகாரத்தைப் பேரரசர் செயற்படுத்த விரும்பினால் இதைத் தாமோ பேராளர்கள் வழியாகவோ, செயற்படுத்தலாம். இவர்களிடமிருந்து மேல்முறையீடுயெழ முடியாதெனத் திட்டவட்டமாகக் குறிப்பிடவில்லையெனில் முறையீடுகள் பேரரசரின் பார்வைக்குச் செல்லலாம். பேரரசர்கள், பேராளர்களை அமர்த்தி இவ் வழக்குகளை விசாரிக்கலாம். அகஸ்டஸ், நகரப் பிரீட்டர்களையும், கான்சல்களையும் இத்தகைய வழக்குகளை விசாரிக்கப் பயன்படுத்திக்கொண்டார். அறக்கட்டளைப் பொறுப்பாட்சிபற்றியவைகளில் பேரரசின் விசாரணை அதிகாரம் கான்சல்களிடம் அல்லது பிரீட்டர்களிடம் ஒப்படைக்கப்பெற்றது. ஆனால், முறையான ஒப்படைப்புகளைத் தவிர தாம் விசாரிக்க விரும்பாத வழக்குகளைச் சிறப்பு நீதிபதிகளை விசாரிக்குமாறு பேரரசர் பணிக்கலாம்.

மாநிலங்களின் மேல்முறையீட்டு விசாரணை உரிமை பேரரசரின் அதிகாரத்தை மையப்படுத்தும் நோக்கத்திற்கும் ஆட்சியை ஒருமைப்படுத்தும் நோக்கத்திற்கும் பயன்படுத்திக்கொள்ளப்பட்டது. மாநில மேல்முறையீடுகள் செனெட்சபைக்கு வரவேண்டுமென்னும் கருத்துப் புறக்கணிக்கப்பட்டது. இது நீரோவின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில் தெளிவாக அறிவிக்கப்பட்டது. உரிமை வழக்குகளைப்பற்றிய முறையீடுகள் செனெட் சபையின் விசாரணைக்கு வந்தபொழுது சபை இவைகளைக் கான்சல்களின் விசாரணைக்கு ஒப்படைத்தது.

இரண்டாம் நூற்றுண்டின் இறுதியில் அல்லது மூன்றும் நூற்றுண்டின் தொடக்கத்தில் பேரரசர் அல்லது அவருடைய பேராளர்கள் மாநில மேல்முறையீட்டு வழக்குகளை விசாரிக்கும் இறுதி நீதிமன்றமாக இருந்தனர். இதற்குப் பின் இத்தகைய வழக்குகளை விசாரிக்கும் உரிமையைச் செனெட் சபை இழந்து விட்டது. மாநில ஆளுநர்களின் அதிகாரங்களின்மீது பேரரசர், புரோகான்சுலர் அதிகாரம் பெற்றிருந்ததையொட்டி இவ்வுரிமை யைச் செயற்படுத்தினர். பேரரசரின் இவ்வுரிமை சிறிதுசிறிதாக வளர்ச்சி பெற்றதாகும். எந்தச் சிறப்பு அதிகாரத்தையொட்டியும் இவ் வளர்ச்சி ஏற்படவில்லை. மாநில ஆளுநர்கள் தம் இடர் களுக்குப் பேரரசரிடம் அறிவுரை நாடும் வழக்கத்திலிருந்தே இந்த உரிமை வளர்ச்சியடைந்தது. சட்டத்தின் தோற்றுவாயாக இருந்த பேரரசர், சட்டத்தின் விவரமான விளக்கங்களுக்கும் ஓர் உயர் நிறுவனமாக மாறியதில் வியப்பொன்றுமில்லை.

குற்றவழக்கு விசாரணை அதிகாரத்திலும் சட்டத்தின் மூன்று தோற்றுவாய்களைப் பார்க்கிறேம். பிரீட்டர்களையும், உயர்குடி நீதிபதிகளையும் கொண்ட குற்றவியல் முறைமன்றங்கள் குடியாட்சி யைப் பிரதிபலித்தன. கான்சல்களும், செனெட் சபையும் குற்ற வழக்கு விசாரணை அதிகாரத்தை இப்பொழுதும் பெற்றிருந்தனர். பேரரசரின் விசாரணை அதிகாரமும், பேராளர்களின் விசாரணை அதிகாரமும் பேரரசைப் பிரதிபலித்தன. குற்றவியல் நீதிமன்றங் களின் விசாரணை அதிகாரம் முன்போலவே இருந்துவந்தது. இவைகளின் விசாரணை அதிகாரத்திலிருந்து விலக்குப் பெற்ற வழக்குகளைத் தவிர மற்ற வழக்குகளை இவை விசாரித்துத் தீர்ப்பு வழங்கின. இந் நீதிமன்றங்களின் விசாரணை அதிகாரத்தை நிறுத்தி வைக்கக்கூடிய உயர்நீதிமன்றங்கள் செனெட் சபையும், பேரரசருமேயாவர். இவை இரண்டும் தம் விருப்பிலான விசாரணை அதிகாரம் பெற்றிருந்தவைகளாகும். இவை ஒன்றி லிருந்து மற்றென்றிற்கு மேல்முறையீடு எடுத்துச் செல்ல இயலாது. தன் விருப்பிலான விசாரணை அதிகாரமென்பதை வரையறை செய்வது கடினமாகும். ஆனல், சில குறிப்பிட்ட வகைப்பட்ட வழக்குகளின்மீது செனெட் சபையின் செயலாட்சி வரம்பை வழக்கம் வரையறை செய்துள்ளது. இவ் வழக்குகள் குற்றம்சாட்டப்பட்டவரின் நிலை அல்லது குற்றத்தின் தன்மை ஆகியவைகளை வைத்து வரையறை செய்யப்பட்டன. கொலை, பிறன்மனை நயத்தல், தகாப்புணர்ச்சி போன்ற குற்றங்களை உயர்குடியினர் செய்தபொழுது இவைகளைச் செனெட் சபை விசாரிப்பது வழக்கமாக இருந்தது. செனெட் சபையினரை செனெட் சபைதான் விசாரிக்க வேண்டுமென்னும் ஒரு சட்ட

வழக்காறு ஏற்படத் தொடங்கியது. ஆனால், குற்றத்தின் தன்மைதான் செனெட்சபையின் விசாரணை அதிகாரத்தை வரையறை செய்ததெனலாம். அரசியல் இயல்புடைய குற்றமும், வெளிநாட்டு அரசரின் உடன்படிக்கை முடிவும் செனெட் சபையின் விசாரணைக்கு வரத் தொடங்கின. வருத்திப் பணம் பறித்தல், மாநில ஆளுநர்கள் அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தல் போன்ற குற்றங்களை இச் சபையே வழக்கமாக விசாரித்தது; அரசெதிர் குற்றங்களையும் இது விசாரித்து முடிவு செய்தது. இதன் ஒரு தலையான, வரம்பற்ற விசாரணை அதிகாரம் இதன் பயன்பாட்டிற்குப் பெரிதும் உதவியது. தீர்ப்பளிக்கையில் இது விளக்கம் செய்தது. சட்டத்தின் செயலெல்லையை நீட்டித்துப் புதிய தண்டனைகளை விதிக்கலாம்; பல குற்றங்களை ஒரே குற்றச்சாட்டின்கீழ்க் கொண்டு வரலாம். இவ் விசாரணை அதிகாரம் கான்சல்களுக்குரிய ஆய்விற்குட்பட்டதாகும். ஆனால், செனெட் சபை இவர்களுக்கு அறிவுரை அளிக்கும் நிறுவனமாகத் தொடர்ந்திருந்து வந்துள்ளது. இதன் தீர்ப்பு செனெட்சபையின் கட்டளையின் உருவைப் பெற்றது. பேரரசர் இச் சபையில் இருந்தது இவருடைய செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ள வசதியளித்தது.

குற்ற வழக்குகளில் பேரரசரின் தன் விருப்பிலான விசாரணை அதிகாரம் வரம்பற்றது. இந்த அதிகாரத்தை இவர் எப்பொழுதும், எவ்விடத்திலும் செயற்படுத்தலாம். ஒரு வழக்கின் இரு தரப்பாரில் ஒரு தரப்பினரின் வேண்டுகோளின் பேரில் அவ் வழக்கைப் பேரரசரின் செயலாட்சிக்குட்படுத்துவதும் அல்லது ஒரு முறைமன்றத்தின் ஆய்விற்கு விடுவதும் பேரரசரின் விருப்பைப் பொறுத்ததாகும். பேரரசரோடு தொடர்புடைய வழக்குகளை விசாரிக்குமாறு பேரரசர் செனெட் சபையைக் கேட்டுக் கொள்ளலாம். இந்த வேண்டுகோளை நடைமுறையில் சபை ஏற்க மறுக்கமுடியாது.

ஆயினும், எத்தகைய வேண்டுகோளையும் பேரரசர் ஏற்று விசாரிக்கலாமெனினும், பேரரசர் தம் சொந்த விசாரணை அதிகாரத்தைக் குறிப்பிட்ட சில எல்லைகளுக்குள் மட்டுமே செயற்படுத்தினர். சமுதாயத்தில் உயர் நிலையிலிருந்தவர்கள் செய்த கடுமையான குற்றங்கள் இதில் அடங்கின. குறிப்பாக, பேரரசின் பணியாள்கள் செய்த குற்றங்களையும், படை அலுவலர்கள் புரிந்த குற்றங்களையும் பேரரசர் விசாரித்தார். தனிப்பட்ட வழக்கு விசாரணைகள் மற்றவர்களிடம் ஒப்படைக்கப்படுவது வழக்கமில்லையெனினும் இந்த அதிகாரத்தையும் பேரரசர் விரும்பினால் மற்றவர்களிடம் ஒப்படைக்கலாம். இத்தகைய அதிகார

ஒப்படைப்புப் பேரரசரின் பணியாளர்களின் விசாரணை அதிகாரத்தின் அடிப்படையாக அமைந்தது. எடுத்துக்காட்டாக, நகரமுதல்வர், படையாட்சியாளர், தானியமேற்பார்வையாளர், காவல் கண்காணிப்பாளர் போன்ற பலர் பேரரசரின் அதிகாரத்தை ஏற்றுப் பல வழக்குகளை விசாரித்ததைக் குறிப்பிடலாம்.

மாநிலங்களில் வசித்த உரோமானியக் குடிமக்கள் தொடர்புடைய வழக்குகளை விசாரிக்கும் உரிமை பேரரசுக் காலத்தில் பெரும் வளர்ச்சியடைந்தது. ஆனால், பேரரசின் தொடக்க காலத்தில் இத்தகைய உரிமை பேரரசருக்கு இருக்கவில்லை. டிராஜன் காலத்தில் பித்தினியக் கிறித்துவர்களின் வழக்கு, நீரோவின் காலத்தில் செயின்ட்பாலின் மேல்முறையீடு போன்றவைகளை இதற்கு எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம். இத்தகைய வழக்குகளைப் பேரரசர் விசாரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டபொழுது வழக்கமாக அவை பேரரசரால் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. ஆனால், சாதாரண குற்றங்களைப் பொறுத்தவரையில் மாநில ஆளுநர்கள் வரம்பற்ற விசாரணை அதிகாரம் பெற்றிருந்ததையும் காணலாம். ஆகவே ஆப்ரிக்காவில் உரோமானியக் குடிமகன் ஒருவரை மேரியஸ் பிரிஸ்கஸ் என்பவர் கசையடி கொடுத்துக் கழுத்தை நெரித்துக் கொன்றார். தம் காப்பில் இருந்தவர் ஒருவருக்கு நஞ்சு கொடுத்து கொன்றதற்காக உரோமானியர் ஒருவரைத் தரக்கோனேசியாவின் ஆளுநர் சிலுவையில் அறைந்தார். கொல்லும் உரிமையைப் பேரரசர் தம் மாநில ஆட்சியாளர்களுக்கு அளித்தது பற்றிய சான்றுகளும் இருக்கின்றன. பேரரசர் சில வழக்குகளை விசாரிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்பட்டதற்கு எடுத்துக்காட்டுகளாக இருந்தன. பிற்காலத்தில் எல்லா மேல்முறையீடுகளும் பேரரசரின் விசாரணைக்குச் சென்றபொழுது, செனெட்டர்கள், அலுவலர்கள் போன்றவர்கள் மாநில ஆளுநர்களின் கடுமையான தண்டனைகள் அல்லது மரணதண்டனை போன்றவைகளிலிருந்து விலக்குப் பெற்றனர். பேரரசருக்குரிய இவ் விசாரணை அதிகாரத்தை நகர முதல்வர் செயற்படுத்தினர். இவருடைய முடிவை எதிர்த்து மேல்முறையீடுகள் இருக்க முடியா.

உரோமானியப் பேரரசு முழுமைக்கும் குற்றத்தண்டனை வழக்குகளில் பேரரசர் மேல்முறையீட்டு நீதிமன்றமாக இருந்தார். நிலையான குற்றவழக்கு நீதிமன்றங்களிலிருந்து பேரரசருக்கு மேல்முறையீடு செல்வதில்லை. ஆயினும், இத்தகைய வழக்குகளின் நேர்மையற்ற முடிவுகளைப் பேரரசர் செயற்படுத்தாமல் நிறுத்திவைக்கலாம். இதேபோல் செனெட்சபையின்

முடிவையும் இவர் மாற்றிவிடலாமெனினும் பொதுவாகச் செனெட் சபையிலிருந்து பேரரசருக்கு மேல்முறையீடுகள் செல்வதில்லை. பிரீட்டருக்கு ஒப்படைக்கப்பெற்ற விசாரணை அதிகாரத்தை யொட்டி எழும் வழக்குகளை இவர் விரும்பினால் விசாரிக்கலாம். குற்றவழக்குகளின் விசாரணையிலும் பேரரசர் உரிமை வழக்கு விசாரணையில் இருந்ததுபோல் இரட்டைக் கட்டுப்பாட்டைப் பெற்றிருந்தார். ஆனால், இத் துறையில் இவர் பெற்றிருந்த இரட்டை ஆட்சிமுறை இறுதியாகக் கைவிடப்பட்டது. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் உரோமானியப் பேரரசு முழுமைக்கும் பேரரசர் மிக உயர்ந்த குற்றவழக்கு மேல்முறையீட்டு நீதிமன்றமாக இருந்தார்.

மேல்முறையீட்டு உரிமையைத் தவிர, பெரும்பாலான அரசியல் சமுதாயங்களில் எங்கோ ஓரிடத்தில் மன்னிக்கும் அதிகாரமும் நிலைபெற்றிருந்தது. இஃது இறைமையின் குறிப்பிடத் தக்கதோர் இயல்பாகும். பேரரசு ஆட்சிமுறையில் இதை ஒரு தலையாய உரிமையாகக் குறிப்பிடவில்லை.

குடியாட்சியிலிருந்து பெற்றுக்கொண்ட மன்னிக்கும் அதிகாரத்தைத் தவிர செனெட்சபை பொதுவான மன்னிக்கும் அதிகாரம் எதையும் பெற்றிருக்கவில்லை. குற்றச்சாட்டுகளை நீக்கிக் குற்றம் சாட்டப்பட்டவர்களை இது விடுதலை செய்யும் அதிகாரம் பெற்றிருந்தது. பொதுவான திருவிழாக் காலங்களில் சிலர் விடுதலை செய்யப்பட்டனர். பொது மன்னிப்பளிக்கும் உரிமையையும் பெற்றிருந்தது. உயர்நீதிமன்றம் என்ற முறையில் செனெட்சபை சில சமயங்களில் அதன் தீர்ப்பை ஒதுக்கிவிடலாம். பேரரசு நீதிமன்றங்களின் தீர்ப்புகளை விலக்கிவைப்பது பற்றிப் பேரரசர் இதன் அறிவுரையைச் சில சமயங்களில் நாடலாம். இப்படிச் செனெட்சபையைப் பேரரசர் கலந்தாராய்தல் ஒரு சலுகையேயன்றி உரிமையாகாது.

உரோம் நகர நீதிமன்றங்களோடான தொடர்புகளில், தம்முடைய தீர்ப்புகளையும், தமக்கு முன்னிருந்தவர்களின் தீர்ப்புகளையும் மாற்றுவதற்குப் பேரரசர் முழுமையான அதிகாரம் பெற்றிருந்தார். செனெட்சபையின் தீர்ப்புகளை மாற்றும் அதிகாரம் இவருக்கில்லை. ஏனெனில், குற்றயேற்பைத் தடுப்பதிலும், தீர்ப்பை நிறைவேற்றுவதிலும் இவர் பெற்றிருந்த அதிகாரம், செனெட்சபையின் கட்டளைக்கு இவருடைய டிரிபியூனிசிய அதிகாரத்தின் பயன்பாட்டு நடைமுறை விளைவாக இருந்தது. பேரரசர், ஒரு பொது நேர்மை நீதிமன்றமாகச் செயற்பட்ட

பொழுது சாதாரண நீதிமன்றங்களின் நேர்மையற்ற முடிவுகளைத் தள்ளிவைக்கும் உரிமை பெற்றிருந்தார்.

குற்றச்சாட்டுகளை விலக்கிவிடும் அதிகாரத்தைப் பேரரசர் பெற்றிருந்தார். தம்முடைய விசாரணை அதிகாரத்திற்குட்பட்ட குற்றச்சாட்டுகளை மட்டுமின்றி மற்றக் குற்றவழக்கு நீதிமன்றங்களின் குற்றச்சாட்டுகளையும் இவர் தள்ளிவிடலாம். ஒரு வழக்கைத் தள்ளிவிடும் அதிகாரத்தைப் பேரரசர் முழுமையாகப் பெற்றிருந்தார்.

இறுதிக் குற்ற விசாரணை பேரரசரிடம் நிலைபெற்றதைப் போல், மாநில நீதிமன்றங்களின் தீர்ப்புகளை மாற்றியமைக்கும் அதிகாரம் இறுதியாகப் பேரரசரைச் சென்றடைந்தது. தண்டனைகளை மாற்றியமைக்கும் அதிகாரத்தை மாநில ஆளுநர்கள் பெற்றிருந்தபோதிலும் பேரரசரின் மீட்டளிப்பு அதிகாரம் இறுதியில் வரம்பற்றுக் காணப்பட்டது. இந்த அதிகாரத்தைப் பேரரசர் மன்னிப்பளிக்கும் அதிகாரமாகப் பயன்படுத்திக் கொண்டார். ஆனால், இது பேரரசரின் ஒரு நிருவாகப்பணியே யன்றி இறைமையுரிமையாகாது.

## ஆட்சி இயல்

இரட்டைக் கட்டுப்பாட்டுக் கருத்து மற்றத் துறைகளில் காணப்பட்டதுபோல் ஆட்சித்துறையிலும் காணப்பட்டது. உரோம், இத்தாலி, மாநிலங்கள் ஆகியவை பேரரசரின் செயலாட்சியின் எல்லைகளாகும். குடியாட்சிக் காலத்தில் உரோம், இத்தாலி ஆகியவற்றின் ஆட்சிப்பொறுப்பை நிருவாகிகளும், செனெட்சபையும் ஏற்றுச் செயற்படுத்தின. எனவே மாநிலங்களிலும், வெளிநாடுகளிலும் பேரரசர் கவனம் செலுத்துவதற்கு இஃது உதவியது. பேரரசரின் தனிப்பட்ட கவனத்தை ஈர்க்கும் தகுதியை மாநிலங்கள் பெறவில்லை. தனிப்பட்ட இடருக்குள்ளாகாத மாநிலங்களும் படைபலத்தை விரும்பாத மாநிலங்களும் உரோமானியர்களின் பொறுப்பில் தொடர்ந்திருந்து வந்தன. ஒரு தனி மனிதரின் தற்காலிக அரசாகப் பேரரசரின் ஆட்சி இருந்தபொழுது பொறுப்பு மெய்யாகவே பகிர்ந்தளிக்கப்பட்டிருந்தது. ஆனால், பேரரசரின் ஆட்சி சிறிது சிறிதாக ஒரு பெரிய துறையாக வளர்ச்சியடைந்தது. பேரரசர் ஒரு துறையின் தலைவராகமட்டுமின்றி மக்களின் பார்வையில் ஓர் அரசின் தலைவரானார். இப்பொழுது எல்லாத் துறைகளின் ஆட்சிப்பொறுப்பும் இவரைச் சென்றடைந்தது. குடியாட்சியை விட இவர், உரோம், இத்தாலி ஆகியவைகளை நன்றாக ஆட்சி

செய்தார் என்று சொல்வதற்கில்லையெனினும் பொதுமக்களின் விருப்பு இவைகளை இவர்மீது சுமத்தியது.

## நிதி

நிதி, மாநிலச் செயலாட்சியோடு நெருங்கி தொடர்பு கொண்டிருந்தது. பொது, பேரரசு மாநிலங்களென மாநிலங்கள் பிரிக்கப்பட்டிருந்தது இரண்டு தனிப்பட்ட நிதித்துறைகள் இருந்ததை எடுத்துக் காட்டுகின்றன. செனெட்சபை தொடர்ந்து கருவூலக் கட்டுப்பாட்டை வலியுறுத்திவந்தது. கருவூலப் பாது காவலர்களுக்கு இது கட்டளைகளைப் பிறப்பித்தது. இப் பாது காவலர்களின் தகுதிப்பாடுகள் காலத்திற்கேற்ப மாற்றமடைந் தன. கி. மு. 45-ல் சீசர் இதன் பொறுப்பை இரண்டு ஈடில் களுக்களித்தார். பின் கி. மு. 28-ல் அகஸ்டஸ் இரண்டு கருவூலக் கண்காணிப்பாளரை நிறுவும் வரை குவெஸ்டர்கள் மறுபடி யும் கருவூலத்தலைவர்களாகச் செயலாற்றினர். விரைவில் இவ் விரு கண்காணிப்பாளருக்குப் பதிலாக இரண்டு பிரீட்டர்கள் அமர்த்தப்பெற்றனர். குடியாட்சி முறையிலான கருவூல ஆட்சியை கி. பி. 44-ல் கிளாடியஸ் மீண்டும் ஏற்படுத்தினர். ஆண்டுதோறும் குலுக்கல் முறையில் அமர்த்தப்படுவதற்குப் பதிலாகப் பிற் காலத்தில் பேரரசரால் மூன்ருண்டுப் பதவிக்காலத்திற்கெனத் தெரிவு செய்யப்பெற்றனர். பின் கி. மு. 56-ல் அகஸ்டசின் முறையையும், கிளாடியசின் முறையையும் இணைத்து இரண்டு முன்னுள் பிரீட்டர்கள் கருவூலக் கண்காணிப்பாளர்களாக அமர்த்தப்பெற்றனர். ஆனால், மூன்ருண்டுப் பதவிக்காலத்திற்கு இவர்கள் பேரரசரால் தெரிவு செய்யப்பெற்றனர். கருவூலப் பாதுகாவலர்களை அமர்த்திப் பேரரசர் நிதியின் மீதான தம் முடைய அதிகாரத்தை வலியுறுத்தினர். கருவூல மேலாண்மை யில் பேரரசரின் செல்வாக்கு வரம்பற்றதெனினும், கருத்தளவில் கருவூலம் செனெட்சபையின் இயக்கத்தின்கீழ் இருந்துவந்தது. இரண்டாம் நூற்ருண்டில்கூட, போர் நடத்துவதற்கு இச் சபை மார்க்கஸ் அருலியசிற்குக் கடன் வழங்கியது.

பேரரசர் தமக்கென ஒரு கருவூலத்தைப் பெற்றிருந்ததால் செனெட்சபையின் கட்டுப்பாட்டிற்குட்படாத நிதிச் சுயேச்சை யைப் பெற்றிருந்தார். பேரரசரின் மாநிலங்களின் வருவாய், பொது மாநிலங்கள் அளிக்கவேண்டிய பணம், தண்டனைக் குள்ளான குற்றவாளிகளிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட வருவாய்கள், வாரிசு இல்லாத மரபுரிமை சொத்துகள் ஆகியவை பேரரசரின் கருவூலத்தைச் சென்றடைந்தன. பேரரசர் பேரரசுக் கருவூலத்தின் உரிமையாளராக இருந்தார்.

இக் கருவூலச் செல்வத்திற்குப் பேரரசர் பொறுப்பாளராக இருந்தார். இக் கருவூலத்தின்மீது வழக்குத் தொடர்வதென் பது பேரரசர் மீது வழக்குத் தொடர்வதாகும். இந்தக் கரு வூலத்தைப் பொறுத்தவரை இவர் முழு உரிமை பெற்றிருந்த போதிலும் இக் கருவூலத்தில் இருந்த பணத்தை இவர் தம் சொந்தப் பணமாகக் கருதவில்லை. பேரரசின் தொடக்க காலத் தில் அரசருக்குரிய சொத்துகள் இருந்தன. இதைத் தனியார் நலனுக்குப் பயன்படுத்தும் அதிகாரம் பேரரசரிடம் நிலை பெற்றிருந்தது. சீசர் குடும்பத்தின் தனிப்பட்ட சொந்த உடைமை சீசரின் கருவூலமாயிற்று. இக் கருவூலத்தின் பெரு மளவு செல்வம் கொடைப் பொருளாலானது. ஆனல், பேரரசுப் பதவி மரபுரிமையை இழந்தபொழுது இக் கருவூலம் பேரரசின் உடைமையாயிற்று. அடுத்து வரும் பேரரசரே இதை மரபுரிமைச் சொத்தாகக் கொள்ளலாம். ஆகவே, இக் கருவூலத்தின் சொத்துகள் பேரரசு பதவியேற்றவர்களின் உடைமையாயின. அரசுரிமைச் சொத்துகள் மாற்றிக் கொடுக்க இயலாதாகையால் பேரரசரின் தனிப்பட்ட சொந்த உடைமைகள் உருவாக்கப் பட்டன. பேரரசரின் அனைத்துச் சொத்துகளும், அரசின் பொறுப்பாட்சிக்குட்பட்டதாயினும் அல்லது பேரரசருக்குரிய தாயினும், அல்லது குடும்பத் தேவைகளுக்குரியதாயினும் இவை களைப் பேரரசரின் தனிமுறைப் பணியாளர்களே நிருவாகம் செய்தனர்.

பேரரசரின் கட்டுப்பாட்டில் மற்றொரு கருவூலம் செயற் பட்டு வந்தது. படைப்பணி முடிந்து அனுப்பப்பட்ட படை வீரர்களின் ஓய்வு ஊதியத்தை இஃது அளித்துவந்தது. இதற்கான தேவையைக் குடியாட்சிக் காலத்தில் நிருவாகிகள் உணர்ந் திருந்தனர். கூலிப்படைகள் கொள்ளைப்பொருளில் பங்கு கேட்டபொழுதும், அல்லது படைத்தலைவர்களிடமிருந்து அரசியல் செல்வாக்கை எதிர்பார்த்தபொழுதும் இத்தகைய அமைப் பொன்று தேவைப்பட்டது. படைப்பணியை வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட படையை அகஸ்டஸ் நிறுவியபொழுது பல ஆண்டுச் சேவைக்குப் பின் படையினருக்கு ஓய்வூதியம் அளிக்கப்பெறவேண்டிய அவசியமேற்பட்டது. எனவே, ஓர் இராணுவக் கருவூலம் நிறுவப்பெற்றது. இதற்குப் பேரரசர் பெரும் மூலதனமளித்தார். மரபுரிமைச் சொத்துக்களின் மீது விதிக்கப்பட்ட ஐந்து சதவீத வரியும், ஒரு சதவீத விற்பனை வரியும் இதன் நிலையான வருவாய்களாக அமைந்தன. இந்த நிதியின் ஆட்சிப்பொறுப்பு மூன்று கண்காணிப்பாளர்களுக்கு அளிக்கப்பெற்றது. இவர்கள் மூன்றுண்டுப் பதவியில் இருந்தனர்

முதலில் இவர்கள் குலுக்கல் முறையால் தெரிவு செய்யப் பட்டாலும் பின்னர் பேரரசர்களால் தெரிவு செய்யப்பெற்றனர்.

### வழிபாடுகள்

சமயம், வழிபாடுபற்றியவைகளிலும் இரட்டை ஆட்சி தெற்றெனத் தெரிந்தது. ஒரு சமயத் தலைவரைப் பெற்றிருந்த வரை, பேரரசர் முதன்மைக் குருமார்களின் தலைவர் என்ற முறையில் இத் தலைமைப் பதவியை ஏற்படுத்திக் கொண்டிருந்தார். இத் தலைமைப் பதவியால் இவர் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தார். ஆனால், சமூகத்தின் வழிபாட்டு முறைகளின் மீதான கட்டுப்பாட்டைச் செனெட் சபை இழந்துவிடவில்லை. வெளிநாட்டு வழிபாட்டு முறைகளின் சமூக அல்லது சட்ட நிறைகள் சர்ச்சைக்குள்ளாகும்பொழுது முடிவு செய்யும் உரிமையை இச் சபை இழந்துவிடவுமில்லை. உரோமில் யூதர்களின் வழிபாடும், எகிப்தியர்களின் வழிபாடும் வளர்ச்சியடைந்தபொழுது செனெட் சபையுடன் கலந்தாராயப்பட்டது. மாநிலங்களில் இவர்களுக்குப் புகலிடம் அளிப்பதுபற்றியும் செனெட் சபையோடு கலந்தாராயப் பட்டது. நிமித்திகர்களின் குழுவை மீண்டும் அமைப்பதுபற்றிக் கிளாடியஸ் இச் சபையின் கருத்தை அறிந்தார். குருமார் குழுவினரை அமர்த்தும் பணியைப் பேரரசர் கட்டுப்படுத்தாதவரைக்கும் இப் பணியைச் செனெட் சபை ஏற்றுச் செயற்படுத்தியது.

### நாணயம் அச்சிடல்

நாணயங்களை அச்சிடும் உரிமை சமூகத்திடம் இருந்தது. இது சமூகத்தின் இறைமை இயல்புகளை வெளிப்படுத்தவில்லை. இந்த உரிமையைச் செனெட் பெற்றிருந்ததா அல்லது பேரரசர் பெற்றிருந்தாராவென்பது அரசியலமைப்புச் சிறப்புப் பெறவில்லை. இந்த உரிமையை மெய்யாக இரு தரப்பினரும் பெற்றிருந்தது இரட்டை ஆட்சியை வெளிப்படுத்துவதாக இருந்தது. கி.மு. 15-ல் இருந்து தங்கம், வெள்ளி நாணயங்களை அச்சிடும் உரிமையைப் பேரரசர் ஏற்றுக்கொண்டிருந்தார்; செப்பு நாணயங்களை அச்சிடும் உரிமையைச் செனெட் சபை பெற்றிருந்தது. செப்பு நாணங்களின் உலோக மதிப்பு அதிகமாக இருந்தவரையில் செனெட் சபையின் இவ்வுரிமை ஒரு சிறப்புரிமையாகக் கருதப் பட்டது.

எல்லா முதன்மையான துறைகளிலும் இரட்டை ஆட்சி முறையின் செயற்பாட்டையும் நாம் இப்பொழுது பார்த்தோம். இந்த முறையை ஒரு கற்பனையானதென மெய்ப்பிப்பது கடின

மன்று. பேரரசரின் தூண்டுதலின்பேரில் செனெட் சபையின் சட்டமியற்றும் அதிகாரம் செயற்படுத்தப்பட்டது. செனெட் சபையின் கட்டளை இருந்த இடத்தில் இப்பொழுது பேரரசரின் உரை எடுக்கப்பெற்றது. செனெட் சபையின் விசாரணை அதிகாரத்தின் சுயேச்சை நிலையைப் பேரரசரின் டிரிபியூனிசிய அதிகாரம் மீறியது. பொது மாநிலங்களில் இவருடைய புற குயுரேட்டர்கள் புறக் கான்சல்களின் செயற்பாடுகளுக்கு ஒரு தடையாக இருக்கையில் இவருடைய கண்காணிப்பாளர்கள் இத்தாலியிலும், உரோமிலும் ஆட்சியைக் கைப்பற்றிக்கொள்ள முனைந்தனர். இவருக்குப் பணம் ஒதுக்கும் பிரேரணைகளை ஆதரிக்க சபையில் இவர் முயற்சிகள் மேற்கொள்ளும்பொழுது கருவூலத்தின் மீதான இவருடைய செல்வாக்கு வலியுறுத்தப்படலாம். இத்தகைய கட்டுப்பாடுகளைத் துறைகளின் மீது அறிவாற்றலோடு வலியுறுத்தினால் இரட்டையாட்சிப் பயனற்றுப்போகும். பேரரசரின் கட்டுப்பாடு அறிவற்ற முறையிலும், மிருகத்தனமாகவும் வலியுறுத்தப்பட்டால் இவர் பொது விருப்பில் பேரரசராகவின்றி ஒரு கொடுங்கோலராகத் தோற்றமளிப்பார். பேரரசை அதனுடைய சிறந்த பேரரசர்களைக் கொண்டு மதிப்பிடவேண்டும். சிறந்த பேரரசர்களின் கீழ் இரட்டை ஆட்சி ஓர் உயிர்ப்புள்ள முறையாக இருந்து முறையாகத் தோற்றமளித்தது.

### செனெட் சபையினரும், புரவிப் படையினரும்

குடியாட்சியில் உயர்குடியினரின் சிறப்புரிமைகள் சமூக அமைப்பைச் சார்ந்திருந்தன. பேரரசில் செனெட் சபையைச் சார்ந்த வகுப்பினரின் தனிச் சிறப்புரிமைகளுக்குச் சட்ட அடிப்படை ஒன்றிருந்தது. இவ் வகுப்பில் சேர்வதற்கான தகுதிகள் வீரத்திருத்தகைகளுக்கு விதிக்கப்பட்டத் தகுதிகளையொத்திருந்தன. ஆனால், இச் சபையோடு தொடர்புடையவர்களுக்குச் சொத்துத் தகுதி 1,000,000 செஸ்டர்செஸ் என விதிக்கப்பட்டிருந்தது. பேரரசரின் அதிகாரம் படையின் ஆதரவில் நிலைபெற்றிருந்ததெனினும், உள்நாட்டு, வெளிநாட்டு ஆட்சிப் பணிகளுக்காகப் பேரரசர் ஓர் அலுவல் சார்புடைய வகுப்பினரின் ஆதரவை நாடவேண்டியது அவசியமாயிற்று. இவ் வகுப்பினரும் பேரரசரின் நல்லாதரவைச் சார்ந்திருத்தல் நலமெனக் கருதப்பெற்றது. குடியாட்சிக் காலத்தில் உயர்குடியினரைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால், சில கட்டுப்பாட்டிற்குட்பட்டே பேரரசர் இவர்களைப் பயன்படுத்திக்கொள்ள முடியும். எனவே இவ்வுயர் குடியினரைத் திரட்டிக்கொள்ளவும் படைத்துக் கொள்ளவும் பேரரசர் அதிகாரம் பெற்றிருந்தார். சிலரைச் சபையில் அமர்த்திப் பெட்ரிசியர்களைப் படைத்துக்கொள்ளும்

பேரரசின் அதிகாரத்தை நாம் முன்னரே பார்த்தோம். ஆனல், ஓர் உயர்குடியிலிருந்து செனெட்டர்களேயும், நிருவாகிகளேயும் தெரிவுசெய்யும் பொருட்டு அக் குடியினரை உருவாக்குவதற்கு விரிவான அதிகாரம் இப்பொழுது பேரரசர்களுக்குத் தேவைப் பட்டது. இத்தகைய அதிகாரத்தை அகஸ்டஸ் வலிந்து கவர்ந்து கொண்டார். இதன் விளேவாகச் செனெட் சபைக்குரிய ஒரு வகுப்பு ஏற்புப் பெற்றது. செனெட்டர்களின் புதல்வர்கள், பிறப் பால் இவ் வகுப்பில் இடம்பெற்றனர். பேரரசர் அளித்த அகலக் கோடிட்ட கருஞ்சிவப்பு அங்கியை அடையாளச் சின்ன மாகப் பெற்றவர்களும் இவ் வகுப்பில் இடம் பெற்றனர். இவ் வகுப்பினரின் உரிமைகள் பேரரசின் ஆட்சிக் காலத்தில் வரை யறுக்கப்பட்டன. செனெட் சபைக்குரிய வகுப்பினரெனப் பேரரசால் ஏற்றுக்கொள்ளப்பெற்றவர்களும் செனெட்டர்களுக் குரிய அடையாளச் சின்னங்களேப் பெற்ற பெட்ரிசியர்களும் இவ் வகுப்பில் இடம் பெற்றனர். செனெட்டரின் மகன் செனெட்டருக் குரிய ஆடைகளே அணிந்துகொண்டு குயுரியாவின் கூட்டங்களில் கலந்துகொள்ளும் உரிமைபெற்றிருந்தான். பேரரசரிடமிருந்து அடையாளச் சின்னங்களேப்பெற்ற குதிரைப் படையைச்சேர்ந்த வீரத்திருத்தகைகளும் இருபது உறுப்பினரைக்கொண்ட ஆணைக் குழுவின் வழியாகவும் குவெஸ்டர் பதவியின் வழியாகவும் செனெட் உறுப்பினராகும் தகுதி பெறலாம். பதவியிலும், செனெட் சபையிலும் நுழையப் படைச்சேவை முதற்படியாக அமைந்தது. செனெட் சபையில் அமர விரும்பிய இளம் படை வீரன் ஒருவன், இவனேடு குதிரைப்படையில் பணிபுரியும் வீரனி லிருந்து சேவையிலும் பட்டத்திலும் வேறுபட்டுக் காணப்பட் டான். அடையாளச் சின்னங்களேயும் பெற்றிருந்த டிரிபியூன்கள் ஒரு தனி வகுப்பு அலுவலர்களாக இருந்தனர். படைகளில் இவர் கள் குதிரை வீரர்களாகப் பணியாற்றி டிரிபியூனின் நிலேயை அடைந்தவர்கள். இவர்களுடைய படைச் சேவைக் காலம் மற்றக் குதிரைப்படையினரின் சேவைக் காலத்தைவிடக் குறைவாக இருந்தது. இக் குறைந்த காலச் சேவை இவர்களே இருபத்தைந்து வயதில் குவெஸ்டர் பதவிக்குத் தகுதி பெற வழிசெய்தது. அகன்ற கருஞ்சிவப்புக் கோடுகளே அடையாளச் சின்னமாகப் பெற்றிருந்தவர்கள் செனெட்சபைப் பதவியை நாடுவர் என எதிர்பார்க்கப்பட்டது. கிளாடியஸின் காலத்தில் இவர்கள் இப் பதவியை ஏற்குமாறு வலியுறுத்தப்பட்டனர். ஏற்க மறுத்தால் அடையாளச் சின்னங்களே இழக்க வேண்டும். சில வேளேகளில் குதிரைப்படைப் பணியையும் இழக்கவேண்டிவரும்.

செனெட்டிற்குரிய வகுப்பினரின் மாண்பையும், தூய்மையை யும் பேணுவதற்குப் பெரும் கவனம் செலுத்தப்பெற்றது. நான்கு

தலைமுறைகளிலிருந்து சுயேச்சையான பிறப்புநிலையை விளக்கக் கூடியவர்களுக்கே அகன்ற கருஞ்சிவப்புக் கோடிட்ட அடையாளச் சின்னம் அளிக்கப்பட்டது. சுயேச்சை பெற்றவரின் மகனுக்கு இவ் விருதைக் கிளாடியஸ் அளித்தபோது கண்டனத்திற் குள்ளானர். செனெட்டர்களும், இவர்களின் புதல்வர்களும், பேரர்களும், கொள்ளுப்பேரர்களும் விடுதலையடைந்த பெண்களை யும், நடிகைகளையும் மணப்பதை ஜூலியன் மணவினைச் சட்டங் கள் தடை செய்தன. செனெட்டர்களின் மனைவிகள், ஆண் வழி வந்த வாரிசுகள், மகவேற்புக்குழந்தைகள், விடுதலைப்பெற்ற சட்டப்படி செல்லாத மக்களும் இந்த வகுப்பில் அடங்கினர். செனெட்டர்களின் வணிகத் தகுதியின்மைகள் தொடர்ந்திருந்த தோடு கடினமாக்கப்பட்டன. பொது ஒப்பந்தங்களை இவர்கள் பெறுவதில் இருந்த தடைகளை ஹேடிரியன் புதுப்பித்தார். குறைந்த வட்டிக்கு முதலீடு செய்ய இவர்கள் அனுமதிக்கப் பட்டனர். ஆனல், சில சமயங்களில் இதுவும் அனுமதிக்கப்பட வில்லை.

இருந்தபோதிலும் இக் குறைபாடுகள் ஓர் அளவிற்குச் சிறப்புரிமைகளால் ஈடு செய்யப்பட்டன. செனெட்சபையினர் உரோமானியர்களாகவே இருந்தது நீங்கியபொழுது இவர் களின் சொந்த இடங்களுக்கு இவர்கள் செய்யவேண்டியக் கடமை கள் பற்றிய பிரச்சினை ஆராய்வதற்குரியதாயிற்று. இவர்கள் பிறந்த ஊர்களை வாழ்விடமாகக் கொள்ள அனுமதிக்கப்பட்டார் கள். ஆயினும், இவர்கள் பிறந்த இடங்களுக்கு கடமைப் பட்டிருக்கவில்லை. செனெட்சபையினர் மீதான குற்ற வழக்கு விசாரணை அதிகாரம் செனெட்சபைக்கே ஒதுக்கியளிக்கப் பட்டதை நாம் முன்னரே பார்த்தோம்.

பேரரசின் தொடக்கத்தில் இந்த வகுப்பினருக்கெனத் தனி யாகப் பட்டமெதுவும் அளிக்கப்படவில்லை. ஆனல், முதல் நூற்ருண்டின் இறுதியில் கிளாரிசிமஸ் என்ற பட்டம் இதன் உறுப்பினருக்களிக்கப்பட்டது. கிளாரிசிமா என்ற பட்டம் செனெட்டர்களின் நிலையிலிருந்த பெண்களுக்கு அளிக்கப்பெற் றது. பதவியும், மாண்பும் பேரரசரையும் செனெட்டினரையும் வேறுபடுத்தியதேயன்றி தரத்தால் இவர்கள் வேறுபடவில்லை. இவர்கள் பேரரசரின் செல்வர்களாக இருந்தனர். இவர்கள் மட்டுமே குடியாட்சிப் பதவிகளில் இருக்கலாமென்பது செல்வர் தொகுதியில் காணப்பட்டது. இவர்கள் பேரரசரின் பேராளர் களாக இருந்தனரேயன்றி புரோகுயுரேட்டர்களைப்போல் பணி யாள்களாக இருக்கவில்லை. அரசின் முறையான பதவிகளை இவர்கள் வகித்ததைத் தவிர, மாநில அரசுப் பொறுப்பு

களையும் முழுமையாக ஏற்றுச் செயற்படுத்தினர். மாநிலங்களில் இவர்கள் முழுமையாகப் படைத்தலைமையை ஏற்றுக்கொண்டனர். பேரரசரின் பிரதிநிதிகள் என்ற முறையில் நகரமுதல்வர் பதவியை இவர்கள் ஏற்றனர். குடிநீர் அளிப்பு, சாலைப்பாது காப்பு, பொதுப்பணிகள், கால்வாய்க்கரைகளின் பாதுகாப்பு போன்ற கடமைகளை நிறைவேற்றுவதற்கான ஆணையர் பதவி களையும் இவர்கள் பெற்றுச் செயற்படுத்தினர்.

உயர்குடியினரின் படைப்பயிற்சிபற்றியும், மனப்பான்மை பற்றியும் முன் சில செய்திகளைப் பார்த்தோம். இவ் வகுப்பினர் படிப்படியாக மாநில இயல்பைப் பெறத் தொடங்கினர். மாநிலப் பொறுப்புகளை இவர்கள் ஏற்றுச் செயற்படுத்தியதால் இவை களுக்குரிய பண்புகளை இவர்கள் பெற்றனர். இவ் வகுப்பினரில் வெற்றியாக்கமுடையவர் தம் வாழ்நாளில் கடைசிக் காலத்தைத் தான் உரோமிலும், இத்தாலியிலும் பணியாற்றினர். இவருடைய தொடக்க காலத்திய படைப்பயிற்சி மெய்யானதாக இருந்திருந் தால் பதினெட்டிலிருந்து இருபத்தைந்து வயதுவரை இவர்கள் படைவீடுகளிலும், எல்லைப்புறங்களிலும் செலவிட்டிருக்க வேண்டும். படைத்திறமையை இவர் காட்டியிருந்தால் முன்னாள் குவெஸ்டர் என்ற முறையில் படைத்தலைமை ஏற்க மறுபடியும் மாநிலங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கலாம். பேரரசரின் மாநிலங் களில் நீண்டகாலச் சேவைக்குப் பிரீட்டர் பதவியும் கான்சல் பதவியும் தகுதி வாய்ப்பளித்தன. செனெட்சபையின் கட்டுப் பாட்டின் கீழிருந்த மாநிலங்களுக்கு இவர்கள் ஓராண்டுப் பதவிக்காலத்திற்கு ஆளுநர்களாக அனுப்பப்பெற்றனர். அப் பொழுதிருந்த நிலையை உறுதிப்படுத்தும் வகையில் பல்வேறு பதவிக்களுக்கான தெரிவுக் கருத்துகள் உருவாக்கப்பட்டன.

பேரரசுப் பதவியை ஆதரித்துப் பேரரசின் பணிகளை நிறைவேற்றிய இரண்டாவது வகுப்பினர் குதிரைப்படையைச் சேர்ந்த வீரத்திருத்தகைகளாவர். இவர்களே உயர்குடிவீரர்கள். இவர்கள் செல்வர் வகுப்பைச் சேர்ந்தவர்கள். 4,00,000 செஸ்டர்செஸ்களைச் சொத்தாகக் கொண்டிருந்தனர். ஒருவருக்கு இவ்வீரத்திருத்தகை நிலையை அளிப்பதின் அடையாளமாகப் பேரரசர் தங்கமோதிரத்தைப் பரிசாக அளித்தார். குதிரையை ஒருவருக்குக் கொடுத்து இந் நிலைக்கு உயர்த்தும் வழக்கமும் இருந்தது. மோதிரத்தையும், குதிரையையும் அளித்து ஒருவரை வீரத்திருத்தகை நிலைக்கு உயர்த்தும் முறை பேரரசில் நிலவி வந்தது. ஆயினும், இவ் வீரர் நிலைக்கு உயர்த்தப்பட்டவருக்குக் குதிரையை அளிப்பது எப்பொழுதும் பின்பற்றப்படவில்லை,

மோதிரமளித்து உயர்குடி நிலைக்கு உயர்த்துமுறை சிறப்பிழந்த பொழுது, அகஸ்டஸ் காலத்திலிருந்தே உயர் குடியினராக இருந்து வந்தவர்களே இவ்வகுப்பினராக ஏற்றுக் கொள்ளப் பட்டனர். பேரரசுக் காலத்தின் தொடக்கத்தில் இவ்வீரத் திருத்தகை தொகுதி பெரிதும் விரிவாக்கப்பட்டது. அகஸ்டஸ் காலத்தில்கூட ஆண்டு அணிவகுப்பு நாளில் 5000 வீரத்திருத் தகைகள் கலந்துகொண்டதாக அறிகிறோம். இப் படைத்துறை யின் பெரும்பகுதியினர் நிதி, ஆட்சி காரணங்களுக்காகவும், இராணுவப் பணிகளுக்காகவும் மாநிலங்களில் வைத்துக் கொள்ளப்பட்டனர். இதன் எண்ணிக்கைப் பெருக்கத்தின் காரணமாகப் பழைய செஞ்சுரியேட் அமைப்புக் கைவிடப்பட்டது. ஏனெனில், பேரரசரின் இக் குதிரைப்படையினர் பெரும்பிரிவு களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஒரு தலைவரின் பொறுப் பில் விடப்பட்டது. இவ் வகுப்பினரைத் தெரிவு செய்யும் உரிமை யைப் பேரரசர் பெற்றிருந்தார். சுதந்திரமான பிறப்பு, நற் குணம், 4,00,000 செஸ்டர்செஸ் அளவிற்குச் சொத்துப் போன்றத் தேவையான தகுதிப் பண்புகளைப் பெற்றிருந்த எவரும் பேரரச ரிடமிருந்து இவ் உயர்குடி வகுப்பினர் நிலையைப் பெறலாம். பேரரசரே சென்சாராகச் செயற்பட்ட சமயத்தில் புரவிப்படை யினரைத் தெரிவு செய்வதும், நீக்குவதும் பழைய குடியாட்சி யிலிருந்த விதிகளையொட்டியே இருந்தன; ஆனால் பேரரசில் சென்சார் ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பெற்றிராததால், விண்ணப்பத்தார்களின் பெயர்களைப் பதிவுசெய்து கொள்வதற்கு முதலிருந்தே ஒரு துறை அமைக்கப்பட்டிருக்கவேண்டும். புரவிப் படையினர் பதிவுப் பிரிவு ஒன்று பொது விண்ணப்பத்துறையின் கிளையாக அமைந்து செயற்பட்டது. இவ் வகுப்பில் சேர்ப்ப தையே முதன்மையான கடமையாக இத் துறை கருதியது. இருப்பினும், வீரத்திருத்தகைக்குரிய தகுதி இல்லாததை இப் பதிவுப் பிரிவு, பேரரசருக்குச் சுட்டிக்காட்டியிருக்கலாம். எனவே, இப் பிரிவினர் ஒரு கழகமாகச் செயற்பட்டனர். இருப்பினும், இப் படையினரின் முறையான கட்டுப்பாடு ஒரு வீறூர்ந்த பொதுச்செயலால் பெறப்பட்டது. குடியாட்சிக் காலத்தில் ஜூலை மாதம் 15ஆம் நாள் நடைபெற்ற படை அணிவகுப்பு ஓர் ஊர்வலமாகத்தான் இருந்தது. ஆனால், இப்பொழுது சென்சார் படை அணியைப் பார்வையிட்டார். இவ் வகுப்பினரின் தகுதிகளைச் சோதனையிடுவதாக இஃது அமைந்திருந்தது. வீரர்கள் இப்பொழுது புரவிகளில் ஏறிச்சென்றனர். இவர்கள் படையிலிருந்து விலகிச் செல்ல முடியாது. ஏனெனில், படைச் சேவை இவர்களின் படிநிலையைக் கட்டுப்படுத்தவில்லை. படை யில் இருக்க விரும்பாதவர்களையும், முப்பத்தைந்து வயது

நிரம்பியவர்களையும் இறுதியில் அகஸ்டஸ் விலகிக்கொள்ள அனுமதித்தார். இதன்படி விலகியவர்கள் தம் புரவிகளை அரசிடம் ஒப்படைக்கவேண்டும். ஆயினும், இப் படையினர் நடத்தைப்பற்றி வினவப்பட்டனர். திருப்தியாகப் பதிலளிக் காதவர்கள் படையிலிருந்து விலக்கப்பட்டார்கள். இப் பணியை அகஸ்டஸ் அக்கறையுடன் நிறைவேற்றியதை, மூன்று அல்லது பத்துப்பேர்களைக் கொண்ட செனெட் குழுக்களை அமைத்துதவுமாறு செனெட்சபையைப் பலமுறைகள் கேட்டுக் கொண்டதிலிருந்து அறிந்து கொள்ளலாம். பின் வந்த பேரரசர் கள் காலத்திலும் இத்தகைய அணிவகுப்புகள் காணப்பட்ட போதிலும் இக் கடுமையான கடமையாகிய நீக்கத்தை நிலை யாகச் செயற்பட்டுவந்த செயலகமொன்று செய்துவந்தது.

குடியாட்சியின் இறுதிக் காலத்திலும் உரோமானிய வீரர்களின் பதினெட்டு செஞ்சுரிகள் படையோடான தொடர்பை இழந்துவிடவில்லை. குடிமக்கள் புரவிப்படையாக இவை இப் பொழுது இருக்கவில்லை. இளம் உயர் குடியினர் புரவிப் படை யின் அலுவலர்களாகப் பணியாற்றினர்கள். பேரரசர் காலத் திலும் இரண்டாந்தரப் படையின் இயல்பை இப் படை பெற்றிருந் தது. இப் பொதுப் புரவிப்படையினரிலிருந்தே, உயர்குடி நிலையிலிருந்த புரோகுயுரேட்டர்களையும், மேற்பார்வையாளர் களையும் பேரரசர் தம் அலுவலர்களாகத் தெரிவு செய்தார். பேரரசின் தொடக்கத்தில் இப் படையினர் எல்லா நீதிபதி களையும் அளித்திருக்க முடியுமா என்பதை உறுதியாகக் கூற முடியாது. உரிமை, அல்லது குற்றவழக்கு ஆயினும் விசாரணை அதிகாரம் ஒரு சுமையே. இந்த வகுப்பில் இடம் பெற்றிருந் தாலும், இல்லையென்ருலும் இவ் விசாரணை அதிகாரம் இவர்கள் மீது சுமத்தப்பட்டது.

இவ்வாறு உருவாக்கப்பட்ட ஒரு வகுப்பு காலப்போக்கில் வளைவு நெளிவற்றுப்போனது இயல்பேயாகும்; இதற்குரிய தனிப்பட்ட கௌரவப் பட்டங்களைப் பயன்படுத்திக்கொண்டு முடி விற்கு வந்தது. இரண்டாவது நூற்ருண்டில் இஃது இந் நிலையை எய்தியது. புரவிப் படையினர்த் தொகுதியையொட்டியதாக பதவிப் பெயர்கள் அமையவில்லை. மார்க்கஸ் அருலியஸ் காலத் திற்குப் பின் இப் புரவிப் படையினர் தொகுதி மூன்று வகுப்பு களாகப் பிரிந்தது. புரவிப் படையின் படை ஆட்சித் தலைவர்களை முதல் வகுப்பு கொண்டிருந்தது. மற்றப் புரவிப் படைத் தலைவர் களையும் உயர் புரோகுயுரேட்டர்களையும் இரண்டாம் வகுப்பு கொண்டிருந்தது. புரவிப் படையின் மற்ற அலுவலர்கள் அனை

வரையும் மூன்றும் வகுப்புக் கொண்டிருந்தது. படையின் புரவிப் படை அலுவலர்கள் இதேமுறையில் தரப்படுத்தப்படவில்லை. இத்தாலிய நகர வீரத்திருத்தகைகள் பழைய குடியரசில் பெற்றிருந்த அலுவல் தொடர்பில்லாத பதவிப் பெயரையே பெற்றிருந் தார்கள். செனெட் சபையினருக்குரிய விருதைப் பெற்றவர்களும், புரவிப் படையில் பணியாற்றிக் கொண்டிருந்தவர்களும் தெளிவானதாயினும், ஆனல் அலுவல் தொடர்பில்லாத பெயரையே பெற்றிருந்தனர். இந் நிலைகளைக் கடந்தவர்களே செனெட் சபையில் நுழையமுடியும். பெரும் செல்வம் பெற்றிருந்த செனெட்டர்களையும், புரவிப்படையின் நிலையைத் தக்க வைத்துக்கொண்டவர்களையும், நல்ல செல்வச் சிறப்புப் பெற்றிருந்த உயர்குடியினரையும் குறிப்பாக இப் பதவிப் பெயர்கள் குறிப்பிட்டன.

# 15. பேரரசின்கீழ் இத்தாலியும் மாநிலங்களும்

உரோமோடு இத்தாலிய நகரங்களை இணைப்பதில் குடியாட்சி மேற்கொண்ட முயற்சிகளைச் செயற்படுத்தி வெற்றிக்காகப் பேரரசு பெரும் பாடுபட்டது. செயலாட்சியில் ஒருமைப்பாட்டை எய்து தல் இதன் நோக்கமாக இருந்தது. இந் நோக்கத்தை நிறை வேற்ற அகஸ்டஸ் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் பற்றிய சான்றுகள் எதுவுமில்லை. ஆட்சி முறையில் இத்தாலியை உரோமோடு இணைப்பதற்குப் பேரரசர் ஒரு முறையை மேற் கொண்டார். உரோம் நகரம் நீங்கலாக, இத்தாலியை அகஸ்டஸ் பதினொரு மண்டலங்களாகப் பிரித்தார். இவ்வாறு பிரிக்கப்பட்ட தின் நோக்கம் தெளிவாகத் தெரியவில்லையெனினும், இத்தாலிய ஆட்சிப் பிரிவுகள் பலவற்றிற்கு இது பின்னர் ஓர் அடிப்படையாக அமைந்தது. பொது நிலங்கள், உரோமானியக் குடிமக்கள் செலுத்திய வரிகள், மக்கள்தொகைக் கணக்கின் முடிவுகள், போன்றவைகளை இப் பிரிவுகள் அமைத்துதவின. இதுவரையில் மத்திய அரசுப் பணிகளாக இருந்தவைகளில் இவைகள் பயன்படுத்தப்பட்டன. இவைகளால் தல சுய ஆட்சிக்குக் கேடு விளையவில்லை. பேரரசின் செல்வாக்கின் விளைவாகச் சில கேடுகள் பின்னல் ஏற்பட்டன. இவைகளில் ஒன்ருக நகராட்சி மன்றங் களின் (Comitia) மறைவைக் குறிப்பிடலாம். இத்துடன், தலச் செயலாட்சிக் குறைப்பு, சுயேச்சையான தல நிதி முறையின் இழப்பு, பல இத்தாலிய அரசுகளின் நடைமுறை ஆட்சியின் மீது மத்திய அரசும் மேற்கொண்ட கட்டுப்பாடு ஆகியவைகளையும் பேரரசரின் செல்வாக்குப் பெருக்கத்தால் ஏற்பட்ட விளைவு களாகக் குறிப்பிடலாம்.

உரோம் நகரில் மக்கள் அவைகள் மறைந்த பின் கொமி சியாவின் நீடிப்புப் பெரும் சிறப்புப் பெறவில்லை. டோமிடியன் காலத்தில் இலத்தீன் குடியேற்றமொன்று அதன் நிருவாகியைக்

கொமிசியாவின் கூட்டத்தில் தெரிவு செய்தது. இக் கருத்து ஸ்பெயினுக்கு மாற்றப்பட்டதிலிருந்து இஃது இத்தாலியில் அக் காலத்தில் நிலவியதை வெளிப்படுத்தியது. தல செனெட்சபைகள் நிருவாகிகளைத் தேர்ந்தெடுத்த செய்திகள், மக்கள் தேர்ந்தெடுக்கும் முறை அன்டோனினஸ் பியஸ் (Antoninus Pius) காலம்வரை இருந்துள்ளதை மெய்ப்பிக்கின்றன. இத் தேர்தல் முறை இத்தாலியிலும் மேற்கத்திய மாநிலங்களிலும் நெடுங்காலம் வரை நிலவியது. புதிய முறையில் நிருவாகிகளை உருவாக்கும் முறையின் விளைவாக இது நகராட்சிகளிலிருந்து மறைந்தது; மக்கள் அவைகளின் தேர்ந்தெடுப்பிற்குரிய அதிகாரம் இவற்றின் ஆட்சிப்பணிகளையும் கடந்து நிலைபெற்றிருந்தது. பேரரசின் தொடக்கத்தில் இப் பணிகளைத் தல செனெட்சபையிடம் விட்டு விடும் போக்குக் காணப்பட்டது. இவை பெரும் பொறுப்புடையன வாகவும், மத்தியக் கட்டுப்பாட்டு அதிகாரத்தின் கருவிகளாகவும் கருதப்பட்டன.

தல நீதிமன்றங்களின் கட்டுப்பாட்டை முழுமையாக எடுத்துரைக்கவியலாது. இத்தாலியில் விசாரணைக்காகத் தனிப்பட்ட நிறுவனங்கள் நிறுவப்பட்டது இக் கட்டுப்பாட்டோடு தொடர்புடையதாக இருந்தது. பேரரசர் ஹேடிரியன் இத்தாலியை நான்கு பெரும் வட்டங்களாகப் பிரித்தார். இஃது ஒவ்வொன்றும் ஒரு கான்சலின் பொறுப்பில் விடப்பட்டது. மார்க்கஸ் அருலியஸ் காலத்தில் இந் நிருவாகிகளுக்குப் பதிலாக ஒரு சட்ட அறிஞர் அமர்த்தப்பெற்றார். இவர் பிரிட்டோரிய நிலையை அடைந்தவராக இருந்தார். நகரப் பிரீட்டரின் செயலாட்சியிலிருந்து பிரிக்கப் பட்ட பகுதியில் இவர் முழுமையான உரிமை வழக்கு விசாரணை அதிகாரம் பெற்றிருந்தார். பொறுப்பாட்சிகள்பற்றிச் சிறப்பு விசாரணை அதிகாரத் தொடர்புடையனபற்றியும், பாதுகாவலர் நியமனம் அல்லது ஆட்சியில் சட்டம்பற்றிய பிரச்சினைகளை யொட்டியும் இவ்வலுவலர்கள் குறிப்பிடப்பெற்றனர். இச் சிறப்பு விசாரணை அதிகாரம் வலுப்பெற்று வந்ததால், இவர்களின் அதிகாரம், மெய்யாகவே, தல நிருவாகிகள், செனெட்சபைகள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தியது. உயர் குற்ற விசாரணை அதிகாரத்தின் மறைவை நாம் முன் பார்த்தோம். உரோமிலிருந்து நூறு மைல்களுக்குட்பட்ட பகுதியில் நகர முதல்வரின் செயலாட்சியும் இதற்கு அப்பாற்பட்ட பகுதியில் படை ஆட்சியாளரின் விசாரணை அதிகாரமும் சென்று நிலவின.

இத்தாலிய நகரங்களின் நிதி இடர்கள் பேரரசரின் கட்டுப்பாட்டை மேலும் வரவேற்றன. நிதிநிலையை ஆராயப் பேரரசர், குயுரேட்டர்களை அமர்த்தினர். செனெட்சபைக்குரியவர்களி

லிருந்தோ புரவிப் படைக்குரியவர்களிலிருந்தோ இவர்கள் அமர்த்தப்பெற்றனர். வறிய நிலையில் இருந்த நகராட்சிகளின் நிதிநிலையை வளப்படுத்தும் நோக்கத்தோடு சிறப்புநிலை ஆணையர்களாகச் செயற்பட இவர்களைப் பேரரசர் அமர்த்தினர்.

ஆனால், இதைவிடக் கடுமையானதொரு கட்டுப்பாடு வரக் காத்திருந்தது. இக் கட்டுப்பாடு இத்தாலியை மாநிலங்களின் நிலைக்குக் கொண்டு சென்றது. சுயேச்சையான நகரங்களிலும் மாநில மாவட்டங்களிலும் பேரரசரின் சார்பில் பணியாற்றிவந்த சீர்திருத்துநர்கள், சிறப்புநிலை ஆணையர்களாக இத்தாலிக்கு மாற்றப்பட்டனர். இத்தாலியின் நகரங்கள் இவர்களுடைய ஆதிக்கத்திற்குள் வந்தபொழுது இந் நகரங்களின் சுதந்திர நிலை மறைந்துபோயிற்று. முறையான ஆட்சி முறையையும் நேர்முக வரிவிதிப்பையும் இவர்கள் அப்பொழுது மேற்கொள்ளவில்லை. இவ்விரண்டு மாற்றங்களும் டயோகிலிடியனின் ஆட்சிக் காலத்தில் கொண்டுவரப்பட்டன. இத்தாலிய மாநிலங்களாகப் பிரிக்கப்படா விட்டாலும் இதனுடைய மாவட்டங்களில் முறையாக அமர்த்தப் பெற்ற சீர்திருத்துநர்கள் (Correctors) பதவியேற்றனர். இவர் களைப் பேரரசரே அமர்த்தினர். இம் மாவட்டங்களிலிருந்து வருவாய்கள் பேரரசரின் அவைக்கும் உரோம் நகருக்கும் சென்றன. புறச் சூழ்நிலைகளாலும் பேரரசு முறையின் விளைவு களாலும் மையம் நோக்கிய ஆட்சியமைதல் தவிர்க்க இயலாத தாயிற்று. பேரரசர்களைப் பொறுத்தவரை இத்தாலியப் பிரச்சினைகளும் மாநிலப் பிரச்சினைகளும் வேறுபட்டவைகளல்ல. இத்தாலியில் மட்டும் பேரரசர் நிலையாகத் தங்கி வசிக்கவில்லை. இத்தாலியின் எல்லைப்புறங்கள் மிலேச்சர்களின் தாக்குதலுக் குள்ளானபோது பொது வரிவிதிப்பிற்கு இவர்களும் உள்ளா யினர். இத்தாலிய ஆட்சியில் பேரரசின் தலையீட்டிற்குச் சமூகப் பொருளாதாரக் கொடுமைகள் காரணமாயிருந்தன. இக் கொடுமைகளை அகற்ற முற்பட்டபொழுது பேரரசின் தலையீடு தேவைப்பட்டது. குடியழிவையும் வறுமையையும் ஒழிக்க அரசு முன்வந்து இடர் உதவி நிதியளித்தது. ஓர் அரசு அல்லது ஒரு மாவட்டத்திற்கு அறக்கொடை அளித்து அதன்வழி மக்களுக்குத் துயருதவி வழங்கிப் பெற்றோர்களின் சுமையைக் குறைப்பதும், உற்பத்தியைப் பெருக்குவதும் பேரரசின் நோக்க மாக இருந்தது. தொடக்கத்தில் இத்தகைய அறக்கொடைகள் தனிப்பட்டவர்களால் அளிக்கப்பட்டன. நெர்வாவின் காலத்தி லிருந்தே பேரரசர்கள் அரசின் சார்பில் இத்தகைய அறப்பணி களை மேற்கொண்டனர். இவரைப் பின்பற்றி டிராஜன் இம் முறையை விரிவாக்கினர். இதே போன்ற முயற்சிகளில்

ஹேடிரியன், அன்டோனியஸ் பியஸ், மார்க்கஸ் அருலியஸ், செவெரெஸ் அலெக்சாந்தர் ஆகியோரும் ஈடுபட்டுழைத்தனர். நல்ல நிலத்தின்பேரில் அறக்கொடையாகக் பேரரசரால் கொடுக்கப்பட்ட முன்பணத்திலிருந்து பெற்ற ஐந்து அல்லது இரண்டரைச் சதவீத வட்டியிலிருந்து இத் துயருதவிகள் அளிக்கப்பட்டன. இவ் வட்டித் தொகையிலிருந்து சில சிறுவர் களுக்கும் சிறுமிகளுக்கும் பொருளாகவோ பணமாகவோ மாதந் தோறும் உதவியளிக்கப்பட்டது. சிறுவர்கள் பதினெட்டு வயதை அடையும் வரைக்கும் பெண்கள் பதினன்கு வயதை எட்டும் வரைக்கும் இவ்வுதவியளிக்கப்பட்டது. இந்த அமைப்பின் எல்லாச் செயற்பாடுகளையும் ஒவ்வோர் இடத்திலும் ஒரு குவெஸ்டர் மேற்பார்வையிட்டார். ஒரு பெரிய மாவட்டத்தின் இந் நிதிக் கட்டுப்பாடு சாலைக் கண்காணிப்பாளரின் பொறுப்பில் விடப்பட்டது. அறக்கொடைகளின் வாயிலாகத் துயருதவி அளிக்கும் முறை, வறுமையை அகற்றி மக்கள் பெருக்கத்தை ஊக்குவித்து வேளாண்மையில் ஓர் ஆக்கத்தை ஊட்டியது. பேரரசு முடிவிற்கு வந்த காலம்வரை இந் நிறுவனம் நிலை பெற்றிருந்தது.

**மாநிலங்கள்**

பேரரசின் எல்லைகளை வரைவது பெரும்பணியாக இருந்தது. ரைன் ஆற்றில் நிலைபெற அகஸ்டஸ், எல்ப் (Elbe) ஆறு வரை சென்ருர். வென்று, நாடுகளைக் கைப்பற்றிக் கிழக்கத்திய எல்லை களை வரைய முற்பட்டார், டிராஜன். இவருக்குப் பின் வந்த பேரரசர் இக் கொள்கையை விரும்பவில்லை. ஒரு திறமான எல்லையை நாடி உரோம், பிரிட்டன் வரை சென்றது. ஆனல், நிதானமான முன்னேற்றம் நாடு பிடிப்பதற்கன்றி நல்ல எல்லை களை நாடியே அமைந்தது. வடக்கே டான்யூப், ரைன், வட கடலையும் கிழக்கே யூப்ரடிஸ், சிரியா பாலைவனத்தையும் தெற்கே எதியோபிய முடியரசுகளையும் சகாராவையும், மேற்கே அட்லான்டிக் மாக்கடலையும் எல்லைகளாகக் கொண்டு உரோமா னியப் பேரரசு இயங்கிற்று. முறையான ஆட்சிக்குக் குடியரசு நிலையானதோர் அடித்தளத்தை விட்டுச் சென்றது. குடியரசு விட்டுச்சென்ற பேரரசு அமைப்பில் ஒருசில தேவையான மாற்றங்களையே பேரரசர்கள் செய்தனர். இதன் பயனுக மூன்று நூற்ருண்டுகளுக்குப் பேரரசு அமைதியாக வாழ முடிந்தது. பயனுள்ள படைமுறைப் பாதுகாப்பு, அரசு நிறுவனங்களுக் கிடையே அதிகாரப் பகிர்வு, மாநிலத் தேவைகளின் மதிப்பீடு, தகுதித்திறன் பெற்ற அரசு ஊழியர்தொகுதி ஆகியவை களே உலகத்திற்குப் பேரரசர்கள் விட்டுச்சென்ற கொடைக

ளாகும். இதன் விளைவாக மக்கள் அமைதியாகவும் ஆறுதலாக வும் வாழ்ந்தனர். அனைவருக்கும் குடியுரிமை அளித்தது பேரரசின் அருஞ்சாதனையாகும். உலகத்தை ஒரு மாநகராக்கி, அதன் குடி மக்களின் வரிகளைப் பெருக்க விரும்பிய தன்னலமிக்க ஊதாரி யாகப் பேரரசர் தோன்றினர்.

இடரார்ந்த மாநிலங்களுக்கு அகஸ்டஸ் தம் வலிமையைக் காட்டிப் பாதுகாப்பு அளித்தார்; எல்லையோர மாநிலங்களில் படைகளை நிலைகொள்ளச் செய்து பாதுகாப்பளித்தார்; ஆட்சி யில் வழக்கமீறிய விழிப்புடன் இருந்து அமைதி பேணினர். படைகொண்டு பாதுகாப்பளித்த மாநிலங்களைப் பேரரசு மாநிலங்களெனவும் மற்றவைகளைச் செனெட்சபைக்குரிய மாநிலங் களெனவும் இவர் இரு வகையாகப் பிரித்தார். பேரரசருக்கும் செனெட்சபைக்குமிடையே சில சமயங்களில் மாநிலங்கள் மாற்றிக் கொள்ளப்பட்டன. கி.பி. 15-ல் அக்கியாவும் மாசிடோனியாவும் செனெட்சபையிடமிருந்து பேரரசர் பொறுப்பிற்கு மாறிப் பின் 44-ல் மறுபடியும் செனெட்சபையின் ஆட்சிக்குட்பட்டன. போர்க் காரணங்களுக்காக மார்க்கஸ் அருலியஸ் மாநிலங்களை மாற்றிக் கொண்டார். பேரரசின் மத்திய காலத்தில் செனெட்சபை பதி னெரு மாநிலங்களைப் பெற்றிருந்தது. பேரரசர், இருபத்தொரு மாநிலங்களை ஆளுநர்கள் பொறுப்பிலும், ஒன்பது மாநிலங்களைப் புரோகுயுரேட்டர்களின் பொறுப்பிலும் ஒரு மாநிலத்தைப் படை ஆட்சியாளரின் பொறுப்பிலும் வைத்து ஆட்சி செய்தார்.

மாநில நகரங்கள் பெரும்பாலும் பேரரசின் உதவிபெற்ற வைகளாக இருந்தன. சுதந்திர, அல்லது சுதந்திர நேச சமு தாயங்கள் மாநில ஆளுநரின் கட்டுப்பாட்டிற்குட்படவில்லை. ஆனல், இவை எண்ணிக்கையில் குறைந்தும் குறைந்த சிறப்புரிமை களையுமே பெற்றிருந்தன. தன்னுட்சி அதிகாரத்தை இவை தவருகப் பயன்படுத்திக் கூட்டமைத்தால் இவைகளோடு பேரரசர் செய்துகொண்ட உடன்பாடு நீக்கப்படும். இந்தச் சமூக மும் நேர்முக மாநில ஆட்சியின்கீழ்க் கொண்டு வரப்படும். குயுரேட்டர்களின் நிதிக்கட்டுப்பாடுகளுக்கு இவை உட்படுத் தப்படலாம். அல்லது சீர்திருத்துநர்களின் ஆட்சிக் கட்டுப்பாடு களுக்கு உட்படுத்தப்படலாம். இவ்வலுவலர்கள் பேரரசரால் அமர்த்தப்பட்டனர். டிராஜன் காலத்தில் இத்தகைய அலுவலர் கள் அமர்த்தப்பட்டனர். இவைகளுக்கு (இந் நகர்களுக்கு) அளிக்கப்பட்ட சுதந்திரம் வரிவிதிப்பிலிருந்து இவைகளுக்கு விலக்களிக்கவில்லை. டைபீரியஸின் காலத்தில் வரி செலுத்திய இரண்டு ஆசிய நகரங்கள் சுதந்திர நகரங்களாக இருந்தன. உரோமோடு நேச உறவு கொண்டிருந்த பைசாண்டியம்,

கிளாடியஸ்காலத்தில் திறை செலுத்தியது. இத்தகைய மாற்றங்களைக் கிழக்கத்திய நகரங்களில் செய்தவர் பாம்பியஸ் ஆவார். சாசனங்களைப் புதுப்பிக்கையிலும் அளிக்கையிலும் வரிவிதிக்கும் உரிமையை இவர் உரோம் நகருக்கு வைத்துக் கொண்டார். எனவே, சுதந்திரம், காப்புரிமை என்ற கருத்துகளை இவர் தனிப்படுத்தினர். இவ்விரு கருத்துகளும் இதுவரை பிரிக்க முடியாத கருத்துகளாக இருந்தன. இலத்தீன் உரிமைகளைப் பெற்றிருந்த அரசுகள்கூட, பேரரசரின் வரி விதிப்பிலிருந்து விலக்குப்பெருத அளவிற்கு முழுமையாகப் பேரரசர் இக்கருத்தை ஏற்ருர். நகரங்களின் காப்புரிமையென்பது பெருமளவும் ஒரு விதிவிலக்காகவே கருதப்பட்டது. சில சமயங்களில் ஒரு சிறப்பு வரி விதிப்பிலிருந்து ஒரு விலக்காக மட்டுமிருந்தது. குறைந்த அளவிற்கு இது வெளி வரிவிதிப்பிலிருந்து பெற்ற விடுதலையைக் குறிக்கும். இல்லியம் (Ilium) என்ற நகரம் அதன் வரலாற்றுச் சிறப்புக் காரணமாக இத்தகைய விலக்குப் பெற்றிருந்தது. ஆனல், இத்தாலிய உரிமை (Jas Italicum) அளிப்பதன் வழியாக ஒரு நகரத்தினர் இத்தாலியர்களுக்குரிய உரிமைகளைப் பெறலாம். அதாவது இவர்களும் நிலவரியிலிருந்து விலக்குப் பெறலாம். இத்தகைய உரிமை உடைய நகரங்கள் கலோனியா எனப் பெயர் பெற்றன. அதாவது, குடியேற்றங்கள் என வழங்கப் பட்டன. லூசிடேனியா, கால் (Gaul), செர்மெனி, சிரியா, போனிசியா போன்ற நாடுகளில் பல அரசுகள் குடியேற்றங்களாக்கப்பட்டு இத்தாலிய உரிமை பெற்றன.

பேரரசின் வருவாய் வளங்கள்பற்றிய மதிப்பீடும் மற்ற நாடுகளின் திறனின் அடிப்படையில் வரிப்பளுவின் ஒதுக்கீடும் பேரரசரை எதிர்நோக்கிய பிரச்சினைகளாகும். இவ்விரண்டு பிரச்சினைகளையும் அகஸ்டஸ் ஊக்கத்தோடு ஏற்றுக்கொண்டார். எனவே, பல்வேறு மாநிலங்களிலும் விரிவான மதிப்பீடுகளுக்கு இவர் ஏற்பாடு செய்தார். இத்தகைய மதிப்பீடுகளைச் செய்யும் உரிமை பேரரசருக்குரியதாகும். இவை இவருடைய மாநிலங்களுக்கு மட்டுமன்றிச் செனெட் மாநிலங்களுக்கும் பொருந்தும். இவ் வகையான முதல் மதிப்பீடு கி.மு. 27-ல் காலில் (Gaul) செய்யப்பட்டது. கி.பி. 14, 17, 61-ல் இது புதுப்பிக்கப்பெற்றதையும் நாம் காண்கிறோம். இத்தகைய கணக்கெடுப்பு ஒன்று ஸ்பெயினில் அகஸ்டஸ் காலத்தில் நடைபெற்றதாகவும் மற்றொன்று சிரியாவில் நடந்ததாகவும் அறிகிறோம். இம் முன்மதிப்பீடுகள் முடிந்தபொழுது, ஒழுங்கான மதிப்பீட்டுத் திருத்தங்களுக்கும் ஏற்பாடு செய்யப்படவேண்டும். பேரரசின் செயலாட்சியின்கீழ் ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனித்தனியே செய்யப்

பட்டது. இதற்கெனத் தனிப்பட்டதொரு கட்டளை பிறப்பிக்கப் பட்டது. இக் கட்டளையின்படி ஓர் ஆணையர் மதிப்பீடுகளைப் புதுப்பித்தார். பொது மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் அடிப் படையில் மாநிலங்களின் மாவட்டங்களிலும் தனிச் சமூகங்களி லும் புரவிப்படை அலுவலர்களின் உதவியோடும் புரோகுயு ரேட்டர்களின் துணையோடும் இவர் இப் பணியைச் செய்து முடித்தார். தொடக்கத்தில் முதன்மை அலுவலர்கள் செனெட் டர்களின் தரத்தில் அமர்த்தப்பெற்றனர். ஆனால், இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின் புரவிப்படையினரின் தரத்திற்குரிய புரோகுயுரேட்டர்கள் அமர்த்தப்பெற்றனர். காலப்போக்கில் இக் கணக்கெடுப்புப் பணி எளிதாகவும் இயல்பானதாகவும் ஆகிவிட்டதே இம் மாற்றத்திற்குக் காரணமாகும். இத்தகைய கணக்கெடுப்பு அடுத்தடுத்து நடைபெறுவதற்கான ஆண்டு குறிப்பிடப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், சிரியா போன்ற மாநிலங்களில் தலைவரி விதிக்கப்பட்டது. இவ் வரியை ஒரு குறிப்பிட்ட வயதினர் செலுத்தினர். ஓரளவு குறுகிய கால அளவில் இப் பதிவுகள் செய்யப்பெற்றிருந்தால்தான் இவ்வரி விதிப்புச் சாத்தியமாகும். எகிப்தில் பதினான்கு ஆண்டிற்கொரு முறை இத் தலைவரி விதிக்கப்பட்டதாகத் தெரிகிறது. அகஸ்டஸ் டைபிரியஸ் காலத்திலிருந்தே இவ் வரி விதிக்கப்பட்டுள்ளது. நிலவரிபற்றிய மதிப்பீடுகள் மிகக் கவனமாகச் செய்யப்பட்ட தற்கான சான்றுகள் நிறைய உள்ளன. இக் கணக்கெடுப்பு அட்டவணையில் பண்ணை இருந்த கிராமமும் மக்களும், அடுத்திருந்த கிராமங்களின் பெயரும், மக்களின் பெயரும், மதிப்பீடு செய்யப்பட்ட நிலத்தின் இயல்பும் இதில் குறிப்பிடப் பட்டிருந்தன.

ஆள்வரியாக அல்லது நிலவரியாக வரிகள் விதிக்கப்பட்டன. பல மாநிலங்களில் வரி, பணமாக அல்லது பொருளாகச் செலுத்தப்பட்டது. பெரும்பாலும் பணமாகச் செலுத்தப்படுவது வழக்கமாக இருந்தது. ஆனால், சிறு மாவட்டங்களில் இது பெரிதும் பொருளாகவும் செலுத்தப்பட்டது. தொழில் வருவாய் அல்லது தனிப்பட்ட உடைமைகள்மீது ஆள் வரி விதிக்கப் பட்டிருக்கலாம். பழைய வரிவிதிப்பையொட்டி இவ் வரி எகிப்தில் காணப்பட்டாலும் இது முழுக்கமுழுக்க ஆள்வரி யாக இருக்கவில்லை. பிரிட்டனில் மக்களிடமிருந்து ஆள்வரி யைத் தவிர வேறெந்தத் தனி வரியும் விதிப்பது கடினமாக இருந்திருக்கலாம். இருப்பினும், பல மாநிலங்களில் மற்ற இயங்குடைமை வரிகளோடு இதுவும் விதிக்கப்பட்டிருக்க வேண் டும். ஒரு குறிப்பிட்ட மதிப்பீட்டிற்குக்கீழ் சொத்துகள் இருந்தால் இந்த வரி விதிக்கப்பட்டிருக்கலாம்.

பத்தில் ஒரு பகுதி வரி திரட்டும் முறையும் வரி திரட்டி யவர்களும் நீக்கப்பட்டபின் பேரரசின் முதன்மையான வரிகள் நேரடியாக வசூலிக்கப்பட்டன. இந் நேர்முக வரி வசூலிப்புப் பல வகைப்பட்டனவாம். பொது மாநிலங்கள் செலுத்திய பண உருவிலான வரிக்கும் பேரரசு மாநிலங்கள் செலுத்திய திறைக் கும் வேறுபாடு காணப்பட்டது. வரி வசூலிப்பில் வேறுபாடு காணப்பட்டதேயன்றி வரிவிதிப்பிலன்று. பொது மாநிலங்களில் தொடர்ந்து வரிகள் அரசால் வசூலிக்கப்பட்டிருக்கலாமென்றும் இவைகளை அரசுகளே பிரீட்டரிடம் சேர்த்திருக்கவேண்டுமென் றும் தெரிகிறது. பேரரசு மாநிலங்களில் வரி செலுத்துபவரோடு புரோகுயுரேட்டர் நேர்முகமாகத் தொடர்பு கொண்டார். ஆனல், தனியார் கம்பெனிகளும் தொடர்ந்து வரி வசூலிப்பில் ஈடுபட் டிருந்தன. பத்தில் ஒரு பகுதி வரி திரட்டும் முறை கைவிடப் பட்டது வரி திரட்டுவோரின் நடவடிக்கைகளுக்கு இடையூருக அமைந்தது. இருப்பினும் வரிவசூலிப்பை ஒப்பந்தக்காரர்களுக்கு ஒப்படைப்பது தொடர்ந்திருந்துவந்தது. துறைமுகத் தீர்வை களைப் பணமாக வசூலிப்பதில் உரோமானிய வீரத்திருத்தகை களின் கம்பெனிகள் ஈடுபட்டிருந்தன. டைபிரியஸ் காலத்தில் சுரங்கங்கள், உப்பளங்கள் முதலியவைகளிலிருந்து வரி திரட்டு வோர் வரியைத் திரட்டினர். கடுமையாக வரி திரட்டியதை ஒடுக்க நீரோ அழுத்தமான நடவடிக்கைகளை மேற்கொண்டார். பேரரசு கருவூலத்திற்குச் சேரவேண்டிய வரிகளையும் டிராஜன் காலத்தில் ஒப்பந்தக்காரர்கள் வசூலித்தனர். ரோமல் மைய நிறுவனம் ஒப்பந்தங்களைக் குத்தகைக்கு விடவில்லை. ஆனல் குறிப்பிட்ட வரியோடு தொடர்புடைய துறையின் அலுவலரால் குத்தகைக்கு விடப்பட்டது. பல நிகழ்வுகளில் பேரரசின் புரோகுயுரேட்டர் வரியைக் குத்தகைக்கு விட்டதோடு ஓரளவு வரி திரட்டுவதையும் மேற்பார்வையிட்டார். பொது மாநிலங் களில் நேர்முக வரிகள் குவெஸ்டரிடம் செலுத்தப்பட்டன. பேரரசின் மாநிலங்களில் இவ் வரிகளைப் புரோகுயுரேட்டர்கள் திரட்டினர். ஒவ்வொரு மாநிலத்தின் நிதிபற்றிய ஒரு செயலகம் இருந்தது. இதில் மதிப்பீடுகள் வைக்கப்பட்டிருந்தன.

பொது மாநில ஆட்சிமுறை பெரும் மாறுபாடுகளுக்குட் பட்டது. மாநில ஆளுநரின் பதவிக்காலம் ஓராண்டு. உள்நாட்டுத் தலைமைக்கும் வெளிநாட்டுத் தலைமைப் பதவிக்கும் இடையில் ஐந்தாண்டுகள் கழிந்திருக்கவேண்டுமென்னும் விதிமுறை இருந்து வந்தது. இவ் விதிமுறை சீசரால் புறக்கணிக்கப்பட்டதெனினும் அகஸ்டஸ் இதைப் புதுப்பித்தார். சில தகுதிபெற்ற வேட்பாளர் களைச் செனெட் சபை தன் சொந்த விருப்பிலோ பேரரசரின் அறிவுரையின் பேரிலோ புறக்கணித்தது. விடுதலை உரிமை

மற்றவர்களுக்கு மேலாகச் சிலரைக் குலுக்கலில் அனுமதித்தது. முன் கான்சல் பதவியில் இருந்திருந்தாலும் இல்லாதிருந்தாலும் இப்பொழுது பொது மாநில ஆளுநர்கள் புரோ கான்சல்கள் என்ற பதவிப் பெயரைப் பெற்றனர். பேரரசு மாநிலங்களின் தூதர்கள் புரோ பிரீட்டர்கள் எனப் பெயர் பெற்றனர். இரு சிறந்த பொது மாநிலங்களாகிய ஆசியா, ஆப்பிரிக்கா ஆகியவை களுக்குக் கான்சல்களே அமர்த்தப் பெற்றனர். மற்ற மாநில அரசு பொறுப்புகள் பிரிட்டோரிய நிலையில் இருந்தவர் களுக்கு அளிக்கப்பட்டன. ஆளுநருக்கு இப்பொழுது குறிப்பிட்ட அளவு ஊதியமளிக்கப் பெற்றது. பொருளைக் கைப்பற்றிக் கொள்ளவேண்டுமென்னும் விருப்பை இஃது ஆளுநர்களிடமிருந்து அகற்றியது. ஒவ்வொரு புரோ கான்சலுக்கும் துணையாக லிக்டர் கள் அமர்த்தப்பட்டிருந்தனர். இவர்களுடைய நிலைக்கேற்ப விருது களையும் பெற்றிருந்தனர். புரோ கான்சுலர் இறைமை வெறும் பெயரளவிலேயே இருந்தது. புரோ கான்சல்கள், உடைவாள் அணிந்துகொள்ளவுமில்லை; படைக்குரிய உடையையும் அணிந்து கொள்ளவில்லை. இவர்களுடைய தலைமை படைத்தலைமை அன்று என்பதை இவை காட்டின. மாநிலத் தலைமையும் படைத் தலைமை யும் சட்டப்படி பேரரசருக்கேயுரியன என்பதை இவை தெளிவுபடுத்தின. மதிப்பீட்டாளர்கள், ஆளுநர்களின் செயற்பாடு களுக்குப் பெருந்தடையாக இருந்தனர். உயர்நிலையைச் சேர்ந்த மாநிலங்களாகிய ஆசியா, ஆப்பிரிக்கா ஆகியவை ஒவ்வொன் றுக்கும் மூன்று தூதர்கள் அமர்த்தப்பெற்றனர். கீழ்நிலை யிலிருந்த மாநிலங்களாகிய சிசிலி, பேட்டிகா போன்றவைகளுக்கு ஒரு தூதர் வீதம் அமர்த்தப்பெற்றனர். இவர்களைப் புரோ கான்சல்களே தெரிவுசெய்தனரெனினும், இத் தெரிவிற்குப் பேரரசரின் ஒப்புதல் வேண்டும். இறைமைக்குரிய பட்டங்களை இவர்கள் பெற்றிருந்தது, ஆளுநரின் பேராளர்களாக இவர் கள் இருந்தபோதிலும், இவர்களின் செயலாட்சி அதிகாரம் திட்டவட்டமானதென்பதையும் சுயேச்சையானதென்பதையும் தெளிவுபடுத்தியது. குவெஸ்டர், புரோபிரீட்டர் என்ற பட்டத்தை இக் காலத்தில் குவெஸ்டரும் பெற்றிருந்தார். நிதிப் பணிகளோடு இவர் நீதிப் பணிகளையும் செயற்படுத்தினர். இவ் வகையான விசாரணை அதிகாரத்தை உரோமில் குயூருல் ஈடில் பெற்றிருந் தார். புரோகுயுரேட்டர்களின் வழியாகப் பேரரசர் புரோகான் சல்களின் ஆட்சியிலும் செயலாட்சி அதிகாரத்திலும் தலையிடு வதற்கான வாய்ப்புகள் இருந்ததைப் பார்த்தோம். மாநிலங்கள் அனைத்திற்கும் பேரரசரே மேல்முறையீட்டு நீதிமன்றமாகச் செயற்படவேண்டிய நிலையும் பேரரசரின் தலையீட்டை அதிகரிக்க உதவியது.

பேரரசு மாநிலத்தில் பேரரசரே புரோ கான்சுலர் இறைமை பெற்றிருந்தார். எனவே, இவருடைய ஆளுநர்கள் தூதர்களா கவே இருந்தனர். இருப்பினும், இவர்கள் பேராளர்களாகக் கருதப்படவில்லை. இவர்கள் சுயேச்சையான விசாரணை அதிகா ரத்தைச் செயற்படுத்தினர்கள். இவர்களுடைய அதிகாரங்களை இவர்களுக்குக் கீழிருந்தவர்களிடம் இவர்கள் ஒப்படைக்கலாம். இவர்களுடைய படைத்தலைமையும் ஒப்படைக்கப்பட்டது. ஆனால், இவர்களில் சிலராவது மாநிலங்களில் படையினர்மீது முழுமை யான அதிகாரத்தைச் செயற்படுத்தினர். எல்லாத் தூதர்களும் படை உடை அணிந்தும் உடைவாள் அணிந்தும் காட்சியளித் தனர். படைகள் தங்கியிருந்த மாநிலங்களை இவர்கள் ஆட்சி செய்தனர். படைகள் முறையான தலைவர்களைப் பெற்றிருந்ததால் இவர்களுடைய உசித இராணுவ அதிகாரமும் சிறிதளவு குறைக் கப்பட்டிருந்தது. பேரரசருக்குப் பொறுப்புடைய புரோ குயுரேட்டர்கள் கையில் நிதி விவகாரங்கள் இருந்ததால் இவர் களுடைய பொது அதிகாரமும் குறைந்தது. ஹேடிரியனின் காலத்திற்குப் பின் பல மாநிலங்களில் வழக்குகளை விசாரிக்கத் தனிப்பட்ட தூதர்கள் அமர்த்தப் பெற்றனர்கள். இவர்கள் ஆளுநர்களைவிடக் கீழ்நிலையில் இருந்தாலும் ஆளுநரின் பேராள ராகச் செயற்படாமல் பேரரசின் பேராளராகச் செயற்பட்டனர்.

பேரரசர் மாநிலங்கள் நல்லாட்சியைப் பெற்றிருந்ததற்கு, ஆட்சியாளர்கள் நீண்டகாலம் ஒரு மாநிலத்தில் இருக்க அனுமதிக் கப்பட்டதேயாகும். எனவே, டைபீரியஸின் ஆட்சிக்காலத்தில் சாபினஸ் (Sabinus) என்பவர் மொயிசியாவை (Moesia) இருப தாண்டு ஆட்சி செய்தார். பிற்காலத்தில் கால்பா (Galba) என்பவர் ஸ்பெயினை எட்டாண்டு ஆட்சி செய்தார். எவ்வாறு யினும், இத்தகைய படைத்தலைமையின் பதவிக்காலம் பேரரசரின் விருப்பத்தைப் பொறுத்தேயிருந்தது. இவர்கள் பேரரசுக் கருவூலத்திலிருந்து நிருணயிக்கப்பட்ட ஊதியத்தைப் பெற்றுக் கொண்டனர். உயர்நிலையில் இருந்த மாநிலங்களுக்குக் கான்சல் கள் அனுப்பப் பெற்றனர். மற்ற மாநிலங்களுக்குப் பிரீட்டரின் நிலையில் உள்ளோர் ஆளுநர்களாக அனுப்பப் பெற்றனர்.

பேரரசரின் ஆட்சியின் செயல் எல்லைக்குள் மாநிலமாக அமைக்கப்பெறாத அல்லது அமைய விரும்பாத சில சார்பு நாடு களும் அடங்கியிருந்தன. பேரரசரின் சொந்தப் பதிலாள்கள் இவைகளை ஆட்சி செய்தனர். இவர்கள் பேரரசரின் தனிமுறை யான தூதர்கள் எனப் பெயர் பெற்றனர். ஆல்பைன் போன்ற மாநிலங்கள் மிகச் சிறியவைகளாகவே இருந்தன. மௌரிடேனியா, திரேஸ், ஜுடா போன்றவை பெரிதாக இருந்தன. இத்தகைய

இடங்களில் புரோ குயுரேட்டர்கள் மட்டுமிருந்தது. இவைகள் இராணுவச் சிறப்பில்லாத மாநிலங்கள் என்பதைக் குறிப்பிடு கின்றன. மெய்யாகவே, இப் புரோ குயுரேட்டர்கள் சில சமயங் களில் அடுத்திருந்த பேரரசுத் தூதரின் கட்டுப்பாட்டின்கீழ் இருந்தார். ஆகவே, ஜுடா பெரிய மாநிலமாகிய சிரியாவோடு சேர்க்கப்பட்டிருந்தது. இந் நிகழ்வில்கூட, புரோ குயுரேட்டர் பேரரசரின் பேராளராக இருந்தாரேயன்றி ஆளுநரின் பேராள ராக இருக்கவில்லை. ஆகவே, பெஸ்டஸின் (Festus) விசாரணை அதிகாரத்திற்கெதிராகச் செயின்ட்பால் மேல்முறையீடு செய்த பொழுது, அம் முறையீடு பேரரசருக்குச் செய்யப்பட்டது.

இராணுவ முக்கியத்துவம் பெற்ற இரண்டு பெரிய மாநிலங் களாகிய செர்மெனிக்கும் எகிப்திற்கும் முறை தவறான அரசு அமைக்கப்பட்டது. செர்மெனி, மேல் மாநிலமென்றும் கீழ் மாநிலமென்றும் பிரிக்கப்பட்டது. படைநிலைகளைக் கொண்ட இரண்டு திட்டுப்பகுதிகள் ரைன் ஆற்றின் எல்லையாகவும் காலின் எல்லையாகவும் இருந்தன. இயல்பான மாநிலத் தூதர் களின் பொறுப்பில் இவைகள் விடப்படவில்லை. படைத் தலைமைக்குரிய இரண்டு கான்சுலர் தூதர்கள் இந்த இரண்டு பகுதிகளின் ஆளுநர்களாக இருந்தனர். இவர்கள் புரோ பிரீட்டர் என்ற பட்டத்தைப் பெற்றிருந்தனர். காலின்மீதும் செர்மெனிமீதும் பேரரசரின் கூட்டாளி ஒருவர் படைத்தலைமை யேற்றபொழுது இவர்கள் அடுத்திருந்த காலிக் மாநில ஆளு நரின் கட்டுப்பாட்டின்கீழ் வரவில்லை. எகிப்து ஒரு பொருளில் பேரரசரின் சொந்த மாநிலமாக இருந்தது. புரவிப்படையின் ஆட்சித்தலைவர் ஒருவர் பொறுப்பில் இது விடப்பட்டது. ஆளுநரின் அதிகாரங்களை இவர் செயற்படுத்தினர். இவருடைய தலைமையில் ஒரு படையும் இருந்தது.

சமூகக் கூட்டுறவு, வணிகத்தொடர்பு, பேரரசின் ஆணைகள் ஆகியவற்றால் மாநிலங்களை உரோமானியமயமாக்கும் முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்றன. இத்தாலிய முறையிலான நகராட்சி களின் அமைப்பு, பேரரசுப் பணிகளில் இடம்பெற இலத்தீன் மொழி பேசிய மக்களுக்குக் காட்டப்பெற்ற ஆதரவு உரோமா னியக் கல்விமுறைக்கு அரசு காட்டிய ஆதரவு, போன்றவைகள் மாநிலங்களில் இலத்தீன் பண்பாட்டை வளர்க்கப் பயன்பட்டன. உடனடியாக முழு உரிமைகள் வழங்கப்படவில்லை. எனினும் இலத்தீன் உரிமைகளை அளித்ததன் வழியாக இந்த நோக்கம் நிறைவேறியது. சிசிலி, கடற்கரையோர ஆல்ப்ஸ், ஸ்பெயின் போன்ற மாநிலங்களுக்கு இப்பொழுது இலத்தீன் உரிமைகள்

அளிக்கப்பட்டன. இம் மாநிலங்களில் வசித்தவர்கள் உரோமன் சட்டத்தின் எல்லாத் தனி உரிமைகளையும் பெற வழியேற்பட்டது.

எங்கும் நிலவிய உரோமானியச்சட்டம் அமைதியான ஒருங்கிணைந்த மாநில வாழ்க்கைக்கு வழிவகுத்தது. ஒரே சீரான ஆட்சிமுறை மாநிலங்களின் ஒரே சீரான பண்பாட்டு வளர்ச்சிக்கும் பொதுவான அமைதிக்கும் உதவியது. மாநில ஆட்சிமுறை மிகச் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தாலும் நகர அரசுதான் ஆட்சிப்பிரிவாக இருந்தது. இதன் பொது வாழ்க்கையின் பண்பு எக்காலத்திலும் உரோமானிய ஆட்சிமுறைக்கு ஒரு சோதனையாக இருந்தது.

சுதந்திரமாகப் பிறந்த சமூக உறுப்பினர் அனைவருக்கும் காரகல்லாவின் (Caracalla) கட்டளை உரோமானியக் குடியுரிமை வழங்கியது. ஒரு பேரரசருக்குப் பற்றுறுதியளிக்கும் மக்கள் இயல்பாகவே ஒரு பொதுவான குடியுரிமையைப் பெற்றனர். பேரரசரின் கட்டளை எல்லா இனங்களையும் ஒரே இனமாக உருவாக்க உதவியது. தொடக்கத்திலிருந்தே பேரரசு சமப்படுத்தும் சக்தியாக இருந்துவந்தது. பதவிகளைத் திறமை அடிப்படையில் அகஸ்டஸ் அனைவருக்கும் அளித்தார்; வீரத்திருத்தகைகளுக்குச் செனெட்சபையில் இடமளித்தார்; வீரர்களின் வகுப்பில் பிளெபியர்களுக்கு இடமளித்தார். மேலும் எல்லா வகுப்பினரின் சேவையையும் அரசில் இவர் ஈடுபடுத்திக்கொண்டார். குடிமக்கள், வெளியார், ஆண்கள், பெண்கள், அடிமை, ஆண்டான் ஆகியோருக்குப் பேரரசு சமத்துவ நிலையை அறிவித்தது.

# 16. சமூக, பொருளாதார நிலைமைகள்

உரோமானியர்கள் தொடக்கத்திலிருந்தே உழவுத்தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தனர். ஆயினும், உரோம் நகரம் டைபர் ஆற்றங்கரையில் இருந்ததாலும் தொழில் செய்து வாழ்ந்துவந்த சபைர்களோடு (Sabires) உரோம் நெருங்கித் தொடர்பு கொண்டிருந்ததாலும் இந் நகரம் தொழில்துறையில் அக்கறை காட்டத் தொடங்கியது. பழங்காலத்திலிருந்தே நிலம் செல்வத்தின் அடிப்படையாக இருந்தது. மேலும் அரசியல், பொருளாதார அதிகாரங்களும் நிலவுடைமையோடு தொடர்பு கொண்டிருந்தன. சில பெருமக்கள் குடும்பங்களே இவ் வதிகாரத்தைப் பெற்றுச் செயற்படுத்திவந்தன. இக் குடும்பத்தினரே உரோமானியப் புரவிப்படையிலும் ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டிருந்தனர். சமூக வேறுபாடு காரணமாக இவர்கள் பொதுமக்களிலிருந்து தனிப்பட்டிருந்தார்கள். இப் பெருமக்களாகிய பெட்ரிசியர்களுக்கும் பொதுமக்களாகிய பிளெபியர்களுக்கும் இடையில் பன்னிரு பட்டிகைச் சட்டத்தின்படி மணஉறவுகள் தடை செய்யப்பெற்றிருந்தன. பிற்காலத்தில் (கி.மு. 445-ல்) இத் தடை நீக்கப்பட்டது. இவ்விரு வகுப்பினருக்கிடையேயான போராட்டங்கள் முடிவுறும் வரையில் பிளெபியர்கள் அரச பதவிகளை வகிக்க முடியாத நிலையில் இருந்ததோடு எக் காலத்திலும் இவர்கள் சமயத்துறையில் குருமார் பதவியைப் பெற்றதில்லை.

பிளெபியர்களில் ஒரு குறிப்பிட்ட அளவினர் பெட்ரிசியர்களுக்குரிய நிலங்களில் வாழ்ந்த சார்பில்லா உழவர்களாக இருந்தனர். பெட்ரிசியர்கள் தம் புதல்வர்களின் உதவியோடும் அடிமைகளின் உழைப்போடும் வேளாண்மை செய்து வந்தனர். ஆனல், இவர்களுக்குரிய நிலத்தில் ஒரு சிறிய பகுதியையே இவர்கள் பண்படுத்திவந்தனர். எஞ்சிய பகுதியை நிலமற்ற அல்லது குறைந்த நிலமுடைய பிளெபியர்கள் வேளாண்மையில் ஈடுபடுத்திக்கொள்ள இவர்கள் அனுமதித்தார்கள். இப்படி

உழவு மேற்கொண்டவர்கள் பெட்ரிசியர்களின் சார்பாளர்களாக மாறிப் போரிலும் அரசியலிலும் அவர்களுக்கு உதவி செய்தனர். இதற்கீடாகப் பிளெபியர்கள், பெட்ரிசியர்களின் பாதுகாப்பைப் பெற்றனர். பிளெபியர்களுக்குப் பாதுகாப்பளிப்பது பெட்ரிசியர் களின் கடமைப் பொறுப்பாகுமெனப் பன்னிருபட்டிகை (Twelve Tables) வலியுறுத்தியது. சார்பாளர்களைக் காக்கத் தவறிய பெட்ரிசியர்கள் சட்டப் பாதுகாப்பை இழந்தனர்.

பிளெபியர்கள் சமூக, பொருளாதார முன்னேற்றமடைந்த பொழுது (கி.மு. 5ஆம் நூற்றாண்டில்) இச் சார்புநிலை மறையத் தொடங்கியது. ஆனால், பிளெபியர்களின் பற்றுறுதியும் பெட்ரி சியர்களின் கடமைப் பொறுப்பும் நெடுங்காலம்வரை நிலவின. உரோமானியரின் பொது வாழ்க்கையில் இவ்வுறவுமுறை நிலை பெற்றிருந்ததைக் காணலாம். இச் சமூகப் பண்பு உரோமின் அரசியல் வளர்ச்சியில் பெரும்பங்கு பற்றியது. இக் கருத்தைப் புறக்கணித்து உரோமானியரின் வாழ்க்கை முறையை அறிய இயலாது. சிசரோ, சீசர் போன்றோரின் காலம்வரை நடந்த போராட்டங்களிலும் இக் கருத்து நிலவியது. அரசியல் சமூகச் சார்புடைமை அடிப்படையில்தான் அகஸ்டசும் தம்முடைய அதிகாரத்தை நிலைநாட்டினரெனலாம். உரோமானிய வரலாற் றின் இறுதிக் காலத்திலும் நிலவுடைமையாளர்களுக்கும் சார் பாளர்களுக்கும் இதே உறவுமுறை இருந்து வந்ததை அறியலாம்.

பெட்ரிசிய உயர்குடியினரும் தம்மைக் குல முறையில் அமைத்துக் கொண்டிருந்தனர். ஒரு பொதுவான பெயர், வழி பாடு ஆகியவைகளின் அடிப்படையில் குல உறுப்பினர் ஒன்று பட்டிருந்தனர். குல உடைமைகளைப் பெறவும் பாதுகாக்க வும் குல உறுப்பினர் குடியரசின் இறுதிக் காலம்வரை உரிமை பெற்றிருந்தனர். பெட்ரிசியரின் நிலவுடைமை ஒரு காலத்தில் குல உறுப்பினருக்குரியதாக இருந்திருக்கவேண்டு மெனத் தெரிகிறது. சார்பாளர்களைக் கொண்ட குல உறுப்பினர் ஒரு காலத்தில் பெரும் வலிமை பெற்றிருந்தனர். பிற்காலத்தில் இவர்கள் அரசின் உறுப்புகளாகவும் அமைந்தனர். குல உறுப்பினர் அரசிற்கு முந்தைய ஓர் அமைப்பெனக் கருதுவோரு முளர். வலிமைமிக்க இக் குல உறுப்பினர் அரசின் நிருவாகப் பதவிகளில் நெடுங்காலம் இருந்துள்ளனர்.

உரோமானியப் படையின் ஒரு பிரிவாகிய புரவிப்படை யினரைப் பெட்ரிசியப் பெருங்குடியிலிருந்து தெரிவுசெய்த காலத் தில் பெட்ரிசியர்கள் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். பின்னர், படையமைப்பில் காலாட்படை சிறப்பிடம் பெற்ற

பொழுது இப் படையினரைச் செல்வ வளம் பெற்ற பிளெபியக் குடியானவர்களிலிருந்து தெரிவு செய்தபொழுது பெட்ரிசியர் இதுவரை பெற்றிருந்த செல்வாக்கை இழக்க நேர்ந்தது. ஒரு காலத்தில் படைத்துறையில் எளிய நிலையில் இருந்த பிளெபியர்கள் இப்பொழுது படையின் தலையாய இடத்தைக் கைப்பற்றினர். படைத்துறையில் காணப்பட்ட இப் புரட்சியான போக்கு அரசியல் துறையில் பெரும் மாற்றத்தைப் புகுத்தியது. எனவே, பிளெபியர்கள் அரசியலில் சம உரிமை கேட்டுப் பெட்ரிசியர்களோடு போராட்டத்தில் இறங்கினர். ஒரு நூற்றாண்டிற்குமேல் நடந்த இப் போராட்டம் உரோமானிய அரசில் ஓரளவு மக்களாட்சி ஏற்பட வழிவகுத்ததெனலாம். ஆயினும், பெட்ரிசியர் தொடர்ந்து அரசியலில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். ஆனல், ஒரு சில பிளெபியக் குடும்பங்கள் காலப்போக்கில் பெரும் செல்வநிலைக்கு உயர்ந்தபோது பெட்ரிசியக் குடும்பங்களோடு இவைகளால் அரசியல் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ள முடிந்தது.

இப் போராட்ட காலத்தில் பெரும் அரசியல் தலைவர்கள் தோன்றினர்கள். இவர்கள் அனைவரும் பெட்ரிசியர்களின் அதிகாரத்தையும் செனெட்டர்களின் செல்வாக்கையும் குறைத்து ஏழைக் குடிமக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்த முயன்றனர்.

பழைய கிராமச் சமூகங்களில் அடிமைமுறை பெரும் பங்கு பெறவில்லையென்பதைப் பேரரசு, குடியரசு காலத்திய உரோமானியச் சமுதாயங்களோடு ஒப்பிட்டறியலாம். அடிமையும் எசமானனைப்போல் ஒரேவிதமான உணவை எசமானனோடு உண்டான். எசமானனின் பாதுகாப்பில் அடிமை இருந்தான். இவனைப்போல் வெளியாளும் செல்வாக்குள்ள ஒரு குடிமகனின் பாதுகாப்பிற்குட்பட்டிருந்தான். உரோமானியக் குடிமகனோடு வெளியாள் ஒருவன் ஒத்த குடியுரிமை பெற்றிருந்தால் மற்றொரு குடிமகனின் பாதுகாப்பிற்குட்பட்டிருக்க வேண்டிய நிலையேற்படவில்லை.

வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை உரோமானியர்கள் தாமே உற்பத்தி செய்துகொண்டனரெனினும் பணத்திற்குப் பண்டங்களை மாற்றிக் கொள்ளும் வழக்கமும் இருந்துள்ளது. ஒரு காலத்தில் கால்நடைகள் பண்டமாற்றுச் சாதனங்களாக இருந்தன. ஆனல் கி.மு. 1000-க்குப் பின் செப்பு நாணயங்கள் தோன்றின. இவைகளின் தூய்மையை மெய்ப்பிக்கும் பொருட்டு இவைகளின்மீது முத்திரை இடப்பட்டது.

மூன்றாம் நூற்றாண்டிற்குப்பின் இவை நாணயங்களாக வெளியிடப் பட்டன.

உரோமானியர்களின் ஆதிக்கம் மூன்றாம் நூற்றாண்டுவரை இத்தாலியில் பரவியது. தோல்வியடைந்த இத்தாலியர்கள் பெரும் நிலவுடைமைகளை உரோமானியர்களிடம் ஒப்படைத் தனர். இவைகளை உரோமானியர்கள் வேளாண்மைக் குடியிருப்பு களாக அமைத்துக்கொண்டனர்; அல்லது இந் நிலப்பகுதிகளை நிலமற்ற குடியானவர்களுக்கு ஒதுக்கி வழங்கினர். உரோமானி யர்களின் வெற்றித் தாக்குதல்களின் வேகம் அதிகரித்தபொழுது பெருமளவிலான நிலம் பிரித்தளிக்கப்படாமலேயே அரசுடைமை யாக இருந்தது. ஆனால், அரசின் வருவாய் நலன்களைக் கருத்திற் கொண்டு சிறிதளவு அரசு நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டன. இவைகளைச் செல்வாக்குள்ள பெட்ரிசியர்கள் ஏலத்தில் எடுத்துத் தம்முடைமையாக்கிக் கொண்டனர். சில நிலங்களை அரசின் இசைவோடு சிலர் தமதாக்கிக் கொண்டனர். இவ்வாறு வயப் படுத்திக்கொண்ட நிலங்களில் அடிமைகள் பெருமளவு பயன்படுத் தப்பெற்றனர். இந் நிலங்கள் முதலில் மேய்ச்சல் தரைகளாகப் பயன்படுத்தப்பட்டுப் பின்னர் தானிய உற்பத்திக்குப் பயன்படுத் தப்பட்டன. சிறிய குடியானவர்களும் குத்தகைக்காரர்களும் இந் நிலங்களைத் தானிய உற்பத்திக்குப் பயன்படுத்தினர்.

ஹனிபாலின் போர்களால் வேளாண்மை பெரிதும் பாதிக்கப் பட்டது. ஆனால், உரோமானியரின் ஆதிக்கத்திற்குட்டிருந்த சிசிலி, ஆப்ரிக்க மாநிலங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட தானியங்கள் இத்தாலிய விளைச்சலில் காணப்பட்ட தட்டுப் பாட்டை அகற்றியது. தரை வழியாக இத்தாலியிலிருந்து தானியங்கள் உரோமிற்கு வருவதைக் காட்டிலும் கடல் வழியாக இவை விரைவாக உரோம் வந்தடைந்தன. வேளாண்மையின் நலிவிற்கு உரோம் நகரின் வளர்ச்சியும் ஒரு காரணமாக இருந் தது. இதனால், இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் உரோமானிய வேளாண்மை வகுப்பினர் அழிந்தனர். வேளாண்மை கைவிடப் படவில்லையெனினும் சுயேச்சையான நிலவுடைமையாளர்கள் நலிவுற்றதால் இவர்களுடைய இடத்தைப் பெரும் நிலக்கிழார் களைச் சார்ந்திருந்த குடியானவர்கள் கைப்பற்றிக் கொண்டனர். நகர முதலாளிகள் பெரும் பண்ணைகளையும் வேளாண்மைக் குடி யிருப்புகளையும் அமைத்துக் கொண்டனர். இவர்களின் எண் ணிக்கையும் விரைந்து வளர்ச்சியடைந்தது. மூன்றாம் நூற்றாண்டில் கிரேக்க வணிக உலகத்தில் தலைநகரம் மையமானதோர் இடத்தைப் பெற்றிருந்தது. இக் காலத்தில் உரோம் முதன்மை யான வணிக நகரமாகி ஒரு தலையாய சந்தையாகத் திகழ்ந்தது.

உரோம் நகருக்குச் சொந்தமான செல்வங்களும் கொள்ளைப் பொருள்களும் போர்களின் காரணமாக ஒரு சிறிய உயர் குடியினரைச் சென்றடைந்தன. செனெட் சபை உறுப்பினரின் மரபினரும் புரவிப் படையினரும் இச் செல்வங்களைப் பகிர்ந்து கொண்டனர். வணிகத்திலும் நிதி திரட்டலிலும் செனெட்டர்கள் மறைவாக ஈடுபட்டனர். ஏனெனில், இத்தகைய துறைகளில் இவர்களுடைய ஈடுபாடு அக் காலத்தில் தரக்குறைவாக மதிக்கப்பட்டது. எனவே, இவர்கள், நிலத்தில் பணத்தை முதலீடு செய்தனர். பொதுவாக இவர்கள் நிலத்தை மரபுவழியாகவும் அரசியல் செயற்பாடுகளுக்கு ஈடாகவும் பெற்றனர்; அல்லது பெரும் வெற்றிக்கு ஈடாகப் படைத் தலைவர்களுக்குப் பெருமளவிலான நிலங்கள் கொடுக்கப்பட்டன. மாநில மக்கள் ஆளுநர்களுக்கு நிலங்களைக் கொடைப் பொருளாகக் கொடுத்த செய்திகள் இருக்கின்றன. நீண்ட காலமாகச் செல்வாக்குப் பெற்றிருந்த உயர்குடி மக்களோடு நகரின் தலையாய குடிமக்களும் வணிகர்களும் இப்பொழுது மற்றொரு புதிய உயர்குடியாக வளர்ச்சியடைந்தனர். பெருமளவிலான படைத் தொடர்புடைய ஒப்பந்தங்கள், வரி திரட்டல்கள், அரசிடமிருந்து பெற்ற சலுகைகள் ஆகியவற்றிலிருந்தும் இவர்கள் பெரும் பொருள் ஈட்டினர். பணமுடைக்குட்பட்ட அரசியல்வாதிகளிடமிருந்து பெற்ற கடும் வட்டித் தொகைகள், மாநிலங்களைக் கொள்ளையடித்துத் திரட்டிய செல்வங்கள், இத்தாலியின் உள்நாட்டு வெளிநாட்டு வணிகத்தால் பெற்ற ஆதாயங்கள் இவர்களை மேலும் செல்வர்களாக்கின.

சமுதாயத்தின் இப் பிரிவினர் புரவிப் படையினராகவுமிருந்தனர். இவர்களின் செல்வங்களைப் பயன்படுத்தி இவர்களுக்கே சொந்தமான புரவிகளோடு புரவிப் படையில் [illegible]யாற்றினர். முற்காலத்திலிருந்தே இப் புரவிப் படையினர் உரோமானியக் குடிமக்களில் ஒரு தனிச் சிறப்புப் பிரிவினராக இருந்துள்ளனர். செனெட்டோரியப் பெருங்குடியினரும் இப்பொழுது இரு பிரிவாகப் பிரிந்தனர். அரசியலில் நேர்முகப் ப[illegible] பெறவில்லையெனினும் ஒரு பிரிவினர் தம்முடைய பொருளாதார நலன்களைச் செனெட்டர்களின் வழியாகவும் அரசியல் சார்புடைய குற்றவியல் நீதிமன்றங்களின் வழியாகவும் நிறைவேற்றிக்கொண்டனர். பணமில்லாமலும் அமைதி இல்லாமலும் வளர்ந்துகொண்டிருந்த நகரமக்களின் கூட்டம் மற்றொரு பிரிவாகும். உரோமானியக் குடியரசின் இறுதிக் காலத்தில் நடைபெற்ற போராட்டத்தில் இவ்விரு பிரிவினரும் பெரும்பங்கேற்றனர். பேரரசிற்கு 200 ஆண்டிற்கும் மேலாகப் பேரரசாட்சி அமைதியான வளர்ச்சியை அளித்தது. எல்லைப்புறங்களில் நடந்த போர்களால் பெரும்

பொருளாதாரச் சிக்கல்கள் தோன்றினலும் பேரரசின் அமைதி கெடவில்லை.

மாநிலங்களுக்குப் பேரரசர்களின் நேர்முக ஆட்சி நன்மை யளித்தது. குடியாட்சிக் காலத்தில் (கி.பி. முதல் நூற்றுண்டில்) துயருக்குள்ளான மாநிலங்கள் இப்பொழுது செல்வச் செழிப்புடன் திகழ்ந்தன. இப் பொருளாதாரச் செழிப்பில் இத்தாலி நீண்ட காலத்திற்குப் பயனடைய முடியவில்லை. ஏனெனில், குடியாட்சி யின் இறுதிக் காலத்தில் இத்தாலியில் பல சமூக மாற்றங் கள் ஏற்பட்டன. இவைகளால் இத்தாலிக்கு நேர்ந்த இழப்புகளி லிருந்து பேரரசின் சீர்திருத்தங்களால் இத்தாலியைக் காப்பாற்ற முடியவில்லை. நலிவுற்ற மண, வகுப்பு ஒழுக்கங்களைப் பல அடிப் படையான சட்டங்களால் உயிர்ப்பிக்க அகஸ்டஸ் முயன்றார். மலட்டுத்தனத்தையும் பலதரப்பட்ட அடிமைகளின் விடுதலையால் நகர மக்கள்தொகையில் வெளியாரின் எண்ணிக்கையில் ஏற்பட்ட வளர்ச்சியையும் தடைசெய்வது இவருடைய நோக்கமாக இருந் தது. உள்நாட்டுப் போர்களில் பங்கேற்றுப் பின் ஓய்வுபெற்ற போர் வீரர்களுக்கு உதவும் வகையில் இத்தாலியில் இவர் பல குடியிருப்புகளை நிறுவினர். இதனல், சிறிய நிலக்கிழார்கள் பெருமளவில் தோன்றினர். உழவுத் தொழிலில் அனுபவமில்லாத வர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விட்டுவிட்டு எளிய நகர வாழ்க் கையை மேற்கொண்டார்கள். எளிய நகரக் குடும்பங்களைச் சேர்ந்த குழந்தைகளின் கல்வி வளர்ச்சிக்காகப் பிற்காலத்தில் பேரரசர்கள் அடிப்படையான பல அறக்கட்டளைகளை நிறுவினர் கள். இவ்வறக்கட்டளைகளின் மூலதனம் உழவர்களுக்குக் குறைந்த வட்டிக்குக் [illegible]ஙகை அளிக்கப்பட்டது. இதனல், வேளாண்மைத் தொழில் [illegible] வளர்ச்சியடைந்தது. இருந்தபோதிலும் பெரு மளவிலான க[illegible]நடை வளர்ப்புப் பண்ணைகளின் தோற்றத்தால் மக்கள்தொகை நலிவுற்றது. எண்ணெய், ஒயின், தொழில்துறைப் பொருள் [illegible]த்தி ஆகியவைகளின்மீது மாநிலங்களைக் காட்டி லும் இத்[illegible] இதுவரை பெற்றிருந்த முதன்மை நிலையை இப் பொழுது படிப்படியாக இழந்தது. இன்று நடைமுறையில் உள்ளதைப்போன்ற திட்டவட்டமாக உருவாக்கப்பெற்ற பொரு ளாதாரக் கொள்கையைப் பேரரசாட்சிக் காலத்தில் செயற் படுத்தவில்லை. உடனடியாகத் தேவைப்படும் தானியத்தைப் பெற்று உரோம் நகருக்களிக்கும் பிரச்சினையில் பேரரசர்கள் கவனம் செலுத்தினர். இதற்காக அகஸ்டஸ் ஒரு தனியுரிமை நிறுவனத்தை அரசின்கீழ் உருவாக்கினர். பிற்காலத்தில் இது பெரும் வளர்ச்சியடைந்தது. ஆயினும், திட்டமிட்ட ஒரு பொருளாதார நடவடிக்கையைப் பேரரசர்கள் மேற்கொள்ள

வில்லை. அக்காலத்திய பொருளாதார வாழ்க்கையைக் கருத்திற் கொண்டு பார்க்கும்பொழுது இவர்கள் ஒரு கட்டுப்பாடற்ற கொள்கையைப் பின்பற்றியதாகத் தெரிகிறது. எனவே, பொருளாதார, அரசியல், தார்மீக இயக்கத்தின் பிடியிலிருந்து மெதுவாக இத்தாலி, பேரரசின் வேறோர் இடத்தை நோக்கிச் செல்லும் போக்குக் காணப்பட்டது.

இருந்தபோதிலும் உரோம் நகரமும் அதன் மக்களும் உலகப்பேரரசின் ஒரு மையமாக இருந்தனர். உலக ஆதிக்கத்தில் உரோமானியக் குடிமக்களும் பங்குகொண்டனர். உரோமானியப் பண்பாடும் தொடர்ந்து விரிவடைந்தது. மிகக் குறைந்த காலத்தில் பேரரசின் மேற்குப்பகுதி உரோமானிய மயமாக்கப் பெற்றது. குடியரசின் இறுதிக் காலத்தில் வணிகர்களாலும் வணிகக் குடியேற்றங்களாலும் ஸ்பெயினின் சில பகுதிகளும் வட ஆப்ரிக்க மாநிலமும் தென்பிரான்சும் விரைந்து உரோமானியமயமாயின. தனிப்பட்ட சமுதாயங்களுக்கு இலத்தீன் உரிமையளிக்கப்பட்டதும் இவ் வளர்ச்சியை விரிவாக்கியது. பேரரசாட்சிக் காலத்தில் ஒய்வுபெற்ற போர்வீரர்களின் குடியேற்றங்களின் வழியாகவும் உரோமானிய மயமாக்கப்படும் கருத்து விரிவடைந்தன் பயனாக இத்தாலியின் பெரும்பகுதி பாழாயிற்று. மாநிலங்களும் உரோமானியமயமாக்கப்பெற்றதைத் தொடர்ந்து பெரும்பாலோரும் சமுதாயங்களும் உரோமானியக் குடியுரிமை அல்லது இலத்தீன் உரிமை பெற்றனர். இதனால் பேரரசின் நகர அரசு இயல்பும் தோற்றமும் மறைந்துவிடவில்லை. அரசின் உருவமைப்பும் தொடர்ந் திருந்துவந்தது. எனினும், இறுதியில் இதன் பொருள் மறைந்தது. பேரரசின் குடியுரிமையின் உட்பொருளை உரோமானியக் குடியுரிமை பெரிதும் வளர்த்துள்ளது.

கிழக்கத்திய உரோமானிய மாநிலங்களில் மட்டும் உரோமானியப் பண்பாடு பரவி வளரவில்லை. இங்குக் கிரேக்கப் பண்பாடு பன்னெடுங்காலமாக நிலைபெற்றிருந்ததும் உரோமானியப் பேரரசர்கள் இப் பண்பாட்டைப் போற்றி வளர்த்ததும் இதற்குக் காரணமாகும். இருப்பினும் கீழ்நாடுகளையும் மேல்நாடுகளையும் ஒருங்கிணைந்த நாடாக்கக் கிரேக்க உரோமானிய நாகரிகங்கள் பெரிதும் உதவின.

பெரியனவும் சிறியனவுமாகிய எண்ணற்ற நகரக் குடியரசுகள் கிரேக்க-உரோமானியப் பொருளாதாரத்திற்கும் பண்பாட்டிற்கும் அடித்தளங்களாக அமைந்திருந்தன. பழமையான கிரேக்க, இத்தாலிய நகர அரசுகள் பெற்றிருந்த சுயேச்சையையும் சுயநிருணய உரிமையையும் இவை பெற்றிருக்கவில்லை

எனினும் ஓரளவு தன்னாட்சி நிலைபெற்றிருந்தன. உரோமா னியப் பேரரசு தோன்றியபொழுது இவைகளின் சட்டப்படியான நிலையில் வேறுபாடு காணப்பெற்றதென்றாலும் அந் நிலை காலப் போக்கில் சிறிதுசிறிதாக மாறி உரோமானியப் பொருளாதார வாழ்க்கைமுறையிலும் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் இவை இப்பொழுது பங்குபெற்றன. குடியுரிமைபெற்ற மாநிலச் சமு தாயங்களின் உயர்ந்த மட்டத்தில் இருந்தவர்கள் கி.பி. முதலாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே செனெட்சபை உறுப்பினரா கும் மிக உயர்ந்த தகுதியைப் பெற்றுவிட்டனர். இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் செனெட்சபை உறுப்பினரில் பாதிக்கு மேற்பட்டவர்கள் மாநிலங்களிலிருந்து வந்தவர்களாக இருந்தனர். இவர்களில் பெருமளவினர் கிழக்கத்திய அல்லது கிரேக்க மாநிலங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். பேரரசர்களில் டிராஜனும் ஹேடிரியனும் (Trajan and Hadrian) ஸ்பானியப் பகுதிகளைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். இவர்களுக்குப் பிறகு வந்தவர்களில் சிலரே இத்தாலியைத் தாயகமாகக் கொண் டிருந்தனர்.

குடியரசுக் காலத்திய உரோமானியப் பேரரசின் அமைப்பு உரோமானிய நகர அரசின் தாக்கிக் கைப்பற்றிக்கொள்ளும் உரிமையை அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஆனால், பிற் காலத்திய வளர்ச்சியால் இவ்வமைப்பு பெரு மாற்றமடைந்தது. இவ் வளர்ச்சியின் காரணமாக கி.பி. 212-ல் பேரரசு முழுமைக் கும் உரோமானியக் குடியுரிமை ஓர் ஆணையால் நீட்டிக்கப் பெற்றது. அக் கால நிலையின்படி மிக இயல்பான காரணங் களுக்காக இவ்வாணை பிறப்பிக்கப்பெற்றதெனினும் உரோமா னியப் பேரரசின் வரலாற்றில் இஃது ஒரு சிறப்பான நிகழ்ச்சி யாகும். ஒரு தனிப்பட்ட வகுப்பினருக்கு (dediticii) மட்டுமே உரோமானியக் குடியுரிமை அளிக்கப்படவில்லை. ஆனால், மக்கள் தொகையில் எப்பிரிவினர் இவ் வகுப்பைச் சேர்ந்தவர்களென்பது தெளிவாகக் குறிப்பிடப் பெறவில்லை.

உரோம் நகர அரசின் தனி முதன்மைக்குமேல் உயர் தேசியப் பேரரசு ஒன்று நிறுவப்பெற்றது. அகஸ்டசால் பேணப் பெற்ற முடியாட்சிமுறை காலப்போக்கில் நலிந்து இறுதியாய் மறைந்தது. உலகப் பேரரசின் தனி முதல்வராக உரோம் நகரின் முதல் குடிமகன் இப்பொழுது வரமுடிந்தது. இவருடைய ஆட்சிப்பீடம் இப்பொழுது உரோமில் இருக்கவேண்டியதில்லை யென்றாயிற்று. பேரரசின் அரசியல், படை, பொருளாதார, பண்பாட்டுத் தேவைகளால் இஃது இப்பொழுது உறுதி செய்யப் பெற்றது. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பேரரசு

பொருளாதார நெருக்கடி நிலைக்கு உள்ளாயிற்று. மூன்றும். நூற்றாண்டில் பேரரசின் உள்ளும் புறமும் அரசியல் அழிவு தோன்றியது. அரசியல் அமைப்பும் விரைந்து மறையத் தொடங்கியது. சிதைந்த வழக்குகளின் எச்சமாகப் பழைய அமைப்பு இருந்து வந்தது.

பேரரசாட்சிக் காலத்தில் மக்கள் வேறெந்தக் காலத்தில் வாழ்ந்ததைக் காட்டிலும் மிக்க மகிழ்ச்சியோடு வாழ்ந்ததாக வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். இக்காலத்தில் மாநிலங்களில் நகரமயமாக்கல் விரைந்து நிறைவேற்றப்பட்டது. இக் காலத்தில் மாநிலங்களில் ஆட்சிப் பொறுப்பேற்றிருந்த பெருமக்கள் நகரங்களைப் பேணி வளர்ப்பதில் பெரும் விருப்பம் காட்டினர். மக்களிடமிருந்து பெருமளவு நிதி திரட்டப்பட்டதெனினும் நகராட்சிகள் என்றும் கண்டிராத அளவில் பெரும் வளர்ச்சி பெற்றிருந்தன. பொது அமைதியைப் பேணவும், நிதியைப் பெருக்கிக்கொள்ள அரசு முற்பட்டபொழுதும் இவைகளின் உரிமைகளைக் குறைக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. நகர, மாநில ஆட்சிகளில் பேரரசர்கள் காட்டிய ஆர்வத்திற்கு எடுத்துக் காட்டாக காரகலா (Caracalla) என்பவர் பேரரசில் வசித்த எல்லாச் சமூகங்களுக்கும் குடியுரிமை அளித்ததைக் குறிப் பிடலாம்.

நடுநிலக் கடற்பகுதியில் நிலவிய அமைதியும் சாலைகள் அமைப்பு, செய்திப்போக்குவரத்து ஆகிய துறைகளில் காணப் பெற்ற மேம்பாடும் பொருளாதாரத்துறையில் பேரரசு உச்ச நிலை எய்தியதை எடுத்துக்காட்டின. உழவிலும் தொழிலிலும் மாநிலங்கள் இத்தாலியை மிஞ்சின. தொழில்நுட்பத்திலும் அமைப்பிலும் பெருமளவில் மேம்பாடு காணப்படவில்லையெனினும் என்றும் கண்டிராத அளவில் தரைவழியாகவும் கடல்வழியாக வும் வணிகம் பேரரசின் எல்லைகளைக் கடந்து ஸ்காண்டிநேவியப் பகுதிகளிலும் இந்திய மாக்கடல் வழியாகக் கிழக்கே சைனா வரையிலும் பரவியது. மாநகராட்சிகளின் வளர்ச்சியில் பேரரசின் செழிப்பைக் காணமுடிகிறது. படைநிலைகளைச் சுற்றிப் புதிய குடியிருப்புகள் தோன்றிப் பின்னர் நகரங்களாக வளர்ந்தன. உரோம்நகரில் இருந்ததுபோல் மாநில நகரங்களிலும் அரங்குகள், பொதுக் கட்டடங்கள், குளியலறைகள், கால்வாய்கள், பாலங்கள் ஆகியவை பெருமளவில் அமைக்கப்பட்டன. உரோம் நகரின் கட்டடக்கலை நுட்பங்களும் சிற்பங்களும் மாநில நகரங்களை எட்டின.

ஒரேபடித்தான பண்பாட்டைத் திணிக்க உரோம் முற்பட்ட தெனினும் மாநிலங்களின் பல்வேறு வகையான நிறுவனங்களும்

பலதரப்பட்ட பழக்கவழக்கங்களும் பேணி வளர்க்கப்பட்டன. உரோமானிய நிறுவனங்களும் நாகரிகமும் விரைந்து பரவின. என்றாலும் இவை படைவலியால் பரப்பப்படவில்லை. கிழக்கத்திய கிரேக்கப் பண்பாட்டின் குறைகளை மேற்கத்திய இலத்தீன் பண்பாடு நிறைவு செய்தது. வேறுபாடுகளுக்கிடையில் ஒற்று மையை உருவாக்க மக்கள் உரோமானிய ஆட்சியை எதிர் நோக்கினர்.

ஆயினும், அக் காலத்தில் பரவலாகக் காணப்பட்ட அடிமை முறை, நகரமக்களின் நொடிப்புநிலை போன்ற கொடிய சமூகப் பிரச்சினைகளைத் தீர்க்கப் பேரரசு முயலவில்லை. ஆட்சிமுறை யைப் பன்முனைப்படுத்தல், மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளித்தல் போன்றவைகளில் அரசு நாட்டம் கொள்ளவில்லை. உழைக்கும் மக்களுக்கு உரோமானியப் பண்பாடு பயனளிக்க வில்லை. நடுத்தர வகுப்பினருக்கும் உயர்மட்டத்தில் இருந்தவர் களுக்கும் மட்டுமே பேரரசு பயனளித்ததாகக் கருதப்பட்டது. இருந்தபோதிலும், உரோம் நகருக்கும் மாநிலங்களுக்குமிடையே இருந்துவந்த தடைகள் அகன்றன. இத்தாலியும் தனிச் சிறப்பு நிலையை இழந்தது. பேரரசின் நிதிநிலையைச் சரிக்கட்டக் கடுமை யான வரிவிதிப்பு மேற்கொள்ளப்படவே மாநில நகராட்சிகளும் சமூகங்களும் வரிப்பளுவால் நலிவுற்று மறைந்து போயின.

மூன்றும் நூற்றாண்டின் பிற்பகுதியில் பேரரசு கடுமையான அரசியல், பொருளாதாரக் குழப்பத்தில் ஆழ்ந்தது. பண்படாத மக்களைக் கொண்டு நிறுவப்பட்ட படை இப்பொழுது அரசில் பெரும் ஆதிக்கம் செலுத்தியதோடு படையினரிலிருந்து பேரரசர் களை அமர்த்தியது. இடையறாத கலகங்கள் நிலையான அரசாங் கத்தை உருவாக்கவில்லை. எதிரிகள் பேரரசைப் பல திசை களிலிருந்து தாக்கிப் பேரரசின் பெரும்பகுதியை அழித்தனர். படைகளை நிலைப்படுத்த மக்கள்மீது கடுமையான வரிகள் விதிக் கப்பட்டதால் நாட்டுப்புறங்களில் வாழ்ந்த மக்கள் பெரும் தொல்லைக்குள்ளாயினர். வரி செலுத்த இயலாதவர்கள் நிலங்களை விட்டு வெளியேறினார்கள்; நிலங்கள் தரிசாகக் கிடந்தன; உற்பத்தி குறைந்து வணிகம் நலிந்தது; பணத்தட்டுப்பாடு ஏற்பட்டது; நாணயமதிப்பும் குறைக்கப்பட்டது; விலைகள் உயர்ந்தன; நிதிநிலையில் குழப்பம் ஏற்பட்டு மக்கள் பண்டமாற்று முறைக்குக் கொண்டு செல்லப்பெற்றனர். பேரரசில் குழப்பங் கள் தோன்றிப் பிரிவினை இயக்கங்கள் வளர்ந்தன. இச் சூழ்நிலை யில் பயனற்ற நிறுவனங்கள் வீழ்ச்சியுற்றன; அழிவுச் சக்திகள் தலைவிரித்தாடின. இச் சூழ்நிலைகளின்கீழ்ப் பயனற்றுப்போன

எல்லா நிறுவனங்களும் வழக்காறுகளும் வீழ்ச்சியடைந்தது தவிர்க்கமுடியாத ஒரு நிகழ்ச்சியாயிற்று.

டையோகினிடியனும் கான்ஸ்டன்டைனும் நிறுவிய புதிய அமைப்பில் முடியாட்சி வரம்பில்லா அதிகாரத்தோடு செயற் பட்டது. அரசின் நலம் கருதித் தனி மனிதர்களின் உரிமையை அதிகார வர்க்க அரசு குறைத்தது. பேரரசாட்சியின் குடி யாட்சிப் பண்புகள் மறைந்தன இத்தாலியிலும் பேரரசிலும் உரோம் நகரின் தனி முதன்மையும் மறைந்தது. பேரரசில் இப்பொழுது தொடர்ந்த கிரேக்க நகரப் பண்புகள் உரோமா னியப் பண்புகளைவிட மேலோங்கி நின்றன. பேரரசர் டையோகி னிடியன் பெரும்பாலும் ஆசியாமைனரில் வசித்துவந்தார். இரண்டாவது பேரரசுத் தலைநகராகக் கான்ஸ்டன்டையின் என்னும் நகரை கான்ஸ்டன்டையின் தோற்றுவித்தார். மேற்கத் திய பேரரசர்களும் இக் காலத்தில் உரோமில் வசிப்பதைவிடக் கிழக்கே கான்ஸ்டன்டைனில் வசிப்பதே பெருமையெனக் கருதினர். உரோமானிய நகர அரசின் அரசியலமைப்பின் எந்தப் பிரிவும் இக் காலத்தில் அரசியல் முக்கியத்துவம் பெற வில்லை. பழைய உரோமானியக் கான்சல் பதவிகளும் ஒரு சிலரைப் பெருமைப்படுத்தும் கருவிகளாக இருந்தன. உரோம் நகரில் சிறிய பதவிகள் தம்முடைய ஆட்சியியற்பணிகளை இழந்து சிறப்பின்றி நலிந்தன. செனெட்சபை இக் காலத்திலும் சிறப்புற்று விளங்கியதெனினும் அதன் செல்வாக்குக் குறைந்துகொண்டே போயிற்று. செனெட் உறுப்பினர் பேரரசில் தனி முதன்மை நிலைபெற்ற குடிமக்களாக இருந்ததால் படையினரும் ஆட்சி யாளரும் பெருமளவில் இவ் வகுப்பினரைக் கொண்டேயமைந் தனர்.

பேரரசின் குடிமக்கள் இப்பொழுது உரோமானியக் குடி மக்களென்றும் குடிமக்கள் அல்லாதவரென்றும் பிரிக்கப்படாமல் தொழில் அடிப்படையில் பிரிக்கப்பட்டு வாழ்ந்தனர். இப் பிரிவு களின்மீது கடுமையாக வரிகள் விதிக்கப்பட்டன. இந்த வரிகளை எவரும் கொடுக்க மறுக்க இயலாது. தந்தைகளுக்குரிய பிரிவு களிலேயே குழந்தைகள் விட்டுவைக்கப் பெற்றனர். சிறு குடி யானவர்கள் இடம் பெயர்ந்து சென்றதால் ஏற்பட்ட விளைச்சல் குறையைத் தடுக்க, கடுமையான வரிவிதிப்பிற்குள்ளான குடி யானவர்களை அரைகுறைப் பண்ணைக் குடிமக்களாக்கித் தனி நிலங்களோடு பிணைத்தனர். பேரரசு காலத்தில் கைவினைஞர் கள் ஓரளவு தொழிற் கழக அமைப்பிற்குட்பட்டிருந்தனர். ஆனல், இப்பொழுது அரசிற்குச் சொந்தமான அல்லது அரசிற்குட்பட்ட

தொழில்மனைகளில் மரபுவழிவந்த தொழிலாளர்களைப்போல் செயற்பட்டனர். இதேபோல் கப்பல் சொந்தக்காரர்களும் வணிகர்களும், தொழிலதிபர்களும் அவர்களுடைய தொழில்களோடு பிணைக்கப்பட்டுக் கட்டாய அரசு சேவைக்குட்படுத்தப் பெற்றனர். நகர உயர்குடிச் சபை உறுப்பினர் வழிவழிப் பதவிப் பொறுப்புகளை ஏற்று நகர நிலத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகளைத் திரட்டும் பொறுப்பிற்குட்படுத்தப்பெற்றனர். பெருமளவு ஜெர்மானிய மரபினர் பேரரசிற்கு வெளியேயிருந்து படையில் நுழைந்து பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். அதிகார வர்க்கத்தினரும் குருமார்களும் சில சிறப்புரிமைகளைப் பெற்ற பிரிவுகளாக இருந்தனர்.

# 17. உரோமானியச் சட்டம்

ஒரு சட்டத்தொகுப்பை உருவாக்கி மக்களுக்களித்த பெருமை உரோமானியர்களைச் சாரும். பழக்க வழக்கங்களையும் பகுத்தறிவையும் முற்றிலும் அடிப்படையாகக்கொண்டு நீதி வழங்க இச் சட்டம் ஒரு கருவியாக அமைந்தது. பண்டைக் காலத்திய அரசர்களையும் குல, குடும்ப அமைப்புகளின் பழக்க வழக்கங்களையும் இச் சட்டத் தொகுப்பிற்குத் தோற்றுவாயெனக் கூறலாம். முற்காலத்திய சட்டங்களுக்குக் குருமார்கள் சொற் பொருள் விளக்கம் செய்தனர். கி.மு. 5ஆம் நூற்றுண்டிற்குப் பின் இந் நிலையில் மாற்றம் ஏற்பட்டது. மாறிக்கொண்டிருந்த பொருளாதார நிலைகளுக்கொப்ப, பல்வேறு ஆதாரங்களைக் கொண்டு பன்னிருபட்டிகையென ஒரு சட்டத் தொகுப்பை கி.மு. 450-ல் உரோமானியர் உருவாக்கினர். வணிக நடவடிக்கைகள் சட்ட முறைமைக்குட்படுத்தப்பட்டன. இழப்பீடு பெறும் உரிமை பெற்ற பொழுது தீங்கிழைப்பிற்குட்பட்டோர் வழக்கமாகப் பெற்று வந்த உரிமையை இழந்தனர். சட்டத்தின்முன் குடிமக்கள் சமநிலை பெற்றது இங்குக் குறிப்பிடத்தக்கதொரு விதியாகும். சட்ட ஆக்கத்தாலன்றிப் பொருள் விளக்கத்தால் சட்டத்தில் மாற்றங்கள் செய்யப்பட்டன. மாறிக் கொண்டிருந்த நிலையில், செவி வழிவந்த சட்டமரபுகள் சட்டவளர்ச்சிக்கு வழிவகுத்தன. பயிற்சிபெற்ற சட்டவல்லுநர்கள் சட்டவிளக்கம் செய்தனர். இதற்கென்று இவர்கள் ஊதியமெதுவும் பெற்றுக்கொள்ளவில்லை. எனினும் இச் சேவை இவர்களுடைய புகழை மேம்படுத்திப் பொதுவாழ்க்கையில் முன்னேற உதவுமென நம்பினார்கள். பேயிடஸ் (Paetus), பாலுஸ் (Paulus), உல்பியன் (Ulpian), பாபினியன் (Papinian) போன்ற சட்டமேதைகள் உரோமானியச் சட்டவளர்ச்சிக்கு அரும்பாடுபட்டனர். பழைய சட்டங்களை இவர்கள் புதுப்பித்தனர்; சட்ட நடைமுறையில் ஒழுக்க உயர் நிலையை வலியுறுத்தினர்; நடுநிலைநின்று இயற்கைச் சட்டத்தைப் பயன்படுத்தினர். வழக்குகளை விசாரித்தவர் பிரீட்டர் என

அழைக்கப்பெற்றார். ஒவ்வொரு பிரீட்டரும் பதவியேற்கும் முன் தம்முடைய பதவிக் காலத்தில் தம்முன் கொண்டுவரப்படும் வழக்குகளில் எத்தகைய கருத்துகளைப் பின்பற்றுவாரென்பதை விளக்க ஓர் ஆணை பிறப்பித்தார். இத்தகைய நடைமுறையின் கீழ் உரோமானியச் சட்டம் மேம்படவும் வளரவும் வசதியிருந்தது. உரோமானியக் குடிமக்களுக்கிடையே எழுந்த வழக்குகளை விசாரிக்க ஒரு பிரீட்டரும் வெளியாருக்கிடையில் எழும் வழக்குகளை விசாரிக்க மற்றொரு பிரீட்டரும் இருந்தனர். வழக்காடியவர்களுக்கிடையில் நிலவிய பழக்கவழக்கங்களை வைத்துக்கொண்டே நீதி வழங்கப்பெற்றது.

மக்களோடும் செயல்களோடும் பொருள்களோடும் செயல் தொடர்பு கொண்டிருந்த உரோமானியச் சட்டம் கிழக்கத்திய பண்பாட்டு மரபுகளில் ஓர் அடிப்படையான அம்சமாக விளங்கியது. தனியாள் மெய்ம்மைநிலைபற்றிய உரோமானியச் சட்டத்தில் கூட்டு நிறுவனச் சட்டக் கோட்பாடு தோன்றியது. பல தரப்பட்ட பொருள்கள்பற்றிய சட்டம் உடைமைகளைப் புனித உடைமை, பொதுவுடைமை, தனியுடைமை என வகைப் படுத்தியது. மேலும், சட்டப்படி உடைமைகளைத் தமதாக்கிக் கொண்ட வழிமுறைகளைப் பொருள்கள்பற்றிய சட்டம் மெய்ப்பித்து வகைப்படுத்தியது. உடைமைகளை முறையாகத் தம் முரிமையாக்கிக்கொள்ள உரிமைச்சட்டத்தின்கீழ் மூன்று வழிகள் கூறப்பட்டன. அவை: (1) சாட்சிகளின் முன்னிலையில் முறைப்படியான விற்பனை; (2) நிருவாகியொருவரின் உடைமை மாற்றக் கட்டளையின்படி; (3) தனிப்பட்ட உடைமைகளாயின் ஓராண்டு பயன்பாட்டாலும் நில உடைமைகளாயின் ஈராண்டு பயன்பாட்டாலும்.

உரோமானியச் சட்டத்தில் ஒப்பந்தச்சட்டம் குறிப்பிடத் தக்கதோர் இயலாகும். தனிப்பட்டவர்களின் உறுதிமொழிகளைச் செயற்படுத்தக்கூடிய சட்டஉருவமென ஒப்பந்தம் வரையறுக்கப் பெற்றது. கொடுத்தல், ஏற்றல், நிறைவேற்றல் ஆகிய மூன்று செயல்கள் ஓர் ஒப்பந்தத் தொடர்பில் உள்ளடங்கின. உடைமை உழைப்பு உள்படத் தனிப்பட்டவர்களின் செயல்களைச் சட்டத் திற்குட்படச் செய்வதற்கு ஒரு செயல்முறையை உருவாக்கிய நிலையான பெருமை உரோமானியச் சட்டத்தின் ஒரு வளர்ச்சி நிலையெனலாம்.

கி. மு. 176-ல் வெளியார்பற்றிய சட்டம் (Jus gentium) எனப் புதிய சட்டமொன்று உருவாக்கப்பட்டது. காலப்போக்கில் வெளியார்களின் பழக்கவழக்கங்களைக் கொண்ட இச் சட்டம்

உரிமைச்சட்டத்தோடு இணைந்தது. இதில் பொது நேர்மையும் மனிதாபிமானமும் சிறப்பியல்புகளாக இருந்தன. வழக்குகளுக்கு இச் சட்டத்தைப் பயன்படுத்தி முடிவு காணப் பிரீட்டர்கள் திட்ட வட்டமான முயற்சிகள் எடுத்துக்கொண்டார்கள்.

கி.பி. நான்காம் நூற்றுண்டில் உரோமானியச் சட்டத்தைத் தொகுக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இயற்கைச் சட்டத்திலிருந்து பல சட்டக் கருத்துகள் எடுத்துக் கொள்ளப் பட்டன. சாதாரண மனிதனும் சரியானதென ஏற்றுக்கொள்ளும் வகையில் இச் சட்டம் உருவாக்கப்பெற்றது. கிறித்துவச் சமயக் கருத்துகளையும் சில ஜெர்மானியச் சட்டக் கருத்துகளையும் இணைத்துச் சட்டத்தை உருவாக்கத் தியோடோசிய (Theodosian) தொகுப்பு முற்பட்டது.

உரோமானியச் சட்டத்தின் வளர்ச்சி ஜஸ்டினியனின் சட்டத் தொகுப்போடு நிறைவு பெற்றது. உரோமானியச் சட்டச் சீர்திருத்தத்தின் தேவையை ஜஸ்டினியன் உணர்ந்தார். பல உரோமானியச் சட்டங்கள் வழக்கொழிந்து தெளிவற்ற முரண் பாடுகளைக் கொண்டிருந்தன. சட்டத்தொகுப்புப் பணியை ஏற்றுச் செயற்படுத்த நன்ருகக் கற்றுத்தெரிந்த சட்ட அறிஞராகிய டிரிபோனியன் (Tribonian) என்பவரை ஜஸ்டினியன் அமர்த்தி ஞர். இத்தொகுப்பு நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. அக் காலத்தில் செய்யப்பட்டுவந்த சட்டங்களையும் பேரரசக் கட்டளை களையும் இத் தொகுப்புக்கொண்டிருந்தது. உரோமானியச் சட்ட அறிஞர்களின் அரிய கருத்துகளைத் தொகுப்புச் சுருக்கம் (Digest) கொண்டிருந்தது. சட்டநுணுக்கத் திறனய்வுகளைச் சட்ட மூலத்தொகுப்பு (Institute) கொண்டிருந்தது. இது சட்டம் பயிலும் மாணவர்களுக்கு ஒரு பாடநூலாக அமைந்தது. சட்டத் தொகுப்பிற்கான மாற்றங்களையும் இணைப்புகளையும் சட்டத் திரட்டுக் (Novels) கொண்டிருந்தது. பிற்காலத்திய உரிமைச் சட்டங்களையும் திருச்சபைச் சட்டங்களையும் ஆய்வதற்கு உரிமைச் சட்டத்தொகுப்பு ஆதாரமாக அமைந்தது.

சட்ட நடைமுறை வளர்ச்சியில் உரோமானியச் சட்டத்தின் முக்கியத்துவத்தை மதிப்பிடுவது கடினமாகும். உரோமானிய ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த இடைக்காலத்திய நாடுகளின் சட்டத்திற்கு உரோமானியச்சட்டம் அடிப்படைக் கருத்துகளை வழங்கியது. உரோமானியச் சட்டத்தின் வழித்தோன்றியதே உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைச்சட்டம். இக் காலத்திய ஐரோப்பிய நாடுகளின் சட்ட அமைப்பில் இதன் பங்குப்பணியைக் காணலாம். இக் காலத்திற்கு முன்னர் வேறு எக்காலத்திலும்

கண்டிராத அளவில் தனியுடைமையை முழுமையாகவும் விரிவாக வும் உரோமானியச் சட்டம் ஆராய்ந்துள்ளதை இதன் தனிப் பெரும் சாதனையாகக் கருதலாம். மக்கள் இறைமைக் கோட் பாடு உரோமானியச் சட்டத்தில் இடம் பெற்றிருந்தது. பிற் காலத்தில் பிரதிநிதித்துவ அரசு வளர்ச்சிக்கு இக் கருத்து ஒரு வலிமையான தூண்டுகோலாக அமைந்தது.

பொதுவாகச் சட்டத்தின் வளர்ச்சியை உரோமானியச் சட்டம் ஊக்குவித்ததால் சிறப்படைந்ததேயன்றி ஒரு காலத் தில் இச் சட்டம் பல இடங்களில் பரவியிருந்ததென்பதி லில்லை. இன்றைக்கு மேற்கத்திய நாடுகளின் சட்ட அமைப்பு முறை இரண்டு பிரிவாகச் செயற்படுவதைக் காணலாம். இதில் ஒரு பிரிவில் சட்டக்கருத்துகள் உரோமானியச் சட்டத்திலிருந்து தோன்றியதாகவும் மற்றொன்றில் ஆங்கிலச் சட்டத்திலிருந்து தோன்றியதாகவும் கருதப்படுகின்றன. ஆங்கிலச் சட்டக்கருத்து களை இங்கிலாந்தும், அமெரிக்காவும் இவைகளோடு தொடர்பு கொண்டிருந்த நாடுகளும், தொடர்பு கொண்டிருக்கிற நாடுகளும் ஏற்றுக்கொண்டன. மற்ற நாடுகள் உரோமானியச் சட்டக் கருத்துகளை ஏற்றன. இதற்கு எல்லா ஐரோப்பிய நாடுகளும் எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன.

# மேற்கோள் நூற்பட்டியல்
## (Bibliography)


Abbot, F. E.: 'Society and Politics in Ancient Rome'

Abbot and Johson: 'Municipal Administration in the Roman Empire'

Bailey: 'Legacy of Rome'

Barnes: 'History of Western Civilisation'

Blackman: 'History of Roman Society'

Botsford, G. W.: 'Roman Assemblies'

Breaksted; 'Ancient Times', Part V.

Broughton, T. R. S. & Petterson, M. L.: 'Magistrates of the Roman Republic'

Charles Worth: 'Roman Empire'

Chapot: 'The Roman World'

Cook, S.A. & Others: 'Cambridge Ancient History'

Frank, T.; 'Roman Empire'

Fritz: 'The Theory of the mixed Constitution in the Antiquity'

Gibbon: 'Decline and fall of Roman Empire'

Greenidge: 'Roman Public Life'

Holtland: 'Roman Republic' 3. Vols.

Homo, L.: 'Roman Political Institutions from the City to the State'

Kunkel, W.: 'Roman Legal and Constitutional History'

Marsh, F. B.: 'Founding of the Roman Empire'

Mommsen, T.: 'History of Rome' (Tr).

Mommsen, T.: 'The Provinces of the Roman Empire'

Parker, A.M.D.: 'The Roman Legions'

Reid, J. S.; 'Municipalities of the Roman Empire'

Rice Holmes: 'Roman Republic'

Rostovetzeff: 'Social and Economic History of the Roman Empire'

Sharwin-White, D. N.: 'The Roman Citizenship'

Stevenson, G. A.: 'Roman Provincial Administration'

# கலைச்சொற்கள்

A

Administration — ஆட்சி
Administrator — ஆட்சியாளர், ஆட்சியர்
Aediles — ஈடில்
Agar Romanus — உரோமானியருடைமை
Augurs — புட்குறி பார்ப்போர்
Augury — புட்குறி

C

Centuriate Assembly — செஞ்சுரியேட் அவை
Clan — குலம்
Clients — சார்பாளர்
Coercitio — வல்லந்தத்தடுப்பு
Concilium — கொன்சிலிய அவை
Consul — கான்சல்

D

Dictator — சர்வாதிகாரி
Dyarchy — இரட்டையாட்சி

E

Empire — பேரரசு
Equities — புரவிப் படையினர்

G

Government — அரசு
Governor — ஆளுநர்

I

Imperium — இறைமை
Intercessio — தடையாணை
Inter rex — இடையாட்சியாளர், இடையாட்சிக்கால அரசர்

L

Leges, Lex — சட்டம்

M

Magistrate — நிருவாகி
Manumission — (அடிமை நிலையிலிருந்து) விடுதலைபெறல்
Monarchy — முடியாட்சி

O

Orders — வகுப்பினர்

P

Patrician — பெட்ரிசியர்
Plebian — பிளெபியர்
Plebicitum — பிளெபியரவைத் தீர்மானம்
Pontiff — சமய முதல்வர்
Potestas — அதிகாரம்
Princeps — பேரரசர்கள்
Principiate — பேரரசாட்சி
Proconsul — புரோகான்சல், புறக் கான்சல்
Province — மாநிலம்

Q

Questors — குவெஸ்டர்கள்

R

Republic — குடியாட்சி, குடியரசு

S

Senate — செனெட் சபை
State — அரசு
Slavery — அடிமை முறை

T

Tributa — டிரிபியூட்டா (அவை)
Twelve Tables — பன்னிரு பட்டிகை

